உ

ஸ்ரீ மஹாதேவ ஜெயம்

|சிவாத்பரதரம் நாஸ்தி|

# பராபரன் ஸ்ரீ பரமேச்வரன்



**சிவத்திருச்சபை**

புதுச்சேரி - 1

sivathiruchabai@rediffmail.com

# பொருளடக்கம்

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
। சிவாத்பரதரம் நாஸ்தி ।

## சாம்பசிவ த்யானம்

**மன்மாதா ஸஸிஸேகரோ மம பிதா ம்ருத்யுஞ்ஜயோ மத்குரு:**
**ந்யக்ரோதத்ருமமூலவாஸாஸிகோ மத்ஸோதர: ஸங்கர: ।**
**மத்பந்துஸ்த்ரிபுராந்தகோ மம ஸகா கைலாஸஸைலாதிப:**
**மத்ஸ்வாம் பரமேஸ்வரோ மம கதி: ஸாம்ப: ஸிவோ நேத்ர: ॥**

**பொருள்:** சந்திரசேகரனே எனக்குத்தாய், ம்ருத்யுவை ஜயித்தவர் எனக்கு தந்தை. ஆலமரத்தடியில் வசிப்பதில் பிரியம் உள்ளவர் எனக்கு ஆசார்யன். மங்களத்தை செய்யும் ஈசனே என் சகோதரன். திரிபுர சம்ஹாரம் செய்தவர் எனது உறவினர். கைலாச மலையின் அதிபர் என் தோழர். பரமேஸ்வரன் எனது தெய்வம். அம்பாளோடு கூடின சிவனே எனக்கு கதி. வேறு யாரும் இல்லை.

## சிவகாமசுந்தரி துதி

**பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்**
**சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க**
**வரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்**
**சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி!**

**பொருள்:** உலகம் முழுதும் பரவி எழுந்த (சமணம், வைணவம்) முதலான புறச் சமயங்களாகிய காரிருள் நீங்கவும், எவ்வகை மதங்களுக்கும் முதன்மையாகப் பொருந்திய சைவ சமயத்திற்குரிய திருவெண்ணீற்றின் ஒளியானது எங்கும் விளங்கவும், உயிர்களது பிறவித் துன்பமொழியவும், சீர்காழிப் பதியில் ஞான சம்பந்தப் பிள்ளைக்கு திருவமுது செய்யும்படிக்குத் திருமுலைப்பாலைச் சுரந்து கொடுத்தருளிய சிவகாமசுந் தரியம்மையினது அழகிய திருவடிகளை வணங்குவோம்!.

## விநாயகர் துதி

**வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்**
**பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க**
**ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா**
**யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம்!**

**பொருள்:** தேவர்களும், மனிதர்களும், சிவானந்தப் பெருவாழ்வை அடையவும், வேதசிவாகமங்கள் நிலைபெற்று ஓங்கவும், உயிர்க்கு உறுதியைத் தருகின்ற செவ்விய திருநெறித் தமிழ்வேதம் உலகத்தில் விளங்கவும், பரஞானம் - அபர ஞானம் என்னும் இருவகை மதங்களோடுகூடிய ஐந்து திருக்கரங்களையும், மூன்று

கண்களையும், தொங்குகிற வாயை உடைய யானைமுகம் பொருந்திய விநாயகக் கடவுளைத் துதித்துக் கைகூப்பி வணங்குவோம்!.

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
| சிவாத்பரதரம் நாஸ்தி |

ஸ்ரீ ஹரதத்தாச்சாரியார் அருளிய

# ஹரிஹர தாரதம்மியம்

## முன்னுரை

தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் அருகில் உள்ள கஞ்சனூர் எனும் தலத்திலே ஓர் வைணவக் குடும்பத்தில் பிறந்து, தன் குடும்பத்தினரின் எதிர்ப்பு, மற்றும் வைணவரின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாது சதா சர்வகாலமும் அத்தலத்தில் வீற்றிருந்து அருள் பாலிக்கும் ஸ்ரீ அக்னீஸ்வரரைத் தன் சிந்தையில் இருத்திச் சிவாலயக் கைங்கர்யங்கள் பல செய்து "சைவத்தில் சிறந்த சமயமில்லை; சிவபெருமானைத் தவிரப் பரம் இல்லை" என்று வைணவப் பெரியோர், ஊர் மக்கள், அரசன் என அனைவரது முன்னிலையிலும் 100 செய்யுள்களைக் கேள்வியாக அமைத்துக் கஞ்சனூரில் உள்ள பெருமாள் ஆலயத்தில் பழுக்கக் காய்ச்சின இரும்பு முக்காலியின் மீதமர்ந்து வாதிட்டு - நிறுவி, பாஷண்ட மதமாகிய வைஷ்ணவத் தினை அநுசரித்து வாழ்வோரை மாற்றி அவர்களைச் சைவர்களாக்கியும், இறந்த பசுவுக்கு முக்தியளித்தும், சிவலிங்கச் சோழனுக்குக் கைலாயக் காட்சியளித்தும், நமசிவாய எனும் ஐந்தெழுத்தின் பெருமையையும், அருமையையும் பரப்பியும், கஞ்சனூரைச் சுற்றியுள்ள சிவாலயங்களுக்குத் தொண்டுகள் பல புரிந்தும், இன்னபிற அரிய செயல்களையும் புரிந்த இவர் திருமாலின் அவதாரம் என்று "சிவரஹஸ்யம்" கூறுகிறது.

"**ஹரிஹர தாரதம்மியம்**" என்னும் இந்நூலை எழுதிய ஸ்ரீ ஹரதத்தரின் சரிதம் உணர்ந்தாலன்றி, இந்நூலின் மகிமையை ஓரளவேனும் விளங்கிக் கொள்ள முடியாது என்பதினால், ஸ்ரீ ஹரதத்தாச்சாரியாரின் சரிதம் இந்நூலில் ஆரம்பத்திலே யே சுருக்கமாகத் தந்திருக்கின்றோம். இந்நூலில் உள்ள ஹரிஹர தாரதம்மியம் பகுதி ஸ்ரீ தத்புருஷ சிவன் என்பவருடைய வியாக்கியானத்தைத் தழுவி எழுதப் பட்டதாகும்.

இந்நூலில் ஸ்ரீ ஹரதத்தாச்சாரியார் அருளிய "ஹரிஹர தாரதம்மியம்" தவிர்த்து, "சிவன் என்பவர் யார்?" மற்றும் "ஸ்ரீ சிவசஹஸ்ர நாமம் அகராதியும் - பொருளும்" ஆகியவையும் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூலில் காணப்படும் தகவல்கள் அனைத்தும் நாங்கள் ஏதோ சிவபெருமாகை கண்டுவிட்டப் பரவசத்தில் எழுதப்பட்ட தாகக் கருத வேண்டாம். அனைத்தையும் "சமநோக்கில்" பார்க்கக்கூடிய பக்குவம் வருவதற்கு, முதலில் நாம் "ஒன்றை" உணரவேண்டும், பிறகுதான் மற்றவை எல்லாம் நமக்குத் தெரியவரும். விஷய சுகங்களில் பற்று என்பதை; அவற்றை வெறுப்பதின் மூலம் அவற்றின் மீதுள்ள "பற்றை" நாம் அறுக்கலாம், அவ்வகையில்

நாம் "ஒன்றை"ப் பற்றி அறிய வேண்டுமென்றாலும், அதன் மீது "பக்தி" ஏற்பட வேண்டுமென்றாலும் நாம் "பலவற்றை வெறுத்துத்தான் ஆக வேண்டியிருக்கிறது. அதன் பிறகு நாம் "ஒன்றை" அறிந்து கொண்டுவிட்டால், பிறகு "மற்றதை" வெறுக்க முடியாது. சகலத்திலும் "அன்பு" நிறைந்திருக்கும். சகலரிடத்திலும்; சகலத்திலும் எவ்விதப் பாகுபாடும் இல்லாத அந்த அன்பை ஒவ்வொருவரும் “சிவம்” என்று உணர்ந்து, ஓர் “நல்வாழ்வை” வாழ ஆரம்பிக்கலாம்.

"என் பக்தர்களை அடையும் வழியை நானே தேடுகிறேன்" என்கிறார் ஸ்ரீ பரமேச்வரர். நம்மைத்தேடி ஸ்ரீ பரமேச்வரர் வருவதற்கு இந்நூல் ஓரளவேனும் "காரணமாக" இருக்கும் பட்சத்தில், இந்நூலின் பயன் அவனருளால் "இருக்கிறது" என்று நாங்களும் மகிழ்வடைவோம்.

அளவில்லாதவராய், வாக்கு-வியவஹாரத்திற்கு எட்டாதவராய் பிரபஞ்சோப சாந்தராய், அத்வைதராய் (பிரும்மா; விஷ்ணு, உருத்திரன் முதலியோருக்கு மேலானவராய்) நான்காவது தெய்வமாய், ஓர் உருவம், ஒரு பெயர் இல்லாது ஓங்காரத்தையே உருவமாகவும், ஓங்காரத்தையே பெயராகவும், ஓங்காரத்தையே பொருளாகவும் கொண்ட சிவபெருமானே "பரம்" என்பதை அறிந்துய்யும் பரமபாக்கி யம் இல்லாதவர்கள், “பரம்” என்றால் “சிவன்” என்று ஓரளவேனும் அறிந்து கொள்ளும் பொருட்டு, இந்நூலில் சிவபெருமானின் பெருமைகள், இதிஹாச புராணாதிகளின் வாக்கியங்கள், சிவபக்தியொன்றே தம் வாழ்வு என்று வாழ்ந்தவர்க ளின் பங்களிப்புகள் என்று எங்களால் இயன்ற அளவு தொகுத்து அளித்துள்ளோம்,

"வித்யை 14 என்றும், சுருதியாதி நூல்களே பிரமாண நூல்கள்" என்றும் ஆன்றோர்களால் நிர்ணயிக்கப்பட்டுள்ளதாலும், ஜைமினி முனிவரால் வகுக்கப்பட்ட "மீமாம்சை" நியாயங்களாலும் இந்நூலில் பூர்வ விஷயங்களை ஒட்டியும், அதைப் பின்பற்றி பல பெரியோர்கள் அளித்துள்ள அவர்களது நூல்களில் இருந்தும், இந்நூலில் பெரும்பாலும் எடுத்தாளப்பட்டிருக்கிறது. . மீமாம்சை என்றால் என்ன? என்பது பற்றி காஞ்சிப் பெரியவர் தன்னுடைய அருளுரையில்;

"வேதம் என்பது ஈச்வரன் உண்டாக்கிய சட்டம். ஆதி அந்தமில்லாத நித்ய மான சட்டம், நாம் பிரஜைகள், ஈச்வரன் நமக்கு அரசன், அவர் பல அதிகாரிகளை ஏற்படுத்தியிருக்கிறார். அவருடைய ராஜாங்கத்தில் இந்திரன், வாயு, வருணன், அக்கினி, யமன், ஈசானன், குபேரன், நிர்ருதி முதலிய அஷ்ட திக்பாலர்களையும் இன்னும் பல தேவதைகளையும் லோகத்தை ஸம்ரக்ஷிக்கும் அதிகாரிகளாக நியமித்திருக்கிறார். அந்த அதிகாரிகள் பதினாலு லோகத்திலும் உள்ள ஜீவராசிக ளாகிய பிரஜைகளை ரக்ஷிப்பதற்கு ஒரு சட்டம் வேண்டும் அல்லவா? அந்தச் சட்டம்தான் வேதம். அதன்படி பிரஜைகளான நாம் எப்படி நடப்பது, அதிகாரிகள் எப்படி பரிபாலனம் பண்ணுவது என்று ஆராய்ச்சி செய்து அறியலாம். லௌகிகத்தில் இம்மாதிரி ஸந்தேகம் வந்தால் ஜட்ஜுகள் யோசித்துத் தீர்ப்புச் சொல்லுகிறார்கள், வக்கீல்கள் ஆலோசிக்கிறார்கள். அது போல தர்மத்தை அநுஷ்டானம் பண்ணும் வழிகளையெல்லாம் சொல்லும் வேதமாகிற சட்டத்திற்கு அர்த்த நிர்ணயம் பண்ணி னவர் ஜைமினி. அதுதான் மீமாம்ஸை."

"சர்க்காரில் அநேக சட்டம் பண்ணுகிறார்கள். ஆனால் அந்தச் சட்டங்களின் அபிப்ராயங்களைப் பற்றியே சில சமயங்களில் சிக்கல்கள் வந்து விடுகின்றன. அப்போது சட்டத்துக்கு வியாக்கியானம் இப்படித்தான் என்று இன்னொரு சட்டம் வகுத்து, அதன் மூலம் நிர்ணயம் செய்கிறார்கள். இதை Law of interpretation என்கிறார்கள். இப்படியே ஈச்வரனின் நிரந்தரச் சட்டமான (Eternal Law-ஆன) வேதங்களின் தாத்பர்யத்தை நிர்ணயம் செய்ய, மீமாம்ஸை என்ற சாஸ்திரம் வியாக்கியான சட்டமாக (Law of Interpretation-ஆக) இருக்கிறது. வேத வாக்கியம் ஒன்றுக்கு இன்னதுதான் அர்த்தம் என்று நிர்ணயம் பண்ணுவதற்கு, மீமாம்ஸா சாஸ்திரத்தில் ஆறு வழிகள். சொல்லியிருக்கின்றன. அந்த ஆறு;

**உபக்ரம - உபஸம்ஹாரௌ அப்யாஸ: அபூர்வதா பலம் |**
**அர்த்தவாத உபபத்தீ ச லிங்கம் தாத்பர்ய நிர்ணயே ||**

-என்று சொல்லியிருக்கிறது. கிருஷ்ண த்வைபாயனர், (வியாஸர்) ஒருத்தரே பல வேதங்களைக் கற்றுக்கொள்கிற பழைய முறைபோய், ரிக், யஜுஸ், ஸாம, அதர் வங்களில் ஏதாவது ஒன்றிலே ஒரு சாகையைப் படித்து மனப்பாடம் பண்ணி, அதன்படி செய்தால் போதும் என்ற புது ஏற்பாட்டைச் செய்தார். தம் சிஷ்யர்கள் நாலு பேரில் ஒவ்வொருவரிடமும் ஒரு வேதம் என்று பிரித்துக் கொடுத்து, இதன் சாகைகளை நீங்கள் பிரசாரம் செய்யுங்கள்? என்று ஆக்ஞை பண்ணினார். ரிக்வேத சாகைகளைப் பைலர் என்ற சிஷ்யரிடமும், இப்படியே யஜுஸை வைசம்பாயனரிட மும், ஸாமத்தை ஜைமினியிடமும், அதர்வத்தை ஸுமந்து என்பவரிடமும் கொடுத்துப் பிரசாரம் செய்ய வைத்தார்." என்று நமக்கு புரியும்படி விளக்கியிருக்கி றார்.

இவ்விதம் பூர்வத்தில் உள்ள சுருதியாதிகளில் சொல்லப்பட்ட பலவற்றின் தொகுப்பும், சிவபெருமானின் அருள் பெற்ற பல பெரியோர்கள் அவர்களது வாழ்க்கையில் அவர்கள் சொன்ன அருளுரையின் தொகுப்புமாக இந்நூலில் நாங்கள் தொகுத்து அளித்துள்ளோம். இந்நூலில் உள்ளவை ஏதோ ஒருதலைப் பட்சமாக அளிக்கப்பட்டு இருப்பதாக கருத வேண்டியதில்லை,

நாங்கள் இந்நூலைச் செய்து அதனால் கீர்த்தி அடைய வேண்டும் என்கிற எண்ணம் கொண்டு நாங்கள் இதில் பிரவேசிக்கவும் இல்லை. சிவ நாமோச்சரண மும், சிவ சம்மந்தமான செயல்களில் ஈடுபடுவதும் பரமசிரேஷ்டமான நலன்களை யும், பலன்களையும் தருமென்று பெரியோர் களும், சிவனடியவர்களும் வாழ்ந்து காட்டிச் சென்றதினால் எங்களது அற்ப புத்தியில் ஏற்பட்ட மாறுதலானது இந்நூ லைச் செய்யத் தூண்டிற்று.

இவ்வளவு செய்கைகளுக்கும் எங்கள் சாமர் த்தியமே காரணமென்று யாரும் மலைக்க வேண்டாம். ஈசுவரானுக்ரஹமும், மஹாவித்வான்களான பெரியோரது உதவியும் ஒருவனுக்கு உண்டானால் சாதாரணமானவர்கள் பண்டிதர்களாவதும், சிரேஷ்டமான குணவான்களாக மாறுவதும் நாம் கண்கூடாகக் காணக்கூடியதாய் இருப்பதால், எங்களையும் அவ்விதமே பாவித்துக் கொண்டு இம் மேலான

காரியத்தில் பிரவேசித்துள்ளோம், ஈசுவரானுக்ரஹம் என்பது முடவனை மலை தாண்ட வைக்கும், ஊமையைக் கவிபாட வைக்கும்!!, நம்மைப்படைத்த ஸ்ரீ பரமேச்வரரின் கல்யாணக் குணங்களையறியவும், அவ்விதம் நாமறிந்து நம்மால் அநுசரிக்கக்கூடிய நம் சிவபக்தியின் வளர்ச்சிக்கும், இந்த நூல் ஓரளவேனும் உபகாரமாக இருக்குமேயானால் எங்களுக்கு அதைவிட மகிழ்ச்சி வேறென்ன இருக்க முடியும்.

1927ம் ஆண்டு தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால் நா. கிருஷ்ண சாஸ்திரிகள், மு.சுப்ரமணிய சாஸ்திரிகள் ஆகியோரை உரையாசிரியரா கக் கொண்டு, பதிப்பித்து வெளியிடப்பட்ட "இரத்னத்ரயம்" என்னும் நூலில் முகவுரையாக சொல்லப்பட்டதில் உள்ள ஒரு பகுதியை இந்நூலிற்கும் முன்னுரை யின் கருத்தாக கொண்டிருக்கிறோம். அந்நூலில்;

"உலகத்தில் உள்ள பல சமயங்களையும் அங்கமாகக்கொண்டு அதன் அங்கியாய் ராஜாங்கத்தமர்ந்து விளங்குவது வைதிக சைவ சமயமேயாம். இது அங்கமாயுள்ள ஏனைய சமயங்களுள் ஒன்றையேனும் தாழ்ந்ததென்று நிந்திக்கிற தில்லை. ஏனைய சமயப் பொருளையே மேலான பொருளாகக் கொள்ளுதல் கூடாதென்று அறிவிக்கும். ஏனைய சமயங்களில் உள்ள பொருள்களனைத்தும் சைவ சமயத்தில் அங்கங்களாகக் காணப்பட்டு ஏனைய சமயங்களில் உள்ள பொருள்கள் அனைத்தையும் சைவ சமயங் கொள்வது போல, சைவ சமயத்தில் உள்ள பொருள் களனைத்தையும் ஏனைய சமயங்கள் ஒன்றுங் கொள்வதில்லை. ஆகையால் ஏனைய சமயங்கள் போல் சைவ சமயம் தோல்வியடையப் படுகிறதில்லை."

இந்நூலுக்கு ஆதாரமாக நாங்கள் எடுத்தாண்ட நூல்கள் விவரம்:

01. ஹரிஹர தாரதம்மியம் - (ம. தி. பாநுகவி) ஸ்ரீ தத்புருஷ சிவன், (1899)
02, சைவ சமய சரபம் ட் ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள். (1959)
03. நாலாயிர பிரபந்த விசாரம் - ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள், (1956)
04. அபிதான சிந்தாமணி - ஸ்ரீ சிங்காரவேலு முதலியார் . (1918)
05. மெய்கண்ட சிவதூஷண நிக்ரஹம் - ஸ்ரீ டி. முனிசாமி முதலியார் (1900)
06. ஸ்ரீ மஹாபாரதம் - ஸ்ரீ டி. வி. ஸ்ரீநிவாஸாசாரியார் (1926)
07. ஆதித்ய ஹ்ருதயம் - தேதியூர் ஸ்ரீ ஸுப்ரமண்ய சாஸ்திரிகள்
08. புருஷ ஸூக்தம் - ஸ்ரீ அண்ணா
09, வேதாகம தர்ம வித்யா - ஸ்ரீ நா. சாம்பசிவ சாஸ்திரிகள் (1932)
10. சிவபரத்துவ நிச்சயம் - ஸ்ரீ ஆ. ஈஸ்வரமூர் த்திப்பிள்ளை (1939)
11. சிவாலயத்தில் சமஸ்கிருத மந்திரங்களே வேண்டும் - ஸ்ரீ ஆ. ஈஸ்வரமூர்த்திப் பிள்ளை
12. சுலோகபஞ்சக விஷயம் - ஸ்ரீ ஆ. ஈஸ்வரமூர் த்திப்பிள்ளை (1938)
13. தமிழ் மன்னன் கோனேரிராயன் - ஸ்ரீ குடவாயில் பாலசுப்ரமணியன் (2001)
14. அருட்பா - மருட்பா - ஸ்ரீ ப. சரவணன் (2001)
15. சைவ வேதாந்தம் - ஸ்ரீ காசிவாசி, செந்திநாதையர் (1920)

16. ப்ராசீன் பாரத் மே கோமாம்ஸ - ஸ்ரீ எஸ். மஹாலிங்கம். பி.ஏ
(தட்சிணபாரத் ஹிந்தி பிரச்சார சபை-திருச்சி)
17. புரட்சி 1857 ஓர் ஆய்வரங்கு - பி. சி. ஜோஷி.

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
|சிவாத்பரதரம் நாஸ்தி|



# ஸ்ரீ ஹரதத்தாச்சாரிய ஸ்வாமிகள் சரித்திரம்

## பிருகு முனியின் சாபமும்; சாபநிவர்த்தியும்!

முன்பு ஒரு சமயம் விஷ்ணு, பிருகு முனிவரின் மனைவியைக் கொன்றமையினால், பிருகு முனிவர் விஷ்ணுவை நோக்கி, "என் பத்தினியை வதைத்தத் துரோகியே! நீ மிகவும் கீழான மற்ச, வராக, கூர்ம முதலிய அனேகக் கீழ்யோனிப் பிறவியடைந்தும், இன்னும் அனேக ஜென்மம் எடுத்தும், அனைத்திலும் ஸ்திரீ வியோகம் எய்தித் துயருரும் வாழ்வெய்துவாயாக!" எனும் முதலிய பல தீய சாபங்களிட்டு, "இச்சாபம் உனக்கு இட்டது இட்டதுதான், இதை யாரும் மாற்ற முடியாது"- என்று கூறியமையினால் - விஷ்ணுவானவர் மிகுந்த துயரத்தை அடைந்து, தனக்கேற்பட்ட இப்பிருகு முனியின் சாப நிவர்த்திக்கு உய்யும் வகையறியாது, நடுநடுங்கி உருத்திரரும், மகேஸ்வரரும், கணங்கள் புடைசூழப் பெற்றவரும், தன்னைப் புகல் அடைந்தோரைக் காப்பவருமான அம்பிகா சமேத சங்கரரைத் தன் ஹ்ருதயக் கமலத்தில் இருத்தி முறைப்படிக் கிருச்சிரசாந்திராயண விரதாதிகளை அநுஷ்டித்துத் தேகத்தை வாட்டியும், ஆயிரம் தேவ வருஷம் வாயு பக்ஷணம் செய்தும் மிகுந்தக் கோரத் தவமியற்றி சிவபெருமானைக் கண்டு, தன் சாபம் நிவாரணம் ஆகும் பொருட்டு உமாமகேஸ்வரரை சரணடைந்தார்.

இவ்விதம் கடும் தவமிருந்து, தன்னைச் சரணடைந்த விஷ்ணுவிடம், சரண் புகுந்தோரைக் ரக்ஷிக்கின்ற ஸ்ரீ மஹாதேவர், "குழந்தையே! உன் தபசுக் கண்டுப் ப்ரீதி கொன்டு உனக்கு அவ்ரம் கொடுக்க வந்தோம். நீயோ எமது பக்தனுக்கு தீங்கு செய்த வனாக இருக்கின்றாய்!... எமது பக்தருக்குச் செய்யும் தீங்கனைத்தும் சந்தேகம் இல்லாமல் எமக்குச் செய்தது போலாயிற்று!. நீ செய்த இந்த தபசினால் எமக்குச் செய்த துரோகம் நீங்கிற்று!. எமதன்பன் பிருகுவுக்குச் செய்த துரோகம் அப்படியே உள்ளது. அப்பாவமும் நீங்க வேண்டுமானால் பூவுலகில் காவிரிக்கு வடகரையில்

உள்ள கஞ்சாபுரத்தை அடைந்து, அங்குள்ள கஞ்சாபுரீஸ்வரரை உத்தேசித்து தவம் புரிவையேல் உன் சாபம் நீங்கும், எம் பக்தனின் சாபத்தைக் கடத்தல் யாவர்க்கும் அரிது!,. அதை எம்மாலும் மாற்றுதல் அரிது!... அங்கனமாயினும், எமதருளினால் உனக்கு அநேக ஜன்மங்கள் இல்லாதொழிக!.. உனக்கு மற்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், தன்வந்தரி, மோகினி, நாரதர், பிருது, சனற்குமாரர், விராட்டு எனும் இப்பத்து அவதாரமும் உனக்கு ஆவிர்ப்பாகமாகவும், பார்க்கவர், இராமர், பரசுராமர், கிருஷ்ணர், வியாஸர், பலபத்திரர், கபிலர், நரநாராயணர்; யஞ்ஞர், வாமனர், தத்தாத்திரேயர், விருஷபர், புத்தர், கற்கி, சுதர்ஸனர் என்னும் இப்பதினைந்து அவதாரமும் உனக்கு யோனிசமாகுக... உனக்கு பிருகு இட்ட அச்சாபம் தடையின்றி நிகழும்.!" என்றும்;

"எமது ஆச்ரமத்திலுள்ள சாதுக்களை வெறுப்பவர்கள் மிகவும் கீழானவர்கள். எமது பக்தர்களைக் காப்பவர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்களே. என்பக்தர் களை வெறுப்பவர்களுடன் பழகும் மனிதருக்கும் கொடிய பாவம் விளையும்... நீ உன் கவலையை விட்டுவிடு!. உன்னுடைய ஒவ்வொரு அவதாரமும் லோகோபகார மாகவே இருக்கும்! கௌதமர், ததீசி, கண்ணுவ மஹரிஷி, சியவனர், பிரம்மா, நந்தி என்னும் ஷண்முனிவர்களும் ஒவ்வொரு காலகட்டத்தில், ஒவ்வொரு காரணங்களு க்காக தமக்குத் துரோகம் செய்த பிரமணர்ளை, வைதிக நெறி பிறழ்ந்தவர்களாகவும், சிவநிந்தை புரிபவர்களாகவும், நெற்றியிலே யோனிக்குறியை உடையவர்களாகவும் போகுமாறு சபித்துவிட்டார்கள்."

"அதன்படியே இக்கஞ்சாபுரியிலே வாழும் அந்தணர் (வைணவர்) ஒருவர் தமக்குப் பிள்ளைவரம் வேண்டித் தவஞ்செய்யப் போகின்றார். அப்போது நமது ஆஞ்ஞையின்படியே நீ அவருக்குப் பிள்ளையாகப் பிறப்பாயாக!" என்று அருளி, தன் பக்தர்களாக விளங்கும் பிரம்மச்சாரி, கிருஹஸ்தன், வனப்பிரஸ்தன், ஸந்யாசி என்னும் நான்கு ஆச்ரமஸ்தார்களைப் பற்றியும், அவர்களது மேலான லக்ஷணங்கள் பற்றியும் தன்னைச் சரண்புகுந்த திருமாலிடம் கூறி, சம்சார சாகரத்தினைக் கடக்கும் உபாயமாக, *பைத்தியத் தன்மையிலேனும், மோகத்திலேனும், நித்திரையிலேனும், "சிவ" எனும் இரண்டெழுத்தை ஒருவன் சிந்தை செய்வானாயின், அவனை எம்மைப்போல குருவாக அறிவாயாக! பிரணவத்தோடிசைந்த பஞ்சாக்ஷரத்தினை ஒருமுறை உச்சரிப்பானாயின், அவன் எந்நிலையில் இருந்தாலும், எக்காலமும் பூசிக்கத்தக்கவனே!... ருத்திரன், சம்பு, மகாதேவ, சர்வஞ்ஞ, சங்கர, ஸ்ரீவாமதேவ, ஸ்ரீகண்ட, ஸ்ரீ நீலகண்ட, என்னும் இந்நாமங்களைச் சொல்லி தியானிப்பவனை நானே என்று அறிவாயாக!" என்று கூறிய ஸ்ரீ மஹாதேவர், திருமால் அக்கஞ்சபுரியிலே அவதரித்த பின்னர் ஹரியினது சாபநிவர்த்திக்கும், அவர்தம் மனோபீஷ்டங்களெல் லாம் நிறைவேறவும் அருளுவதாகச் சொல்லி அந்தர்த்தானமானார் .

## ஹரி ஹரதத்தராக அவதரித்தது!

ஷண்முனிவர்களின் சாபத்தினால், நெறிபிறழ்ந்து, எப்போதும் சிவநிந்தனை செய்தும், யோனிக்குறியை நெற்றியில் இட்டும், சதா வேதநிந்தை செய்தும்,

பாஞ்சராத்திர பாராயணர்களாயும் வாழுகின்ற பிராமணர்களுள், பாஷண்டமதமாகிய வைஷ்ணவத்தினை அநுசரித்திருக்கும் வைஷ்ணவர்களை திருத்தவும், சிவபெருமானே பரம்பொருள் என்றும், அவர்களை இவ்வைதிக நெறிக்கண் நிலைநிறுத்தவும், காச்யப கோத்திரரான வாசுதேவர் என்பவருக்கு இத்திருமாலானவர் கும்பகோணத் தருகில் உள்ள கஞ்சாபுரியிலே அவரது மனைவி வயிற்றிலே உற்பத்தியானார்.

இவ்வண்ணம் ஸ்ரீ பரமேச்வரரது அநுக்ரஹத்தினால் அக்கஞ்சாபுரியிலே வாழ்ந்துவந்த வாசுதேவருக்கு திருமால் மகனாகப் பிறந்ததும், அவரது பெற்றோர் மிகவும் மனமகிழ்ந்து, சுருதி சாஸ்திரம் அறிந்தவர்களை அழைத்து அவர்களுக்கு முறைப்படித் தான தருமம் செய்து ஜாதகர்மம் செய்வித்துப் பின் பதினோராம் நாள் பிள்ளைக்கு “சுதர்ஸனர்” என்று பெயரிட்டனர்.

## ஹரதத்தரின் சிவபக்தி!

சுதர்சனர் தமது குழந்தைப் பருவத்தில் வைணவ குடும்பத்திற்கு ஏற்றார்போல் இல்லாமல், தமது அந்தச் சிறு வயதிலேயே தம் உடல் முழுதும் திருநீறு பூசிக்கொண்டும் சிவநாமத்தினை ஜெபித்துக் கொண்டுமிருந்தார். அவரது அக்கிரஹாரத்தில் வசித்த இன்னொரு பிராமணரானப் பசுபதி என்பவரிடமிருந்து விபூதி, ருத்திராக்ஷம் பிரசாதிக்கும்படி அன்புடன் வேண்டி, தமது பெற்றோர் அணிவித்த வெள்ளைமண், மஞ்சட்பொடிகளை அழித்து சர்வாங்கமும் விபூதி உத்தானஞ்செய்து, திரிபுண்டரமாகத் தரித்து, உருத்திராக்ஷம் பூண்டு, அருகில் உள்ள ஸ்ரீ அக்னீஸ்வரர் ஆலயம் சென்று, மஹாதேவரைப் பிரதக்ஷிணம் செய்து, சிவபெருமானுக்கு உவப்பளிக்கின்ற திருத்தொண்டுகளைச் செய்ய ஆரம்பித்தார்.

‘குழந்தை ஏதோ அறியாமல் (பாலக்கிரீடை) செய்கிறான், பின்னர் சரியாகி விடுவான்!’ என்று எண்ணிய ஹரதத்தரது பெற்றோர்கள், அவருக்கு மூன்றாம் வயதில் சௌள கருமமும், ஐந்தாம் வயதில் உபநயனமும் செய்வித்தனர். அதன் பிறகும் அவருடைய சிவ பக்தியின் போக்கில் மாறுதல் ஏற்படாதிருக்கவே அவரது பெற்றோர் அவரை அழைத்து, “குழந்தாய்!... நீ சிவன் கோவிலுக்கு ஒருகாலமும் செல்லலாகாது!... விபூதிகொண்டு உத்தூளன திரிபுண்டர தாரணஞ்செய்து உருத்திராக்ஷத்தினையும் அணியளாகாது!.. சிவபக்தர்களோடு இணங்காதே!..... மறந்தும் புறம் போகாதே!.... ஸ்ரீவிஷ்ணுவின் சுத்தமான பாதத்தினை சிந்தனை செய்!... நமக்கென்று வகுத்துக் கொண்ட விதிகளைச்செய்! என்றெல்லாம் பலமுறை வேண்டினார் .

ஆனால், ஸ்ரீ சுதர்ஸனரோ தமது பெற்றோர் சொல் கேளாமல், தினமும் விபூதி, ருத்ராக்ஷம் அணிந்து ஸ்ரீ அக்னீஸ்வரர் ஆலயம் சென்று வணங்கி, அங்கே திருத்தொண்டு செய்து வருவாராயினர். இவரது இவ்வொழுக்கம் கண்ட வாசுதேவர், தமது வார்த்தையைக் கேட்காமல் தம் மதத்திற்கு இவ்விதம் இழுக்காக நடக்கின்றானே? என்று மிகுந்தக் கோவம் கொண்டு சுதர்சனரைக் கயிற்றால் கட்டி, கசையினால் அடித்துத் ஷண் முனிவர்களது சாபத்தினால் திடீரென்று தாங்களே உருவாக்கிக் கொண்ட தமது மத ஆசாரத்தினை உபதேசித்தார்.,

இவ்விதம் செய்தும் சுதர்ஸனர் மனம் மாறாமல் உறுதி உடையவராய்த் தமது மனோவாக்குக் காயங்களினால் சிவபெருமானுக்குப் பிரியமானவராகவே இருந்தார். தாம் எவ்வளவு சொல்லியும் தனது புத்திரனது மனம் மாறாததைக்கண்ட சுதர் ஸனரின் தந்தை வாசுதேவர், அவரை மிகக் கடுமையாகத் தண்டிக்கும் செயல்களி லும் ஈடுபட்டவரானார்.

ஒரு நாள் அவ்வாசுதேவர் தம் மனைவியிடம், "அவன் என் வார்த்தையைக் கேட்கும் வரை நீ அவனுக்கு அன்னமிடாதே! பட்டினியானது இவனது சாதாரண பக்தியையும் மாற்றும் வல்லமையுள்ளது!!.."" என்றுப் பணித்து தம் பணியைத் தொடர்ந்தார்.

பசியில் வாடின ஸ்ரீ சுதர்சனர் தம் பசிக்கு அவரது தாயாரிடம் அன்னம் கேட்க, அவரது தாயாரோ, "என் செல்லமே!... மாதா பிதா சொல்வதைக் கேள் !..... அதை விடவும் வேதம் என்ன இருக்கின்றது? உன் பிதாவே உனக்கும் தெய்வம், எனக்கும் தெய்வம்!.... அவரது பேச்சை என்னால் தட்ட முடியாது... அவரது சொல்பேச்சினை நீயும் எப்பொழுது கேட்கின்றாயோ அப்போதுதான் உனக்கு அன்னமிடுவேன்! நான் என்ன செய்வேன்?" என்று தன் மகனின் மாறாத அவரது செய்கைக்கு வருந்திக் கூறினாள். தனக்கேற்பட்ட "பசி" யின் வருத்தத்தைப் பயன்படுத்தித் தான் கொண்ட கொள்கைக்கு விரோதமாய் இருக்குமாறு வலியுறுத்தும் தம் பெற்றோரது பேச்சி னைக் கேட்டதுமே, மிகுந்த வைராக்கியத்துடன் தன் வீட்டை விட்டு வெளியேறி ஸ்ரீ அக்னீஸ்வரர் ஆலயம் சென்று, ஸ்ரீ அக்னீஸ்வரப் பெருமானையும், ஸ்ரீ நந்திகேஸ் வரரையும் நமஸ்கரித்து, மிகவும் மனம் இளகி, "என் சம்புவே!... மஹாதேவரே!... நீவிரே என் பிதா, உமாதேவியரே என் தாயார், உமது புதல்வர்களே எனக்குச் சகோதரர்கள்.... உமக்கு ஆப்தர்கள் யாரோ அவர்கள் எனக்குப் பரிசாரகர்கள்.... அப்படி இருந்தும் உமது தரிசனம் கிடைக்காததால், இவ்விடத்தே நான் நாயையும் புழுவை யும் ஒத்துத் திரிகின்றேன். ஸ்வாமீ! நான் உமது பூசையிலே வழுவினவனாக இருந்தாலும், தீனபந்துவாகிய நீர் என்னை ரக்ஷிக்க வேண்டாமா! அந்த விஷ்ணுவும், பிரும்மாவும் உம்மைக் காண முடியாத போது நான் எப்படி உம்மைக் காண்பேன்?! கிருபாநிதியே!.... அடியேனுக்கு ப்ரஸன்னராகுவீர்!.... எம்மிடம் வருகவென்று அடியே னை எப்போது அழைப்பீர்...... என் பெற்றவர்கள் போல இகழ்ந்து என்னைக் கைவிட்டு விடாதீர்!... உம்மைச் சரண் புகுந்த என்னை நீர் காக்காவிடில் வேறு புகலிடத்திற்கு எங்கு நான் போக?..... சம்போ!... எனக்கு நீர் பிரஸன்னமாகாவிடில் வேறு என்னதான் உம் எண்ணமோ ??..... கேவலமான இந்த பசிக்கு என்னை இறையாக்காமல் காப்பது உன் கடமையன்றோ?"' என்று பலவாறு மனமுருகி தோத்திரம் செய்பவரானார் .

## ஹரதத்தருக்கு சிவனார் ஞானோதயம் அருளியது!

தம்மைப் பலவாறு தோத்திரம் செய்யும் அப்பாலனது அன்பிற்கு இரங்கின சங்கரர், "குழந்தையே! இனி நீ அஞ்சற்க!" என்று தம் திருவுருவைத் தரிசிப்பித்த ருளினார். அத்தி முதல் எரும்பீறான உயிர்கள் அத்தனைக்கும் சித்தம் மகிழ்ந்தளிக்

கும் பரமதயாளனான ஸ்ரீ பரமேச்ரரைக் கண்டதும், ஸ்ரீ சுதர்சனருக்கு உரோமச் சிலிர்ப்புண்டாகி, தன் வயமிழந்தவராகி, சாஷ்டாங்கமாக வீழ்ந்தார் .

பின்னர் சிவபெருமான் சுதர்ஸனரைத் தழுவித் தம் மடிமீதமர்த்தி, உச்சிமோந்து, "உன் வருத்தம் யாது" என்று வினவ, அதற்கு அப்பாலர், "அண்டமோரணுவாம் பெருமை கொண்ட நீவிரே ஆன்மாக்களுக்கு அருள் புரியுமாறு அணுவோரண்டமாஞ் சிறுமை கொண்டீராதலின், எம் வினைவிளைவெல்லாம் நீரே அறிவீர்!" என்றார். தன்னைச் சரணடைந்த அப்பாலனுக்கு இனி தேவையானது சாஸ்திர ஞானமே எனும். சிவபெருமானின் திருவுளப்படி, சுதர்ஸனரைச் சோதிக்க எண்ணி, "உனக்கு என்ன வேண்டுமோ கேள்!" என்றார்.

அதற்கு சுதர்ஸனரோ, "ஸ்வாமி!... என்னைப் பாலனென்று ஏய்க்காதீர்!.... அரசனைக்கண்டவன் அருகம்புல்லைக் கேட்பானா?... உம் சித்தம் எதுவோ?" என்றார்.

அதன் பின்னர், ஸ்ரீ மகாதேவர், தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளி, தம் திருக்கரத்தினால் ஓர் யந்திரம் எழுதி அதை சுதர்ஸனரது சிரசிலே அமைத்து, "இனி நீ எல்லாம் அறிந்தவனாகுதி!" என்றருளி, அப்பாலனுக்கு முறைப்படி எல்லாம் செய்வித்து, பஞ்சாக்ஷரம் உபதேசித்து, வேதசிவாகமப்படி பூஜா விதியையும் உபதேசித்து, உத்தமமான ஸ்படிக லிங்கத்தினையும் சுதர்ஸனர் கையில் கொடுத்து 'சுதர் ஸனாசாரியார்? என்ற பெயரை மாற்றி, 'ஹரதத்தாசாரியார்? என்கிற திருநாமமும் இட்டருளி, அவ்வாலய சிவலிங்கதில் அந்தர்த்தானமானார்.

பின்னர் ஹரதத்தர் தம் வீட்டிற்குச் சென்று தம் பசிக்கு அன்னம் கேட்க, தூங்கிக் கொண்டிருந்த அவரது தகப்பனார் எழுந்து வந்து, "வெள்ளேரு ஏறுவோன் கோயிலுக்கு நீ போனதினால், உனக்கு அன்னம் கிடையாது. நம் ஆசாரத்தினை ஒழுகாதிருப்பதினால் உனக்கு அன்ன ஆகாரம் கிடையவே கிடையாது. இனியும் நீ இப்படி எல்லாம் மயானத்தில் வசிக்கின்ற அந்த பிச்சைக்காரனையும், பித்துப்பிடித்த வனையும் சிவனென்று கதியாய் இருந்தால் உன் காலை ஒடிப்பேன்!" என்று பலவாறு திட்டவாரம்பித்தார் .

## ஹரதத்தர் தம் பிதாவிடம் வாதித்தது!!

பித்தனாகவும்' 'பிச்சாண்டியாகவும்' விளங்கும் ஸ்ரீ மஹாதேவரது மாயா குணமறியாத தன் தந்தையை நினைத்து ஸ்ரீ ஹரதத்தாசாரியார் மிகவும் வருந்தி, "பிச்சாண்டியாய் இருப்பதும், பித்தனாக இருப்பதும் அவரது மாய விளையாட்டு!.... உண்மையாகவே ஸ்ரீ மஹாதேவரான அவர் அப்படித்தான் என்றால் அவருக்குப் 'பிச்சையிட' எவனுக்கு யோக்கியதையும் அருகதையும் இருக்கின்றது?" என்று கேட்டு, ஸ்ரீமஹாதேவரின் ஸர்வேஸ்வர தத்துவ மகத்துவங்களை தன் தகப்பனாருக்கு சொல்ல ஆரம்பித்தார் . இதனால் இருவருக்கும் வாக்குவாதம் ஆரம்பித்தது.

சர்வேஸ்வரத்துவ விவாதத்தில் தன் தரப்பு நியாயங்களை தன் தகப்பனார் ஏற்காததினால் மிகுந்த வெறுப்புற்று, "கௌதமராலும், ததீசியாலும், நந்திகேஸ்வர ராலும் சபிக்கப்பட்ட பிராமணருக்குள்ளே நீயும் அகப்பட்டதால் பரமபதியான ஸ்ரீ மஹாதேவருடைய மகிமை உனக்கும் எப்படித்தெரியும்? சிவபெருமான் சாதாரணமா னவர் என்றால், பித்தன் என்றால், இரந்துண்ணும் பிச்சாண்டியாக இருந்தால், நீ வணங்கும் விஷ்ணுவானவர் ஏன் அவரை பூசித்தார்?. ஸ்ரீ மஹாதேவரிடம் இருந்து வரம் வாங்கினவராக இருந்தது ஏன்? தம்முடைய அவதாரங்களில் ஸ்ரீ மஹாதேவரி டம் நிக்ரஹப் பட்டு பங்கம் அடைந்ததும் ஏன்?! என்னை பூசியாதே என்று நீ ஏன் சொல்கிறாய்?.... நான் விஷ்ணுவை சேவிக்க வேண்டுமானால் நீ பரமாகப் போற்றும் அந்த விஷ்ணுவினுடைய சர்வேஸ்வரத்துவத்தினைப் பற்றி வேதாகம முறைப்படி சொல்லுங்கள் பார்ப்போம்!!" என்றும்;

"உம்மால் தரப்பெற்ற என்னுடைய இச்சிறு தெய்வப் பெயரும் (சுதர்ஸனம்), உம்மால் செய்விக்கப்படும் அவைதிக கர்மங்களிலும் எனக்கு சிறிதும் உடன்பாடு கிடையாது என்பதையும் அறியும்!, சிவபெருமான் அருளிய வேத-சிவாகமங்கள் இரண்டும் நமக்கு முக்கியப் பிரமாணங்கள்! இவற்றால் உரைக்கப்படும் உண்மைப் பொருளாய் திகழ்பவர் பரமபதியாகிய ஸ்ரீ பரமேச்வரர் ஒருவரே! அவரை அடைய சன்மார்கமே - சிறந்த சைவமார்கம் ஆகும்!, இச்சிறந்த சைவ சமயத்தால் பெறப்படும் சிவதீட்சையே முக்திக்கு சாதனம்!, இவ்வுண்மை முக்தியடைபவர்கள் சிவனடியார்களேயன்றி வேறு எவரும் இல்லை!!. இதுவே எனது நிச்சயமான முடிவும் ஆகும், சர்வமங்கள குணாகரராய் விளங்கும் ஹரன் என்னும் திவ்ய நாமத்தை உடைய சிவபெருமானுக்கு நான் என்னை 'தத்தம்' செய்து விட்டேன் ஆகையால், இனிமேல் என்னை நீங்கள் உட்பட "ஹரதத்தர்" என்று உணரக்கடவீராக! என்று சொன்னார்.

இவ்விதம் ஹரதத்தர் தம் தந்தையிடம் சொன்னதும், தம் பிள்ளை மீது மிகுந்த ஆச்சர்யம் கொண்டவராகி, ஹரதத்தரது மனதை மாற்ற அவரும் தனக்குத் தெரிந்தமட்டில் ஏதேதோ சொல்லியும், வைணவர்களின் பொய்நூலான ஸ்ரீமத் பாகவதத்தில் இருந்தும் மேற்கோள் காண்பித்தும், ஹரதத்தாசாரியரின் பதில் கேள்விகளுக்கு அவரது தகப்பனாரால் பதிலிருக்க முடியாது போயிற்று,

தன் தகப்பனாரிடம் வாதிடும் இவரது இச்செய்கை அறிந்த ஊராரும், அங்கு வசித்த வைணவர் களும், பெரியோரும், சைவர்களும், அன்றியுள்ள மதவாதிகளும் சேர்ந்து இவருடைய வாதில் உள்ள உண்மை உணரத்தலைப்பட்டனர். "தினம் தினம் வாதம் விருத்தியானது. அவ்வூர் வைணவர்கள் மிகவும் ஸ்தம்பித்தவர்களானார் கள். ஸ்ரீ ஹரதத்தரின் வாக்கிலிருந்து வரும் வார்த்தைகள் ஒவ்வொன்றும் அவ்வைணவர்களின் உச்சந்தலையில் இடிவிழுந்தது போல அவர்களை நிலைகு லையச்செய்தது.

"இவ்விதமான ஹரதத்தரின் வாதம் ஒர் முடிவுக்கு வரவேண்டுமானால், அவர் பழுக்கக் காய்ச்சின இரும்பு முக்காலியில் அமர்ந்து ஹரியையேனும் (விஷ்ணு) ஹரனையேனும் (சிவபெருமான்) நியாயமான வாதத்தின் மூலம் இதுதான் "பரம்"

என்று தாம் நியமிக்கும் பெரியோர் முன்னிலையில் ஸ்தாபித்தால் அவ்வூரில் உள்ளவர்கள் (எதிர்வாதம் செய்வோர்) தாங்கள் அந்த மதத்தை அடைகிறோம்' என்று உறுதி அளித்தமையால் ஹரதத்தாசாரியாரும் ஏதுமறியா ஏழை வைணவர்களான அவர் களது அந்த நிபந்தனையை ஏற்றார்.

(23.12.1904 ம் ஆண்டு, ஸ்ரீ பி. வ. இரத்தினசாமிப் பிள்ளை என்பவர் விஷ்ணுவை "பரம்" என்று சொல்லித் திரிவோரை, திருத்தி நல்வழிக்கு திருப்ப, ஓர் உடன்படிக்கை ஏற்பாடு செய்து, அதற்கு ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள் தலைமையில் இருதிரத்தாரும் கூடி, சைவர்கள் தமது கொள்கையை நிரூபணம் செய்தால் வைணவர்கள் "சைவ சமயத்தை" தழுவவேண்டும் என்றும், அவ்விதமே வைணவர்கள் தம் கொள்கையை நிரூபணம் செய்தால் சைவர்கள் அனைவரும் "வைணவராவது" என்கிற உடன்படிக் கை ஏற்பாடானது. இந்த ஏற்பாட்டை சைவர்கள், வைணவர்கள் மீதான அவநம்பிக் கையினால் இருதிரத்தாரின் வெற்றி தோல்வி விஷயமாக ஓர் உடன்படிக்கை எழுதி, ரிஜிஸ்டர் செய்து வாதுக்கு அழைக்க, அந்த ரிஜிஸ்டரில் உள்ள வாசகத்தைக்கண்ட வைணவர்கள் "எங்களுக்கு வாதத்தில் விருப்பில்லை" என்று வாளாயிருந்து விட்டனர் . ஸ்ரீ ஹரதத்தாச்சாரியார் காலத்தில் வாழ்ந்த "வைணவர்கள்" எதில் உண்மை இருக்கிறது என்றறிய "உண்மையாகவே" ஆவல் கொண்டிருந்தனர் என்ப தும், ஸ்ரீ பாம்பன் ஸ்வாமி காலத்தில் வாழ்ந்த வைணவர்கள் அவ்வுண்மையை உணரக்கூட விரும்பவில்லை என்றே தெரிகிறது!. ஷண்முனிவர்களின் "சாபத்தை" கடத்தல் அரிது என்பதையும்; ஒவ்வொரு காலகட்டத்திலும் இவ்வைணவர் கள் எவ்விதம் மாறியுள்ளனர் என்பதையுமே இது காண்பிக்கிறது.)

## வைணவர் நிபந்தனையும்!. தகிக்கும் முக்காலியும்!!

வைணவர்களின் நிபந்தனைப்படி ஸ்ரீ ஹரதத்தாசாரியார் பாஞ்சராத்திரிகளை (வைணவர்கள்) ஸ்ரீ அக்னீஸ்வரர் ஆலயத்திற்கு சிவனே பரமென்று ஸ்தாபிக்க அழைக்க, அவ்வைணவர்களோ, "நாங்கள் மதம் கொண்ட யானை துரத்தினாலும் சிவாலயம் நுழையோம் என்கிற நியமம் பூண்டவர்கள்... இங்குள்ள ஸ்ரீ ஹரியின் ஆலயமும் அதி விசாலமானதே!... அவ்வாலயத்திற்குள் வந்து அந்தச் சிறுவன் சிவனே பரமென்று உரைத்து ஸ்தாபனம் செய்யட்டும்!" என்று சொல்லி, முன்னர் ஏற்படுத்திய நிபந்தனையின் படி அவ்வூரிலுள்ள ஸ்ரீ வரதராஜஸ்வாமி ஆலயத்துள் பழுக்கக் காய்ச்சின இரும்பு முக்காலியை ஏற்பாடு செய்து, ஸ்ரீ ஹரதத்தாச்சாரியா ரை வாதுக்கு அழைத்தனர்.

ஹரதத்தர் அதற்கிசைந்து, அவ்வாலயத்துள் உள்ள கருடனுக்கும், வரதராஜ ஸ்வாமிக்கும் இடையில் போட்டு வைத்திருந்த பழுக்கக் காய்ச்சின இரும்பு முக்காலியில் ஏறுமுன்னர், அவ்வாலய கருவரை முன்பு நின்று, "ஹே! ஸ்வாமி!... மஹாதேவரே!.. உன் சந்நிதியிலிருந்து சர்வசாரமான உபநிஷதார்த்தங்களால் சிவபரத்துவ ஸ்தாபனம் செய்யப் போகின்றேன். நான் ஏறப் போகின்ற இக்காய்ந்த இரும்பு முக்காலியானது குளிர்ந்த ஜலத்தைப்போன்று ஆகவேண்டியது!" என்று அங்கு வீற்றிருக்கும் ஹரியை தாம் வணங்கும் சதாசிவனாகப் பாவித்து வேண்டி

அம்முக்காலியை பிரதக்ஷிணம் செய்து, உமாதேவி சமேதரான சிவபெருமானைத் தியானித்து, அங்கு ஆவலுடன் காத்திருக்கும் சைவ - வைணவர்களுக்குள்ளே சிவ நிந்தனை செய்வோரை நோக்கி - ஸ்ரீ சுருதி சூக்திமாலை, பஞ்சரத்ன மாலை, வேத ப்ரமாணம், புராண ப்ரமாணம், மற்றும், ஸ்மிருதியாதி பிரமாணங்களில் இருந்து நிறைய கேள்விகளைக் கேட்டு சிவபெருமானுடைய பரத்துவத்தை ஸ்தாபனம் செய்தார் .

பண்டிதர் சபையிலே வைதிகாக்கிரராய் பிரகாசித்த அவரை அங்கு கூடி இருந்த பெரியோரெல்லாம் ஸ்ரீ ஹரதத்தாசாரியாரைத் துதித்து, வணங்கிச் சென்றனர். வாசுதேவரோ, தன் புதல்வருடைய அருள்வாக்கின் வன்மையை வியந்து, "யான் அறியாமலே உனக்குச் செய்தவைகளை க்ஷமிப்பாயாக!" என்று வேண்டினார் . அங்குக் கூடியிருந்த வைணவர்களோ, "இது நாள் வரை வீணே வாழ்ந்த எங்களுக்குப் பிராயச்சித்தம் என்ன?!.... எங்களுக்குப் பரலோகக் கதி என்னவகும்?"" என்று கவலையுடன் வேண்டினர் .

"இதற்குப் பிராயச்சித்தம் நான் சொல்ல வேண்டியதில்லை... ஸ்மிருதிகளும், பெரியோர்களும் சொன்ன பிராயச்சித்தமே உங்களுக்குப் போதுமானது!... உங்கள் தேகத்தைச் சங்குச்சக்கர முத்திரைகளாகச் கட்டமைக்குப் பிராயச்சித்தம், விபூதி உத்தூளனத் திரிபுண்டரமே!... எப்படிப்பட்ட பிறப்பாளருக்கும் விபூதியே சிறந்த சாதனம்!.... சிவ பெருமானுடைய ஐந்து முகங்களில் ஒன்றான அகோர முகத்தை த்யானித்து வாழ்வீராக!" என்று ஹரதத்தாசாரியார் திருவாய் மலர்ந்தருளி, அங்குக் கூடி இருந்தோர்க்கெல்லாம் சிவத்துவப் பேற்றிற்கு அறிகுறியாகிய விபூதியிட்டும், திருவருட் பேற்றிற்கு அறிகுறியான உருத்திராக்ஷத்தைத் தரிப்பித்தும், பஞ்சாக்ஷர உபதேசம் செய்தும், அவர்களுக்கு சிவபூஜாவிதிகளையும் உபதேசித்தருளினார்.

"தன் நேத்ரக் கமலத்தினாலே முன்னமே சிவபெருமானைப் பூசித்த மஹாவிஷ்ணுவே லோகத்தைக் காக்கும் போருட்டும், சிவபக்தியை விளைக்கும் பொருட்டும், வைதிகநெறியை நிலைநிறுத்தும் பொருட்டும் இவ்வூரில் ஹரதத்தர் எனும் திருநாமங்கொண்டு அவதரித்தார்!" என்று அசரீரி வாக்கும் அங்கு உண்டா யிற்று.

## ஹரதத்தரை மன்னன் தன் ஆச்சார்யராகக் கொண்டது!

அப்போது அப்பகுதியை ஆண்டுவந்த, சிவலிங்க பூபதி என்னும் மன்னன் ஹரதத்தர் பால்யவயதில் சிவபெருமானிடத்தில் திருவருள் பெற்றமையும், பிறரொருவரிடத்தில் அல்லாமல் தான் வணங்கும் சிவபெருமானிடமிருந்தே சகல வேத சாஸ்திரங்களை கற்றுணர்ந்தமையும் கேள்வியுற்று, மிகுந்த பக்தியுடையவ ராய் ஸ்ரீ ஹரத்தாசாரிய ஸ்வாமிகளை அடைந்து, "மதுராபுரி நாயகராகிய ஸ்ரீசுந்தரேசப்பெருமான், பாண்டி நாதனாகிய என்னைக்காக்கும் பொருட்டு உம்முரு வில் இங்கு எழுந்தருளினார் போலும்!" என்று போற்றி நமஸ்கரித்து, அவருக்கு, மண், பொன், வஸ்திரம் போன்றவற்றை உபகரித்து, "உம்மை சரண் அடைந்தேன்...

அடியேன் மீது நாதராகிய நீர் எமக்குத் திருவருள் பாலித்தருள வேண்டுகின்றேன்!" என்று பணிந்து, வேண்டிய மட்டும் புஷ்பங்களினால் அர்ச்சித்தான்.

"சிவபெருமானின் கிருபையில்லாமல் சிவபெருமானை சிந்தைகூட செய்ய முடியாது!... நீவிரும் சிவகிருபைப் பெற்றீராதலால் சைவராவதற்கு அருள் பூண்டிருக்கிறீர்!" என்று திருவாய் மலர்ந்து, அம் மன்னனுக்கு ஸ்ரீ பஞ்சாக்ஷர உபதேசம் செய்து, ஸ்படிகலிங்க பூஜை செய்வித்து, சிவபெருமான் தம் அன்பனான வைச்ரவனைக் "குபேரனாக்கி" சிநேகம் கொண்டது போல், ஹரதத்தர் சிவலிங்க பூபதியைக் கொண்டார் .

அதன் பிறகு, ஸ்ரீ ஹரதத்தருக்கு திருமண வயது வந்ததும், அவரது பெற்றோர் அவ்வூரிலே நல்ல ஆசாரமுடையவரும், சிறந்த சிவ பக்தருமான சுப்பிரதீநர் - கமலாக்ஷி தம்பதியர்க்குப் பிறந்த சௌ. கமலவல்லியை திருமணம் பேசி முகூர்த் தம் நிச்சயிக்கப்பட்டு, பந்துக்கள், ஊரார், சிவலிங்க பூபதி, சிவ கணங்கள் சூழ ஸ்ரீ ஹரதத்தர் - ஸ்ரீமதி கமலவல்லியின் திருமணம் இனிதே நடந்தேரியது. அவருக்கு எட்டு ஆண் பிள்ளைகளும் (அக்னீஸ்வரன், மகாதேவன், நீலகண்டன், சங்கரன், சந்திரசேகரன், சம்பு, மத்யார் ச்சுனேஸ்வரன், கோவடு நாயகன்) கற்பகம், மீனாக்ஷி என்று இரு புதல்விகளும் பிறந்தனர்.

அவர் களெல்லாம் சிவநேசச் செல்வர்கள், விபூதி உருத்திராக தாரணர்களாய், சிவலிங்கார் சனர் களாய், சதாசர்வ காலமும் ஸ்ரீ ருத்ரமும், பஞ்சாக்ஷர ஜெபமும் செய்வோராய் குடும்ப கௌரவத்தினை விருத்தி செய்தனர் . அவரவர்களுக்கு தக்க சமயத்தில் திருமணமும் செய்வித்து சிறந்த சிவசிரோண்மணியாக வாழ்ந்த ஸ்ரீ ஹரதத்தாச்சாரியார், சதுர்வேத ஸாரம், சிவ தத்வ நிரூபணம், ஹரிஹர தாரதம்மியம், ஸ்ரீகண்டபாஷ்ய சமர் த்தனம், உஜ்வலம், ஞானரத்னாகரம், சிவாதிக்ய சிகாமணி, பக்தாதிக்ய சிகாமணி, சைவாகம பூஷணம், விபூதிருத்ராக்ஷ பஞ்சகம் - எனும் நூல்களை இயற்றி, பல அருஞ்சாதனைகள் புரிந்தவராக விளங்கினார்.

ஸ்ரீ ஹரதத்தாச்சாரியருடைய எல்லையில்லா பக்திக்கும், தம்மீது அவர் கொண்டிருந்த அன்பிற்கும், மகிழ்ந்த ஸ்ரீ மஹாதேவர் குரு வடிவம் கொண்டு, அவருக்குச் சாயுச்சியம் அருள வேண்டி, உமை, பிரும்மா, விஷ்ணு, ப்ருங்கி, நந்தி, மஹாகாளர் முதலானோரோடு வாத்தியக் கோஷங்கள் முழங்க, அட்டதிக்குகளெல் லாம் அளவில்லாப் ப்ரகாசம் விளங்க, தம் மந்தகாசத்தினால் முகம் சோபிக்க, மான் மழு அபயம் விளங்க இடபாரூடராய்த் தோன்றி ஸ்ரீ ஹரதத்தருக்கு சிவசாயுஜ்யம் தந்தருளினார் .

அளவில்லாப் பெருமை கொண்டு, சிவபெருமானின் மகிமைகளைத் தன்னால் இயன்ற அளவு வெளிப்படுத்தி, பேரண்ட அளவில் அமைந்த ஒர் துரும்பளவில், அதிலும் அமைந்த பல்லாயிர நுண்ணளவில் ஒரளவு நாமறியும் வண்ணம் சிவத்தொண்டில் தம் வாழ்நாள் கழித்த இவரது வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் மிகவும் போற்றுதலுக்குரியவை. சுபம்.

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
[சிவாத்பரதரம் நாஸ்தி]

# ஸ்ரீ ஹரதத்தாச்சாரிய சுவாமிகள் வாழ்வில் நடந்தவை

1. ஒருநாள் அக்னீஸ்வர ஸ்வாமிக்கு திருத்தொண்டு செய்யும் சில கணிகைகள் அவர்தம் பணிக்கு வராது, தாமதமாக மறுநாள் ஆலயப்பணிக்கு வந்தமையால், கோவிலதிகாரிகள் அவர்களைத் தண்டித்து, அக்கணிகைகளை கோவில் மண்டபத்தில் ஏற்றி அன்ன ஆகாரமில்லாது மிகவும் வருத்தினார்கள்.

ஹரதத்தரோ, வழக்கமாகத் தாம் வரும் காலம் தப்பி மத்தியானத்திற்குப் பின் தனது நித்திய ஆலயசேவையின் பொருட்டு அங்கே வந்தவரிடம் அக் கணிகைகள் தங்கள் துயரத்தினைக் கூற, “உங்களைத் தண்டிக்க அதிகாரிகள் இருக்கிறார்கள். இந்த தண்டனையைப் பெறும் உங்களது பாக்கியம் எனக்கில்லை!.... என்னைக் கண்டிக்க அதிகாரி ஒருவரும் இல்லை! ஆலய சேவைக்கு தாமதமாக வந்த என்னை நானே தண்டித்துக் கொள்கிறேன்!” என்று தன் தலையை கருங்கல் தூணில் முட்டிக் கொண்டும், அழுது புரண்டும் மூர்ச்சித்துத் தரையில் விழுந்தார். இவரது இச்செய்கை கண்டு மனத்துயரம் அடைந்த கோவிலதிகாரிகள் செய்வதறியாது அக்கண்ணிகையரை விடுவித்தனர்.

2. மேற்குறித்த நாளன்று ஹரதத்தர் தமது நித்தியக் கர்மானுஷ்டங்களை முடித்துத் தம் கிருஹத்தில் சிவபெருமானுக்குப் பூஜை செய்து அபிஷேகம் செய்யும் போது ஒரு நாயொன்று தாக மேலீட்டினால் நாக்கை நீட்டவே, இவர் அந்த சங்காபிஷேக ஜலத்தினை அந்த நாயின் நாவிலே விட்டு எஞ்சியதைச் சிவலிங்கத்தில் அபிஷேகஞ் செய்தார். இவரது இக்காரியத்தினைக் கண்டவர்கள், “நீர் அநுசிதமான காரியத்தை இவ்விதம் செய்யலாமோ?” என்றதற்கு, “என்மீதுள்ள அன்பினாலே சிவபெருமானெ இந்நாயுருக் கொண்டு எழுந்தருளினால் யான் என்ன செய்ய” என்றார் .

3. ஓர் நாள் மன்னர் சிவலிங்க பூபதி, அக்னீஸ்வரப் பெருமானுக்கு சமர்ப்பிக்கும் பொருட்டு மிகுந்த விலை மதிப்புள்ள பீதாம்பரம் ஒன்றினை ஹரதத்தரிடம் சமர்ப்பிக்கச் சொல்லி தம் பணியாளரிடம் தந்தனுப்ப, அச்சமயம் ஹரதத்தர் அக்னி வளர்த்து ஹோம காரியம் செய்து கொண்டிருக்கவே, அரசனுடைய பணியாட்கள் தன்னிடம் நீட்டிய அந்தப் பீதாம்பரத்தினை, சிவபெருமானை சிந்தனை செய்து அந்த ஹோம குண்டத்தில் இட்டு பஸ்மீகரமாக்கினார். இவரது இச்செய்கையை தம் பணியாள் மூலம் அறிந்த மன்னன், ஹரதத்தர் மீது எவ்வித வெறுப்புமின்றி, ஹரதத்தர் எல்லாம் தெரிந்தவராதலால் அவரையே இவ்விஷயம் குறித்துக் கேட்டறிய ஹரதத்தரது கிரஹத்திற்கு வந்தார்.

மன்னனது உளக்குறிப்பையறிந்த ஸ்ரீ ஹரதத்தாச்சாரியார், மன்னனை அழைத்துக் கொண்டு போய் அக்னீஸ்வரர் ஆலயத்தில் அம்மன்னன் அளித்த வஸ்திரம், ஸ்ரீ அக்னீஸ்வரருக்குச் சார்த்தப் பட்டிருப்பதைக் காண்பித்தார். சிவலிங்கச் சோழ மன்னன், தமது குற்றம் பொருக்க வேண்டுமென அவரது பாதத்தைத் தம் கண்ணீரால் அலம்பி, மன்னிப்புக் கோரினான்.

4. ஹரதத்தர் வாழ்ந்த அக்ரஹாரத்திலே நிறைய பசுக்களை வளர்த்து வந்த ஒர் அந்தணன், ஒரு நாள் தன் வீட்டுக் கொல்லைப்புறமாக வைக்கோற்க் கட்டை மதிலோரமாகப் போட்ட பொழுது, அம்மதிலின் மறுபுறத்தில் உறங்கிக் கொண்டிருந்த இளம் கன்று ஒன்று அவ்வைக்கோற் கட்டின் பாரம் தாங்காது அதிர்ச்சியில் இறந்தது. இதையறிந்த அப்பிராமணன் மிகுந்த துயருற்றான்.

“நீ கோஹத்திச் செய்தாய்! நீ கோஹத்திச் செய்தாய்!!” என்று ஊரார் அவரை துவேஷித்து நிந்தா வார்த்தைகள் கூறி அவரை மேலும் கலக்கமடையச் செய்யவே, இதற்கோர் பிராயச்சித்தம் ஸ்ரீ ஹரதத்தர் சொல்வார் என்று ஹரதத்தரது வீட்டிற்குள் பதட்டத்துடன் நுழைந்த அப்பிராமணரது தலையில் வீட்டு வாயிற்படி இடித்தது. இடிபட்ட வலி தாங்காத அப்பிராமணன், “சிவ சிவ” என்று சொல்லிக்கொண்டே உள்ளே நுழைந்தான் .

அவர் வந்த விவரம் அறிந்த ஸ்ரீ ஹரதத்தர், “என் வீட்டிற்குள் நுழைந்த போது நீர் முதலில் சொன்ன சிவ எனும் சப்தத்தினால் உன் கோஹத்தி பாவ விமோசனமும், இரண்டாம் முறை சொன்ன சிவ சப்தத்தினால் மரித்த அக்கன்றுக்கு முக்தியும் உண்டாயிற்று!” என்று சொன்னார்.

ஹரதத்தருடைய விட்டில் அவ்வமயம் அங்கிருந்த இன்னொரு பிராமணன், “பாவிகள் ஈசனை வணங்குதல் முறையாகாது.... இவனோ கோஹத்தி செய்த மஹா பாபி.... இவன் செய்த அக்கொடுரச் செயல் இவன் சொன்ன சிவநாமத்தினால் நிவாரணமெய்துமோ!.,.....? வேடிக்கை!!’” என்று சொன்னான்.

இவ்விதம் தன் சந்தேகத்தினை வெளியிட்டவனை நோக்கி ஹரதத்தர், “சிவ பெருமானுடைய மாயை பிரம, விஷ்ணுக்களையும் மயக்கிவிடுமே!.... இவனை அது தப்பவிடுமா!... சிவ நாமத்தினாலே ஒழிக்கத்தக்கப் பாவத்தினை செய்யத்தக்கவர்கள் இவ்வுலகில் இல்லை என்பதினால்தான் ஸ்மிருதிகளிலே இந்த சிவநாமம் பிராயச்சித்தமாக சொல்லப்பட்டிருக்கிறது... உங்களுக்கெல்லாம் இவன் செய்த பாவம் நீங்கியது என்பது தெரியவேண்டுமென்றால், இவன் என்ன செய்யவேண்டும்?!....” என்று கேட்கவே, அப்பிராமணனுடைய கருத்தைக் கொண்ட ஊரார் அனைவரும் ஒருமனதாகத் தீர்மானித்து, “கோஹத்தி செய்த பிராமணன் தரும் புல்லினை அக்னீஸ்வரர் ஆலயத்திலுள்ள கல்நந்தி சாப்பிட்டால் ஒப்புக்கொள்வதாகச்’” சொன்னார்கள்.

கோஹத்தி செய்த அந்த பிராமணனும், முறைப்படி பூஜை புனஸ்காரங்கள் முடித்து அக்னீஸ்வரர் ஆலயம் சென்று, அக்னீஸ்வரரை நமஸ்கரித்து, அங்குள்ள நந்தியெம் பெருமானது வலது புறம் நின்று தம் கையில் அறுகம்புல் வைத்துக்

கொண்டு, "அஷ்டமூர்த்தியாகிய சிவபெருமானைத் தாங்குபவரே!.... தயாநிதியே!... சிவநாமோச் சரத்தினால் என்பாவம் நீங்கிற்று என்றால் இந்தப் புல்லைச் சாப்பிட்டு என்னை எப்போதும் ரக்ஷித்தருளுக!" என்று வேண்டியதும், அவ்விருஷப தேவர் தன் நாக்கை அவர் பக்கம் சுழட்டி அவரளித்த அறுகன் புல்லைக் கிரஹித்து உண்டார் . அதுகண்டு கூடியிருந்த அக்ரஹாரத்தினர் அவரது பாவம் ஒழிந்தது! ஒழிந்தது!!" என்றும், *ஹரதத்தர் சாட்சாத் சிவ ஸ்வரூபியே' என்றுணர்ந்து அவரை நமஸ்கரித்து, அவரவர் தத்தமது வீடு போனார்கள்.

5. நிறையப் பிள்ளைக் குட்டிகளுடன் மிகுந்த வறுமையில் வாடின சதாசிவம் எனும் பிராமணரது வீட்டில் ஓர்நாள் ஸ்ரீ ஹரதத்தர் உணவு உண்கையில் அவரது வறுமை நிலையறிந்து, மன்னர் சிவலிங்க பூபதியினால் அவரை அவரது ஏழ்மை யிலிருந்து நல்ல நிலைக்கு ஏற்றினார்.

6. ஒரு சமயம் ஸ்ரீ ஹரதத்தரது தாயார் நெல்லைக் காயவைத்துக் கொண்டு இருந்த போது அந்நெல்லை ஓர் காளை வந்து மேயவே, அவரது தாயார் அக்காளை யை வெகுவாய் அடித்துத் துரத்தினார். அதைக் கண்ட ஹரதத்தர், "ஏனம்மா இப்படிச் செய்தாய்?" என்று கேட்க, "சிவ நிவேதனத்துக்கு ஒன்றுமில்லையாதலால், இதைக்கொண்டு அது நடத்தல் வேண்டும். அதனால் இப்படிச் செய்தேன்!" என்றாள்.

அச்சமயம், மன்னர் சிவலிங்கபூபதி இவருக்கு 400 மூட்டை நெல்லை அனுப்பியதில், இருநாறு மூட்டைகள் நதிப்ரவாகத்தில் போய்விட்டதை, கொண்டு வந்தவர்கள் சொன்னதும், ஹரதத்தர் தன் தாயாரிடம், "நீ காளையைத் திண்ண வொட்டாது அடித்து ஓட்டிய உன் துர்ச்செயலால்தான் நாநூறு இருநூறானது!" என்றார் சிரித்துக் கொண்டே!

7. ஒரு சமயம் இவரது மனைவி சமையல் வேலையில் ஈடுபட்டிருந்த போது நாயொன்று களைந்து வைத்த அரிசியில் வாயை வைக்கவே, சமையல் வேலையில் இருந்த அவரது மனைவி, கையில் வைத்திருந்த அறிவாள் மனையினால் அடிக்க, அது நாய் மீது பட்டு மூர்ச்சித்து வீழ்ந்தது. அப்போது அங்கு வந்த ஹரதத்தர், நடந்தவை அறிந்து, "நீ வாசலைத் தாழிடாததினால்தான் நாய் உள்ளே புகுந்தது. உன் குற்றம் இப்படி இருக்க, நீ நாயைத் தண்டித்தது முறையல்ல!..." என்று கூறி அந்நாயைத் தன் மடிமீது கிடத்தி, அதற்கு உருத்திராக்ஷம் தரிப்பித்து, விபூதியை உடலெங்கும் பூசி, பஞ்சாக்ஷரம் ஜெபித்து, அந்நாயைப் பூதசரீரத்திலிருந்து, தேவ சரீரத்தினை எடுப்பிக்கச் செய்து அதற்கு கைலாயக் கதியருளினார் .

8. தன் தாய் காளையை வெருட்டியதற்கும், மனைவி நாயை அறிவாள் மனையால் அடித்ததற்கும் பிராயச்சித்தம் செய்வதற்கு, "தெரிந்தும் தெரியாமல் செய்த மஹாபபங்களுக்கு, ஏகாந்தத்தில் இருந்து சிவ நாமத்தினை ஜெபித்தலே பிராயச்சித்தமாம்" எனும் பொருளில் ஓர் ஸ்லோகம் எழுதினார். இதில் முதல் வரி இவரும் இரண்டாம் வரியை ஹரதத்தர் குளிக்கச் சென்றபோது, இவருருவில் வந்த ஸீ மஹாதேவரும் எழுதியதாகும். அந்த ஸ்லோகம்;

**ஞாநாஞ் ஞாநப்ரயுக்தாநாம் பாபாநாம் மஹதாமபி ।**
**ஏகாந்த நிஷ்க்ரதிச் சம்போஸ்ஸகிர் தேவஹிகீர் த்தநாத் ॥**

9. ஓர் நாள் இவர் காவிரியில் ஸ்நாநம் செய்யப் போன போது, அங்கு ஒரு சண்டாளன் ஒருவன், தன் மனைவியைக் காவிரியில் குளிக்காதே! என்று தடுக்க, அவளோ, 'காவிரியைத் தரிசித்தாலும், அதில் குளித்தாலும் மஹாபாபங்கள் நீங்கு வதாக நீதானே சொன்னாய்?" என்று திருப்பிக் கேட்டதற்கு, அச்சண்டாளன், "அடீ,, காவேரித் தீரத்திலே எவ்வளவு மணலுண்டோ அவ்வளவும் சிவலிங்கமடி!!"" என்ற தைக் கேட்ட ஹரதத்தர், அச் சண்டாளனின் காலில் வீழ்ந்து வணங்கி, அவனது செருப்பைத் தன் தலைமீது வைத்து ஆனந்தக் கூத்தாடி, "உலகத்திலே சிலர் ஞானத்தைத் தாங்குகிறார்கள்... வேறு சிலர் தன் கர்மத்தைச் சுமக்கிறார்கள்... நாமோ இந்தச் சிவபக்தருடைய பாதரக்ஷயைத் தாங்குகிறோம்!." என்று மகிழ்ந்தார் .

10. தம்மைச் சரணடைந்து கைலாயம் செல்ல விரும்ரிய மன்னர் சிவலிங்க பூபதியிடம், "அரையாமப் பொழுதிற்குள் அக்னீஸ்வரர் ஆலயத்தையும், அதைச் சுற்றியுள்ள ஏழு சிவாலயங்களையும் தரிசனம் செய்தால் உமக்குக் கயிலாயக் காட்சி கிட்டும்!" என்று ஹரதத்தர் சொல்லியவாறு மன்னன் தன் பரிவாரங்களுடன், குதிரை மீதேறிச் சென்று அவ்வேழு சிவாலயங்களையும் தரிசித்து முடித்து ஸ்ரீ அக்னீஸ்வரர் ஆலயம் நுழைந்த போது, மன்னனுடனே ஓடிவந்தக் களைப்பில் குடைபிடிப்போனும், குதிரையும் மூர்ச்சித்து விழுந்தனர் .

சேவகனும், குதிரையும் அவ்விதம் மூர்ச்சித்த மறுகணம், அங்கு வந்த புஷ்பக விமானதில் அவர்கள் தம் சரீரத்துடனே ஏறி கயிலைக்குச் சென்றனர். மன்னனோ, மிகுந்த மனக்கலக்கம் அடைந்தவனாக, குதிரையும், தன் சேவகனும் செய்த பாக்கியத்தை தான் செய்யவில்லையோ? என்று மிகவும் வருந்தி, தன் குதிரையும், குடைபிடித்து வந்த சேவகனும் விமானம் ஏறி கயிலைக்குச் சென்றது போன்று, தான் செல்ல முடியாததற்கு ஸ்ரீ ஹரதத்தாச்சாரியரிடம் காரணம் கேட்டான். தன்னிடம் இவ்விதம் மிகவருந்தி உபாயம் கேட்ட அரசனிடம் ஹரதத்தர், "உன்னுடன் வந்த அவ்விருவரது சரீர சிரமத்தினை நீ அடையாமல், அரசன் எனும் அகந்தையில் ஏழு சிவாலயங்கள் சென்று வந்தாய், தேக சிரமம் பாராமல், தான் என்கின்ற எண்ணத்தை விட்டு, மீண்டும் நீ பாதாசாரியாய் அந்த ஏழு சிவாலயங் களை தரிசித்து விட்டு வருவாயேயானால் அவர்களுக்கு கிடைத்த அந்த நற்கதி உனக்கும் கிட்டும்," என்றபடி மன்னனும் அதன்படிச் செய்து தன் சரீரத்துடன் தேவர்கள் பூச்சொரிய சிவபெருமானுடன் வாஹனத்தின் மீதேறிக் கயிலை சென்றார்.

11. கஞ்சனூரில் புதிதாய் குடியேறிய தாசி ஒருத்தியை அடைய பக்கத்து ஊர் பிராமணன் ஒருவன் அவளிடம், தான் ஹரதத்தரின் புதல்வர் என்றும், வேண்டும் பொருள் தருவேன் என்றும் ஆசைவார்தைகள் நிறைய கூறி, அவளுடன் சில நாட்கள் சுகித்திருந்துவிட்டு ஓர்நாள் அப் பிராமணன் ஒன்றும் கொடுக்காமல் தனது கிராமத்திற்குச் சென்று விட்டான். தன்னை வஞ்சித்த அப்பிராமணனது செயலுக்கு நியாயம் கேட்க, அத்தாசியானவள் ஹரதத்தரை அடைந்து நடந்தது கூறி, நியாயம்

கேட்டாள். ஹரதத்தர் ஒன்றும் பேசாது, சிவபெருமானே அவளோடிருந்துப் போயினார் என்று கொண்டு, தம்மிடம் உள்ள ஆயிரம் கழஞ்சு சுவர்ண ஆபரணத் தினை அவளிடம் கொடுத்து அனுப்பினார்.

அவள் செல்லும் வழியில் அக்கஞ்சனூர் வாசிகள்: அவளிடம், "ஹரதத்தரது எட்டுப் பிள்ளைகளும் சன்மார்க்க நெறிபூண்டவர்கள்... தகப்பனின் கௌரவத்திற்கு இழுக்குத் தேடித்தராதவர்கள் ..." என்றும், ஹரதத்தரது அருமை பெருமைகளை மேலும் கூறி, இறுதியாக, "அவரிடம் நீ பொய் சொல்லி வாங்கிய பொருளை அவரிடமே கொடுத்துவிடு!" என்றனர். அவளும் மிகுந்த மனக்கலக்கம் கொண்டவ ளாய் ஹரதத்தரிடம் மீண்டும் சென்று வாங்கிய பொருளைத் திருப்பித் தர, அவரோ, "அம்மா... இதை நான். சிவார்ப்பணம் என்று தந்துவிட்டேன்!,.. திரும்பப்பெறுவதில் பயனில்லை! அர்த்தமும் இல்லை!!" என்று மறுத்து அனுப்பிவிடவே, அத்தாசியான வள் சிவார்ப்பணமாகத் தந்ததை சிவனுக்கே செலுத்தி விடுவோம் என்கிற சித்த சுத்தி பிறந்து, அவ்வாயிரம் கழஞ்சு சுவர்ணாபரணத்தினைக் கொண்டு ஸ்ரீ அக்னீஸ் வரர் ஆலயத்திற்கு மண்டபம், விமானம் முதலிய திருப்பணிகளைச் செய்தாள்.

12. கஞ்சனூரில் ஒருசமயம் நடந்த இரதோற்சவத்தில் கலந்து கொள்ள, ஹரதத்தரின் புதல்விகள் இருவரும் தம் பிதாவை அடைந்து, ஊர்ப் பெண்டிரும், தம் தோழியரும் அணிந்துள்ள ஆபரணம் போன்றுத் தமக்கும் அதுபோன்று ஆபரணங்கள் கேட்க, ஹரதத்தரோ, "உங்கள் அவயத்தில் பூசும் விபூதியே உங்களுக்கு பொன்னிலும் சிறந்த பூஷணம். நீங்கள் சிரவணம் செய்யும் சிவநாமமே காதுக்கு சிறந்த அலங்காரம், நீவிர் செய்யும் சிவலிங்கார் ச்சனையே புனிதமான கரபூஷணம், சிவபெருமானுக்கு நீங்கள் செய்யும் நமஸ்காரமே பாதபூஷணம், இதுவே போதும்.... லௌகிக பூஷணங்கள் எல்லாம் முற்ஜென்மத்தில் இவையிவை வேணுமென்று ஸ்ரீ மஹாதேவரை யார் உபாசித்தார்களோ, அவர்களுக்குத்தான்!. ... நமக்கல்ல!!" என்றார். தந்தையாரின் இப்பதிலினால் திருப்தியுறாத அவரது பெண்கள், ஏக்கமாக *நீங்கள் தருவீரா மாட்டீரா?* என்றனர்.

அவ்வமயம் ஓர் எருது ஒன்று வீதிவழியே சென்றதைக்கண்ட ஹரதத்தர், தன் பெண்களிடம், "அவ்வெருதைத் தொடர்ந்து சென்று அதன் பாதம் பட்ட இடத்தில் உங்களுக்கு வேண்டியப் பூஷணங்கள் கிடைக்கும். போய் எடுத்துக் கொள்ளுங்கள் !' என்றபடியே அவர்கள் அந்த எருதின் குளம்படி பட்ட இடத்திலிருந்து நகைகளெல் லாம் எடுத்து அணிந்து கொள்ளும்போது, தம் தந்தை ஏன் மாட்டின் குளம்படியில் உண்டான ஆபரணங்களை எடுத்து அணியச்சொன்னார்? என்று சிந்தித்து, அவர் அவ்விதம் சொன்னதன் அர்த்தம் புரிந்துகொண்ட ஹரதத்தரது புதல்விகள், தாம் கொணர்ந்த எல்லா ஆபரணங்களையும் ஸ்ரீ அக்னீஸ்வரருக்கும், ஸ்ரீ கற்பக நாயகிக் கும் அணிவித்து அழகு பார்த்தனர்.

13. திருவாவடுதுறை சிவாலயத்திற்கு ஓர் நாள் ஹரதத்தர் சென்று திரும்புகையில், புயல் காற்றுடன், பெருமழையும் வருஷித்தது. ஹரதத்தர் தமதில்லம் ' திரும்புகையில் இப்படி இடையூறு நேர்த்ததே என்று கலங்க, கோவடு நாதராகிய சிவபெருமான் இடையன் கோலம் தாங்கி, ஹரதத்தருக்குத் துணையாக

வந்தார். தமதில்லம் வரை துணையாக வந்த அந்த இடைச் சிறுவனுக்கு ஹரதத்தர் உண்பதற்குப் பாகற்காய் குழம்பும், அன்னமும் அளிக்க, அதை ஹரதத்தர் மிக வருத்தியும் உண்ணாது, 'நான் என் வீட்டிற்குப் போய் சாப்பிடுகிறேன்! என்று அவரளித்த அன்னத்தை, அச்சிறுவன் எடுத்துச் சென்று திருவாடுதுறை ஆலயம் நுழைந்து சிவலிங்கத்திற்கும், அம்பிகைக்கும் முன்பாக வாரி இறைத்து விட்டு சிவலிங்கத்தில் மறைந்து அந்தர்த்தானமானான்.

மறுநாள் காலை கோவிலாட்கள் கோவடுநாத ஸ்வாமி முன்பு இறைந்து கிடக்கும் சாதத்தைக் கண்டு, இது ஆலய பரிசாரகர்களின் செயலே!" என்று தீர்மானித்து கோவில் பரிசாரகர்களை அழைத்துத் தண்டிக்க தொடங்கின போது முன்னிரவு நடந்தவைகளை சிவபெருமான் அசரீரியாகத் தெரிவித்து ஹரதத்தரின் அன்பையும், தனக்கு ஹரதத்தர் மீதான அன்பையும் தெரிவிக்கவே அங்கிருந்தோர் மிகவும் மகிழ்வெய்தி ஸ்ரீ ஹரதத்தரைப் போற்றினர்.

14. யதீஸ்வரர் என்பவரிடம் திரியம்பகர் என்பவர் சிஷ்யனாக இருந்து, தன் குருவிடம் இருந்து கற்க வேண்டியவைகளைக் கற்றும் "பஞ்சாக்ஷரத்தின் மகிமை யை" அறியாமல் இருந்ததினால், யதீஸ்வரர் தன் சிஷ்யன் இவ்விதமாக இருக்கின்றானே என்று மிக வருத்தம் கொண்டு, அவனுக்கு எவ்விதத்திலேனும் பஞ்சாக்ஷர மகிமையை உணரச்செய்ய வேண்டும் என்று தகுந்த காலத்திற்காகக் காத்திருந்தார், இடையில் யதீஸ்வரர் தேக வ்யோகம் அடைந்து மரணகாலம் நெருங்குவதறிந்து, தன் படுக்கை அருகே தரையில் "ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திற்கு மேலான விஷயம் அறிவதற்கில்லை" என்று தன் சிஷ்யன் திரியம்பகர் அறிவதற்காக எழுதி வைத்ததை, பால் வியாபாரம் செய்யும் கிழவி ஒருத்தி அதைக்கண்டு ஒரு ஓலை நறுக்கில் எழுதிவைத்துத் தன் காதோலையாக சுருட்டி மாட்டிக்கொண்டு, அது ஏதோ அறியக்கூடாத பெரிய ரஹஸ்யம் என்று கருதி, வேறு எவரும் அதை அறியாமலிரு க்க, யதீஸ்வரர் தரையில் எழுதியதை, அவள் காலால் அழித்துச் சென்றாள்.

திரும்பிவந்த தன் சிஷ்யனிடம் தேக வியோகத்தில் இருந்த யதீஸ்வரர், தன் சிஷ்யனிடம் பால்காரக் கிழவியிடம் மிக உயர்ந்த செய்தி இருப்பதாக நடந்ததைக் கூறியபின் ப்ராணத்யாகம் செய்துகொண்டார். திரியம்பகரோ, எப்படியேனும் கிழவி யிடம் உள்ள காதோலை ரகசியமறிய வேண்டுமென்று அக்கிழவியின் வீட்டிற்குப் போனான். அக்கிழவியோ தன்னுடன் குடும்பம் நடத்தினால் காதோலை தருவதாகச் சொன்னதற்கு இணங்கிய திரியம்பகர், அவளுக்கு வேண்டிய தொழிலெல்லாம் செய்து, அவளைப் ப்ரீதி செய்து ஓர்நாள் அக்காதோலையையும் பெற்றுக் கொண் டான்.

இவ்விதம் தான் தன் குருவின் உபதேசம் பெறுவதற்கு ஓர் கிழவியிடம் இவ்விதம் இழிவாக வாழ நேர்ந்ததே இதற்குப் பிராயசித்தம் என்ன? என்று யோசித்து ஓர் தைப்பூசத்தன்று, காவிரியில் ஸ்நானம் செய்து, திருவிடைமருதூரில் ஸ்ரீ மஹாலிங்கேஸ்வரரை தரிசித்துப் பின், ஹரதத்தர் இல்லம் வந்து, தன் வரலாறு கூறி, தான் அதுகாறும் அக்கிழவியைக் கூடியிருந்த தோஷம் போக பரிகாரம் கேட்க, ஸ்ரீ ஹரதத்தர், "எவனொருவன் எப்பாவகாரியம் செய்தாலும், தைப்பூசத்தன்று காவிரி

ஸ்நானம் செய்து, ஸ்ரீமத்யார்ச்சுனரை வழிபட்டவனாக இருக்கின்றானோ.... அவன் அதுவரை செய்த பாவத்திலிருந்து அப்போதே விடுபட்டவனாகின்றான்." என்றார். இவ்விதம் ஸ்ரீ ஹரதத்தார் கூறியதை அவனும், ஊராரும் நம்பாததினால், அவர்கள் அனைவரையும் திருவிடைமருதூர் ஸ்ரீ மத்யார்ச்சுனேஸ்வரர் சந்நிதிக்குள் வரவழைத்து, அங்கு வீற்றிருக்கும் ஸ்வாமியின் திருவாக்கினாலேயே, "மஹாலிங்க தரிசனத்தினாலும், காவிரி ஸ்நானத்தினாலும் அவன் பாபம் போயது!.. போயது!" என்றுரைக்கச் செய்தார்.

15. எங்கும் நடமாட முடியாத தன் சகோதரியின் முடமான பிள்ளையை, அவனது காசியாத்திரை செய்யும் ஆசையை பூர்த்தி செய்ய, கஞ்சனூர் ஸ்ரீ அக்னீஸ்வரர் ஆலயத்தில் உள்ள பிரும்ம தீர்த்தத் திருக்குளத்தில் மூழ்கச்செய்து காசியில் உள்ள ல்மணிகர் ணிகையில் எழச்செய்து, காசி விஸ்வனாதரையும், விசாலாக்ஷியையும் தரிசிப்பிக்கச் செய்தார். (அவர் கஞ்சனூரில் மூழ்கி காசியில் எழுந்த போது சங்கரர் உமையுடன் தோன்றி ஸ்ரீ ஹரதத்தரைப் பற்றிக் குசலம் விசாரித்தனராம்!) இதனால் கஞ்சனூர் அக்னீஸ்வரர் ஆலயத் திருக்குளத்திற்கு மணிகர்ணிகை என்றும் பெயர் உண்டு!.

16. அரவம் தீண்டி இறந்து போன இரண்டுச் சிறுவர்களை, மந்திரித்து விபூதியிட்டு உயிர்த்தெழச் செய்து, அவ்விருவரையும் "கருமம் முடிந்ததினால் இறந்தனர்" என்று அவர்களது பெற்றோருக்கு ஆறுதலுரைத்து, இறந்து போன இரண்டுச் சிறுவர்களை கயிலைக்கு அனுப்பினார்.

17. மன்னனது அரண்மனையில் திருடிய திருடன் ஒருவனை, அரண்மனைக் காவலாளிகள் துரத்த தஞ்சமாக ஹரதத்தர் இல்லம் புகுந்து, தான் அரண்மனையில் திருடியதையும், காவலாளி துரத்துவதையும் கூறியதைக் கேட்ட ஹரதத்தர், "உண்மையைப் பேசின நீ பிராமணனே!" என்று அவனுக்கு விபூதி தாரணமும், யஞ்ஞோபவீத தாரணமும் செய்வித்து உணவளித்து, அரண்மனை காவலர் களிடமிருந்து அவனைக் காத்து, திருத்தி அனுப்பினார்.

இவ்விதம் ஹரதத்தாசாரியார் சர்வ கர்த்தாவாகிய சிவபெருமானையே பூரண பாவனா தியானம் செய்து கொண்டிருந்தார். தன்னைச் சரணடைந்தோரை ரக்ஷிக்கின்ற ஸ்ரீ மஹாதேவர், அவருக்கு சாயுஜ்யம் கொடுக்க வேண்டி, தம்முடன் ப்ருங்கி, நந்தி, மஹாகாளர், பிரம்மா, விஷ்ணு முதலியவர் களோடு எழுந்தருளி உமையுடன் காட்சியளித்துச் சிவலோக ப்ராப்தமளிக்கும் முன், ஹரதத்தர் சிவபெருமானை நமஸ்கரித்து வந்தனம் செய்து, துதித்து, "ஸ்வாமீ... இப்போது நீர் அடியேனுக்கு வரம் கொடுப்பீராகில், என்னுடனே என் இருபுறத்தும் உள்ள பதினான்கு வீட்டுக்காரர்களுக்கும் மீண்டும் வாரா நெறியாகிய முக்தியிலே சேர்த்தருளும்!.... இதுவே உம்மிடம் நான் கேட்கும் வரம்!..." என்று வேண்ட பக்தரகஷ்கரான ஸ்ரீ மஹாதேவர், "அங்ஙனமே ஆகுக!" என்று அங்கீகரித்ததன் படியே அனைவரும் வாஹனத்தில் ஏறியதும், சிவபெருமான் ஹரதத்தரிடம், "நீ வேண்டியபடியே ஏறிவிட்டார்கள்... ஆனால் ஒர் ஆள் குறைகிறதே? அது யார்?" என்று கேட்க, ஹரதத்தர், "அவள் ஓர்

கிழவி. ஒவ்வொரு நாளும் விக்னேஸ்வரருக்கு மோதகம் செய்து நிவேதிப்பவள், இன்றும் அவளது அந்தப் பணியிலிருப்பதால் அது முடித்து வருவாள்" என்றார்.

ஸ்ரீ மஹாதேவர் வினாயகரை விட்டு அக்கிழவியை அழைத்து வர அனுப்ப, அக்கிழவியோ, தன்னை கயிலைக்கு இட்டுச்செல்ல வந்த ஸ்ரீ கணபதியிடம், "அடுப்பில் மோதகம் இருக்கிறது, அதை விக்னேஸ்வரருக்கு நிவேதித்தப் பின் வருகின்றேன். இப்போது போகின்றவர்கள் முந்திப்போகலாம். நான் நிவேதனம் செய்யாமல் வருவதற்கில்லை!" என்கிற அவளது பதிலைக்கேட்ட ஸ்ரீ விக்னேஸ்வரர், தன் தகப்பனாரும், உலக உயிர்களுக்கெல்லாம் தாயுமானவனாக இருப்பவருமான ஸ்ரீ மகாதேவரிடம் வந்து நடந்தவற்றைச் சொல்ல, ஸ்ரீ மஹாதேவர், புன்முறுவல் பூத்து, கிழவியின் வைராக்கியத்தினை வியந்து, பிள்ளை வினாயகரை நோக்கி, "அக்கிழவியினுடைய பூசையை அங்கீகரித்துக் கொண்டு அவளைக் கைலைக்கு நீ இட்டுக் கொண்டு வருக!!" எனச்சொல்லி அனைவரையும் ரதத்தில் ஏறுமாறு பணித்தார்.

ஹரதத்தருடைய அன்பர்கள் அனைவரும் ரதத்தில் ஏறும் சமயம், ஹரதத்தருடைய எச்சில் இலையில் மீதம் வைத்ததை தினமும் உண்டு வந்த நாயொன்று, அவருடைய பிரிவைத் தாங்காது இரக்கத்தினால் மிகுதியாக அழவே, ஹரதத்தர் அதையும் தம்முடன் இரதத்தில் ஏற்றிவைத்து தாமும் ஏறி, அவர்கள் எல்லோரும் அழியாததும், பழிப்பற்றதும், ஆனந்தமே உருவமானதும், பகலிரவு அற்றதும், ஸ்ரீ பரமேஸ்வரரையே ஒத்ததுமான ஸ்ரீ கைலாசத்தை அடைந்தார்கள் .

**ஸ்ரீ ஹரதத்தாச்சாரியாரின் திவ்ய சரித்திரம் முற்றிற்று.**

---

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
। சிவாத்பரதரம் நாஸ்தி ।

# ஸ்ரீ ஹரதத்தாச்சாரியார் அருளிய ஹரிஹர தாரதம்மியம்

**001**

**ஏகஸ்ஸமுத்ரசலிலே வடபத்ரசாயி த்வந்யஸ்ஸமுத்ர**
**சரதிஸ்த்ரிபுரப்ரபெத்தா ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்த்ய வ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்து**
**தமிமம் வயமாச்ரயாம: ॥**

**பதவுரை: ஏக: =** ஒருவன், **ஸமுத்ரஸலிலே =** கடல்நீரில், **வடபத்ரசாய் =** ஆலிலையில் கிடக்கின்றவன், **அந்ய;து =** இன்னொருவனானால், **சமுத்ரசரதி: =** அந்தக் கடலை அம்புக்கூடாக உடையவனும், **திரிபுரபெத்தா =** திரிபுரங்களை பேதி த்தவனுமாக உள்ளவன், **அநயோ: =** இவ்விருருக்குள், **அதிக: =** சிறந்தவன் யாவன்? **இதி =** இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம் =** உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம் =** நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஒருவனுக்குள்ள அம்பராத்தூணி, அம்பு என்னும் இவைக ளைவிட அவைகளை ஸ்வாதீனமாகக் கொண்டவன் சிறந்தவன் என்பது தெளிவு. ஒருவனுடைய செருப்பு, குடை, அம்பு இவையெல்லாம் வைத்திருப்பவன் அவனிஷ் டம் போல உபயோகிக்கப்படுபவை. ஹரி ஆலிலையில் குழந்தையுருவில் பிரமப் பிரளய காலத்தில் உண்டாகிற சமுத்திர நீரின் நடுவில் படுத்துக் கிடந்ததை பாரதம் - ஆரண்ய பருவத்தில் காணலாம். ஹரனோ திரிபுர சம்ஹார காலத்தில் அந்த ஹரியை மேருவாகிய வில்லில் அம்பாகக் கொண்டவன், ஆதலால் திருமாலுஞ் சிவபெருமானால் உபயோகப்படுத்தப்பட்ட ஓர் வஸ்துவாய் இருப்பதினால் இழிவடைந்த அந்த ஹரியை பொருளல்ல என்றொதுக்கி உயர் வடைந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

தம் கையில் கொண்ட அம்பையும், வில்லையும் ஸ்ரீ பரமேச்வரர் கீழே போட் டாரானால் அவ்வில்லும் அம்பும் தாமாகவே இயங்கும் தன்மையைப் பெறுவ தில்லை!. ஏனென்றால் அது அசேதன வஸ்துவானபடியால்!, இவ்விஷயத்தில் அசேதனனாக விஷ்ணுவும், சேதனனாக ஸ்ரீ பரமேச்வரரும் இருந்த உண்மை பெறப்படுவதால் இருவருக்கும் உள்ள தாரதம்மியத்தை அது சொல்லிவிடுகிறதே?!

**குறிப்பு:** மேற்குறித்த சமஸ்கிருத ஸ்லோகத்தில் **"வ்ருத்தா"** என்று வரும் சொல் வயதில் பெரியோரைக் குறிப்பதன்று, கற்றவர்கள், நடுவுநிலைக்குறியவர்கள், மற்றும் ஞான வைராக்யமும், நற்குணம் உடையோரும் பெரியவர்கள் என்கிற அர்த்தத்தைக் குறிப்பதாகும்.. அது போன்றே **"ஸத்யம் ப்ருவந்து"** என்னும் சொல், ஒருதலைப் பட்சமாக முடிவு எடுப்போரை அல்ல நாம் வினவுவது - என்றும் கொள்ளவும்.

**"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போலமைந் தொருபாற் கோடாமை சான்றோ ர்க் கணி"** - என்பது வள்ளுவர் வாக்கு. இப்படிப்பட்டோரையும், இவ்வித குணமுள்ளோரையுமே நாம் வினவுகிறோம் என்றும், **"தமிமம் வயமாச்ரயம்"** என்றால் மெய்யறிவுடையோரால் கூறப்படுவதே உண்மைப் பொருளாவதால் இவ் விஷயத்தில் அவ்வுண்மை வழி நிற்போரை சரணடைந்து அவர் வழி நிற்பதே தக்கோருக்கழகு - என்றும் அர்த்தத்தைக் கொள்ளவும்.

**"பொரு எல்லவற்றைப் பொரு ளென்றுணரு, மருளானா மாணாப் பிறப்பு"** - என்பதும் குறள் காட்டும் ஓர் வழியாகும். எனவே, இனி வரும் ஸ்லோகங்களில் மேற்குறித்த பொருள் விளக்கத்தை புரிந்து கொண்டு படிக்கவும். இதில் வரும் தாரதம்மியம் என்பதில் காணப்பெறும் விளக்கங்கள் யாவும் விவரிக்கப்பட்டவை என்பதையும், அவ்விஷயங்கள் வைஷ்ணவர்கள் கொண்டாடும் அவர்களது நூலில் இருந்து மேற்கோள் காட்டவும், அவ்விதிகாசங்களை படிக்காதோருக்கு புரியும்படி சொல்லவும்தான் என்பதையும் அறியவும். நடுவு நிலைமையில் நின்று சீர்தூக்கிப் பார்த்து அவரவர் தமக்கு ஸ்ரீ பரமேச்வரரால் அருளப்பட்ட "மெய்யறிவைக்" கொண்டு ஸ்ரீ ஹரதத்தாசாரியார் அருளியவற்றை அணுகவும்.

**"நடுவுறின் றார் க்கன்றி ஞானமு மில்லை**
**நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை**
**நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்**
**நடுவுநின் றார் வழி நானுநின் றேனே"**

என்பதும்;

**"காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்**
**ஆய்தல் அறிவுடையார் கண்ணதே - காய்வதன்கண்**
**உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன்கண்**
**குற்றமுந் தோன்றாக் கெடும்"**

என்பதும் மூதுரையாகும்.

துரியோதனனுடைய சபையில் திரௌபதையை துரியோதனாதிகள் மான பங்கப் படுத்த முயற்ச்சித்த போது, அஷ்ட வசுக்களில் ஒருவரும், தான் வேண்டும் போது மரணமடைய வரம் பெற்றவரும், சிறந்த பிரம்மச்சர்ய விரதம் பூண்டவரும், பாண்டவர்கள் மற்றும் துரியோதனாதிகள் முதலிய பிறராலும் என இருதிறத்தாராலும் "பிதாமஹர்" என்று கொண்டாடப்பட்டவருமான ஸ்ரீ பீஷ்மர் அச்சமயத்தில் துரியோதனனுடைய "சபை"யில்தான் இருந்தார் .

தான் சபையில் வீற்றிருக்கும் சமயத்தில் இவ்விதமான காரியம் நடக்கும் போது ஸ்ரீ பீஷ்மர் பாஞ்சாலியின் மானபங்கம் குறித்து 'எதுவும்' பேசாமல், தடுக்கவும் இல்லாமல் அச்சபையில் "இருந்தார் " எனும்போது அவருடைய இச்செயல் பல அர்த்தங்களைக் கொண்டதாக ஆகிறது.

இந்த பீஷ்மர் பாரதப் போரில் வீழ்த்தப்பட்டு 'அம்புப் படுக்கையில்' கிடந்து, பாண்டவர்கள், துரியோதனாதிகள், ஸ்ரீ கிருஷ்ணன், ரிஷிகள், முனிகள், அரசர்கள் முதலிய பலர் கேட்கும் கேள்விகளுக்கு யட்சப் ப்ரச்னத்தில் பீமனை மீட்க தருமர் ஒற்றை வார்த்தையில் யட்சனுக்கு "பதில்" சொன்னது போல சொல்லாமல் மிக விரிவாகவே உவமேயக் கதைகளையும், மற்றும் பல பூர்வ தொடர்பையும் இணைத்து "விரிவான" பதில்களாகவே (அம்புப் படுக்கையில் இருந்தவாறே) சொல்வதும் பல அர்த்தங்களை நமக்குப் புரிய வைக்கிறது.

இதில் நாங்கள் கொண்டுள்ள அர்த்தம் யாதெனில், பீஷ்மர் அம்புப் படுக்கையில் இருந்து அனைவரது கேள்விகளுக்கும் பதில் சொல்லும் சமயம் **அவரே "எந்த சபையில் பெரியோர் இல்லையோ அது சபையல்ல; எவர் சத்தியம் சொல்லவில்லையோ அவர் பெரியோர் அல்ல; எது கபடத்துடன் கூடியதாக இருக்கிறதோ அது சத்தியமல்ல!"** என்று சொன்ன வசனம் பாரதத்தில் வருகிறது. இவ்விதம் தான் சொல்வதற்கு நேர் மாறான குணாதிசயத்தில் அவர் இருந்திருப் பாரா? எனவேதான் ஸ்ரீ பீஷ்மர் முன்பு தான் துரியோதனனுடைய சபையில் இருந்த போது பாஞ்சாலி சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிக்கு "எதுவும் பேசாமல்" இருந்த தம்முடைய குற்றம் செய்த மன_ உளைச்சலுக்கான 'ப்ராயச்சித்தம்' தேடிக்கொள்ள, தான் இறக்கும் சமயம் தன் தேகத்தை சுருக் சுருக் என்று குத்தும் விதமாக அம்புப்படுக் கையில் கிடந்தார் என்று கருதுகிறோம்.

பாரதத்தில் பீஷ்மர் மரணம் அடையும் தருணத்திற்கு முந்தைய பகுதிகளில் எந்த இடத்திலுமே "உத்ராயணம்" புண்யகாலம் என்றோ; "தட்சிணாயணம்" புண்யமற்ற காலம் என்றோ சொல்லப்படவில்லை. ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லி, அதை ஸ்ரீ பீஷ்மர் ஏற்று தன் மரணகாலத்தை "ஒத்தி வைத்த" விஷயமாக இதை அணுக முடியாது. சிறந்த தகுதிகள் நிறைய பெற்ற ஸ்ரீ பீஷ்மர் எப்போது மரணமடைந்தால் என்ன? நரகத்திற்கா போகப்போகிறார்? இப்புவியில் அவர் அவதரித்து, அவரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட "பாவ காரியங்களுக்கு" பிராயசித்தமாகத் தன் உடலை வருத்தி, அவ்வேதனை தரும் காலத்திலும் அனைவருக்கும் மிகவும் நல்ல விஷயங் களை விரிவாக பதில் சொல்லிய அவர் உண்மையாகவே சத்தியவானாகவும், மிகவும் பெரியவராகவும், நடுநிலை தவறாத வராகவும்தான் திகழ்கிறார்.

ஸ்ரீ பீஷ்மருடைய இவ்வம்புப் படுக்கை வேதனையானது- "சபையில் நடக்கும் விஷயங்களில் "நடுவு நிலைமையோடு" ஓர் இறுதி முடிவு எடுக்காது போனாலோ; நியாயம் எவர் பக்கம் இருக்கிறது என்பது தெரிந்தும் *வாய்மூடி' மௌனமாக இருந்தாலோ ஸ்ரீ பீஷ்மருக்கு நேர்ந்த இறுதிக் கால "அம்புப் படுக்கை" வேதனையை நாமும் அனுபவிக்க வேண்டிவரும்!" என்று எச்சரிக்கை செய்வதற்காகவும் பாரதத்தில் இது மறைமுகமாக உணர்த்தப் பட்டிருக்கலாம். எனவேதான் ஸ்ரீ

ஹரதத்தரும் "பெரியோர்கள்" சொல்லுவதை நானும் ஏற்கிறேன் என்று தம்முடைய "ஹரிஹர தாரதம்மியத்தை"யும் “சுருதி ஸூக்தி மாலை” யையும் விவரித்து, கஞ்சனூர் ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோவிலில் ஒருங்கு கூடியிருந்த பெரியவர்கள் மத்தியில் கேட்கிறார்.

**002**

**ஸூநுஞ்சகார சதுராநந மேவசைகஸ்ஸூதஞ்சகாரசதுராநந மேவசாந்ய:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்து**
**தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:ச** = ஒருவனானால், **சதுராநநமேவ** = நான்குமுகமுள்ளவனையே, **ஸூநும்** = பிள்ளையாக, **சகார** = செய்துகொண்டான், **அன்ய:ச** = மற்றொருவனானால், **சதுராநநமேவ** = நான்குமுகமுள்ளவனையே, **ஸூதம்** = சாரதியாக, **சகார** = செய்து கொண்டான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ நான்முகனை தன் பிள்ளையாகக் கொண்டவன். ஹரனோ அந்த பிரம்மனை தன் ரதத்திற்குச் சாரதியாகக் கொண்டவன். தன் மகனை வேறொருவனுக்கு தேரோட்டும்படி விடுபவனைக் காட்டிலும், அவ்விதம் தேரோட்ட வந்த பிரும்மாவைக் காட்டிலும், ஹரனே சிறந்தவனாதலால் இவ் விஷயத்திலிழிந்த ஹரியை ஒதுக்கி, மிக உயர்ந்த ஹரனை நாங்கள் சரணமடைகிறோம்.

இன்றைக்கும் கூட ஒரு செல்வந்தர் வீட்டில் காரோட்டும் பணியை செய்யும் "ஓட்டுனர்" என்பவருக்கு உள்ள மதிப்பும், அக்காரோட்டியின் தந்தையோ, தாயோ அச்செல்வந்தர் வீட்டிற்கு சென்றால் அவர்களை நிற்கவைக்கும் இடமும், அவர்களுக்கு தரப்படும் "மற்ற" மரியாதையும் உலகறிந்ததே!.

**003.**

**ஏக:புந:புவிததௌ நவநீதகண்டமந்யோததௌ**
**நவஸூதாமய சந்த்ரகண்டம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்ஸ்த்யம் ப்ருவந்து**
**தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக: புந:** = ஒருவனானால், **புவி** = உலகத்தில், **நவநீதகண்டம்** = வெண்ணைத் துண்டத்தை, **ததௌ** = தரித்தான், **அந்ய:** = மற்றொருவன் **வஸூதாமய** = புதிய அமிர்தமயமான, **சந்த்ரகண்டம்** = நிலாத்துண்டத்தை, **ததௌ** = தரித்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை,

**ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரி துவாபரயுகத்தில் மதுராவில் பிறந்து, கம்ஸனுக்கு பயந்து, தனது தந்தையால் இரவில் இடைச்சேரியில் உள்ள யசோதையின் குடிலில் அவளது பிரசவ சமயத்தில் அவளுக்குத் தெரியாமல் அவளது குழந்தைக்குப் பதிலாக இடப்பட்டு, அங்கிருந்த அவளது பெண்குழந்தையை வசுதேவர் தன் வீட்டிற்கு எடுத்து வந்தபிறகு, தன் குழந்தை இதுவென்று அங்கு விடப்பட்ட அக் கிருஷ்ணனை யசோதை வளர்த்தபோது தன் வீட்டிலல்லாது அயலார் வீடுகளிலும் சென்று வெண்ணையைத் திருடியதால், நவநீதசோரன், (நவநீத கிருஷ்ணன்) வெண்ணைத்திருடி - என்னும் திருநாமமடைந்தவனாக இருப்பவன்.

ஆனால் ஹரனோ, பிரும்மா, இந்திரன் இருவராலும் சாபவிமோசனம் தருவதற்கு தகுதியில்லை என்று கைவிடப்பட்டவனும், தட்சனால் பதினாறு கலைகளையும் இழந்து வருந்தியவனுமான சந்திரனுக்கு சாபவிமோசனம் அளித்த வனுமாயும், அவன் வருத்தம் தீர அவனது ஒற்றைக்கலையை வாங்கி தன் திருமுடிமீது ஓர் ஆபரணமாகத் தரித்தவனுமாகவும் உள்ளவன், விரைவில் அழிகின்ற வெண்ணையைக் கையில் கொண்ட ஹரியைக்காட்டிலும் நித்தியமான சந்திரனை தனதாபரணமாகக் கொண்ட ஹரனையே சரணம் அடைகிறோம்.

ஸ்ரீமத் அருள்மணிவாசகர் தமது **“திருச்சாழல்”** பதிகத்தில்;

**அயனை அநங்கனை அந்தகனை சந்திரனை**
**வயனங்கள் மாயா வடுச்செய்தான் காணேடீ**
**நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்**
**சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ**

- என்று பாடியிருப்பதில் நாம் புரிந்து கொள்ளவும், தெரிந்து கொள்ளவும் நிறையவே இருக்கிறது. தம் தலைவியிடம், “உன் சிவ பெருமான் தம் பாங்கில் உறைபவரை பேணிக்கொள்ளாது, அவர்க்கு மாறாத வடுசெய்த குறையுள்ளவராக இருக்கிறாரே? அது அவருக்கு பெருமையா?!” என்று கேட்க, அதற்கு - தம்மையே தலைமகளாக பாவித்து திருக்கோவையாரை அருளிய நம் மணிவாசகப் பெருமான், “தம் கீழ்வாழ்வோரை தண்டித்தல் என்பதும் தலைவருக்கு பெருமையே! இகழ்ச்சியன்று!.” என்று சொல்லுகிறார்.

இதில் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது யாதெனில், சிவபெருமானால் தண்டிக்கப் பட்ட அவ்வானவர்கள் தம்மைச் சூழ்ந்த பாவங்களையும் சேர்த்தல்லவா சிவபெருமானால் அழிக்கப்பட்டனர்?! என்பதும்; மேற்சொன்ன வானவர்கள் சிவபெருமான் தவிர்த்து பிறரால் தண்டிக்கப் பெறாதவர்கள் (அ) முடியாதவர்கள் என்பதும்; இன்னபிற நியாயங்கள் பிறவற்றாலும் அவ்வானவர் கள் “நயனங்கள் மூன்றுடைய நாயகனான” சிவபெருமானால் தண்டிக்கப் பட்டது ஸ்ரீ பரமேச்வரருக்கு அது புகழ்ச்சியேயன்றி இகழ்ச்சியல்ல! என்பதும் தெரியவரும்!. (பிரும்மா

தலைகிள்ளப்பட்டது, மன்மதன் எரிக்கப்பட்டது, அந்தகன் (சூரியன் ) உதைபட்டது, சந்திரன் காலால் தேய்க்கப்பட்டது இவையெல்லாம் சிவபெருமானைத் தவிர்த்து மற்றையோரால் சிந்திக்கவும் இயலாதது!.) இவ்விதம் தம்மால் தண்டிக்கப் பெற்ற வற்றை தம்மோடு கொண்டுள்ள சிவபெருமானின் உயர்வுக்கு பிரமாணம் வேறென்ன வேண்டும்?

சிவபெருமானுக்கோ இறப்பென்பது இல்லையாதலால், அவர் தம் சிரத்தில் கொண்டுள்ள சந்திரனும் "இறப்பில்லாதவன்" என்கிற அதே அந்தஸ்தைப் பெற்றவனாகிறான். இங்கு வெண்ணையுண்ட ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், அவனுண்ட வெண்ணைக்கும் தோற்றம் - மறைவு என்பது இருப்பதினால் அவனுக்கும், அவனால் திருடியுண்ட வெண்ணைக்கும் என்ன பெருமையிருக்கிறது?

**004**

**ஏகோஸ்தி நந்தகுடிலவ்ரஜமந்திரேஷசாந்யோஸ்தி**
**மேருசிகரஸ்திதகந்தரேஷு ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந் தியவ்ருத்தாஸ்ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக** = ஒருவன், **நந்தகுடிலவ்ரஜமந்திரேஷு** = இடையர்களுடைய (நந்தகோபனுடைய) குடிலில் அஸ்தி இருந்து கொண்டிருக்கின்றான், **அந்ய:ச:** = இன்னொருவனானால், **மேருசிகரஸ்திதகந்தரேஷு** = மேருமலையின் சிகரக் குகைகளில், **அஸ்தி** = இருக்கின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ நந்தகோபனுடைய கன்றுகளும், காளைகளும் உள்ள ஒழுங்கீனமாக தழைகளால் கட்டப் பட்ட (உவலைக் குடில்) வீட்டில் வசிப்பவன். (நந்தகோபனோ முல்லை நிலத்தலைவன்; முல்லை நிலத்தினருக்கு நாகரீகமான வீடுகளும், உடைகளும் கிடையாது!) ஹரனோ பொன்மயமான மஹாமேருவில் இருப்பவனாதலால் நாங்கள் அந்த ஹரியை அப்பிரதானமாக ஒதுக்கி, சிறந்த பொருளாக அறியப்படும் ஹரனை சரணடைகின்றோம்,

**005.**

**ஏகஸ்ஸஹஸ்ரகமலைர்ய முபார் ச்யதஸ்தாவந்யஸ்துதைருபஸாதஸ்**
**ஸமுமோத தஸ்மாத் ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம் ப்ருவந்து**
**தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஸஹஸ்ரகமலை:** = ஆயிரந்தாமரையினால், **யம்** = எவனை, **உபார்ச்சிய =** அர்ச்சித்து, **தஸ்தௌ** = இருந்தானோ, **ஸு:** = அந்த, **அந்ய:து** = இன்னொருவன், **தை:** = அந்தத் தாமரையால், **உபசித:** = பூஜிக்கப்பட்டவ னாக, **தஸ்மாத்** = அந்த பூஜையினாலே, **முமோத** = சந்தோஷித்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** ஆரா திக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சக்கரம் எனும் ஆயுதம் பெறும் பொருட்டு ஆயிரம் மலர் கொண்டு சிவபெருமானை அர்ச்சித்தவன். அதிலும் சிவபெருமானது லீலை யால் அவனது பூஜையில் ஓர் மலர் குறைய, அதற்கீடாக ஹரி தன் கமல நயனத்தினையும் பிடுங்கி தன் பூஜை கெடாமல் அர்ச்சித்து கமலக்கண்ணன் என நாமம் பெற்றவனாக இருப்பவன். ஹரனோ ஹரியின் பூஜையை ஏற்றவர். இவ்வுலகில் கண்கூடாக பூஜைசெய்பவனிலும், பூஜையை ஏற்றுக் கொள்பவனே சிறந்தவன் என்பது தெளிவு, இவ்விஷயத்தில் தாழ்வடைந்த ஹரியை அப்பிரதான மாக ஒதுக்கி நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகிறோம்.

(இன்றும் பல வைணவ ஆலயங்களில். உள்ள தூங்கும் பெருமாள் ஒரு கையை தலை மாட்டிலும், மறுகையை தாமரை போன்ற அமைப்பில் அபிநயித்து லிங்கத்தின் மேலே அர்ச்சிப்பது போல வைத்திருப்பதைக் காணலாம்!.)

பாரதத்திலும், ஸ்ரீ கிருஷ்ணன் தமக்கு சத்புத்ரன் வேண்டி (புத்திரப்பேறு) சிவபெருமானை பலகாலம் தவமியற்றி “வரம்” பெற்றவை விவரிக்கப்பட்டிருக்கிறது. பூஜிப்பவனைவிட பூஜிப்பவனது பூஜையை ஏற்பவன்தான் சிறந்தவன் என்று சொல்ல வும் வேண்டுமோ?!

**006.**

**காடாந்த காரகநநீலசரீர ஏகோஜோத்ஸ்நாதி நிர்மலவிசுத்தச்ரீர ஏக: |**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம: ||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **காடாந்தகாரகநநீலசரீர** = கடினமான, நீலநிற சரீ ரத்தை உடையவன். **ஏக:** = இன்னொருவன், **ஜோஸ்நாதி** = நிலாவைப்போல மிகவும், **நிர்மல =** பரிசுத்தமானதும், **விஸுத்த** = சுத்தமானதும் வெண்மையுமா னதுமான, **சரீர:** = சரீரத்தினை உடையவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம் =** நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ கரிய நிறத்தவன்; ஹரனோ சந்திரனைப்போன்ற வெண்ணிறத்தவன். கரிய நிறம் என்பது உயர்ந்தோரால் விரும்பப்படும் நிறமன்று. கருமை என்பது மாயையும், அம்மாயையின் ஏதுமற்ற சூன்யத் தன்மையையும் தெரிவிப்பதாகும். இதிலும் தாழ்வடைந்த ஹரியை ஒதுக்கி, மஹாபுருஷனாகிய அந்த ஹரனை நாங்கள் சரணம் அடைகிறோம்.

ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரியார் அருளிய **"தெய்வத்தின் குரலில்"** ....

எதை எரித்தாலும் முதலில் அது கறுப்பு ஆகிறது. ஆனால் அப்போதும் எரிபட்ட வஸ்துவுக்கு நிறம் மாறினாலும் ரூபம் அப்படியே இருக்கும். நியூஸ் பேப்பரைக்கூடக் கொளுத்திவிட்டு உடனே அணைத்துவிட்டால் அது முழுக்கக் கறுப்பானாலும், அந்தக் கறுப்புக்குள்ளேயே அதைவிடக் கறுப்பாக எழுத்துக்களும் தெரியும். துணியும் இப்படியே மடிப்புகூடக் கலையாமல் நெருப்பில் கருகுவதுண்டு, முழுக்க நீற்றுப்போய் உருவம் இழப்பதற்கு முற்பட்ட நிலை இது. இதுதான் ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத், இந்த நிலையில் ஜகத் இருப்பதுபோல் இருக்கிறது. ஆனாலும் இந்திரிய சேஷ்டைகள் எரிந்து போய்விட்டன. உணர்ச்சிகள் ஆனந்தம் எல்லாம் இருப்பதுபோல் தோன்றினாலும் லௌகிகமாக இல்லாமல் தெய்விகமாக பக்தி ரூபத்தில் இருக்கின்றன. யோகத்திலும் ஞானத்திலும் மேலும் ஆன்மாவைப் புடம் போட்டால் அதுவும் நீற்றுப் போய் பஸ்பமாகிவிடும். எரிகிற வஸ்துக்கள் முதலில் கறுப்பானாலும், கடைசீ வரையில் எரித்தால் எல்லாமே வெள்ளை வெளேரென்று நீறாகின்றன. **இதுதான் சிவமயம்**.

**007.**

**ஏக குமாரமபஜத்ஸூ தராமநங்கமந்ய:ப்ரயாதிகிலசக்திதரம்குமாரம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஸூதராம்** = மிகவும், **அநங்கம்** = அங்கமில்லாதவனான, **குமாரம் =** மகனை, **அபஜத் =** அடைந்தான், **அந்ய:** = மற்றொருவன், **சக்திதரம்** = வேற்படையைக் கொண்ட, **குமாரம்** = குமாரனை, **ப்ரயாதிகில** = அடைந்திருக் கின்றானல்லவா?, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** சிவ பெருமான் ஞானகுருவாக வீற்றிருந்து சனகாதி முனிவர்க்கு வேதோபதேசம் செய்த காலத்தில், ஹரனை வேண்டி விஷ்ணுவின் மனதில் உதித்த மன்மதனை, தேவர்களுடைய வேண்டுகோளுக்காக சிவனாரின் தவத்தைக் கலைக்கச் சொல்ல, அம்மன்மதனும் ஸ்ரீ மஹாதேவர் மீது பஞ்சபாணங்களையும் விட்டான். யோகத்தில் இருந்த சிவனார் மிக்க கோவம் கொண்டு .அவரது தீவிழிப் பட்டு மன்மதன் சாம்பலானான்.

அதன்பின் அவனது மனைவி இரதியானவள் ஸ்ரீ மஹாதேவரிடம் புருஷ பிச்சை கேட்க, ஸ்ரீ மஹாதேவர் மனமிரங்கி, மன்மதனை இரதிக்கு மாத்திரம் உருவமுள்ளவனாகவும், ஏனையோருக்கு அருவமானவனாகவும் (அநங்கனாக) இருக்குமாறு அருளினார். இவ்விதம் ஸ்ரீ மஹாதேவரால் அருளப்பட்ட அவ்வநங் கனை மகனாகக் கொண்ட ஹரியைக்காட்டிலும், தம் நெற்றிக்கண் தீப்பொறிகளால் ஸ்ரீ குமாரஸ்வாமியை உண்டாக்கி, வேலாயுதம் அளித்தும், வேலாயுதக் கடவுள் என்று சொல்லப்படுகின்ற சக்திதரனை மகனாகக் கொண்ட ஹரனே சிறந்தவன் என்று சொல்லவும் வேண்டுமோ!? நாங்கள் அந்த ஹரனையே சிறந்தவன் என்று சரணம் அடைகிறோம்.

ஹரனுடைய தீவிழிப்பட்டு ஒருவன் மறைந்த விவரத்திலும்; அதே தீவிழி யால் முருகக் கடவுள் உண்டானதிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகள் எது சிறந்தது? எதனால் சிறந்தது? என்று நமக்குத் தெரிவிக்கிறதே?!

(சிவபெருமானது பஞ்சகுமாரர்கள் என்று போற்றப்படும் விநாயகர், வீரபத்திரர், முருகர், சாஸ்தா, வைரவர் போன்றோர்க்கு கோவில்களும், உற்சவங்களும் இருப்பதுபோல ஹரியினுடைய குமாரர்களான பிரம்மனுக்கும், மன்மதனுக்கும் கோவில்களும், மஹோற்சவங்களும் இல்லை.)

“காமனை எரித்த ஸ்ரீ பரமேச்வரர் பிறகு பார்வதியை மணப்பானேன்? இதிலி ருந்தே தெரியவில்லையா அவரும் காமாந்தகாரன்தான் என்று?!” - என்று வாய் கூசாமல் கேட்போரும் உண்டு, தம்மையோ, கிருஷ்ணனையோ கருத்தில் கொண்டு கேட்கப்படும் இவ்விதமான இழிவான கேள்விகளுக்கு என்ன பதில் சொல்வது? காமவசத்தால் "பெண்கள்" பின்பு சுற்றுவதும், மணம்புரிந்து "புத்திரோற்பத்தி" செய்வதும், நல்லபிள்ளை பிறப்பதற்கு ஸ்ரீ பரமேச்வரரை சரணம் அடைந்து "வரம்" வேண்டுபவர்களைப் போல ஸ்ரீ பரமேச்வரரை காம இச்சை கொண்டவராக கருதுவது பெரும் பிசகு!. பார்வதியின் தீவிர தவத்தின் பொருட்டு திருமண இச்சையை தாமே மேற்கொண்டதும், அது அவருடைய சுயேச்சையான காம வசத்தால் உண்டான இச்சையல்ல என்பதும், அதை வெளிப்படுத்தவே அவரது திருமணம் நடந்தது என்பதும் உண்மை!, விஷயசுகம் என்றால் என்ன? என்பதையறிந்தால் உங்களுக்கு இம்மாதிரி சந்தேகம் எழாது!.

பாற்கடல் கடைந்த காலத்தில் அப்பாற்கடலில் இருந்து அமிர்தம், ஆலகாலம், இலட்சுமி, காமதேனு முதலிய பல உண்டானபோது அதிலிருந்து ஸ்ரீ பரமேச்வரர் ஆலகாலவிஷத்தையும், விஷ்ணு இலட்சுமியையும் அடைந்தார்கள். இதிலிருந்து இலட்சுமியானவள் விஷ்ணுவுக்கு கல்யாண பந்தத்தால் வரிக்கப்பட்டவள் அல்ல என்பதும் தெரிகிறது. இதிலிருந்தும் ஸ்ரீ பரமேச்வரரது கருணையையும், அவருக்கு உயிர்கள் மீதுள்ள கருணையும் அவரவர் தமக்கு ஸ்ரீ பரமேச்வரரது அருளால் ஏற்பட்டிருக்கும் அறிவினால் அறிய முயற்சிக்கலாம்.

**008.**

**ஸ்திரீ ரூபமாபகில பூர்வமபீஷ்டமேகஸ்த்வந்யஸ்தமேவ**
**பஜதேபுருஷ: ஸ்வரத்யை:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்து**
**தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **பூர்வம்** = முன்னே, **அபீஷ்டம்** = விரும்பப்பட்ட **ஸ்திரீரூபம் =** பெண்ணுருவத்தை, **ஆப-கில** = அடைந்தான் அல்லவா?, **அந்ய:** = **மற்றொருவன்**, **ஸ்வரத்யை** = தன்னுடைய சம்போகத்தின் பொருட்டு, **தமேவ =** அவனையே, **பஜதே** = அடைந்து அவளுக்கு புருஷனாக ஆனான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** பாற்கடல் கடைந்து அமிர்தகலசம் எடுத்த போது, தேவர்களிட மிருந்து அசுரர்கள் அமிர்த கலசத்தை துராகிருதமாக அபகரித்து இது எங்களுக்கு என்றதும், தேவர்களின் நலன் உத்தேசித்து விஷ்ணுவானவர் அசுரர்களை வஞ்சிக் கும் பொருட்டு பெண்ணுருவங்கொண்டார் . இவ்விதம் பெண்ணுருவடைந்த திருமாலை ஹரன் அவளுடன் கூடிச் சுகித்தார். பெண்ணுருக் கொண்ட ஹரியைக் காட்டிலும், அப்பெண்ணுருவை கூடிச்சகித்த ஆணுரு சிறந்ததென்பதால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

இன்று, பெண்ணிற்கு ஆண் சமம் என்று இங்கு எல்லோரும் புலம்பித்திரிய ஆரம்பித்து இருந்தாலும், பெண் எவ்விதமெல்லாம் ஆணுக்கு அடங்கி நடக்கிறாள் என்பது அனைவருமே அறிந்ததே!, மஹாகவி பாரதி சொன்ன “ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானம்” என்பதற்கும், இன்று - பெண்கள் இச்சமூகத்தில் தாங்களாகவே அதைத் தவறாக அர்த்தம் பண்ணிக்கொண்டு அலைவதையும்தான் நாம் பார் க்கிறோமே?.

**009.**

**முஷ்ணிதிவல்லவக்ர ஹேநவநீதமேக அந்யோததாதிஸுதீயாம்**
**பரமாமிர் தந்தத்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்ப்ருவந்து**
**தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **வல்லவக்ரஹே** = இடையர் வீடுகளில், **நவநீதம் =** வெண்ணையை, **முஷ்ணிதி** = திருடிக்கொண்டிருக்கின்றான், **அந்ய:** = இன்னொரு வன், **ஸுதீயாம்** = பண்டிதர்களுக்கு, **தத்** = பிரசித்தமான, **பரமாமிர்தம்** = சிறந்த மோக்ஷத்தை, **நதாதி** = கொடுத்துக் கொண்டிருக்கின்றான், **அந்ய:** = மற்றொருவன்,

**சக்திதரம்** = வேற்படையைக் கொண்ட, **குமாரம்** = குமாரனை, **ப்ரயாதிகில** = அடைந்திருக்கின்றானல்லவா?, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனது கிருஷ்ணாவதாரத்தில், தனியாகவும், பலராமன், மற்றும் கோபாலச் சிறுவர்களுடனும் அயல் வீடுகளில் சென்று வெண் ணையைத் திருடி தன் வாழ்க்கையை ஓட்டினவன். ஆனால் ஹரனோ ஞானாசிரி யனாக எழுந்தருளி பக்குவர்களாகவுள்ள சனகாதியர்களுக்கும், நந்தி - மார்கண்டே யன் முதலானோர்க்கும் தனது ஞானோபதேசத்தினால் பிறவியை ஒழித்தருளி ஞானாமிர்தத்தை அருளியவனாக உள்ளவன்.

இவ்விஷயத்தில் திருடுபவன் தாழ்ந்தவன் என்றாலும், தன்னிலும் தாழ்ந்த வெண்ணையை திருடியயனை இவ்வுலகம் இழித்துரைக்கும். தன்னிலும் தாழ்வடை ந்த ஒரு பொருளைத் திருடி வயிறு வளர்க்கும் ஒருவனைக் காட்டிலும், தான் கொண்ட பொருளை அடுத்தவருக்கு கொடுத்து மகிழும் கொடையாளிகளை உலகம் புகழ்வதை காண்கிறோம். அந்த கொடையாளிகளுள் மிகச்சிறந்த பொருளைக் கொடுத்தவர்களை இவ்வுலகம் மிகவும் புகழும். ஹரனோ தன்னையடைந்தவர் களுக்கு தான் விஷமுண்டு அமிர்தமென்னும் சாவாமையினை அருளியவன். மரண பயம் அகற்றி ம்ருத்யுஞ்ஜயனாக விளங்கும் ஹரனது இப்புகழுக்கு அளவில்லையா தலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

பாரதம் என்னும் இதிகாசத்தின் மூலமாகத்தான் ஸ்ரீ கிருஷ்ணரின் மகிமையும், ஸ்ரீ கர்ணனின் வள்ளல்தன்மையும் அனைவருக்கும் தெரியவந்தது, தனக்கென ஒன்றும் கொள்ளாமல் அடுத்தவருக்காக வாழ்வோரை இன்றும் நம் பாரதத்தில் “கலியுக கர்ணன்” என்று புகழ்வதைக் காண்கிறோம். பல்லாயிரம் ஆண்டுகள் கழிந்தபின்னும் வள்ளல் தன்மையை குறிக்க கர்ணனது பெயர் பயன்படுத்தப் படுகிறதே தவிர்த்து கண்ணன் பெயரல்ல!, கர்ணன் என்பதற்கு பெயர்க் காரணமும் பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தன் கவசத்தை அறுத்துத் தந்ததினால் அப்பெயர் அவனுக்கு வந்தது என்று!, வள்ளல் தன்மைக்கு ஸ்ரீ கர்ணனுக்கு ஸ்ரீ கிருஷ்ணன் தாழ்ந்தவன் என்றாலும், இவ்விருவரும் ஸ்ரீ பரமேச்வரருக்கு எவ்விதத் திலும் சமமாகாதவர்களே!.

**010.**

**ஏககும்ப்ரயாதிஹி ஸகாம இதிப்ரஸித்திமந்யோகமந்**
**நிஹிதகாம இதிப்ரஸித்திம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்து**
**தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஸகாம:** = காமத்தொடுகூடினவன், **இதி** = என்று, **பிரசித்திம்** = ப்ரசித்தியை, **ப்ரயாதிஹி** = அடைந்திருக்கின்றானல்லவா? **அந்ய:** = இன்னொருவனோ, **நிஹித காமம்** = காமத்தை தள்ளினவன், **இதி =** என்று, **ப்ரசித்திம்** = புகழை, **அகமத்** = அடைந்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = அதிகமானவன், **கோவா** = யார்?, **இதி** = இதனை, **அநுசிந்தியா** = ஆலோசித்து, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ அழகு பொருந்திய ஸகாமன் என்று, அதாவது காமத்தோடு கூடியவன் என்று பிரசித்தி பெற்றவன். கோபியர்கள் பூசிக்கொண்ட சந்தனத்தினை தன் உடலில் பரவுமாறு அவர்களுடன் கூடிக்குலாவி, அச்சந்தனத் திற்கு “கோபிச்சந்தணம்” என்கின்ற பெயரைத் தந்தவனாக இருந்தவன். ஹரனோ நிஹிதகாமன் என்று, அதாவது காமமற்றவன் என்றும், மன்மதனை அழித்து காமாரி என்றும் திருநாமம் கொண்டவனாக உள்ளான். இவ்விஷயத்தில் தாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக ஒதுக்கி, பிரதானமாயுள்ள ஹரனை சரணம் அடைகி றோம்.

ஸ்ரீ மஹாதேவரின் பக்தர்களாக விளங்குவோரும், மற்றும் வாழ்வில் ‘நற்கதி’ விரும்புவோரும், ஆதிசங்கரர் முதல் - பட்டினத்தார் முதலானவர்கள் வரை 'காம உணர்ச்சி கொண்டு' வீண்காலம் கடத்தின அவரவரது வீண்கால விரயத்திற்கு காமனை எரித்து, அக்காமத்தை ஜெயித்து, காமாரியாய் விளங்கும் ஜிதேந்த்ரியரான ஸ்ரீ மஹாதேவரை சரணம் அடைந்து, மோகத்திலிருந்து விடுதலை, காம உணர் ச்சியில் இருந்து விடுதலை - முதலிய சிற்றின்பத்தில் திளைக்கும் தன் புத்தியை நல்லவிதமாக இருக்க அவர்கள் வேண்டின பல பாடல்களும், பதிகங்களும், ஸ்லோ கங்களும் யாவருக்கும் தெரிந்ததே.

ஆனால் சிற்றின்பத்தில் நாட்டம் உடையவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனை பலவாறு கற்பனை செய்து தன்னுடன் அவன் பலவாறு இருந்து மகிழ்ந்தது போன்றும், தன் உடல் தேவைக்காக அக்கிருஷ்ணனை விரும்பி தன் உடலில் ஏற்படும் மாற்றத் திற்கு வந்து உதவுமாறும் நிறைய பெண்கள் அல்லது அப்பெண்கள் பாடும் பாடல்களை, (ஆண் கவிகள்?) எழுதியவை அதிகம்! அம்மாதிரியான பாடல்களுக்கு நிறைய பெண்கள் ஸ்ரீ நடராஜப் பெருமான் அருளிய பரதநாட்டியத்தை பலர் முன்னி லையில் ஆடுவதும் யாவரும் அறிந்ததே!.

உயிர்களுடைய பிறப்பிற்கு காரணமான காமத்தை (அநங்கனை) தந்தவரும், அவ்வுயிர்கள் சாகாமை எனும் சிரஞ்சீவித்துவம் தருபவரும் (மீருத்யுஞ்சயர்) ஸ்ரீ பரமேச்வரர் என்பதினால் இவரே பிறப்பு, இறப்பு, மற்றும் மோட்சத்தை அருளுபர் ஆகிறார். அந்த மேலான பரமனை நாங்கள் சரணம் அடைகிறோம்.

**011.**

**ஏகோலிபாதிரவிசந்த்ர ஸமத்விநேத்ரஸ்த்வந்**
**யோரவிந்த ஸகஸோமசிகித்ரணேத்ர:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ரவிச்சந்த்ரஸமத்வி** = சூரியசந்திரனுக்கு சமானமாயுள்ள, **நேத்ரா:** = இரண்டு விழிகளை, **விபாதி** = கொண்டு விளங்குகின்றான், **அந்ய:து** = மற்றவனோ, **அரவிந்த** = சூரியன், **ஸகசோமசிகித்ரிணேத்ர** = சந்திரனுடனான அக்னியையும் கண்களாக, **விபாதி** = கொண்டு விளங்குகின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சூரியனையும், சந்திரனையும் போன்று அதற்கு ஒத்ததாக விளங்கும் கண்களைக் கொண்டவன். ஹரனோ உண்மையாகவே பிரபஞ்சத்தின் வெளிப் பொருள்களான சூரிய - சந்திரனுடன், அக்னியினையும் தமக்கு மூன்றாவது கண்ணாக உடையவன். சாதாரணமாக எல்லோருக்கும் இருக்கின்ற கண்களைப் போன்று இரண்டு கண்களைக் கொண்ட ஹரியினும், சந்திர, சூரியனுடன் அக்னிச் சுடர்கள் அனைத்தும் தம் கண்களாக மூன்றுடைய ஹரனே சிறந்தவன் ஆதலால் நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகிறோம்.

(இந்திரனுக்கு உடல் முழுதும் கண் இருப்பதினால் எண்ணிக்கையின் அடிப்படையில் அந்த இந்திரனை நம் பரமேச்வரருடன் ஒப்பிடுவது முறையல்ல!!, அவ்விந்திரனுக்கு அவ்விதம் உடல் முழுதும் கண் உண்டானது என்பது சாபத்தினால் உண்டானது என்பதும்; அவன் அந்த சாபத்தை கடக்க ஸ்ரீ பரமேச்வரரை உபாசித்து போக்கிக் கொண்ட விவரங்கள் வைத்தீஸ்வரன் கோவில் அருகில் உள்ள திரு கண்ணார் கோவில் ஸ்தலபுராணமும்; செங்கல் பட்டிற்கு அருகில் உள்ள கிணார் எனும் ஸதலபுராணமும் விரிவாக சொல்லும்!)

**012.**

**கோபாலகத்வமபிகம்ய விபாதிசைகஸ்த்வந்யோ**
**வ்ருஷாதிபதிநாயக இத்யபாணி |**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்துதமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:ச** = ஒருவனானால், **கோபாலகத்வம்** = பசுக்களை மேய்க்கும் சிறுவனாக அபிகம்ய இருந்து, **விபாதி =** விளங்குகின்றான், **அந்ய:து** = இன்னொருவனோ, **வ்ருஷாதிப நாயக** = பசுக்களுக்கு நாயகனாக, **இதி** = என்று, **அபாணி** =

கருதப்படுபவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம் =** உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ பசுக்கூட்டங்களை மேய்த்து ரக்ஷிப்பவன் என்று பிரசித்தி பெற்றவன். அது அவ்வண்ணம் ஹரி தனது கிருஷ்ணாவதாரத்தில் இருந்த தினால். தவிர ஹரியாய் உள்ளபோதும் ஹரியினுடைய தொழிலானது உலக உயிர் களை (பசுக்களை) காப்பதே!, இதில் வ்ருஷாதிபதி என்றது ஹரனை, அது அவ்வரன் அவ்வண்ணமிருத்தலால். பெண்களுக்கு புருஷன் தலைமை யாவது போல வ்ருஷப ங்களுக்கு எருதுகள் சிறந்தன. அவ்வெருதுகளில் சிறந்தது தர்மரூபமான வ்ருஷபம் ஆகும். தர்ம வ்ருஷபத்துக்கும், ஹரி மேய்த்த வருஷபங்களுக்கும் ஹரனே தலைவன். தவிர, பசுக்கூட்டங்களுக்கும் (உலக உயிர்களுக்கும், அவ்விஷ்ணுவிற் கும் பதியாய் இருப்பதினால் "பசுபதி" என்று திருநாமம் அடைந்த) ஹரன் சிறந்தவன். ஆதலால் இதிலும் சிறந்த அந்த ஹரனையே சரணம் அடைகிறோம்.

பசு என்பது உலகில் உள்ள சாதாரண உயிரினங்களைச் சுட்டுகின்ற வார்த்தை. ஆனால் பசுபதி என்னும் வார்த்தை (சர்வாந்தர்யாமி) சகல உயிர்களுக்கும் பதி என்னும் அர்த்தத்தினை தருகின்ற மகிமை மிகுந்த சொல்.

**ஆதித்ய புராணம்:** "ப்ரஹ்மவிஷ்ணு சுரேந்த்ராத்யா பசவ பரிகீர்த்திதா" - இதன் பொருள்: விஷ்ணு மற்றும் இந்திராதி தேவர்கள் அனைவரும் பசுக்களே!, என்றும்; மற்ற புராணாதிகளிலும் இக்கருத்தே வலியுறுத்தப்படுவதையும் அறிய லாம். சிவபெருமானே பசுபதி எனும் **ருக் வேத வசனம்: (10-121-3)** "ய: ப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இத்ரஜா ஜகதோபபூவ| ய ஈஸே ஸ்யத்விபதச் சதுஷ்பத: || (**பொருள்:** எவர் சுவாசம் விட்டதினாலேயும், கண் சிமிட்டியதாலும் உலகமெல்லாம் சிருஷ்டிக்கப் பட்டதோ, எவர் ஒருவராகவே அரசனாகவே இருக்கிறாரோ, எவர் இரண்டு கால் பசுக்களுக்கும் நான்கு கால் பசுக்களுக்கும் பதியாக இருக்கிறாரோ அந்தப் பரமேச்வரருக்கு ஹவிசைக் கொடுப்போம்." (பசுபதி என்னும் திருநாமம் ஸ்ரீ பரமேச்வரருக்கு மாத்திரமே உண்டானது. மற்றைய தேவர்களுக்கு கிடையாது, அமரகோச நிகண்டும் இதைத் தெரிவிக்கிறது!.)

திரிபுர தகனத்தில் சிவபெருமான் உபயோகித்த வில்லுக்கு விஷ்ணு அம்பாக இருந்தான் என்றால் தேவர்களின் வேண்டுகோளுக்கு அவர்களுடன் வந்த விஷ்ணு வும் பசுக் கூட்டங்களான அத்தேவர்கள் போலத்தானே?! தவிர, சிவபெருமானின் அவ்வீரச்செயலுக்கு அவர் உபயோகித்த வில்லின் அடிப்புறம் அக்னியும். வில்லின் மேற்புறம் சோமனும் இருந்த புராண வசனமிருப்பதால் அவ்விஷ்ணுமூர்த்தி முழு அம்பாக சிவபெருமானால் உபயோகப் படுத்தப்படவில்லை என்பதும் விளங்கும்.

ஹரியோ கண்ணுவ ரிஷிகளைப் போன்ற பல ரிஷிகளைப் பூஜித்தவனாகவும்; சால்வராஜன் எனும் அரசன் விடுத்த அம்பில் மூர்ச்சித்து விழுந்தவனாகவும், அந்த ராஜன் வசுதேவரை வெட்டிவிட்டான் என்கின்ற பொய் செய்தியை கேட்டு வருந்தி

கதறி அழுததும், கிருஷ்ணனுடைய அந்திமக் கால விஷயங்களும் - ஹரியை பசு என்றே சொல்வதை அறியலாம்.

இராமாயணத்தில் இராமனால் மறைந்து நின்று கொல்லப்பட்ட வாலி, ஹரியினுடைய கிருஷ்ணாவதாரத்தில் ஜரன் என்னும் வேடனாக வந்து கிருஷ்ணனது பாதத்தை மிருகம் என்று எண்ணி அம்பு விட்டுக் கொன்றான். பிறகு கிருஷ்ணனுக்கு அர்ஜுன் உத்ரகிரியை விதிப்படி கொள்ளி வைத்து இறுதிச்சடங்கை முடித்தான் என்று பாரதமும், வால்மீகி இராமாயணத்தில் கோசலை வயிற்றில் தீட்டிற்குரிய கருப்பையிற் கட்டுண்டு மலமூத்திர உடம்போடு பிறந்தான் என்றும், பாலகாண்டத்தில் இராமனும் இலட்சுமணனும் அகலிகையின் பாதத்தில் வீழ்ந்து வணங்கிய வசனமும் உள்ளது.

இராமனது கால் பட்டு ஒரு கல் அகலிகையாக மாறியததற்குக் காரணம் - அவ்வகலிகையினது கணவனது “வாக்கு விசேஷம்” தானே காரணம்? இராமனது திருப்பாதம் பட்டுத்தான் அந்தக் கல் பெண்ணுருவையடைந்தது என்றால் -, இராமரது பாதத்திற்கு அவ்வல்லமை இருப்பதாகக் கொண்டால், அவர் காடு மேடுகளெல்லாம் திரிந்து காலம் கழித்த காலத்தில், அவரது காலிற்பட்ட கல்லெல்லாம் அல்லது அவரது கால்பட்ட கற்களெல்லாம் பெண்ணுருவாக வேண்டுமே?! அவ்வித அதிசயம் நடந்ததாக வால்மீகி வேறொன்றை எழுதவில்லையே?!.

இராமாயணத்தில் இராமரது பாதம் பட்டு கல் பெண்ணுருவடைந்த வரலாறு போலவே, பாரதத்திலும் அர்ஜுனன் விஷயமாய் அதுபோலவே ஒரு கதை சொல்லப்பட்டிருக்கிறது! ஆம்!. தருமர் அச்வமேத யாகம் செய்வதற்காக அர்ஜுனன் நடத்தியழைத்து வந்த குதிரை, கணவனால் குத்துக்கல்லாய் இருக்கும்படி சபிக்கப்பட்ட ஜண்டி என்னும் கல்லில் உரசி, அக்கல்லில் ஒட்டிக்கொள்ளவே, அர்ஜுனன் குதிரையை ஒருகையாலும், ஜண்டி என்னும் குத்துக்கல்லை ஒரு கையாலும் ஊன்றி விலக்க, குதிரை விடுபட்டு, அக்கல்லானது அர்ஜுனன் “கை” பட்ட விசேஷத்தால் தனது ஜடவடிவம் நீங்கி, பழையபடி ஜண்டியாகிய பெண்ணாய் மாறியது.

இது தவிர, **பாரதம்/ஆதிபர்வம்/பௌலோமபர்வம்/11வது அத்தியாயம்** பகுதியிலும் இது மாதிரியே சாபமும், சாபநிவர்த்தி விவரமும் காணக்கிடைக்கிறது!. ப்ருகு முனிவர் வம்சத்திலுதித்த ச்யவனர் - பிரமதி தம்பதிகட்கு பிறந்த ருரு, ஸ்தூலகேசர் என்பவருக்கும் மேனகைக்கும் பிறந்த பிரமத்வரை என்பவள் மீது இச்சை கொண்டு, அவளையே மணக்க தம் பெற்றோரது ஆசியையும் பெற்று மணம் செய்துகொள்ள இருந்த சமயம், பிரமத்வரையை ஒரு விஷ நாகம் தீண்டி அவள் இறந்துவிடுகிறாள். இதனால் மிகுந்த துயருற்ற ருரு, பலவாறு சோகித்து புலம்ப - அதுகண்ட தேவ தூதன் ஒருவன் “உன் ஆயுளில் பாதி அவளுக்கு தந்தால், அவள் பிழைப்பாள்!' என்று கூறியதற்கிணங்கி, தம் ஆயுளில் பாதியைத் தந்து அவளைப் பிழைப்பித்து மணம் புரிந்து கொண்டு வாழும் சமயம், ருருவுக்கு நாகங்கள் மீது மிகுந்த கோபம் பெருகி, நாகங்களைத் தேடித்தேடி கொள்வதையே விரதமாக கொண்டு, பல நாகங்களை கொன்று வருவதைப் போலவே, ஒரு சமயம், வனத்தில் ஒரு நீர்ப்பாம்பை கொல்ல எத்தனித்த சமயம், அப்பாம்பு, ருருவிடம் தாம் பூர்வத்தில் ககமர் எனும் தம்

சிநேகிதன் தியானம் செய்தபோது விளையாட்டாக புல்லில் ஒரு பாம்பு செய்து அவர்மீது எறிந்து பயமுறுத்த, ககமர் சினந்து தம்மை நீர்ப்பாம்பாக இருக்க சபித்த தையும், பின் தாம் சிநேகித முறையில் விளையாட்டாய் செய்த பிழையை பொறு த்து தம்மை மன்னித்து சாப விமோசனம் தருமாறு வேண்டியதற்கு, ககமர், “பிரமதிக்கு ருரு என்னும் சுந்தரரான புத்திரர் உண்டாவார்; சீக்கிரமாகவே அவரைப் பார்த்ததும் உமக்கு சாபவிமோசனம் உண்டாகும்!” என்று சொன்னதையும் சொல்லி, அப்போதே நீர்ப்பாம்பின் வடிவத்தை விட்டு திரும்பவும் பிரும்ம தேஜஸோடுகூடிய தம் ரூபத்தை அடைந்த விவரம் சொல்லப்பட்டிருக்கிறது !.

இராமாயணத்தில் இராமரது “கால்”பட்டு கல் பெண்ணானதை மஹிமைப்படுத் துவோர், பாரதத்தில் அர்ஜுனனது “கை” பட்டு கல் பெண்ணானதைக் கண்டு கொள் ளாமலும், தம் “பார்வை” பட்டே ஒரு நாகம் திரும்பவும் மனுஷனாக மாற்றிய ருருவை ஒதுக்கியும், இராமனுக்கு மாத்திரம் “விமோசனம்' அளிக்கும் திறமை உள்ளவனாக ஆக்கியும், அந்த ஒரு தகுதிகொண்டே இராமனுக்கு “பரத்துவத்தையும்' அளித்து மகிழ்ந்தவர்கள், அர்ஜுனனுக்கும் ருருவுக்கு பகராமல் இருப்பது ஆச்சர் யமே!.

**விஷ்ணுபுராணம் 5ம் அம்ஸம் 37வது அத்தியாயத்தில்** துர்வாஸர் விஷ்ணுவுக்கு சாபம் அளித்த விவரமும், பாரதத்தில் காந்தாரி கண்ணனுக்கு இட்ட சாப விவரமும் பலித்தவையாக சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விவரங்கள் எல்லாமே ஹரி “பசு” வாகவே விளங்கினான் என்பதை அறியலாம். ஒருவன் சாபமிடும் அளவு ஒருவன் நடந்து கொள்வதும்; அதை அவன் அநுபவிப்பதும் கொண்டு சாபமடைந்த வனை எப்படி “பரம்” என்று நாம் ஏற்பது?

இம்மாதிரியான இழிநிலை ஸ்ரீ பரமேச்வரருக்கு உண்டு என்றறிய யாதொரு சரித்திரமும் இல்லை!! இது ஒன்றே ஸ்ரீ பரமேச்வரரை “பசுபதி” என்று நிறுவிக்கிறதே?! நல்லவேளை, நம் பரமேச்வரரையும் ஒருவன் தெய்வமாக இருக்க சபித்ததினால்தான் அவர் நமக்கெல்லாம் “கடவுளாக" விளங்குகிறார் என்று சொல் லாமல் விட்டார்களே?!!

கோபூஜை என்னும் பசுக்களுக்கான பூஜைகளை செய்யும் போது, **"ஈசானாய த்வா ஜுஷ்டமுபாகரோமி"** என்று தர்ப்பையால் தொட்டு சங்கல்பிக்கும் மந்திரமும், பசுவை ப்ரோஷிக்கும் சமயம், **"ஈசானாய த்வா ஜுஷ்டம் ப்ரோக்ஷாமி"** என்றும் சொல்லி வழிபடுவது வழக்கம். இப்பசுக்கூட்டங்களை மேய்ப்பதினால் "விஷ்ணவே த்வா ஜுஷ்டமுபாகரோமி" என்றோ; "விஷ்ணும் த்வா ஜுஷ்டம் ப்ரோக்ஷாமி" என்றோ சொல்வதில்லை!!, (பசு என்பதற்கு உயிர்கள் என்பதே அர்த்தம்.)

“நதஸ்ய கச்சித் பதிரஸ்தி லோகே
நசேசிதா நைவச தஸ்ய லிங்கம்
நகாரணம் காரணாநாமதிசோ நதஸ்ய
கச்சித் ஜநிதா நபோதிப:"'

- ஸ்வேதாச்வரோபநிஷத்

**பொருள்:** உருத்திர மூர்த்திக்கு பிரபுவானவனும், ரட்சகனும் லோகத்தில் ஒருவரும் இல்லை. அவருக்கு ஜந்மஸ்தானமும், காரணமும் இல்லை; அவர் காரணங்களுக்கெல்லாம் பிரபுவானவர் ; அவருக்கு உற்பத்திக் காரணம் ஒருவரும் இல்லை; அவர் ஆகாசாதிபதி!!

இப்படி சகல வேதாகமங்களும், இதிஹாச புராணாதிகளும் சிவபெருமானை மட்டுமே "பசுபதி" என்று கூறுவது போல, விஷ்ணுவாதியரை மறந்தும் கூற வில்லையே? ஹரனை சர்வாந்தர்யாமியாகவே வேதமும், இதிகாசமும், புராணமும் விளக்குகின்றது. **ஜாபால்யோபநிஷத்:** *ஸர்வேச்வர ஈச பசுபதி என்றும்; **நாதபிந்துப நிஷத்:** ருத்ரம் பசூநாஞ்சபதிம் ததா"? என்றும்; **பஸ்ம ஜாபாலம்:** 'பசுபாசவிமோசக பசவச்சாமாநவாந்தம்" என்றும்; பாரதத்தில் கிருஷ்ணன் ஜபித்து யுத்தத்தில் ஜெயிக்கும் வரம் வாங்க பிரயோகித்த **சத ருத்ரீயத்தில்** ருத்ரம் பசுபதிம்... என்றும் வருவதினாலும் சிவபெருமானே பசுபதி என்பதும் விளங்கும்.

**013.**

**ஏகோயகாத தரதுக்தநிதௌநிமந்ந: கைலாஸசைலசிகரே**
**கலுவர்த்ததேந்ய|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **அகாததரதுகதௌ** = மிகவும் ஆழமான பாற் கடலில், **நிமக்நோஹி =** மூழ்கினவன், **அந்ய:** = இன்னொருவனோ **கைலாசஸ்சல சிகரே** = கைலைமலை சிகரத்தில், **வர்த்தேகலு** = வசிக்கின்றவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம் =** உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்,

**தாரதம்மியம்:** ஹரியோ பாற்கடல் கடைந்த நாளில் அக்கடலின் கீழே முழுகி யவன். ஹரனோ ஸ்ரீ கைலாஸ சிகரத்திலே இருப்பவனாக உள்ளான். கீழே போனவ னைக் காட்டிலும் மேலேயிருப்பவன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகிறோம். (கீழே என்பதின் தாத்பர்யம் என்னவென்றால், ஹரியினது அவதாரத்திலும் சரி, அவன் ஹரியாகவே இருந்தபோதும் சரி அவனது குணமும், செயலும், அவனது விருப்பமும் மேலானதாக இருந்ததில்லை. அனைத்தும்' மிகக் கீழானதே!)

ஓடினா னென்ப துணர்ந்து முனக்குச் சரியா
நாடினார்க் கென்ன நரகமோ - நீடியே
ஆலவிடந் தோன்றியபோ தம்பலவா ணாநெடிய
மாலவிடஞ் சஞ்சரியாதே,

**- தனிப்பாடல் திரட்டு.**

**பொருள்:** சபாநாயரே! பெரியதாகவே ஆலவிடம் தோன்றியபோது திருமால் அவ்விடம் நில்லாமல் ஓடினான் என்பது தெரிந்தும், அவனை உனக்கு ஒப்பாக கருதுகிறவர்களுக் எவ்வகையான நரகம் கிட்டுமோ?

**014.**

**ஏகஸ்து நைல்யமுபயாதி சரீரமாத்ரே யந்ய:து**
**நைல்யமுபயச்சதி கண்டமாத்ரே|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:து** = ஒருவன், **சரீரமாத்ரே =** உடல் முழுதும், **நைல்யம்** = நீலநிறம், **உபயாதி =** கொண்டவன், **அந்ய:து** = மற்றொருவனோ, **கண்டமாத்ரே** = தன் கண்டத்தில் மாத்திரம், **நைல்யம்** = நீலநிறம், **உபயச்சதி** = கொண்டவனானான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ உடல் முழுதும் கருத்தவன். அவனது அக்கரிய நிறம் லோகோபகாரத்திற்காக உண்டானதும் கிடையாது. ஹரியோ பாற்கடல் கடைந்த நாளில் அவன் படுத்திருந்த நாகமானது அவ்விஷத்தின் வீர்யம் தாங்காது கடலில் ஹரியை தள்ளிவிட, கீழேவிழுந்த பயத்தினாலும் ஆலகால விஷத்தின் கொடூரத்தினால் பீடிக்கப்பட்டு உடல் முழுதும் கருத்தவனானான். சர்வலோக நன்மையின் பொருட்டு ஹரன் அந்த ஆலகாலவிஷத்தினை உண்டு தன் கண்டம் மாத்திரம் கருத்தவனானார். அவரந்த நிறம் பெற்றதற்கு லோகோபஹாரமே காரணமாக உள்ளதால், தன்பொருட்டு பயத்தினால் உடல் முழுதும் கருத்த ஹரியினும், சமஸ்த லோகோபஹாரத்தின் பொருட்டு கண்டம் மாத்திரம் கருத்த ஹரனே சிறந்தவனென்று நாங்கள் அந்த ஹரனையே சரணம்அடைகிறோம்.

(நம் பரமேச்வரரை அவ்வாலகாள விஷம் தாக்கி கண்டம் கருத்ததாகவும் கருத இடமில்லை. ஏனென்றால், அவர் ஸ்படிகம் போன்ற தேகத்தையுடையவர் என்று சுருதியாதிகளில் பிரசித்தமானதாய் இருப்பதால், ஸ்படிகத்தின் உள்ளிருக்கும் பொருளையும் அது வெளிக்காட்டும் இயல்பு இயற்கையானபடியால், ஸ்படிகத்தினுள் இருக்கும் பொருள் ஸ்படிகத்தை நிறம் மாற்றியது என்பது எப்படி பொய்யோ, அவ்விதமே இதனையும் கருதவேண்டும்!)

**015.**

**ஏக ஸ்ஸதாஷ்டமஹிஷிருபயாதி சீக்ரமந்யோபிபர்த்தி**
**நிதராமிதி சாஷ்டமூர்த்தி:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:**= ஒருவன், **அஷ்டமகிஷி:** = எட்டு மனைவிகளை, **சீக்கிரம்** = விரைவாக, **உபயாதி** = கொண்டவன், **அந்ய:ச** = இன்னொருவனோ, **அஷ்டமூர்த்தி:** = எட்டு வடிவத்தில், **நிதராம்** = மிகவும், **விபர்தி** = விளங்குகிறான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ இஷ்ட அநிஷ்டங்களுடன் தன்னை மணந்த எட்டு சாமான்யமான மனைவியருடனே சதா இருந்து கொண்டிருக்கின்றான். ஹரனோ அட்ட மூர்த்திகளை எப்போதும் தன்னை அடைபவனாக இருக்கின்றான். ஹரனு டைய அஷ்டமூர்த்தங்களின்றி இவ்வுலகமே இல்லை என்பதால் நாங்கள் அந்த ஹரனை சிறந்தவனென்று சரணம் அடைகின்றோம்.

## ஹரியின் எட்டு மனைவிகள்:

### 1. ருக்மிணி

விதர்ப்ப தேசத்து மன்னனுக்கு உருக்குமி என்ற மகனும், உருக்மினி என்ற மகளும் பிறந்தனர். மன்னன் கண்ணனுக்கு தன் மகள் உருக்மினியை விவாஹம் செய்யத் தீர்மானித்ததை அறிந்த உருக்மி, “தந்தையே! இது தகாத செயல்!... இடையனான அந்த குழலூதி என் தங்கைக்கு ஏற்றவன் அல்ல!... அவளுக்கு தகுதியானவன் சேதிபனாகிய சிசுபாலனே!” என்று தன் தங்கையின் நலன் கருதி சொன்னான். உருக்குமி சொன்னதைப்பற்றி ஆராய்ந்து, உருக்குமியும், விதர்ப்ப தேசத்து மன்னனும் ஒருவாறு அதுவே சரி என்று இறுதியாக முடிவெடுத்தனர்.

ஆனால் உருக்மிணியோ கண்ணனைத்தான் மணப்பேன் என்று, உருக்குமி யின் எதிர்ப்பு, தன்னை மணக்கவிருந்த சிசுபாலனின் விருப்பம் என்பன முதலிய எல்லாவற்றையும் மீறி, ருக்மினி கண்ணனிடம் தன் நிலையை ஓர் பார்ப்பண தூதுவனின் மூலம் தெரிவித்து, பின் அக்கண்ணனுடைய ஏற்பாட்டின்படி அக்கண்ண னுடன் தேரேறி ஓடி கண்ணனுக்கு மனைவியானவள்.

தந்தை, தமயன் சொல்லை மீறிய ஒருவளை அவளது "இச்சை" என்பதற்கு மாத்திரம் பிறந்த வீட்டைவிட்டு ஓடி வந்த உருக்மிணியை ஸ்ரீ கிருஷ்ணன் மனைவியாக ஏற்றதை எவர் ஏற்பார்?!

### 2. சத்யபாமா மற்றும் 3. ஜாம்பவதி

சத்திராஜித்து என்னுமரசனின் மகள் சத்யபாமா. சத்திராஜித்து ஸ்ரீ பானுமூர் த்தியை (சூரியனை) உபாசித்து, வரமாக சூர்யமூர்த்தி அணிந்திருந்த சியமந்தக மணியைப் பெற்று அதைத் தான் தரித்துக் கொண்டான். ஸ்ரீ பானுமூர்த்தியிடம் சத்திராஜித்து பெற்று அணிந்து கொண்ட அம்மணியின் மீது மிகுந்த ஆசை கொண்ட

ஹரி, அச்சியமந்தக மணியை தனக்குத் தருமாறு சத்திராஜித்துவை வேண்டினான். தான் சூரியமூர்த்தியை உபாசித்துப் பெற்ற அம்மணியை எவ்வகையில் யார் கேட்டாலும் தருவதற்கில்லை என்றதும் ஹரி அதனை மறந்தது போல் கேளாது விட்டான்.

ஒரு நாள் அந்த மணியை அணிந்து வேட்டைக்குச் சென்ற சத்திராஜித்துவின் தம்பியான பிரசேனனிடமிருந்து காட்டில் இருந்த சிங்கம் ஒன்று அவனிடமிருந்த அச்சியமந்தக மணியை அபஹரித்து அவனையும் கொன்றது. அதன்பின்னர் அச்சியமந்தக மணியின் பிரகாசத்தினால் மிகவும் கவரப்பட்டவனும், அக்காட்டில் கரடியுருவில் உள்ளவனுமான ஜாம்பவான் (இந்த ஜாம்பவான் யாரென்றால், இராமாவதாரத்தில் இராமனுக்கு சகாயமாகப் போட்டு, பிரதிபலனாக அநுமாரைப் போல சிரஞ்சீவித்துவம் பெற்றவன்) அச்சிங்கத்திடமிருந்து அபஹரித்து தன் குகைக்குள் சென்று ஜாம்பவதி என்னும் தன் மகளுக்கு அளித்தான்.

இங்கு நாட்டிலோ, வேட்டைக்கு சென்ற பிரசேனன் திரும்பி வராததற்கு சியமந்தக மணிமீது ஆசை கொண்ட கண்ணன்தான் காரணமென்று சத்திராஜித்து பலவாறாக தூற்றினான், சிறு வயதில் வெண்ணையைத் திருடியவன்தானே! என்று ஊராரும் சத்தியசித்துவின் வார்த்தையையே நம்பினர். சியமந்தக மணி காணாமல் போன இவ்விஷயம் அறிந்த கண்ணன், சியமந்தக மணி காணாமல் போகத் தான் காரணம் அல்ல என்பதை ஊராருக்கு நிரூபிக்கவும், அச்சியமந்தக மணியை மீட்கவும் காட்டிற்குச் சென்றான். அங்கு ஜாம்பவதியைக் கண்டான்.!!

அவளோ கிருஷ்ணனிடம், "நீ வந்த நோக்கம் என் தகப்பனுக்கு தெரிந்தால் உன்னையும் என்னையும் என்ன செய்வாரோ... ஆகவே இந்த சியமந்தத மணியை உனக்கு நானே தருகிறேன்... எடுத்துக் கொண்டு ஓடிவிடு! என்றாள். கிருஷ்ணர் மறுத்து, 'பிரசேனன் மறைவுக்கு தான் காரணமல்ல என்பதை அனைவரும் அறியும் பொருட்டு, அந்த சியமந்தத மணியை உன் தகப்பனாருடன் போரிட்டேனும் எடுத்துச் செல்வேன்!! என்று கூறி, அதன் படியே அக்கரடியுடன் (ஜாம்பவானுடன்) இருபத்தியொரு நாட்கள் த்வந்த யுத்தம் செய்து (ஸ்காந்தத்தில் ஒன்பது நாள் என்றுள்ளது) இறுதியாக, அச்சாம்பவானுக்கு தான் இராமாவதாரம் செய்த விஷ்ணு என்று அறிவித்து, அவனை மன்னித்து, பின் அச் ஜாம்பவானது விருப்பப் படியே அவனது மகளான ஜாம்பவதியையும் கிருஷ்ணன் மணந்து கொண்டான்,

பின் சத்தியசித்துவின் நகர் சென்ற கிருஷ்ணன் அச்சியமந்தக மணியை சத்திராஜித்திற்கு நடந்தவை எல்லாம் கூறி அளித்தான். இவ்விதம் தனக்கு அச்சியமந்தக மணியையளித்த கண்ணனுக்கு பிரதியாக, அச்சியமந்தக மணிமீது பேரவா கொண்ட அக்கிருஷ்ணனுக்கு அச்சியமந்தக மணியையும், அச்சியமந்தக மணியிலும் மேலான தன் மகள் சத்யபாமாவையும் கண்ணனுக்கு அளித்தான் சத்திராசித்து.

இன்றும் ஆட்டோவில் ஒருவர் தவறவிட்ட பணப்பையை அந்த ஆட்டோ டிரைவர் நன்நடத்தையுடன் திருப்பித் தரும்போது, பணப்பையை தவற விட்டவர்

அந்த ஆட்டோ டிரைவருக்கு சன்மானமாக சிறிது பணம் தந்து அனுப்புவது போல சியமந்தக மணிக்கு சன்மானமாக அரசனின் பெண்ணை 3வது மனைவியாக ஏற்ற ஸ்ரீ கிருஷ்ணனின் தாராள மனசை என்னென்பது?! (ஒரு சில ஆட்டோ டிரைவர்கள் சன்மானம் வாங்காமல் "தன்மானத்துடன்" இருப்பதையும் பார்க்கிறோம்!! என்ன செய்வது? "ஈகையும் தயையும் பிறவிக்குணம்!"" என்றல்லவா சொல்லியிருக்கிறாள் அவ்வை?!!)

**4. காளிந்தி**

அர்ஜனனுடன் கண்ணன் யமுனை நதிக்கரையில் தங்கியிருந்த காலத்தில், கண்ணன் அங்கு பாரிஜாத வனத்தில் ஒர் அழகிய யுவதியும், பானுபுத்திரியுமான, காளிந்தி என்னும்பெயருடைய கன்னியைக் கண்டு, காமுற்று அவளைப்பற்றி "விசாரித்து" வருமாறு கண்ணன் அருச்சுனனை அனுப்ப, (ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இந்தப்பணியை சிரமேற்கொண்டு செய்த இந்த அர்ஜனனுக்குத்தான் கீதோபதேசமும், தேரோட்டும் வேலையும் ஸ்ரீ கிருஷ்ணரால் செய்யப்பட்டது!!)

அர்ஜுனனும் காளிந்தியிடம் சென்று, கண்ணன் அவளை விரும்புவதையும், மற்றும் தன்னிடம் கிருஷ்ணன் சொன்னதையும் அக்கன்னியிடம் சொல்லி, "உன் அபிப்ராயம் என்ன?" என்று கேட்க, அவளோ, 'மனைவியென்னும் ஸ்தானத்தில் தன்னையடைய விரும்புபவனிடம் தான் சுகித்திருத்தல் தவறில்லை என்று எண்ணம் கொண்டு, "என்னபிப்ராயம் கண்ணனுக்கு மனைவியாதல்!" என்றாள். கண்ணனும் அவளை மூன்றாவது மனைவியாக ஏற்றான்.

**5. மித்திரவிந்தை**

இவள் கண்ணனுக்கு அத்தை மகள் உறவு. இவளும் கண்ணனை விரும்பி னாள். இவளது தமையனோ (அவந்தி நாட்டரசன்) இவளை துரியோதனனுக்கு மணம் செய்து கொடுப்பதாக தீர்மானித்து, துரியோதனனை அழைத்தான். தன் அத்தை மகளின் விருப்பத்திற்கு மாறாக அவளது தகப்பன் துரியோதனனுக்கு அவளை மணமுடிக்கப் போகின்றான் என்பதை கண்ணன் அறிந்து அவந்தி நாட்டிற்கே சென்று, துரியோதனனெதிரிலேயே மித்திரவிந்தையை கைப்பற்றினான். (இது கண்ட துரியோதனன் (கிருஷ்ணன் ஆசைப்படும் பெண் நமக்கெதற்கு? என்று) எதுவும் பேசாமல் போயினான்.) பின் கிருஷ்ணன் அவளை தன்னகர் கொண்டு சென்று 5வது மனைவியாக ஆக்கிக் கொண்டான்.

**6. சத்தி**

இவள் கோசல நாட்டரசனாகிய நக்னசித்து என்பவனின் மகள். அவ்வரசன், தன் மகளாகிய இவளை தான் வளர்க்கும் ஏழு எருதுகளை தழுவி வென்றவர் களுக்கு மணமுடிப்பதாக பிரஸ்தாபித்ததை கேட்டு அநேக மன்னர்கள் வந்து முயற்சித்து, அவ்வேழு எருதுகளை வெல்லமுடியாமல் அங்கம் நொந்து, தத்தமது நாட்டிற்கு திரும்பிய சமயம் கிருஷ்ணன் அருச்சுனனுடன் கோசல நாட்டை

அடைந்து அவ்வேழு எருதுகளையும் அடக்கினான். இதனால் மகிழ்வடைந்த கோசல மன்னன், தன் மகள் சத்தியை கிருஷ்ணனுக்கு அளித்தான். கிருஷ்ணனும் அவளைத் தன் ஆறாவது மனைவியாக ஏற்றான்.




**7. பத்திரை**

கேகய ராஜனுக்கு மனைவியும், வசுதேவனுக்கு தங்கையும், கண்ணனுக்கு அத்தையுமாகிய சுதகீர்த்தி என்பவளது புத்திரியான பத்திரை தன் குழந்தைப் பருவத்திலேயே கண்ணனை தனக்கு கணவனாக மனதில் வரித்து வாழ்ந்தவளாத லால், அவளது அவ்வபிப்ராயத்தை அநுசரித்து, அவளது பெற்றோர் தமையன் கிருஷ்ணனை அழைத்து அவனுக்களித்தனர். கிருஷ்ணரும் அவளை தனது ஏழாம் மனைவியாகக் கொண்டான்.

**8. இலக்கணை**

மத்திர நாட்டரசன் தன் மகள் லக்கிணையை (சர்வ லக்ஷணமும் பொருந்திய வள்) தன்னால் அமைக்கப்பட்ட வில்லை வளைத்து தான் அமைத்துள்ள மச்ச யந்திரத்தினை பேதிப்பவனுக்கு திருமணம் செய்து கொடுப்பதாய் அறிவித்தவாறு, பல தேசத்து மன்னர்களும் முயன்று தோற்றனர். கண்ணனே அம்மச்ச யந்திரத் தினை ஓடித்தான். அதனால் இலக்கிணை அவனுக்கு மாலையிட்டாள்.

ஹரியோ இவ்விதம் இஷ்ட அறிஷ்டங்களுடன் கூடிய எட்டு மனைவியரை கொண்டவனாக உள்ளவன். ஆனால் ஹரனோ:

1) ப்ருதிவியை தனது சரீரமாகக்கொண்டு, தான் சரீரியாகவும் இருந்து **சருவன்** என்றும், 2) அப்புவை சரீரமாகக் கொண்டு, தான் சரீரியாகவும் இருந்து

**பவன்** என்றும், 3) அக்னியை சரீரமாகக் கொண்டு, தான் சரீரியாகவும் இருந்து **பசுபதி** என்றும், 4) வாயுவைச் சரீரமாகக்கொண்டு, தான் சரீரியாகவும் இருந்து ஈசானனாகவும், 5) ஆகாயத்தினை சரீரமாகக் கோண்டு, தான் சரீரமாகவும் இருந்து **வீமன்** என்றும், 6) சூரியனை சரீரமாகக் கொண்டு, தான் சரீரியாகவும் இருந்து **உருத்திரனாக**வும், 7) சந்திரனை சரீரமாகக் கொண்டு, தான் சரீரியாகவும் இருந்து **மஹாதேவனா**யும், 8) ஜீவனை அல்லது யஜ்வாவை சரீரமாகக் கொண்டு, தான் சரீரியாகவும் - இருந்து **உக்கிரன்** என்றும் பெயர் பெற்றார் என்று அறியப்படுவதால், ஸ்ரீ மஹாதேவரின் இவ்வெட்டு மூர்த்திகள் இன்றி இவ்வுலகமே இல்லையாதலால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**016.**

**ஏகோலுடத் யநுதிநம்யமுநாஜலௌகேஷ்வந்யோ**
**ததாதிசிரஸா மஹதீஞ்சகங்காம் |**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **அநுதிநம்** = எப்போதும், **யமுநாஜலௌகேஷு** = யமுனையாற்று வெள்ளத்தில், **லுடதி** = புரள்கின்றான், **அந்ய;து** = இன்னொருவனோ, **சிரஸா** = தலையிலே, **மஹதீம் =** மஹத்துவம் நிறைந்த (பெரிய), **கங்காம்** = கங்கையை, **ததாதி** = கொண்டிருக்கின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ மகத்துவத்தில் கங்கையிலும் தாழ்ந்த யமுனையின் ப்ரவாஹமான ஜலப்பெருக்கில் கிடந்து புரளுபவனாக உள்ளான். ஹரனோ சிறந்த கங்கையை தன் சிரசில் கொண்டவனாக இருப்பவனாதலால், நீரில் கிடக்கிறவனைக் காட்டிலும், சிறந்த கங்கையை சிரசில் தரித்த ஹரனை நாங்கள் சரணம் அடைகிறோம்.

ஹரியோ தனது அவதார காரியத்தின் போதும்; மூல மூர்த்தியான திருமாலாகவே இருக்கும்போதும் சாதாரண ஜலப்பெருக்கில் புரண்டவனாக இருந்தவன். ஆனால் வைணவர்களோ அவர்களது புரட்டு நூல்களில் யாதொரு பிரமாணமும் இல்லாது சிவபெருமான் தனது ஜடாமகுடத்தில் தாங்கியுள்ள கங்கைக்கு களங்கம் கற்பிக்க, அது நாராயணன் கால் அலம்பிய ஜலம் என்று பெருமை பட்டிருக்கின்றார்கள். பூர்வத்தில் இல்லாதவற்றை உத்தரபாடம் என்பதாக ஏதேதோ கிறுக்கி மனச்சமாதானம் பெற்றவர்களாக இருக்கின்றார்கள்.

கங்கையைப் பற்றி பூர்வ நூலான பாரதமும், வாமன புராணமும் சொல்வது என்னவென்றால் பகீரதன் என்பவனது பித்ருக்களின் கடன் தீர கங்கையை பூமிக்கு வரவழைத்தபோது கங்கையானவள் மிகுந்த கர்வம் கொண்டு தன் வீறடக்க

யாரிருக்கின்றார்கள் என்று மிகுந்த கர்வத்துடன் பிரவகித்து வர அவளுடைய கர்வ மடக்க சிவபெருமான் தன் ஜடாமகுடத்தில் தாங்கிப் பின் பகீரதனின் வேண்டுதலுக்கு அவளை மூன்று சொட்டு மாத்திரம் பூமியில் விழச்செய்தார் என்றே வருகின்றது. பகீரதனின் பித்ருக்களின் நன்மைக்காக பூமிக்கு வரவழைக்கப்பட்ட இக்கங்கையான வள் திருமாலின் கால் அலம்பிய நீர் என்றால் அப்பகீரதன் திருமாலையே வணங்கிப் பணிந்து, எனக்கும் ஒரு சொம்பு கங்கை தாருங்கள் ப்ரபோ! என்று பெற்றுவிட்டுப் போகிறான்?!.

தவிர, ஹிமவானின் மூத்த புதல்வியான குடிலை என்பவள் பிரும்ம லோகத் திற்கு (தாருகாசுரனின் வதைக்காக ஸ்கந்தன் அவதரிக்க) ஆயத்தமாக சென்று, தான் சிவவீரியம் தாங்கும் சக்தியுள்ளவள் என்ற அவளது கர்வமடங்க, அந்த குடிலையின் அகம்பாவத்திற்கு மிகவும் கோபித்த பிரும்மா, அவளை தண்ணீர் உருவில் இருக்குமாறு சபித்ததும், பிறகு அவள் அவ்விதமே அநேக வருடங்கள் பிரும்ம லோகத்தில் இருந்தவிவரமும், பின் பகீரதனின் பித்ரு கார்யத்திற்காக ஹிமாச்சல மார்கமாக பூலோகம் வந்ததும், அவளின் வீறடக்க சிவபெருமான் தன் சடாமகுடத்தில் தாங்கிய வாமன புராண வசனமும் (53வது அத்தியாயம்) உண்டு.

இக்கங்கையின் மற்றொரு சரிதமும் உண்டு. அதாவது ஸ்ரீ பரமேச்வரரின் கண்களை உமை விளையாட்டாக பொத்திய போது அவர் லோக நன்மைக்காக தம் நெற்றிக்கண்ணைத் திறக்க, அதன் வெப்பம் தாங்காது இமயம் உருகிப் பெருகி மூன்று கிளை நதியாய் பிரவகித்து ஓடிற்று என்றும்; அதில் ஒன்று இந்த கங்கை என்பதும் புராணமே!

இராமாயணத்தில், ஸ்ரீ விச்வாமித்திரர் இராம - இலட்சுமணர்களை அழைத்துக் கொண்டு செல்லும் போது வழியில் சரயு நதியைக் கடக்கும் போது, "ஓ! ராமா!! கைலாஸ மலையில் ப்ரும்ம தேவர் மனதால் ஒரு ஸரஸ்ஸை உண்டு பண்ணினார். அந்த ஸரஸ்ஸிலிருந்து பெருகிவரும் இந்த ஸரயூ நதியானது மிகுந்த புண்யத்தை அளிக்கக்கூடியது. ஸ்ரீ சிவபெருமானின் வாஸஸ்தலமான கைலாஸ கிரியில் இருந்து சரயூ நதியும், ஸ்ரீ பரமேச்வரரது ஜடாமகுடத்தில் இருந்து கங்கா நீதியும் பெருகி வருவதால் அவைகள் மிக்க புண்ணியமானவையாகும். நீ இவ்விரு நதிகளையும் ஒருமைப்பட்ட மனதுடன் நமஸ்காரம் செய்!" என்று சொன்ன பகுதியும், ஸ்ரீ விச்வாமித்திரரது ஆணைக்கு இராம-இலக்குமணர்கள் அவ்விரு நதிக ளுக்கும் நமஸ்காரம் செய்ததாகவும் வால்மீகி இராமாயணத்தில் வருகிறது. இவ்விதம் கங்கையின் மஹிமை உணர்ந்த இராமன் கங்கையை பணிந்த விவரம் பூர்வ இதிஹாசமான 'இராமாயணத்தில்' இருக்கிறபோது, பிற்பாடு இவ்வைணவர் கள் கங்கைக்கு களங்கம் கற்பிப்பதாக நினைத்துக் கொண்டு அதில் மூழ்கி நமஸ்காரம் செய்த இராம-இலட்சுமணர் களையும் இழிவுபடுத்தும் இவர்களது செய்கைக்கு இவர்கள் தேடும் ப்ராயச்சித்தம் என்ன?!, இவ்விதமான இவர்களது இழிசெயலுக்கு ப்ராயச் சித்தம் உண்டா?!!

இச்சம்பவம் தவிர்த்து இராமாயணத்தில் கங்கையைப் பற்றி நிறைய இடத்தி லும் அதன் புனிதத்தன்மை பற்றி வருகிறது. (ஓ இராமா! ஆகாயத்தில் இருந்து

கங்கை கீழே விழும்போது மங்களகரமான ஸ்ரீ பரமசிவன் தலையில் அது விழுந்தது! - என்னும் பொருள் தரும் 'ஆகாசாதபதத்ராம சிவே சிவ சிரஸ்யுத' வசனம் உள்ளது!) **பாரதம்/சபாபர்வம்/40வது அத்தியாயம் பகுதியில்** தருமர் செய்த 'இராஜசூய யாகம்' பற்றியும், அந்த யாகத்திற்கு யார் யார் என்னென்ன 'பணிகள்' மேற்கொண்டனர் என்பதில், **யுயுத்ஸு**:- வருவோரை சாப்பிட அமரவைத்தல், எச்சில்களை சுத்தம் செய்தல், போஜன உபசரிப்பு முதலியவைகளையும், **துச்சாஸனன்**:- பட்சணங்கள், போஜனம் செய்யும் பணியையும், **அச்வத்தாமா**:- பிராமணர்களை உபசரித்து அழைக்கும் பணியையும், **சஞ்சயன்**:- அரசர்களை உபசரித்தலையும், **பீஷ்மர் மற்றும் துரோணர்**:- செய்தவை, செய்யப்பட வேண்டியவை, காரியங்களை மேற்பார்வையிடும் பணியையும், **கிருபாசாரியார்**:- தட்சணை கொடுத்தல், பொன், நாணயப் பாதுகாப்பு முதலியவைகளையும், **விதுரர்**:- பொருட் செலவையும், **ஸ்ரீ கிருஷ்ணர்**:- மேலான பலனை பூரணம் செய்ய ப்ராம்மணர்கள் கால் அலம்பும் பணியையும் (பாதப்ரக்ஷாளனம்) செய்தனர் என்று வருகிறது.

வைதிக கார்யங்களுக்கு வருகின்ற ப்ராம்ணர்களுடைய 'கால்களை' அலம்பி பணிவிடை செய்த இந்த ஹரியினது பாதத்தில் இருந்து வழிந்தோடி வந்த ஜலத்தைத்தான் சிவபெருமான் தாங்கினார் என்று கூசாமல் சொல்லும் பாதகர்களுக்கு நேரும் மிகக் கேவலமான 'முடிவு'க்கு நாம் பரிதாபப் படுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்வதற்கில்லை. ஷண்முனிவர்களின் சாபத்தில் அகப்பட்ட வாழ்வை உடையவர்களாயும், ஊழின்வலி மிகுந்த வாழ்வை வாழும் இவர்களுக்கு அடுத்த பிறவியிலாவது 'சிவபெருமானின்' அருள் கிடைக்கட்டும்!!.

அல்லது, **'தத்ர தேவர்ஷிகந்தர்வ: வஸுதாதலவாஸிந:|, பவாங்கபதிதம் தோயம் பவித்ரமிதிபஸ்ப்ருக:||'** எனும் இராமாயண வசனப்படி இவ்வைணவர் கள் இராமனைப் போன்றே கங்கையில் மூழ்கி நமஸ்கரித்து தம் பாவம் போக்கிக் கொள்ளட்டும்! (**பொருள்:** ஸ்வர்கத்திலிருந்து சாபத்தால் பூமியில் விழுந்தவர்களும் இந்த கங்கையில் ஸ்நாணம் செய்து பாபம் நீங்கினவர்களாய்ப் பரிசுத்தர்களாகி மீண்டும் ஆகாசத்திற்குச் சென்றார்கள். அந்தச் சுத்தமான கங்கையில் உலகம் முழுவதுமே ஸ்நாணம் செய்து கவலை நீங்கி சந்தோஷமாய்க் காணப்பட்டது!)

விஷ்ணுவை சத்திரியன் என்றும், சிவபெருமானை "பிராமணன்" என்றே கற்றறிந்த பண்டிதர்களும், ஸ்மிருதியாதிகளும் சொல்லுகின்றன. வைணவர்களோ, தாங்கள் தங்கள் இஷ்டத்திற்கு கிறுக்கியவற்றில், விஷ்ணு கால் அலம்பிய நீரே சங்கரர் தலைமீது பட்டு, புனிதரானார் என்றும் கூசாமல் புளுகியிருக்கின்றார்கள். (இக்காலத்தில் காணப்படும் 'பிராமணர்கள்' என்பதாக தயவு செய்து இதற்கு அர்த்தம் கொள்ள வேண்டாம்!)

**பாரதத்தில் "பீஷ்மபர்வம்/121வது அத்தியாயத்தில்** அர்ஜுனனால் உண்டாக்கப்பட்ட அம்புப் படுக்கையில் இருந்த பீஷ்மர் தாகசாந்திக்காக தண்ணீர் கேட்க, அங்கு குழுமியிருந்த அரசர்கள் பலரும் குடத்தில் தண்ணீர் தர, பீஷ்மர் அதை அருந்த மறுத்து, அர்ஜுனனை கேட்க, அவன் பர்ஜந்யாஸ்திர மந்திரம் ஜபித்து தமது வில்லினால் "பாதாள கங்கையை" வரவழைத்து தந்தான். பீஷ்மரும் அதை அருந்தி

அவனை வாழ்த்திய பகுதி உள்ளது. பீஷ்மர் தாகத்திற்கு தண்ணீர் கேட்க அர்ஜுனன் இராமன் மூழ்கிய "நர்மதையை" வரவழைத்தான் என்று பாரதம் சொல்லவில்லை.

வைணவர்கள் புனிதமாக கருதும் மற்ற நதிகளைவிட கங்கை இன்றளவும் புனிதமாகவும், அதன் மகத்துவம் குறையாமலும்தான் இருக்கிறாள். பல வருடங்கள் செப்புக்குப்பிகளில் அடைக்கப்பட்டு விற்கப்படும் கங்கை ஜலம் கெடாமல் இருப் பதை ஆய்வு செய்து நிரூபிக்கப்பட்ட ஒன்று, கங்கையின் மகிமை தாம் வணங்கும் ஹரியைவிட மிக உயர்ந்ததாக இன்றும் காணப்படுவதால்தான், அவ்வைணவர்கள் கங்கையை சிவபெருமானின் ஜடாமகுடத்தில் இருந்து பூமிக்கு விழுந்தமையினால் அதை "சடைச்சாறு' என்று இகழ்ந்தும் அகத்திய முனிவர் இந்திரனுக்காக சப்த சாகரங்களையும் தன் உள்ளங்கையில் ஏந்தி குடித்துப் பின் மூத்திரமாக விட்டதினால் கடலை "உப்புநீர் " என்றும் இகழ்ந்து அதில் மூழ்காது ஒழிந்தனர்!.

இது தவிர, **பாரதம்/சல்லிய பர்வம்/39வது அத்தியாயம்/ஹ்ரதப்ரவேச பர்வத்தில்**, "எந்த நதியால் இவ்வுலகம் வியாபிக்கப் பட்டிருக்கிறதோ அந்த நதி ஸரஸ்வதி என்றழைக்கப்படுகிறது. அது ஏழாகப் பிரிந்து ஸப்த ஸாரஸ்வத்ய தீர்த்தம் என்று பெயர் பெற்றது.

பல ரிஷிகள் ஒன்று சேர்ந்து யாகம் செய்யும் போது அங்கு ஸரஸ்வதி நதி வராததால் அவர்கள் ஸ்ரீ மகேஸ்வரரை துதித்து வேண்ட, அவர் அவ்வேழு ரிஷிகளுக்காக ஸரஸ்வதி நதியை ஏழாக பிரவகிக்க வைத்தார், (சத்ரயாஜிகளுக்கு - **காஞ்சனாட்சி**, கயனுக்கு - **விசாலை**, ஔத்தாலகிக்கு - **மனோஹரை**, குருராஜனு க்கு - **ஓகவதீ**, தட்சர்களுக்கு - **ஸுவேணி**, பிரம்மர்களுக்கு - **விமலோதை**, ராஜரிஷிகளுக்கு - **ஸுரேணு** என்பவையே அந்த ஸப்த ஸாரஸ்வதி நதிகள்!)

ஷண்முனிவர்களின் சாபத்தினால் பிராமணர்களாக இருந்து, "வைணவர்கள்" ஆக மாறின இவர்கள் கங்கையிலும், சமுத்திரத்திலும் தம்பாவம் கழுவாதிருக்கவே அம்முனிவர்கள் சபித்தனர் போலும்!. அல்லது அவர்கள் குளித்த அக்கங்கையிலே மற்றோரும் ஸ்நாணம் செய்ய வேண்டியிருக்குமே? என்பதினாலும் இருக்கலாம்!!,

**பாரதம்/பீஷ்மபர்வம்/6வதுஅத்தியாயத்தில்**, சஞ்சயன் ஒன்பது கண்டங்களை யும், அவற்றிற்கு எல்லையான மலைகளையும், மேருவையும் வர்ணித்த பகுதியில் ஸ்ரீ பரமேச்வரர் வீற்றிருக்கும் பகுதியையும் மிகவிரிவாக வர்ணித்து இறுதியாக, "மேருவின் உச்சியிலிருந்து க்ஷீரதாரை போன்றதும் விச்வரூபியும் (**இந்த இடத்தில், அதற்கு அடிக்குறிப்பாக** (foot note), **"விச்வரூபா? என்பது மூலம்; விஷ்ணுரூபி என்பது பழையவுரை. கங்கை ஸ்ரீ விஷ்ணுவின் ஸ்வரூபம் என்னும் விஷயத்தில் ஒரு ஸ்மிருதி சுலோகம் பழைய உரையில் எடுத்துக்காட்டப் பட்டிருக்கிறது. அதன் பொருளாவது, "வ்யாபகரும், சித்ஸ்வரூபியும் நிரஞ்சனருமான ஸ்ரீ விஷ்ணுவே திரவ ரூபமாகிக் கங்கா ஜலமாக இருக்கிறார்; இதில் சந்தேகமில்ல' என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது**) அபரிமிதமானதும் பயங்கரமான இடிமுழக்கம் போன்ற சப்தமுள்ளதும், புண்யமானதும், சிறந்த புண்ய புருஷர்களால் அடையப் பட்டுள்ளதும், மங்களகரமானதும், பகீரதனுடைய புத்திரியுமான கங்கையானது

மலைச்சரிவினால் உண்டான வேகத்தோடு மங்களகரமான சந்திரனுடைய மடுவில் வீழ்ந்து கொண்டிருக்கிறது. சமுத்திரம் போன்றதும் புண்யமுமான அந்த மடுவானது அந்த கங்கையினால்தான் உண்டுபண்ணப்பட்டது. பர்வதங்களாலும் தாங்கமுடியாத அந்த கங்கையை அப்பொழுது ஸ்ரீ மஹேச்வரர் லட்ச வருஷங்கள் தலையினாலே தாங்கினார்." என்று வருகிறதும் அவ்வைணவர் கொண்டுள்ள கருத்தை நிராகரிப்ப தாகவே இருக்கிறது.

இவை தவிரவும், **பாரதம்/அநுஸாசந பர்வம்/65வது அத்தியாயத்தில்**, அம்புப் படுக்கையில் இருந்த பீஷ்மரை ஜமதக்நி, அத்ரி, புலஸ்தியர், வியாஸர், காச்யபர், விச்வாமித்ரர், நாரதர் முதலிய பல மஹரிஷிகள் வந்து பார்த்துச் சென்றதும், அவர்களைப் பற்றின எண்ண அலைகளிலே அங்கு நிலவிய அத்தருணத்தில் ரிஷி கள், சித்தர்களுடைய மஹத்துவத்தை யுணர்ந்த பாண்டவ துரியோதனாதிகள் அவர்கள் அந்தர்த்தானம் ஆன பிற்பாடும் அம்மஹரிஷீகள் சென்ற திசையை நமஸ்கரித்த வண்ணம் இருந்ததையும், அதன் பிறகு தருமர் பீஷ்மரிடம், "எந்த தேசங்கள், எந்த கிராமங்கள், எந்த ஆச்ரமங்கள், எந்த மலைகள், எந்த நதிகள் புண்யமானவற்றுள் சிறந்தது" என்று கேட்கும் பகுதியில், ஓர் உஞ்சவ்ருத்தி பிராமண ருக்கு ஒரு ஸித்தர் சொன்னதாக சொல்லியதாக பீஷ்மர் சொல்லுவதாக வரும் இப்பகுதியில்;

"நதிகளில் சிறந்ததும், பகீரதனால் கொண்டுவரப்பட்டதுமான கங்கை நதி எவற்றின் வழியாகப் பெருகுகின்றதோ அந்த தேசங்களும், கிராமங்களும், அந்த ஆச்ரமங்களும், அந்த மக்களும் புண்ணியமானவற்றுள் சிறந்தவை"

"ஒரு மனிதன் கங்கையை அடைந்து சம்பாதிக்கும் நற்கதியைத் தவத்தினாலும், பிரம்மச்சர்ய விரதத்தினாலும், யாகங்களாலும், தியாகங்களாலும் அடைய முடியாது"

"எந்த மனிதர்களின் தேகங்கள் கங்கை நீர் மேலே பட்டவுடன் விடப்படுகி றதோ, அவர்களுக்கு முக்தி வருவதனால் மறுபடியும் தேகம் விடுவது சொல்லப் படவில்லை"

"பாவமுள்ளவர்களும் கங்கை - யமுனைகளின் சங்கமத்தில் தேகங்களை விட்டாராயின் அதனால் பரிசுத்தர் களாகி முக்தி பெறுவர்."

"கங்கை இல்லாமறபோனால் உலகம், தர்மமும் ஞானமும் இல்லாத வர்ணா ச்ரமங்கள் போலவும், ஸோமலதையில்லாத யாகம் போலவும் ஆகிவிடும்! சூரியனில்லாத ஆகாயமும், மலைகளில்லாத பூமியும், காற்றில்லாத இடைவெளி யும் எப்படியோ, அப்படியே கங்கையில்லாத தேசமும் - திசைகளும் ஆகும்!"

"இவ்வுலகத்தில் நிலையும் (இருப்பும்), கவசமும் (பாதுகாப்பும்), ஆதரவுமற்றவர்கள் எவரோ, அவர்களுக்கு நிலையாகவும், கவசமாகவும், ஆதரவாக வும், ஸுகமாகவும் இருக்கிறது!"

“கல்வியும் ஆச்சாரமுமில்லாமல் அயோக்கியர்களான ஈனமனிதர்களும் கங்கையை அடைந்தபின் பரிசுத்தர்களாகிறார்கள்!”

“கங்கைக்கரையில் உண்டான மண்ணைச் சிரசில் வகிப்பவன், இருளைப் போக்கும் ஒளியுள்ள சூர்யனுடைய காந்தியை அடைகிறான்!”

என்றும், மேலும் பலவிதமாகவும் அந்த ஸித்தர் உஞ்சவிருத்தி பிராமணருக்கு சொல்லும் பகுதியில் வருகிறது,

(கடவுளை ஊர் ஊராக சென்று வணங்குவதாக பாரதத்தில் ஒரு இடத்திலும் வரவில்லை, ஊர் ஊராகச் சென்று தீர்த்த யாத்திரை செய்தே “புண்ணிய” த்தையும், “புண்ணிய உலகையும்” அடைந்தார்கள் என்றும்தான் கூறப்பட்டிருக்கிறது. பாரதத் தில் வைணவர்கள் கொண்டாடும் பலரும் கங்கையிலும், மற்றும் பல நதிதீரத்தில் குளித்து பேறு பெற்றவர்களே!. மதிப்பில் குறைந்த மற்ற நதிகளின் பயன் மகத்தா னதாக இருக்கும்போது, இறைவனால் தன் ஜடாமகுடத்தில் தாங்கும் பேறு பெற்ற கங்கையின் மகத்துவம் பற்றி மேலும் விவரிக்க வேண்டியதில்லையல்லவா?)

**017.**

**ஏகஸ்ஸுவர்ண வஸநந்நிததாதி கட்மந்யஸ்**
**ஸுவர்ணகிரி சாபமதாத்கராக்ரே|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம்வயமாச் ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **கட்யாம்** = தன் இடுப்பில், **ஸுகர்ணவஸநாம் =** பொன்னாலான வஸ்திரத்தினை, **நிரதாதி** = கட்டிக்கொண்டிருக்கின்றான், **அந்ய:** = இன்னொருவனோ, **கராக்ரே** = தன் விரல் நுனியினால், **ஸுவர்ணகிரிசரபம்** = பொன்மலையை (மேருவை) அம்பாக, **அதாத் =** பிடித்துள்ளவன், **அநயோ:** = இவ் விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர் கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ பீதாம்பரம் எனும் (பொன்னால் ஆனாலும்) கிழிந்து, மக்கும் பொருளை தன் இடையில் அணிந்தவன். ஹரனோ தன் கைநுனியால் பொன் மலையையே வில்லாக கொண்டவனாக இருப்பவன். இதனால் ஒரு சாதாரண பொன் வஸ்திரத்தைவிட, (பொன் வஸ்திரம் என்றாலும் வஸ்திரத்தில் நூலின் அளவைக் காட்டிலும், அத்துணியில் அமைந்த பொன்னின் அளவு கொஞ்சமே!! இல்லாவிட்டால், துணியும் பொன்னும் சம அளவில் உள்ளதாகத்தான் இருக்கும்!) ஹரன் கையில் வில்லாக உள்ள பெரிய பொன் மலை ஹரியினுடைய வஸ்திரத்தைக்காட்டிலும் சிறந்ததென்பதினால் நாங்கள் அந்த பொன் மலையை வில்லாகக் கொண்ட ஹரனை சரணம் அடைகின்றோம்.

தவிர, வஸ்திரத்தைப் பற்றி சொல்லிவிட்டு பொன் வஸ்திரத்தைக்காட்டிலும் கீழான தோலாடை அணிந்தது ஒசத்தியோ? என்று தோன்றலாம். பொன் என்னும் உலோகத்தை தந்ததே சிவபெருமான் என்று பாரதம் பகருமே? தவிர, அணியும் ஆடைகளாலும் ஒருவனது யோக்தாம்சம் வெளிப்படுகிறது. ஸ்ரீ பரமேச்வரருக்கு புலித்தோலையும், யானைத்தோலையும் அணிவதென்பது வேறு சிறந்த வஸ்திரம் கிடைக்கவில்லை என்கிற காரணத்தால் அல்ல, பிரும்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்களுக்கும், சாதாரணமான குபேரனுக்கும் சமஸ்த ஐச்வர்யங்களை யும் அளிக்கும் ஸ்ரீ பரமேச்வரருக்கு உடுத்திக்கொள்ள நல்ல வஸ்திரம் கிடைக்க வில்லை என்பது பொருந்துமா?

பின் ஏன் அணிந்து கொண்டிருக்கின்றார் என்றால், அவர் யானைத் தோலுடுத் துதற்கு கஜசம்ஹார சம்பவமும், புலித்தோல், மான்தோல் முதலியவற்றை உடுத்திக் கொண்டமைக்கு தாருகாவன ரிஷிகள் சம்பந்தப்பட்ட புராணமும் அவரது உடைக்கான காரணத்தைச் சொன்னாலும், ஸ்ரீ பரமேச்வரர் ஆத்மானந்தத்தையே எப்போதும் அனுபவிப்பவராதலால்; அவருக்கு எதற்கு பட்டும் பகட்டும்? தவிர வெவ்வேறு விஷய சுகங்களில் பற்றுள்ளவர்கள் அணியும் ஆடைகளையே அவரும் அணிந்தால் அவருக்கும் அவற்றுக்கும் என்ன வித்தியாசம்? அதனால்தான் விஷய சுகத்தில் பற்றுள்ள பதர்கள் அணியும் ஆடைகளை அவர் ஒதுக்கித் தள்ளிவிட்டு, அதற்குப் பதிலாகத் தோலை அணிந்து கொள்ளுகிறார். ஸ்ரீ பரமேச்வரர் தம்முடலில் கொண்டுள்ளவை எதுவுமே விஷயப் பற்றுள்ளவர்களுக்கு பிடிக்காதவையே!

**018.**

**ஏகோததெள சிரஸாபர்ஹிண பிஞ்சமாத்ரமந்யோ**
**மயூரவரவாகந புத்ரத்ருஷ்டி:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **சிரஸாதன்** = தலையில், **பர்ஹிணபிஞ்சமாத்ரம்** = மயிலின் தோகையில் ஒன்றைமட்டும், **ததெள** = தரித்தான், **அந்ய:** = இன்னொ ருவனோ, **மயூரவாஹன** = மயிலையே வாகனமாகக் கொண்ட, **புத்ரத்ருஷ்டி** = பிள்ளையைப் பார்க்கின்றான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** முன் காலத்தில் இடையர்கள் மயிலிறகை சிரத்தில் ஓர் ஆபரணமாக வைத்துக்கொள்வது வழக்கம். ஹரியும் தனது கிருஷ்ணாவதாரத்தில் அவ்வண்ணம் தன் சிரசில் ஓர் மயிலிறகை ஆபரணமாகக் கொண்டிருந்தான். இவ்விதம் ஒரு மயிற்பீலியை தலையின் மீது வைத்துக் கொண்ட ஹரியைக் காட்டிலும், அநேக தோகைகளை உடைய மயிலையே தன் வாகனமாகக் கொண்ட தன் மகனை பார்த்து மகிழ்பவனாக உள்ள ஹரன் சிறந்தவன். ஒரு பொருளில்

அமைந்துள்ள ஒரு பகுதியைத் தலையில் சுமப்பவனிலும், (மாம்பழத்தை விற்பவனுக்கும் மாந்தோட்டத்திற்கு சொந்தக்காரனுக்கும் உள்ள வித்தியாசம் போல!) அந்த பொருளையே வாஹனமாகக் கொண்டவனை தன் மகனாகக் கொண்ட ஹரனே சிறந்தவனென்பதால் அந்த ஹரனையே நாங்கள் சரணம் அடைகின்றோம்.

**019.**

**ஏகோத தாதிஹ்ருதி கௌஸ்துப ரத்நமேக மந்யஸ்**
**ஸஹஸ்ரஸுபணிமணி ரத்நஹாரம்।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஹ்ருதி** = மார்பில், **ஏகம்** = ஒரே ஒரு, **கௌஸ்துபரத்நம்** = கௌஸ்துப மணியை, **ததாதி** = கொண்டிருக்கின்றான், **அந்ய:** = மற்றவனோ, **ஸஹஸ்ர =** ஆயிரம், **ஸுபணிமணிரத்னஹாரம்** = நாகமணி (ரத்தினங்) களை, **ததாதி** = அணிந்துள்ளவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ கௌஸ்துபம் என்னும் ஒரேயொரு மணியை தன் மார்பினிற் தரித்தவன். ஹரனோ ரத்தினங்களில் சிறந்த ஆயிரம் சேஷஹாரத்தினைத் தரித்தவன். சாமான்யமான ரத்தினங்களைக் காட்டிலும், சர்ப்பங்களுக்கெல்லாம் அரசனான ஆதிசேஷனுடைய மணிக்கு இருக்கும் பெருமையை கூறவும் வேண்டுமோ!?. இவ் விஷயத்தில் சாதாரண மணியையணிந்த ஹரியை சிறந்தவனல்ல என்றொதுக்கி நாங்கள் அந்த ஹரனையே சிறந்தவன் என்று சரணம் அடைகின்றோம்.

**020.**

**ஏக: கரேணத்ருதவாநிஹ பாஞ்சஜந்ய மந்யஸ்தவதத்த**
**பஹுவிச்வஸ்ருஜாம் கபாலாந்।**
**கோவாநயோரதிக இத்யநுசிந் தியவ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:।**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **கரேண** = கைகளில், **இஹ** = இப்போது, **பாஞ்சஜந்யம்** = பாஞ்சஜன்யத்தினை, **த்ருதவாந்** = தரித்தவன், **அந்ய;து** = இன்னொருவனோ, **பஹு** = மிகுந்த, **விச்வஸ்ருஜாம்** = பிரம்ம விஷ்ணுக்களுடைய, **கபாலாந் =** தலையோட்டை, **தத்த** = தரித்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி:** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

(“இஹ - இப்பொழுது” என்று சொன்னது எதனாலென்றால் பாஞ்சஜன்யம் என்னும் சங்கினை ஹரியோ தனது கிருஷ்ணாவதாரத்தில் ஒரு சாதாரண அசுரனை குரு தக்ஷிணையின் பொருட்டு கொன்று எடுத்தமையினால். ஆனால் ஹரனோ தான் "நித்தியன்" என்று ஒவ்வொரு யுகத்திலும் தோன்றும் பிரம்ம விஷ்ணுக்கள் அறியும் பொருட்டு ஒவ்வொரு கல்பத்திலும் மஹாப்ரளய காலத்தில் அவ்வப்பொழுது இருக்கும் பிரம்ம விஷ்ணுக்களுக்கு ஒழிவையளித்து அவர்களது மண்டையோட்டை கபால மாலையாக தரித்திருப்பதினால் ஹரி சம்பந்தப்பட்ட பாஞ்சஜன்யத்தினை இப்போது அடைந்தான் என்று கூறுகின்றார்.)

**தாரதம்மியம்:** ஹரியோ தனது கிருஷ்ணாவதாரத்தில் அவந்திநாட்டில், சாந்தீபிநி முனிவரிடத்தில் வேதாகமங்களை கற்றமைக்கு குரு தக்ஷிணையாக என்ன வேண்டும் என்றதற்கு, “கடலில் குளிக்கச் சென்று இறந்த தன் மகனை உயிரோடு அழைத்துத் தரவேண்டும்” என்றார். தன் குருவின் வேண்டுதலுக்கும், தான் அவருக்கு தருவதாக வாக்களித்த குரு தக்ஷணைக்காகவும், ஸ்ரீ கிருஷ்ணன் தன் குருவின் மகனை மீட்பதற்காக அப்பாலகன் குளித்து மறைந்த கடலுக்குச் சென்று, அங்கு தேடி காணாமல் வருந்தி, வருணனை வரவழைத்து “என் குருவின் மகனை கொன்றது யார்?” என்று கேட்டு, அவன் முலம் அக்கடலில் வாழும் பாஞ்சகன் என்பவன் என்றறிந்து, அக்கடலுள் புகுந்து அப் பாஞ்சகனோடு போர்புரிந்து அவன் மார்பைப் பிளந்து அவன் வயிற்றுக்குள்ளிருந்து பாஞ்சஜன்யம் என்னும் சங்கெடுத்து அண்டமதிர ஊதி, யமனிடமிருந்து குருமகனை மீட்டு தன் குருவுக்கு கொடுத்தான்.

பாரதம் வள்ளலாகப் புகழும் சூர்யபுத்திரனான கர்ணனாவது தான் பிறக்கும் போதே கவசகுண்டலத்துடன் பிறந்தான் என்றும், இந்திரனது சதியால் அதை இழந்தான் என்றும் தெரிந்து கொள்ள பிரமாணம் இருப்பதுபோல், விஷ்ணுவானவர் ஆதியந்தம் இல்லாதவர் என்றோ, அவரது கைகளில் விளங்கும் சங்கும், சக்கரமும் அவர் பிறக்கும்போதே உண்டானது என்பதற்கும் யாதொரு புராணப் பிரமாணம் இல்லையே?

**‘ப்ரஹ்மா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஸர்வேவா பூத ஜாதய: நாசமேவாது தாவந்தி ஸலிலாநீவசபாடபம்’** எனும் மஹத் வாக்கியத்தில் இருந்து பிரம்மனும், விஷ்ணுவும், உருத்திரரும் பூதங்களோடு படைக்கப் படுகின்றனர் . வடவைத்தீயில் ஜலம் லயம் அடைதல் போல அப்பூதங்களோடு அவர்களும் லயம் அடைகிறார்கள்' என்னும் பொருள் பெறப்படுவதால் விஷ்ணுவும் தோன்றி மறையும் இயல்புடைய வனாகப் பெறப்படுவதால், அவரது கைகளில் விளங்கும் சங்கு சக்கரம் மட்டும் அனாதி என்று சொல்வதை ஏற்பதற்கில்லையே!. சாதாரண பாஞ்சகன் எனும் அசுரனைக் குருதட்சிணைக்காக கொன்று "பாஞ்ச ஜந்யம்" எனும் சங்கை அடைந்த ஹரி, ஸ்ரீ ருத்திரரைக் கொன்று "சக்கரம்" பெற்றார் என்று புதியதாக எதுவும் சொல்லித் தொலைக்கவில்லையே?! அதுவரை சந்தோஷமே.

ஹரனோ ஒவ்வொரு மஹாப்ரளய காலத்திலும் ஒவ்வொரு பிரம்ம விஷ்ணு க்களையும் சுட்டெரித்து அவர்களின் மண்டையோட்டை அணிந்தவனாக உள்ளான்.

தான் கற்ற கலைகளுக்கு குரு தக்ஷணை தரும் பொருட்டு, ஒரு பாஞ்சகனைக் கொன்று, தன் குரு மகனை மீட்டு, பொருளற்ற ஓசைதரும் பாஞ்சஜன்யத்தை உடைய ஹரியைக்காட்டிலும், அநேக பிரம்ம விஷ்ணுக்களின் மண்டையோடுகளை அணிந்து தான் நித்தியன் என்றுள்ள ஹரனே சிறந்தவன் ஆதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**021.**

**ஏகோவ்ருஜேஷு குருதேமிருது வேணுநாதமந்**
**யோலயேஷுருதே விகடாட்டஹாஸம் ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்தியம்ப்**
**ருவந்து தமிமம்வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **வ்ரஜேஷு** = மாட்டுத்தொழுவத்தில், **ம்ருது =** மிருதுவான, **வேணு =** மூங்கில் குழாயால், **நாதம்** = இசையை, **குருதே =** செய்பவன், **அந்ய:** = இன்னொருவனோ, **லயேஷு** = பிரளயகாலத்தில், **விகடாட்டஹாசம்** = பயங்கரமான சிரிப்பினை, **குருதே =** செய்கின்றவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சிறு மூங்கில் குழலில் வேணுகானம் செய்து கொண் டிருப்பவன். ஹரனோ அந்த ஹரி சம்பந்தப்பட்ட உலகையும், அவனையும் சேர்த்து தமது அட்டஹாசத்தினாலே சம்ஹாரம் செய்பவன். வேய்ங்குழலூதும் ஹரியினும், தனது அட்டஹாசத்தினாலே எல்லாவற்றையும் சம்ஹாரம் செய்பவன் சிறந்தவன் என்பதற்கு யாதொரு ஆலோசனையும் தேவையில்லை, ஆதலால் நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

**022.**

**பக்ஷந்த்ர வாஹன இதிப்ரதிதோய மேகஸ்தவந்யோம**
**ஹோக்ஷவரவாஹந இத்யபிக்ய:।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்தியம்ப்ருவந்து தமிமம்வயமாச் ரயாம:॥**

**பதவுரை: அயம்** = இந்த, **ஏக:** = ஒருவன், **பக்ஷந்திர:** = பறவையை (கருடனை), **வாஹந:** = வாகனமாக உடையவன், **இதி** என்று, **ப்ரதித** = பெருமை கொண்டவன், **அந்ய:து** = இன்னொருவனோ, **மஹோக்ஷவரவாஹந:** = சிரேஷ்ட மான ரிஷபத்தினை வாகனமாக உடையவன், **இதி** = என்று, **அபிக்ய =** புகழடைந்த வன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை,

**ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** காச்யப முனிவருக்கும் அதிதி என்பவளுக்கும் பிறந்த பன்னிரண்டு ஆதித்யர்களில் ஒருவனே இந்த ஹரி. இக்காச்யப முனிவரின் பல மனைவியரில் ஒருத்தியான விநதைக்கு பிறந்தவனே கருடனாவான். இக்கருடனு டன் திருமால் போர் புரிகையில் (தன் தாயினுடைய அடிமைத்தனம் போகும் பொருட்டு, அமிர்தத்தை எடுத்துவரும் சமயத்தில்) அக்கருடனை வெல்ல முடியா மல் போனதும், திருமால் (வழக்கம் போல) கபடமாக "உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள் தருகின்றேன்!?..." என்றதற்கு, கருடன் கலுக்கென்று சிரித்து, "நாராயணா... நீ என்னை வெல்லாமலே வரமளிக்கப் பார்க்கின்றாய்!.... வேடிக்கை!... உனக்கு வேண்டுமானால் சொல்... என்ன வரம் வேண்டும்?" என்று திருப்பிக் கேட்டதற்கு, அதற்காகவே காத்திருந்த ஹரியானவன் "நீ எனக்கு வாஹனமாக வேண்டும்!" என்று தனக்கு வாகனமாக இருக்க அக்கருடனிடமே வரத்தை கேட்டுப் பெற்றான்.

ஹரனுடைய வாஹனமானது தருமதேவதையான நந்திரூபமாகும். தரும தேவதை ஊழிக்காலம் வரை சிவபெருமானை தாங்கும் வரத்தினை சிவனிடம் பெற்று தாங்கும் சிறப்புடையது. வாகனத்தையே வரம்கேட்டுப் பெற்று, அவ்வாஹன த்தில் உலவும் ஹரியினும், சிறந்த வாஹனமான தருமதேவதையின் வேண்டுதலுக் கிரங்கி தனக்கு வாஹனமாயிருக்க தர்மதேவதைக்கு வரமளித்த ஹரன் சிறந்தவனா தலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

வாகனத்தினை இருவரும் அடைந்த விதம் இவ்விதமாக இருந்தாலும், வாகனத்தின் பெருமை என்பதை நோக்கும் போது, சாதாரண கருடனைக் காட்டிலும், ஊழிக்காலத்திலும் தர்மம் என்பது இருக்கவேண்டும் என்கிற நியதியானது சிவபெரு மானுக்கு வாகனம் ஆனது என்பது மிக மிக உயர் வானதே!,

**023.**

**ஏகஸ்து யோநிஜஇதிப்ரஸித்தி மந்யஸ்துஜாத**
**இதிஸர்வஜகத் ப்ரஸிரத்திம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்தியம்ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம: ||**

**பதவுரை: ஏகஸ்து:** = ஒருவனானால், **யோநிஜ:** = யோனியின் வாயிலாக, **இதி** = என்று, **ப்ரஸித்திம்** = புகழை, **வ்ரஜதி** = அடைந்தவன், **அந்ய:து** = இன்னொரு வனோ, **அஜாத** = பிறப்பில்லாதவன், **இதி** = என்று, **ஸர்வஜகத்ப்ரஸித்திம்** = சமஸ்த உலகிலும் புகழை வரஜதி அடைந்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம்,

**தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ கர்ப்பவாசம் இருந்து, யோனித வாயிலில் மற்றோ ரைப்போல் பிறந்திறப்பவனாக உள்ள பல பிறப்பை உடையவன், இவ்வுலகிற் பலமுறை தன் நிலைமாறி ஏனையோரைப்போலப் பல பிறப்பெய்தும் ஹரியைவிட, ஹரனோ நிலை மாறாதவன்" என்றும் 'ம்ருத்துஞ்சய: னென்றும் யதார்த்த நாமமடை ந்து, பிறப்பிறப்பற்றவனாக விளங்குபவன். இவ்விஷயத்திலும் வெளிப்படையாக சிறந்தவன் யாரென்று தெரிவதால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின் றோம்.

காளமேகப் புலவர் திருகண்ணபுரத்தில் இருந்த போது இதனை;

“கண்ணபுர மாலே கடவுளிலும் நீயதிகம்
உன்னிலுமோ யானதிகம்; ஒன்று கேள் முன்னமே
உன்பிறப்போ பத்தாம் உயர் சிவனுக்கொன்றுமில்லை
என் பிறப்பெண்ணத் தொலையா.”

என்று மாலனை இகழ்ந்தும், உயர் சிவனுக்கு “ஒன்றுமில்லை” என்று புகழ்ந்தும் இருக்கிறார் ,

மஹாகவி காளிதாஸனின் **“ரகுவம்ஸத்தில்”** ரகுராமன் என்று தன் கொள்ளு தாத்தாவின் பெயரை அடைந்த விவரமும், இறுதிப் பகுதியில் இராமனின் மறைவும் விரிவாகவே சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் போன்றே ஹரியின் கிருஷ்ணா வதாரத்தினைப் பேசும் பாரதமும் அக்கிருஷ்ணனின் பிறப்பும், மறைவும் ஈமச்சடங்கு கள் செய்யப்பட்ட விவரமும் உள்ளது. இவ்விதமான சாதாரண உயிர்களுக்குண்டான பிறப்பும் - இறப்பும் பற்றி ஸ்ரீ பரமேச்வரருக்கு சொல்லப்பட்டதில்லை. இதிஹாசம் என்று சொல்லப்படும் சிவரஹஸ்யம் (பரமஇதிஹாஸம் எனும் பேரிதிஹாசம்), இராமாயணம், மற்றும் பாரதம் முதலியவற்றிலும், மற்றுமுள்ள புராணாதிகளில் எதிலுமே ஸ்ரீ பரமேச்வரரை பிறப்பிறப்பில்லாதவன் என்றேதான் விளம்புகிறது.

**024.**

**ஏகோஹ்யுலூகலநிபத்த இதிப்ரஸித்தி ஸ்த்வந்யோப**
**பூபவபாச விமுக்திதக்ஷி:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வருத்தாஸ்**
**ஸத்தியம்ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **உலூகலநிபத்த** = உரலில் கட்டப்பட்டவன், **இதி** = என்று, **ப்ரஸித்திம்ஹா** = புகழடைந்தவன், **அந்ய:து** = இன்னொருவனானால், **பவபாசவிமுக்திதக்ஷி: =** ஸம்சார பந்தத்திலிருந்து விடுவிப்பதில் சமர்த்தனாக, **பபூவ** = உள்ளான், **விபாதி** = என்று ப்ரகாசிக்கின்றான், **அநயோ:** = இவ்விருவருக்

குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரி கண்ணனாக அவதரித்து, இடைச்சேரியில் வளர்ந்த போது, தன் வீட்டிலும் அயலார் வீடுகளிலும் புகுந்து வெண்ணை திருடியும், தயிர் தாழியை உடைத்தும், பாலையும், வெண்ணையையும், எங்கும் சுற்றித்திரியும் பூனைகளுக்கும் தன்னொத்த இடைச்சிறார் களுக்கும் கொடுத்து, விளையாடிக் களித்தவனாக இருந்தமை கண்ட அவனது மாதாவான யசோதை அக்கண்ணனது இடையூறு தாங்காதவளாய், ஓர் உரலில் அவனை கயிற்றால் கட்டி அவ்வுரலோடு இருக்குமாறு செய்தாள். (தனது ஒவ்வொரு அவதாரத்திலும்) இப்படி பந்த பாசத்திற்கு கட்டுப்பட்ட வாழ்வில் வாழ்ந்த ஹரியினும், பசுபதி என்ற பெயரில் பாசமும் பந்தமும் உடையோரை அப்பாசபந்தத்திலிருந்து விடுதலையளித்து முக்தி என்னும் பெரும்பேறளித்து உயிர்களின் இருவினை அகற்றி, பிறவி என்னும் பெரும் துயரத்தை அறுக்கும் ஹரன் சிறந்தவனென்பதால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**025.**

**ஏகஸ்த்வ நித்யோஸூப்ரதிதோ ஜகத்யாமந்யஸ்து**
**சித்ய இதிசங்ருதிலோக சித்தி:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்தியம்**
**ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவன், **அநித்ய:** = ஸ்திரமில்லாதவன் (அநித்தியன்), **இதி** = என்று, **ஜகத்யாம்** = லோகத்திலே, **ஸூப்ரதித** = நன்றாகத் தெரிந்தவன், **அந்யஸ்து** = இன்னொருவனோ, **நித்ய:** = நித்தியன், **இதி** = என்று, **சுருதிச** = சுருதிகளிலும், **லோகச** = லோகத்திலும், **ப்ரஸித்தி** = கீர்த்தி, **அஸ்தி** = உள்ளது, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சம்ஹார காலத்திலும், தன் ஒவ்வொரு அவதார காலத்திலும் அழிவை அடைந்து நித்தியத் தன்மை இல்லாதவன் என்கிறதான *அநித்தியன்' என்று அறியப் படுபவனாக இருக்கின்றான் . ஹரனோ அழியா இயல்பினன் (பிறப்பிறப்பு இல்லாதவன்) என்பது இவ்வுலகத்தில் பிரசித்தி பெற்றவனாக இருப்பவன். இதனாலேயே நாங்கள் சிறந்த அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

026.

**ஏகஸ்து பார்த்த ரதவாஜாக்ருதோபசாரஸ்த்வந்யஸ்து**
**பார்த்தஸமரப்ரணுதப்ரபாவ:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்தியம்ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனானால், **பார்த்த** = அர்ஜுனனின், **ரதவாஜாக்ருதோபசார** = தேரில் கட்டப்பட்ட குதிரைகளுக்கு உபசாரம் செய்தவன், **அந்யஸ்து** = இன்னொருவனானால், **பார்த்தசமர ப்ரணுதப்ரபாவ** = அர்ஜனனுடன் போரிட்டு அவனால் துதிக்கப்பட்டவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம் .

**தாரதம்மியம்:** ஹரியோ தனது கிருஷ்ணாவதாரத்தில் அருச்சுனனுக்குத் தேரோட்டியும், அத்தேரில் பூட்டப்பட்ட குதிரைகளுக்கு உணவு உபசரித்தவனுமாக இருந்தவன். இவ்விதம் தன்னிலையை விட்டு அருச்சுனனுக்குத் தேர்ப்பாகன் எனும் நிலையையடைந்து, அவனுக்கும், அவன் குதிரைகளுக்கும் உபசாரம் செய்து மகிழ்ந்த ஹரியைக்காட்டிலும், அருச்சுனனுடன் (கிராதார்ஜுன விவரங்கள் மஹா பாரதத்தில் மிக விரிவாக உள்ளது) லீலையாக போரிட்டு, அப்பார்த்தன் பாரத யுத்தத்தில் ஜெயமடையும் பொருட்டு அவனுக்கு பாசுபதாஸ்திரம் அருளிய ஹரன் சிறந்தவனல்ல என்று எவன் மறுத்துரைக்க வல்லவன்? எனவே நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

027.

**வ்யாப்தச்ச விஷ்ணுரமித்யவகம்யஏகோ அந்யோவிஷ்ணுவல்லப**
**இதிப்ரதிதஸ்த்ரிலோக்யாம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்தியம்ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம: ||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **அயம்** = இந்த, **விஷ்ணு** = விஷ்ணுவானவன், **வ்யாப்த** = வியாபித்திருப்பவன், **இதி** = என்று, **அவகம்ய** = அறியப்படுபவன், **அந்ய:** = இன்னொருவன், **விஷ்ணுவல்லப:** = அந்த விஷ்ணுவுக்குப் பிரபு, **இதி** = என்று, **த்ரிலோக்யாம்** = மூன்று லோகங்களிலும், **ப்ரதித =** பிரசித்தி அடைந்தவன், **அநயோ:** = இவவிருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ எங்கும் வ்யாபித்து இருப்பதினால் விஷ்ணு எனும் நாமம் அடைந்தவன். ஹரனோ வ்யாபித்து இருக்கும் விஷ்ணுவுக்கும் ப்ரபுவாக (வ்யோமஹேசனாக) இருப்பவன். நாங்கள் இந்த விஷயத்திலும் தாழ்ந்த ஹரியை ஒதுக்கி, மேலான ஹரனை சரணம் அடைகின்றோம்.

**028.**

**ஏகோஜனார்த்தந இதிப்ரகடீக்ருதோயமந்யஸ்து சங்கர**
**இதிஸ்புடமீர் யதேஹி||**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்தியம்**
**ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம:||**

**பதவுரை: அயம்** = இந்த, **ஏக:** = ஒருவனோ, **ஜனார்த்தந:** = ஜனங்களைப் பீடித்தவனானான், **இதி** = என்று, **ப்ரகடீக்ருத** = தெரிவிக்கப் பட்டிருக்கின்றான், **அந்யஸ்து** = இன்னொருவனோ, **சங்கர:** = மங்களத்தினை தருபவன், **இதி** = என்று, **விபுடம்** = உறுதியாக, **ஈர்யதேஹி =** சொல்லப்படுபவன், **அநயோ:** = இவ்விருவருக் குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கி ன்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ ஜனங்களை பீடித்திருப்பதனால் ஜனார் த்தனன் என்னும் நாமம் அடைந்தவனாக உள்ளவன். (பிரகலாதன் வம்சத்தில் வந்த மாவலி சக்ரவர்த்தியிடம் அவன் செய்த யாகத்தின்போது, அந்தண உருவில் வந்த ஹரி, மாவலியிடம் மூன்றடி மண் யாசித்து, அவனை வஞ்சித்து தன் மூன்றாவது அடியில் அவனை பாதளத்தில் அமிழ்த்தி, மிகுந்த செருக்குற்று இவ்வுலகிற்கு அபகாரமாய் நின்றான். பிராமணனாக இருப்பவன் உணவை மட்டுமே யாசகம் கேட்பான். பிராமணனுக்கு அதுதான் தர்மம் என்று ஸ்மிருதி, புராணங்கள் நமக்கு அறிவிப் பவை. இங்கு இந்தப் பிராமணன் மண்ணை யாசகம் கேட்கிறான்!...

(இப்படி தன் குலதர் மத்திற்கெதிராக மண்ணை யாசகம் கேட்கப் போகிறோ மே? - என்றோ என்னவோ..,. வாமன அவதாரத்தில் விஷ்ணு தன் உடலைக் கூனிக்குறுக்கி, மிக குள்ளமாக வடிவெடுத்து வந்தான்?!) இதைப்போன்றே இரண்ய வதத்தின் போதும், அவனைக் கொன்று அவனது இரத்தத்தை பாணமாகக் கொண் டும், தன் வெறியடங்காது, இவ்வுலகை அச்சுருத்தும் கோபம் கொண்டு ஹரி இருந்தமையினால் உலக ஜனங்கள் வருந்தினார்கள் என்றும்; அமிர்த கடையலின் போது ஹரி ஆமையுருக்கொண்டு கடலினை மிகவும் பேதித்து நின்றபோதும் ஜனங்கள் வருந்தினார்கள் என்றும்; வேதத்தை மீட்க, மச்சாவதாரம் செய்தபோதும் ஜனங்கள் வருந்தினார்கள் என்றும்; ஹரியினது அவதார “மஹிமை” பேசும் அந்தந்த புராணங்களினால் அறியலாம்.)

ஆனால் ஹரனோ சகலருக்கும் சுகத்தினைத் தந்து, ஆலகால விஷத்தினால்

ஆன்மகோடிகளுக்குண்டான துன்பங்களை அகற்றி மங்களத்தினை செய்பவன் எனும் பொருள் கொண்ட "சங்கரன்" எனும் திருநாமம் கொண்டவனாக இருப்பவன். இப்படி ஜனங்களைப் பீடித்து ஜனார்த்தனன் எனும் நாமமடைந்த ஹரியினும், சர்வ மங்களங்களையும் தருவதினால் சங்கரன் என்ற திருநாமமடைந்த ஹரன் சிறந்த வன் ஆதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**029.**

**பக்தம்பலிபுநரத: க்ருதவாநிஹை கோபக்தம்குபேர**
**மகரோததிக ஸ்ரீயாந்ய:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்தியம்ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம: ||**

**பதவுரை: ஏக:புந:** = ஒருவனானால், **பக்தம்** = பக்தனான, **பலிம்** = பலியை, **இக** = இந்த உலகத்திற்கு, **அத:க்ருதவாந்** = கீழே போகங்செய்தான், **அந்ய:** = இன்னொருவனோ, **பக்தம் =** பக்தனான, **குபேரம்** = குபேரனை, **அதிக:** = அதிகமான, **ஸ்ரீயா:** = செல்வமுடையவனாக, **அகரோத் =** செய்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** பிரகலாதனின் வம்சத்தில் வந்த மாபலி சக்ரவர்த்தியும் தன் குலந்தொட்ட காலத்திலிருந்தே ஹரியினிடத்தில் அன்புள்ளவனாகவே இருப்பவன் தான். இவன் தன் குலப்பகைவர்களான தேவர்களைத் தவிர்த்து ஏனையோரிடத்தில் அதிக ப்ரியமாகவே இருப்பவன்தான். தன் குலத்தின் தொடர்ச்சியான காலத்திலும், மாவலி தன்மீது மிகுந்த அன்புள்ளவனாகவே இருந்தும், ஹரி அவனிடம் மூவடி மண்ணை யாசகம் கேட்டு, மாவலியை பாதாளத்தில் தள்ளி வருணபாசத்தால் கட்டி அவனை மிக வருத்தி மகிழ்ந்தவனாக இருந்தவன்.

ஆனால் ஹரனோ விச்ரவஸ் மஹரிஷியின் சந்ததியான வைச்ரவணன் என்பவன் சிவபெருமானைத் தன் தோழனாகவே பாவித்து பூசித்து வந்தான். அவனன்புக்கு இரங்கிய கருணாகரக் கடவுளான ஸீ பரமேச்வரர், அவனுக்கு வடதிசையின் ஏகாதிபத்தியமும், நவநிதி நாயகத்துவமும், யட்சாதிபதித்துவமும், நரவாஹனமும், இன்னும் வேண்டிய அனைத்தும் தந்து "குபேரன்" ஆக ஆக்கியவராக இருப்பவர். உலகில் எவருமே தன்னிடத்தில் அன்பு வைத்துள்ள ஒருவனை எவ்வளவு தாழ்ந்த தன்மையில் நின்றாலும், வஞ்சித்து கீழ்படுத்த நினைக்க மாட்டான். ஆனால் இந்த ஹரியோ தன்னை வழிவழியடிமையாக வணங்கும் மரபில் வந்தவனும், நீதிமானுமாகிய மாவலியை பாதாளத்திலமிழ்த்தியது உசிதம் என்று யாரும் ஏற்பாரில்லை, இதன்படி தன்னை சரணடைந்த சாதாரண மானவனை குபேரனாக்கி ஐஸ்வர்யங்கள் அனைத்தும் அளித்த ஹரன் சிறந்தவன் என்று அவனையே நாங்களும் எங்களை குபேரனாக்காவிட்டாலும் பரவாயில்லை,

ஸம்ஸாரம் எனும் பள்ளத்தில் தள்ளாமல் இருப்பதற்காகவாவது சரணம் அடைகின்றோம்.

தெய்வத்தன்மை இல்லாத ஹரியை ஆராதிப்போர், குசேலனை செல்வந்தனாக ஆக்கவில்லையா என்பார்கள்!. குசேலன் கிருஷ்ணனின் நண்பன். இருவரும் ஒன்றாகப் படித்தவர்கள். மிகுந்த வறுமையிலும் தன் பிராமண குலத்திற்கு மாறாக தான் செல்வந்தன் ஆவதை அக்குசேலன் விரும்பவில்லை. அவனது மனைவியினுடைய நச்சரிப்பினால்தான் கிருஷ்ணனுடைய மாளிகைக்கு செல்கிறான் குசேலன். நீண்ட நாள் கழித்து நண்பனை சந்திக்க வெறும் கையோடும் போகவில்லை அக்குசேலன். தன் சக்திக்கு கொஞ்சம் அவல் எடுத்துச் சென்று அக்கிருஷ்ணனுக்கு தந்து அவனை விரும்பிச் சாப்பிடச் செய்த அக்குசேலனுக்கு, அக்கிருஷ்ணன் பிரதி பலனாக ஐஸ்வர்யம் தந்தது ஒன்றும் பெரிதல்லவே!. குசேலன் கொடுத்த ஒரு பிடி அவலுக்கு அக்கிருஷ்ணன் அளித்த ஐஸ்வர்யம் சமமாகிவிடுமா?

இப்படி தன் கர்மகட்டினால் துன்புறுபவனிடம் அவல் வாங்கித்தின்று அவனது கர்மக்கட்டை அவிழ்க்காமல், அவனை அவன் செய்த அந்த கர் மத்தின் பலனுக்காக செல்வந்தனாக்கிய ஸ்ரீ கிருஷ்ணனின் செயலுக்கும், வைச்ரவணனுடைய பக்திக்கட்டிற்கு இரங்கிய ஸ்ரீ பரமேச்வரர் அவனுக்கு மேற்சொன்ன பெரும்பலன்களை அளித்ததற்கும் வித்தியாசம் இல்லையா?! தவிர இந்த குசேலன் சம்பந்தப்பட்ட சரிதங்கள் கிருஷ்ணபாகவதத்தில் மாத்திரம் பிரசித்தமாக உள்ளது. மற்ற புராணங்களில் கிடையவே கிடையாது. சாந்திபிநி முநிவரிடம் கிருஷ்ணன் பாடம் கற்றமையும், குருதட்சிணைக்காக குருவின் பிள்ளையை மீட்டதும் பற்றி கூறிய வியாஸ பாரதத்தில் உட்பட குசேலன் பற்றின விவரங்கள் ஒரு வரிகூட சொல்லப் படவில்லை!

(வறுமை, நோய், பழக்கவழக்கம், முகப்பொலிவு, ஈகை, தயை, செல்வம், கல்வி, பிறவி, முதலியவை பூர்வஜந்ம கர்ம பலன்களின் தொடர்ச்சியாதலால் அதை அடைந்தவன் அனுபவித்தே தீர வேண்டும். இவ்விதமான சம்ஸார துக்கத்திலிருந்து விடுதலையளிப்பவர் "ஸ்ரீ மஹாதேவர்" ஒருவரே என்று புராண இதிஹாசங்கள் நமக்குத் தெளிவாகவே சொல்லியிருக்கிறது.)

**030.**

**வ்யாதாதி நீசஹிருதநைஜவதூக ஏகோவ்யா தாயிதோபிநி**
**கமச்வபிராழீதோந்ய:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்தியம்ப்ருவந்து தமிமம்வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **வியாதாதிநீசஹ்ருத** = வேடர் முதலிய நீசஜனங்களால், **நைஜவதூக =** அபகரிக்கப்பட்ட மனைவியரை உடையவன், **அந்ய:** = இன்னொருவனோ, **வ்யாதரயிதோபி =** வேடனானாலும், **நிகமச்வபி:** = வேதங்களாகிய நாய்களால், **ஆச்ரித:** = தொடரப்பட்டவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:**

**=** சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** ஆராதிக்கின்றோம்,

**தாரதம்மியம்:** ஆயிரம்தான் நல்லவன், நல்ல குடியில் பிறந்தவன் என்கிற எல்லாத் தகுதிகளும் ஒருவனுக்கிருந்தாலும் அந்த நல்லவனால் ஒருவனுடைய மனைவி அடையப்பட்டாள் என்றால், அதைப் புகழ்ந்து அந்த நல்லவனையும் அவனால் அடையப்பட்டவளையும் ஒரு பொருட்டாக மதித்து ஏற்போரை நாம் பார்க்க முடியாது.

ஹரியோ தனது கிருஷ்ணாவதாரத்தில், ஒரு வேடனது அம்பு பட்டு இறந்த தும், கிருஷ்ணனின் சிதையினுள்ளே தீப்பாய்ந்திந்த ஒரு சில மனைவியரைத் தவிர்த்து ஏனையோரை அருச்சுனன் ஹஸ்தினாபுரம் அழைத்துச் செல்லும் போது, கானகத்தின் நடுவே, வேடுவ ஜாதியில் பிறந்த திருடர்கள் அவர்களை மறித்து, ஆளுக்கொரு கிருஷ்ணனுடைய பத்தினிகளை பற்றி இழுத்துக் கொண்டு போனார்கள். சிறந்த வில்லாளியான அப்பார்த்தனாலும் அவ்வேடர்களை ஒன்றும் செய்ய முடியவில்லை, இப்படி தன் மனைவியரை நீசர்களால் அபகரிக்கப்பட்ட துர்ப்பாக்கியத்தினை உடைய ஹரியை எவன் சிறந்தவன் என்பான்? ஹரனோ தான் வேடனாகத் தோன்றிய போதும் (கிராதார்ஜுன போரின் போது) வேதங்களாகிய நாய்கள் சூழப்பெற்றவனாக தன் கௌரவத்தினை இழக்காமல் இருந்தவன். இவ்விஷ யத்தில சிறந்த ஹரனை நாங்கள் என்றென்றும் சரணம் அடைகின்றோம்.

**031.**

**ஏகஸ்ய ஸேவகஜநாப்ருச தக்தகாத்ரா**
**அந்யஸ்யசுப்ரம்ருதுபூத விபூதிரேகா|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்ய:** = ஒருவனுடைய, **ஸேவகதஜந:** = அடிமைகள், **ப்ருசதக்தகாத்ர:** = மிகவும் சுடப்பட்ட சரீரத்தையுடையவர்கள், **அந்யஸ்ய** = மற்றொருவனுடைய, **ஸேவகஜஜநா:** = அடிமைகள், **சுப்ரமிருது** = மிருதுவானதும், **விபூதிரேகாபூத** = பரிசுத்தமானதும், வெண்மையான, **விபூதி** = ரேகையோடு இருப்பவர்கள், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியினுடைய பக்தஜனங்களோ சுடப்பட்ட சரீரத்தினை உடையவர்கள். அதாவது ஹரியை வணங்கும் அவனது பக்தர்கள், தாம் ஹரிக்கு பக்தர்கள் என்றுகாட்டிக்கொள்ள தங்களது உடம்மில் சங்கு சக்ர குறிகளை சூடான உபகரணம் கொண்டு (கிட்டத்தட்ட பச்சை குத்திக் கொள்வது போல) தப்த

முத்திரைகளாக தமதுடம்பில் இட்டுக்கொள்வர் . : இந்த விஷயத்தில் ஹரனுடைய பக்தர்களோ மிகவும் பரிசுத்தமான விபூதியை எவ்வித கஷ்டமும் இல்லாமல் தரிப்பவர் களாக இருப்பவர்கள்.

ஆனால் ஹரியோ தன் பக்தர்களைப் போல் அத்தப்த முத்திரைகளை தரித்தவனல்ல என்பதும், அவனோ;

**ப்ரும்மாண்ட புராணத்தில்:** "ஸூஸூபேஸததம் விஷ்ணுர் பஸ்மதிக்கநூலத: த்ரிபுண்ட்ராங்கித ஸர்வாங்கோ ஜடாமகுடமண்டித" என்றும்,
**காளிகாகாண்டத்தில்:** "நாராயண ஸ்தபஸ்தேப ஜடீமுண்டீச மேகலி, பஸ்மோத் தூளித சர்வாங்க த்ரிபுண்ட்ராங்கித மதங்க:' என்றும்,
**இராமரஹஸ் யோபநிஷத்தில்:** "ராமந்த்ரிநேத்ர சோமார்த்த காரிணம் ஸூலிநம்பரம், பஸ்மோத் தூளித ஸர்வாங்கம் பர்திந: முபாஸ்மகே" என்றும்,
**இராமாயணத்தில்:** "ஸ்வர்ண வர்ண ஜடாபாரம் ஞாக்ஷா£த் ருத்ரமிவாபரம், பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் த்ருஷ்ட்வாகாம வஸங்கதா:" என்றும்,
**உத்ரராமசரிதத்தில்:** "சூடா சும்பிதகங்க பத்ரமபீதஸ் தூணித்வயம் ப்ருஷ்டதோ, பஸ்மஸ்தோக பவித்ரலாஞ்சித முரோதத்தே த்வசம் ரௌரவீம்" என்றும்,
**ஆழ்வார் திருவாய் மொழியில்:** "ஏறிய பித்தினாடெல்லா வுலகு கண்ணன் படைப்பென்றும், நீறு செவ்வையிடக்காணி நெடுமாலடியா ரென்னோடும், காறுறுதுழிய் மலர் காணி ணிரணன் கண்ணியீதென்றும், தேறியுந் தேறாது மாயோன் நிறத்தினனே யித்திருவே." என்றும்; இந்த ஹரியையும் சுட்டுவதால், அவனே விபூதி தரித்தவன் என்பதாலும், இத்தூய்மையான விபூதியை இவ்வுலக உயிர்கள் உய்யும்பொருட்டுத் தந்து, தானும் தன்னுடலில் கொண்ட ஹரனே சிறந்தவன் என்பது தெளிவாயிருப்பதனால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

ஊர்த்துவ புண்ட்டரம் மற்றும் சித்திரோர்த்துவ புண்ட்டரம் என்பது பற்றி ஸ்மிருதியாதிகளிலோ, இதிகாசங்களிலோ பிரமாணம் கிடையாது. வைணவர்கள் ஷண்முனிவர்களின் சாபத்தினால் அவர்கள் அந்த யோனிக்குறியைத் தம் நெற்றி யில் தரித்துக் கொண்டிருக்கின்றார்கள். ஆனால் சைவர்கள் அணியும் விபூதி உத்தூளனம் பற்றி இதிகாசமும், புராணமும் வேண்டியமட்டும் நிறையவே சொல்லி யிருக்கின்றது. பஸ்மஜ்ஜாபாலோபநிஷத் என்கிற தனி ஸ்மிருதியே விபூதி தாரண த்திற்கென்று இருக்கின்றது. தவிர மற்றையவற்றுள்ளும் பஸ்மதாரணம் பற்றியும், அதன் மஹிமை பற்றியும் தெளிவாகவே சொல்லப்பட்டிருக்கிறது.

**சாதாதப ஸ்மிருதியில்**,

**த்ரிபுண்ட்ரேந விநாஸந்த்யாத்ரி புண்ட்ரேன வினாஜப:|**
**த்ரிபுண்ட்ரேந வினாஸ்ராத்தம் ராக்ஷசம் பரிகீர் த்திதம்||**

**பொருள்:** "திரிபுண்டர தாரணமின்றி செய்யும் சந்தியாவந்தனமும், ஜபமும், சிராத்தமும், ஆகிய இவற்றின் பலனை இராக்ஷசர் கள் அபகரிப்பார்கள்."

**ஸத்யம் சௌசம்தபோ கோமஸ்தீர்த்தகீ தேவாதி பூஜனம்|**
**தஸ்யவ்யர்த்தமிதம் ஸர்வம் யஸ்த்ரிபுண்ட்ரம் தாரயேத்||**

**பொருள்:** "எவன் திரிபுண்டரம் அணியவில்லையோ அவனுடைய ஆசாரம், சத்யம், தவம், ஓமம், புண்ணிய தீர்த்த பலன், பூஜை என எல்லாமே அனர்த்தம்தான். பிரயோஜனமேயில்லை."

**ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத்தில்,**

**பரமஹம்ஸா நாம ஸம்வர்த்தகாருணி ச்வேதகேது**
**துர் வாஸ ரிபு நிதாகஜடபரத தத்தாத்ரேய**
**ரைவதக புஸுண்ட ப்ரப்ருதயோ விபூதி**
**தாரணி தேவமுக்தாஸ்ஸ்யுஸ்ஸஏஷபஸ்ம**
**ஜ்யோதிரிதிவை யாஜ்ஞுவல்கிய: |**

**பொருள்:** சம்வர்த்தகாருணீ, ஸ்வேத கேது, துர்வாசர், ரிபு, நிதாகர், தத்தாத்ரேயர், ரைவதர் , காகபுஜண்டர், மற்றும் யாக்ஞுவல்கியர் என அனைவருமே பஸ்ம தாரிகள்தான்!.

**கூர்மபுராணத்தில்,**

**ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச் சலேநரஹத்ரி புண்ட்ரஸ்ய ப்ரசஸ்ததாம்**
**ஸஸ ர்ஜஸலலாடம் ஹிதிர் யங்நோர் த்வம் நவர்த்துலம்**
**ததாபிமாநவாமூர்க்கா நகுர் வந்தித்ரிபுண்ட்ரகம்**

**பொருள்:** பிரும்ம தேவர் ஸ்ருஷ்டி செய்கையிலேயே உயிர்களுக்கு பஸ்ம மஹாத்மியம் கூறி, அதனை அணிந்து கொள்ளும் பொருட்டு, மனுஷர்களுடைய நெற்றியை குறுக்காகப் படைத்தார்.

**032.**

**எகோநிதாந்தமபவத் வடபத்ரசாயீ ஹ்யந்யோஹிதா**
**த்ருசமஹா வடமூலவாசீ|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை:** **ஏக:** = ஒருவனோ, **நிதாந்தம்** = எப்போதும், **வடபத்ரசாயீஅபவத்** = ஆலிலையில் தூங்குபவன், **அந்ய:** = இன்னொருவன், **தாத்ருசவடமூலவாஸீ** = அப்படிப்பட்ட ஆலமரத்தினடியில் வீற்றிருப்பவனாக, **அபவத்** = இருக்கின்றான்,

**அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக: =** சிறந்தவன்யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ எப்போதும் ஆலிலையில் கிடந்து தூங்குபவன். ஹரனோ அவ்வாலின் அடியில் சனகாதியருக்கு ஞானோபதேசியாக இருப்பவனாக உள்ளவன். இப்படி ஓர் ஆலிலையில் கிடந்து வீணே உறங்கும் ஹரியைக் காட்டிலும், அந்த ஆலின் கீழிருந்து ஞானோபதேசியாக உள்ள ஹரன் சிறந்தவனல்ல என்று எவன் மறுப்பான்? சிறந்த அந்த ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம்.

பழமையான தமிழ் இலக்கண நூலான **"தண்டியலங்காரத்தில்"**

**பாலன் றனதுருவா யேழுலகுண் டாலிலையின்**
**மேலன்று கண்டுயின்றாய் மெய்யன்பர் - ஆலன்று**
**வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ**
**சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்**

**பொருள்:** சோலை சூழ்ந்த குன்றம் எடுத்த மாயவனே நீ உலகம் ஏழும் உண்டு பாலக உருவத்தைக் கொண்டு ஆலிலையிலே உறங்கா நின்றாய் என்று உலகத்தில் உள்ளோர் "மெய்" என்று சொல்லுவர். நீ உலகத்தை உண்டு உறங்கிய போது ஆலிலையானது அப்போது கடலுள்ளே நின்றதோ? மண்ணிலே நின்றதோ? ஆகாயத்தில் நின்றதோ? சொல்!! (உலகம் முழுதும் உண்ணப்பட்ட காலத்தில் ஆலிலை ஒன்று தனியாக இருந்தது என்பது பொருந்துமா?)

**033.**

**ஏகோததௌ சிதம்ருதம் திலகம்லலாடேஹ்யந்யோத**
**தௌஹுதவஹம் திலகம்லலாடே |**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம: ||**

**பதவுரை: ஏக: =** ஒருவன், **லலாடே** = நெற்றியில், **சிதம்ருதம்** = வெண்ணிற மண்ணை, **திலகம்** = திலகமாக, **ததௌ** = தரித்துள்ளான், **அந்ய:** = இன்னொருவனோ, **ஹுததவம்** = அக்னியை, **லலாடே** = நெற்றியில், **திலகம்** = திலகமாக, **ததௌ** = தரித்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சாமான்யமாக எல்லோராலும் சுலபமாக தரித்துக் கொள்ளும் வகையில் உள்ள சாதாரண திலகத்தினை தன் நெற்றியில் கொண்டவன். ஹரனோ வேறு யாராலும் தரிக்க முடியாத அக்னியை தன் நெற்றியில் கொண்டவ னாதலால், கேவலம் மண்ணைத் தன் நெற்றியில் கொண்ட ஹரியை இந்த விஷயத்திலும் எப்படி சிறந்தவன் என்று சொல்வது? நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம். மண்ணோ, திலகமோ அதை எவர் வேண்டுமானாலும் தம் நெற்றியில் இட்டுக்கொள்ளலாம். ஆனால் அக்னியை?

**034.**

**எகோததாதிதுலசீ தளமாலிகாம்ஹ்ருத்**
**ந்யோததாதிவிதாக்ருக பாலமாலாம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஹ்ருதி** = மார்பில், **துளசீ தளமாலிகாம்** துளசியை மாலையாக, **ததாதி** = அணிந்தவன், **அந்ய:** = மற்றொருவனோ, **விதாத்ருகபாலமா லாம்** = பிரம்ம விஷ்ணுக்களின் கபாலங்களை மாலையாக, **ததாதி** = அணிந்துள்ள வன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** சிவபெருமானுடைய கோபாக்னியினால் ஜலத்தில் பிறந்து ஜலந்தரன் என்னும் பெயர் பெற்ற அசுரனின் மனைவி ப்ருந்தை. அவள் மிகுந்த அழகுள்ளவள். அவளை தான் எவ்விதத்திலேனும் அடைய விரும்பிய ஹரியான வன், அச்சலந்தரனுடன் பலமுறை சண்டையிட்டும் தோல்வி கண்டமையினால், அச்சலந்திரனது மரணத்திற்காக காத்திருந்தான். பின்னர் அவ்வசுரன் தேவர்களது வேண்டுகோளால், ஹரன் தன் கால் நகத்தினால் உண்டாக்கப்பட்ட சக்கரத்தினால் இருகூறாக வெட்டுண்டு மாண்டதும், தனதாசை நிறைவேறும் காலம் வந்ததென்று குதூகலித்து, ஹரியானவன் (இதிலும்) வானர சேனையின் உதவியினால் ஜலந்திரனது உடல்களை எடுத்து வரச்செய்து, அப்பிளவுண்ட தேகத்தினுள் புகுந்து, அச்சலந்திரன் உருவில், கள்ளம் கபடமறியாத ப்ருந்தையின் கணவனாக மாறி, அவள் நம்பும்படி செய்து, அவளுடன் கூடிச்சுகித்து வெகுநாட்கள் காலம் கழித்தான்.

வைக்கற்போரினடியில் வைத்த தீப்போன்ற உண்மையானது, அவ்வபலை யான ப்ருந்தைக்கும் தெரிந்துவிட்டது. (அவள் என்ன கோபிகா ஸ்திரீயா? பூர் வஜன்மத்தில் கிருஷ்ணனை அடைய வரம் பெற்றாள் என்று சமாளிக்க?!) நாராயண னின் இழிந்த இச்செய்கைக்கு வெறுப்புற்று அவள் அவனுக்கு பல தீச்சாபங்களை இட்டு, தன் கற்பிற்கு நேர்ந்த அவமானத்தினால் அக்னிப்ரவேசம் எய்தி சாம்பலாயி னாள் பிருந்தை சாம்பலாகியும் அவள் மீதிருந்த மோகம் குறையாத ஹரியோ,

அச்சாம்பலிலும் பிருந்தையையே கற்பனை செய்துகொண்டு அதில் விழுந்து புரண்டு தன் உடலில் அச்சாம்பலைப்பூசி மகிழ்ந்தான்.

ஹரியினுடைய இவ்வநுசிதமான காரியமறிந்த மகாலக்ஷமி, தனதுடலிலிருந்து சிறிது அழுக்கினை உருட்டி, அதனை அப்பிருந்தையின் சாம்பலில் இட்டு தண்ணீர் விட தேவர்களிடம் கட்டளை இட்டபடி, அவர்கள் அவ்வழுக்கு உருண்டையை அப்பிருந்தையின் சாம்பலில் இட, அச் சாம்பலில் இருந்து துளசி என்னும் செடி முளைத்தது. அது துளசியான பின்னும் ஹரிக்கு பிருந்தையாகவே தோன்றியதால் அத்துளசியை தன் மார்பில் புரளுமாறு மாலையாகக் கொண்டான். (இத்துளசியே கிருஷ்ணதுளசி!). அடுத்தவன் மனைவி என்று தெரிந்தும் அவளது அழிவிற்குப் பிறகும் (அவள் உயிரோடு இருந்திருந்தாலும் அவளது அழகானது அப்படியே இருந்திருக்குமா என்ன?!) அவ்வபலையின் நினைவிலேயே உழன்று திரிந்து, அவளை மாலையாகவும் தரித்துத்திரிந்த இக்கேவலமான செயல், பெரியோர்களால் ஏற்றுக் கொள்ளக்கூடியதா "என்ன? "விவரம்" தெரியாத சிறுவர்களும் வெறுப்பார்களே!?.

ஒருவன் அணியும் அணிகளன்களால் அவனுக்கும் அவன் அணியும் அணிக்கும் ஓர் மதிப்பு வேண்டும். ஹரியணிந்த துளசியின் மகிமையோ இப்படிப்பட்டதாய் இருக்கின்றது. ஹரனோ ஒவ்வோர் ஊழிக்காலத்தும் பிரம்ம, விஷ்ணுவாதியர்களுக்கு ஒழிவை தந்து அவர்களில் மண்டையோட்டை கபால மாலையாகக் கொண்டு, திரும்பவும் ஸ்ருஷ்டியாதி காரியங்களில் ஈடுபட்டவனாக இருப்பவன். இவ்விதம் தான் நித்தியன் என்பதை ஏனையோர் அறியும் வண்ணம் கபாலத்துடன் உள்ள ஹரனே சிறந்தவனாதலாலும், துளசியை அணிவதால் ஹரிக்கு விளங்கும் பிரபாவம் ஒன்றுமில்லையாதலாலும் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**035.**

**ஏகோம்ருகக்ரகக்ரஹண தோகஹநேசசார த்வந்யேம்ரு**
**சங்கரதலே நிவஹந்தஸ்தாஸ்தே|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ம்ருஹக்ரஹணத:** = மிருகத்தினை (மானை) பிடிப்பதற்கு, **ககநே =** வனத்தில், **சசார** = சஞ்சரித்தவன், **அந்ய:து** = இன்னொருவனானால், **ம்ருகம்** = அம்மிருகத்தை, **ஸதா** = எப்போதும், **கரதலே** = கையில், **நிர்வகந் =** வைத்துக்கொண்டவனாக, **ஆஸ்தே =** இருப்பவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனது இராமாவதாரத்தில் சிற்றன்னையின் ஆணைக்குட்பட்டு, தண்டஹாரண்யத்திலே இலக்குமணன், சீதையுடன் வனவாசம் செய்கையில், மாரீசன் எனும் ஒர் பொய்மானை தன் மனைவி சீதை வேண்டினதால், இராமனும் சதா சலித்துக்கொள்ளும் அப்பெண் புத்திக்கிசைந்து வில்லம்பு சகிதமாக அப்பொய்மான் பின்னால் சுற்றியளைந்தவனாக விளங்கினான். ஹரனோ தாருகாவன முனிவர்கள் யாகம் செய்து தன்னை எதிர்க்க எழுப்பிய மானை அதனுடைய கர்வமும் அடங்க தன் கையில் இன்றளவும் கொண்டவனாக உள்ளான். மானுக்கலைந்த ஹரியினும், அம்மானை தன் கையில் கொண்ட ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**036.**

**ஏகோதசாஸ்ய ஹ்ருதநைஜவதூக ஆசீதந்யோவதூலில**
**சிதார்த்த சரீர ஆசீத்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **தசாஸ்ய** = இராவணனால், **ஹ்ருத** = கவரப்பட்ட, **நைஜ** = தனது, **வதூக:** = மனைவியை கொண்டவனாக, **ஆஸீத்** = ஆனான், **அந்ய:** = இன்னொருவனோ, **வதூலிலஸிதார்த்தசரீர: =** தன்மனைவியினாலே ஜொலிக்கின்ற சரீரத்தை, **ஆஸீத் =** கொண்டவனாக ஆனவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரி தனது இராமாவதாரத்தில், பத்துத் தலையுள்ள இராவணனால் அபஹரிக்கப்பட்ட மனைவியை உடையவனானான். ஹரனோ தன் மனைவியை தனது சரீரத்தில் இடப்புறத்தே இருத்தி அழகுபார்த்தவனாக இருப்பவன். ஒருவனால் அபஹரிக்கப்பட்ட மனைவியையோ, அவளது புருஷனையோ எவனும் சிறந்தவர்கள் என்று சொல்லமாட்டார்கள். தன்னை வணங்குவோரை எல்லாம் தன் மனைவியையும் வணங்குமாறு தன் தேகத்தில் பாதியளித்த ஹரனை சிறந்தவன் என்று நாங்கள் சரணம் அடைகின்றோம்.

**037.**

**ஏகஸ்து மர்க்கட படேநததாஹலங்கா மந்யஸ்துமந்த**
**ஹசிதேந புரத்ரயஞ்ச:||**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனோ, **மர்க்கடபடேந** = குரங்குத் தூதுவனால், **லங்காம்** = இலங்கையை, **ததாஹ** = எரித்தான், **அந்யஸ்து** = இன்னொருவனோ, **மந்தஹஸிதேந =** புன்சிரிப்பினால், **புரத்ரயஞ்ச** = திரிபுரங்களையும், **ததாஹ =** எரித்தான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, இதி இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ இராமாவதாரம் செய்தபோது, தன் குரங்குத் தூதுவனால் இலங்கையைக் கொளுத்தினான். ஹரனோ தனது மந்தஹாசத்தினால் திரிபுரங்களையும் எரித்தான். தன் மந்தஹாசத்தினால் முப்புரங்களை எரித்த ஹரனைவிட, குரங்குத் தூதனால் ஒரு நகரத்தை எரித்த ஹரி தாழ்ந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

இலங்கை என்றால் இலங்கையை அல்ல, அதில் அமைந்த ஓர் நகரையும், அதிலும் அந்நகரில் எரியும் தன்மை எவற்றுக்கெல்லாம் இருந்ததோ அதை மட்டுமே எரித்திருக்க முடியும். சம்ஹாரகாலத்தில் அனைத்தையும் பஸ்மமாக்கும் ஸ்ரீ பரமேச்வரர் போன்று சகலத்தையும் எரித்திருக்கமுடியுமா?.

**038.**

**ஏகஸ்து மர்க்கடபடைர் நிஜகார்ய காரீஹ்யந்யஸ்**
**ஸுரேந்திரறிவஹைற நிஜகார் யகாரீ ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனோ, **மர்க்கடபடை** = குரங்குங் சேனைகளால், **நிஜகார் யகாரிஹீ** = தன் சொந்த காரியத்தை செய்துகொண்டவன், **அந்ய:** = இன்னொருவன், **சுரேந்த்ரறிவஹை =** இந்திராதி தேவர்களால், **நிஜகார்யகாரி** = தன்காரியத்தினை செய்து கொண்டான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

(இன்னொருவனோ இந்திராதி தேவர்களைக்கொண்டு “தன் காரியத்தினைச் செய்துகொண்டான்” என்று முன் சொல்லப்பட்டவனுக்கு சொன்னது போலவே சிவனுக்கும் சொன்னது ஏனெனில், திரிபுராதிகளால் பாதிக்கப் பட்டது இந்திராதி தேவர்களேயன்றி, சிவபெருமான் அல்ல. அவ்விந்திராதி தேவர்களுக்கு நேர்ந்த துன்பத்தினை தன்னை சரணடைந்து கேட்ட அவர்கள் பொருட்டு, அவர்களது துன்பத்தினை தன் துன்பமாக கருதினமையால்தான், ஆனால், முன் சொல்லப்பட்ட அந்த ஒருவன் தன் மனைவியை தேடிக்கொண்டுவர குரங்கினங்களை உபயோகப் படுத்தியதற்கும் இதற்கும் எவ்வளவு பெரிய வித்தியாசம்?)

தாரதம்மியம்: ஹரி தன்னுடைய இராமாவதாரத்தில் தன்னிலும் கீழான குரங்கினங்களைக் கொண்டு தன் சொந்த காரியத்தை சாதித்துக்கொண்டவனாக இருப்பவன். ஹரனோ திரிபுர தகனத்தில் இந்திராதி தேவர்களைக் கொண்டு அக்காரியம் நிறைவேற்றினவனாக இருப்பவன். இழிந்த ஜனக்கூட்டங்களினால் தன் காரியம் முடிப்பயனை எவரும் சிறந்தவன் என்று ஒப்புக்கொள்ளமாட்டார்கள்.

முந்தைய காலங்களில் "குரங்காட்டிகள்" என்று பெயரடைந்த ஒரு குறிப்பிட்ட கும்பல், தான் பழக்கிய குரங்குகளைக் கொண்டு "வித்தைகள்" பல செய்து, (கையில் கோல் வைத்துக்கொண்டு, "தாண்டுடா ராமா! தாண்டுடா ராமா!! என்று) பொது ஜனங்களை மகிழ்வித்து அவர்கள் தரும் பழைய பொருளுக்கும், சில்லரை காசுகளையும் நம்பி "பிழைப்பும், வாழ்க்கையும்" நடத்தி வந்ததையும், அவ்விதமானவர் களுக்கு இந்த சமூகம் அளித்த மரியாதையையும் நாம் யாவரும் அறிந்ததே!. இந்த விஷயத்திலும் சிறந்த ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம்.

**039.**

**ஏகஸ்துமத்ஸய தநுமேத்யகதோதிரோதய மந்யோவிநிர் மதி**
**ததத்வஜவாந்ப்ரசித்த:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனோ, **மத்ஸயதநும்** = மீனுருவம், **ஏத்ய** = தாங்கி, **அப்திதோயம்** = கடல் நீரை, **கத:** = அடைந்தான், **அந்ய:** = இன்னொருவனோ **விநிர்மதிததத்வஜவாந்** = மீனக் கொடியுடைய மன்மதனை எரித்தவனாக, **ப்ரஸாத்த:** = புகழுள்ளவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** மதுரையில் சத்தியவிரதன் எனும் மன்னன் வைகையாற்றி லிருந்து ஓர் மீனை எடுத்து அம்மீனின் வேண்டுதலால் அதை பெரிதாகும் வரை வளர்த்து பின் கடலில் விட்டான். அம்மீனைக் கடலில் விடும் சமயம் அம்மீன் உருவில் ஹரி இருப்பதையும், வேதங்களைத் திருடி ஒளித்து வைத்து, தானும் ஒளிந்துள்ள ஓர் அசுரனைக் கொல்லும் பொருட்டு அம்மீனுரு அடைந்ததை அம்மீனாலேயே அறிந்த அம்மன்னன், கடல் பொங்கித் திரண்ட காலத்து அம்மீனால் காப்பற்றப்பட்டான். (இன்றும் டால்பின் எனும் ஒருவகை மீன்கள் மனிதர்களுடன் பழகுவதும், கடலின் ஆபத்திலிருந்து முன்பின் தெரியாதவர்களைக் காப்பாற்றுவதும் எங்காவது நடந்து கொண்டுதான் இருக்கின்றது.) இவ்விதம் இழிந்த மீனுருக்கொண்ட ஹரியினும், அம்மீனைக் கொடியாக உடைய மன்மதனைக் கொன்ற ஹரன் சிறந்தவன் என்பதால் நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம். மீன்கொடியுடைய மன்மதன் அவ்வரியினுடைய மனதில் உதித்தவன். தன் புத்திர

னை அடுத்தவன் எரித்து சாம்பலாக்குமளவு உள்ள தந்தையையும், அவனது பிள்ளையையும் சிறந்தவன் என்று எவன் சொல்லுவான்?

**040.**

**இந்த்ராநுஜத்வ மகமத்புவிஸர் வதைக இந்த்ராதி**
**பிஸ்ஸுரகணை: பரிபூஜ்யதேத்ய:|**
**கோவாந்யோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **புவி** = உலகத்தில், **ஸர்வதா** = எப்பொழுதும், **இந்திராநுஜத்வம்** = இந்திரனருகில் உள்ளவனாக, **அகமத் =** இருக்கின்றான், **அந்ய:** = இன்னொருவன், **இந்திராதிபி =** அந்த இந்திரனுட்ட, **ஸுரகணை:** = தேவகணங்களாலும், **பரிபூஜ்யதே** = கொண்டாடப்படுகின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** காச்யப முனிவருக்கு பிறந்த இந்திரனை ஏதோ பெரிய பதவியில் இருப்பவனாகவும், அரிய பெரிய சாதனைகளை செய்தவன் என்பதாகவும் நினைத்தோ, என்னவோ... மாபலி சக்ரவர்த்தியை மூன்றடி மண்ணை யாசகம் கேட்டு, அவ்விதம் கேட்ட தனக்கு “சரி” என்று தந்தவனை, பாதாளத்தில் அமிழ்த்தி இருக்கச் செய்து, தான் இந்திரலோகத்திற்குச் சென்று தன் தம்பியின் அருகில் இருந்து சந்தோஷித்தவன் ஆனான்.

இப்படி இந்திரன் அருகில் இருப்பதை பெருமையாக கருதும் ஹரியிலும், இந்திராதி தேவர்கள் அனைவரும் (இந்திரன், அக்னி, முதலிய அட்டதிக்கு பாலர்கள், ஆதித்தர்கள், வசுக்கள், அஸ்வினி தேவர்கள், உருத்திரர்கள், முதலிய முப்பத்து முக்கோடியர்களும், மற்றுமுள்ள தேவயோனிகளும்) சிவபெருமானை பணிந்து வரம் பெற்றவர்களே!. தன்னிடம் வரம் வாங்கி இன்புற்று வாழும் ஒருவனிடம், இன்னொருவன் சென்று தங்கியிருப்பதில் பெருமை என்ன இருக்கின்றது? ஸ்ரீ மஹாதேவரான சங்கரர், இந்திரனுக்கு வாலாசுர சம்ஹாரம், வாலாசுர சம்ஹார தோஷபரிஹாரம், துருவாச சாபநாசம், கௌதம சாப நிவர்த்தி, அநேக முனிவர்களது சாபநக்கம், மஹாமேரு மேகவாகனம், உச்சைச்சிரவாகனம், சிவலோக வாழ்வு போன்ற வரங்களை தந்தவராக இருப்பவர். இந்த இந்திரனது அருகில் இருந்து சந்தோஷிக்கும் ஹரியிலும், அவ்விந்திரனுக்கும் வரமளித்த ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

041.

**ஏகோந்ருசிம்ற தநுமேத்ய ஜகாநதைத்யமந்யஸ்த**
**மேவஹதவாஞ்சரபாவதார் ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **நிருசிம்ஹதநும்** = நரசிங்கவுருவை, **ஏத்ய** = அடைந்து, **தைத்யம்** = அசுரனை, **ஜகாந** = கொன்றான், **அந்ய:** = இன்னொருவனோ, **சரபாவதாரி** = சரப உருவில் தோன்றி, **தமேவ** = அந்த நரசிங்கனையே, **ஹதவாந் =** கொன்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** காச்யப முநிவரின் மற்றொரு மனைவியான திதி என்பவளு க்கு இரண்யன், இரண்யாக்ஷகன் முதலியோருடன் பல அசுரர்களும் பிறந்தனர் . இவ்வசுரர்களின் தொல்லையினை பொறுக்கமாட்டாது பன்னிரு ஆதித்யர்களில் ஒருவனான விஷ்ணுவிடம் தேவர்கள் முறையிட்டு வேண்டினமையால், ஹரி தனதம்சமானதை இரண்யன் மனைவியின் கருவில் கலந்து பிரகலாதனாய்த் தோன் றினான்.

அப்பிரஹலாதன் ஹரியின் மகத்துவத்தை சொல்லும் வண்ணம் இரண்ய னின் தீங்குகளை எல்லாம் ஹரியினுடைய தியானத்தினால் நீங்கினான். பின் விஷ்ணுவானவன், பிரகலாதனுக்கும் ஏனையோருக்கும் பலதீங்குகளை செய்த இரண்யனை வதை செய்யும் பொருட்டு, நரசிம்ம உருவடைந்து அவனைக் கொன்று அவன் குடலை பிடுங்கி மாலையாக தரித்து தன் நிலை தவறி, இரத்தவெறி கொண்டு, இவ்வுலகிற்குத் தான் செய்த உபகாரம் அனைத்தும், அபகாரமாக மாறி நின்றபோது, ஹரன் ஹரியினது அவ்வெறியடக்க சரப உருக்கொண்டு அவன் வீறடக்கி நரசிம்மத்தைக் கொன்றான். ஜனங்களுக்குப் பீதியைத் தந்த நரசிம்ம உருவடைந்த ஹரியினும், லோகோபாரத்திற்காகவும், ஜனங்களின் துயர் போக்கவும் சரபவுருக் கொண்ட ஹரன் மேலானவன் என்பதில் சந்தேகம் என்ன?. நாங்கள் அந்த ஹரனையே சிறந்தவன் என்று சரணம் அடைகின்றோம்.

(வைணவத்தில் வெறிகொண்டு அலையும் சிலர், "சிவன் சிவன் என்கிறீர்களே? மயானத்தில் பிணங்களுடன் இருப்பவன்தானே? பிணங்களுடன் இருப்பவன் ரொம்ப ஒசத்தியோ?" என்பார்கள். அவ்வைணவர்ளுக்கு பதில் சொல்வதற்காகவே அந்த திருமால் நரசிங்கவுரு அடைந்து ஒருவனை பிணமாக்கி, இரத்தம் குடித்து, குடலை பிடுங்கி மாலையாக அணிந்து, (அதையும் தின்று) இந்த உலகிற்கு அபகாரமாக ஆகி, சுடலையில் பிணமாக இருக்கவேண்டிய பிணத்தை தின்ற திருமால் உயர்வான வனா? இவ்வுலக உயிர்கள் பேய் பிசாசு மற்றும் தர் தேவதைகளின் பிடியில் துன்பு

றாமலிருக்க சுடலையில் இருந்து நம்மைக்காக்கும் சுடலையாண்டி உயர்வான வனா? என்று பலரும் அறியும் வண்ணம் நரசிம்மனாக அவதரித்தான் போலும்!)

தவிர, **பாரதம்/ஸ்திரீபர்வம்/14வது அத்தியாயத்தில்**, காந்தாரி பீமனிடம், துரியோதனனைக் கபட வழியில் கொன்றது நியாயம் இல்லை என்றும்; விருஷ சேநன் - நகுலனுடைய குதிரைகளைக் கொன்ற தருணத்தில் யுத்தத்தில், துச்சாதன னுடைய சரீரத்தில் பெருகிய இரத்தத்தை குடித்தது பெரியோர்களால் நிந்திக்கப் பட்டது என்றும்; கோரமானதும் ஆகும் என்றும்; எவ்வகையானாலும் அது தகாதது என்றும் பீமனை நிந்திக்கிறாள். அதற்கு அப்பீமனானவன். "யுத்தத்தில் சத்ருக்களுக்கு பயத்தை உண்டுபண்ணவே அப்படிச் செய்தேன். தவிர நான் குடித்த அந்த இரத்தம் என் உதட்டையும், தந்தத்தையும் தாண்டி உள்ளே செல்லவில்லை!, இவ்விழிவான காரியத்தை யமனறிந்தால் என்னை விடுவாரா?. பிறருடையதாக இருந்தாலும் இரத்தம் குடிக்கத்தக்கதன்று!. திரௌபதியை மானபங்கம் செய்தபோது என்னால் செய்யப்பட்ட "பிரதிக்ஞை" யைத்தான் நான் செய்தேன்!." என்றான். ஹரி கண்ணன வதாரத்தில் யாருக்கு உதவினானோ அதில் ஒருவனான பீமன், இரத்தம் குடிப்பது தவறு என்றும், குற்றம் என்றும், அது சத்ரிய தர்மத்துக்க்கு விரோதம் என்றும் காந்தாரியிடம் ஒப்புக்கொண்டுள்ளான்!.

**042.**

**ஏகோவடு:கபட இத்யகிலைரபாஷிவித்யா**
**குருபரம இத்யபிதீயதேந்ய:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **கபட** = கபடமான, **வடு:** = பிரம்மச்சாரி (வாமண னாக), **இதி** = என்று, **அகிலை:** = அகிலமுழுதும், **அபாக்ஷி** = கூறப்படுபவன், **அந்ய:** = மற்றொருவனோ, **பரம:** = மிகச்சிறந்த, **வித்யாகுரு** = ஞானகுரு, **இதி** = என்று, **அபிதீயதே** = கூறப்படுபவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** பிராமண அம்சத்தில் பிரம்மச்சாரியாக தோன்றிய ஹரி தனது வாமன அவதாரத்தில் மிகுந்த கபடத்துடன் கூடியவனாக இருந்தான். ஹரி அந்த பிராமண உருவைக் கொண்டவனாக இருந்தாலும், பிராம்மண தர்மம் சிறிதுமில்லா மல் மிக கபடத்துடனும், மிக தாழ்மையான குணத்துடன் கூடினவனாக இருந்து மண்பிச்சை கேட்டு, அம்மண் பிச்சை அளித்த மன்னனை பாதாளத்தில் அமிழ்த்தின வனாக இருந்தான்.

ஹரனோ, தன் பிரம்மச்சர்ய ரூபமான தட்சிணாமூர்த்தி கோலத்தில் இருந்த போது, தன்னை சரணடைந்த சநகாதி முனிவர்களுக்கு ஞானாசிரியனாகவும் இந்த

ஜகத்திற்கும் குருவாக இருந்து, "ஜகத்குரு" எனும் நாமம் அடைந்தவன் ஆனான். பிராம்மணர்களால் 'பிராம்மணன்' என்று போற்றப்பெறும் ஹரன் சிறந்தவனாதலால், தாழ்வடைந்த ஹரியை ஒதுக்கி, இவ்விஷயத்திலும் உயர்ந்த ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம்.

**043.**

**ஏகஸ்யராவணவதேஹாத்ருடாஹிசக்தி அந்யஸ்யஸர்**
**வவிலயேச த்ருடாஹிசக்தி: |**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்ய** = ஒருவனுக்கு, **ராவணவதே** = இராவணனை வதைப்பதில், **சக்தி:** = திறமை, **த்ருடாஹி** = மிகுதியாயிருந்தது, **அந்யஸ்ய** இன்னொருவனுக்கோ, **ஸர்வவிலயேச** = அனைத்தையும் அழிப்பதில், **சக்தி:** திறமை, **த்ருடாஹி** = மிகுதியாய் இருக்கின்றது, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியினுடைய இராமாவதாரத்தில், ஹரிக்கோ இராவணனைக் கொல்வதற்கு அதிக சாமர்த்தியம் இருந்தது. அனுமனின் சகாயத்திற்காக வாலியைக் கொல்வதிலிருந்து. இலங்கையை கடக்க பாலம் அமைக்க சாதாரண சிறிய மிருகமான அணிலில் ஆரம்பித்து வானர சேனைகள் வரையிலானவற்றின் உதவி பெருவதிலும், இராவணன் தம்பியை தன் பக்கம் திருப்புவதிலும், ஜடாயு போன்ற பறவைகள் மூலம் சகாயம் பெறுவதிலும், பொய் மானை துரத்தி ஓடுவதிலும் என பலவாறான சாமார்த்தியம் ஹரிக்கு இருந்தது.

(இந்திரஜித் நிகும்பலை என்னும் இடத்தில் இராமனை ஜெயிக்கவேண்டி ப்ரத்தியங்கராதேவிக்கு யாகம் செய்ய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருந்தபோது, வானில் பறந்து வந்த ஜடாயு அதைக்கண்டு, அதை அநுமனிடம் "யாகம் பூர்த்தியானால் சர்வமங்களத்தையும் அருளும் பிரத்தியங்கராதேவி, இந்திரஜித்துவின் வேண்டுதலுக்கு கண்டிப்பாக அருளுவாள்!" என்று தெரிவித்தமையினால், அநுமன் அந்த யாககாரியங்களை அழித்தான் என்பது வால்மீகி இராமாயண தகவல்!)

ஹரனுக்கோ சர்வ சம்ஹாரம் செய்வதில் சாமர்த்தியம் அதிகம். அதாவது, சதுர் யுகங்கள் ஆயிரம் கொண்டது பிரம்மனுக்கு ஒரு தினம், அவ்விதம் ஆயிரம் சதுர் யுகமானால் அது ஒரு இரவு. இவ்வண்ணம் அத்தினம் முந்நூற்றறுபதானால் பிரம்மாவுக்கு ஒரு வயதாகும். இத்தீர்க்க வயதையொட்டி ஒருநூறு வருடம் பிரம்மனின் ஆயுள். இப்படிப்பட்ட பிரம்மனின் ஆயுள் முடிவு தினமானது, அவன் தந்தையான ஹரிக்கு ஒரு பகல். இதன் படியே இரவும் என்று முந்நூற்றறுபது நாள் கொண்டது ஒருவருடமாக கணக்கு கொண்டு நூறு தீர்க்கயுள் வருடமானது ஹரி

யின் ஆயுள். இவ்விதமான இருவரது முடிவையும் தனது தன் நெற்றி விழியால் சர்வ சம்ஹார காலத்தில் சாம்பலாக்கும் ஹரனின் சாமர்த்தியம் வேறு யாருக்கு இருக்கிறது?

ஒரு தேசத்தில் அமைந்த ஒரு ஊரில், அவ்வூரில் அமைந்த ஒரு தெருவில் இருந்த இராவணனைக் கொன்ற ஹரியைக்காட்டிலும், சமஸ்த லோகப் பிராணிகளுடன் அவ்வரியையும் சேர்த்தே சம்ஹாரம் செய்யும் ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே என்றும் சரணமடைகின்றோம்.

**044.**

**ஏக:ப்ரஸாத்ததர ஏவஹாவாஸுதேவோ தேவோமஹாநிதி**
**பரஸ்துதத:ப்ரஸாத்த:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **வாஸுதேவ:** = வாசுதேவன் என்று, **ப்ரஸாத்ததர ஏவஹா** = பிரசித்தமானவன், **பரஸ்து** = இன்னொருவனொ, **மஹாந்** = மஹா, **தேவ:** = தேவன், **இதி** = என்று, **தத:** = அவனைக்காட்டிலும், **ப்ரஸாத்த:** = பிரசித்தி பெற்றவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம**: = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ வசுதேவனுக்குப் பிறந்ததினால் வாசுதேவன் எனும் நாமம் கொண்டவன். இப்படி ஒருவனுக்குப் பிறந்ததினாலேயே குடுப்பப் பெயரை அடைமொழியாக கொண்ட ஹரியைக்காட்டிலும், சகல தேவர்களாலும் பூஜிக்கப் பட்டு, தேவர்களுக்கெல்லாம் தேவன் என்பதினால், மஹாதேவன் எனும் திருநாமம் கொண்ட ஹரன் சிறந்தவன் என்று சொல்லவும் வேண்டுமோ? ஆதலின், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

இன்றும்கூட வெள்ளையர் மோகத்தினாலும், தன் குடும்பத்தின் பழம்பெருமையை பறைசாற்றவும் (தற்போது மிகக் கீழான நிலையில் இருந்தாலும்) நிறைய பேர் ஜவுளி - சந்தானம், பெரியகடை மாணிக்கம், ராவ்பகதூர் கிருஷ்ணன், ஜமீன் வேணுகோபாலப்பிள்ளை, மிலிட்டிரி மனோகர், என்பது மாதிரியான பெயர்களை வைத்துக்கொண்டு வீணே அலைவதையும்தான் பார்கிறோமே? இவ்விதமாக ஊர் பெயருடன் தன்பெயரையும், செய்யும் தொழிலைவைத்து தன்பெயரையும் வைத்துக் கொள்வோரும் உண்டு!. இவ்விதம் இயற்பெயர் மாறி, இடுபெயர் அல்லது இட்டுக் கொண்ட பெயருடன் இருப்போர் இதுவரை கண்ட பலன்தான் என்னவோ?!

கிருஷ்ணன் என்றால் கருமேனி, சிகையில் மயிற்பீலி முதலியவற்றுடன் கூடிய திருவுருவும், பள்ளிகொண்டவன் என்றால் வலக்கையை சிரத்தில் வைத்தும்,

கால்மாட்டில் லட்சுமியும், உந்திக்கமலத்தில் பிரும்மாவும் உள்ள திருவுருவும், வாமனன் என்றால் குள்ளமான, சிகையில்லாது பின்பக்க குடுமி, கபட பிரம்மச்சாரிக் குண்டான கமண்டலம், பாதரட்சை உள்ள திருவுரு போன்று திருமாலுக்கு திருமா லாகவே இருக்கும்போதும், அவரது மற்றைய அவதார திருவுருவும், திருநாமமும் அனைவரும் அறியும் வண்ணம் அவரது அந்தந்த அவதார மஹிமை பேசும் புராணத் தில் வருணிக்கப்பட்டு இருக்கிறது!

ஆனால் ஸ்ரீ பரமேச்வரருக்கு உள்ள ஸ்ரீ மஹாதேவர், கைலாஸகிரிவாசி, சங்கரர், சந்திரசேகரர், முதலிய அவரது பலகோடி திருநாமத்தைக் கொண்டு, அவரது திருவுருவை அறிந்தவன் எவன் இருக்கிறான்? “பரமேச்வரரது ஆயிரம் திருநாமங்க ளைக்கொண்டு மட்டும் அவரை எவ்விதம் அறியக்கூடும்?” என்பது பாரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் அனைவரிடமும் கேட்கும் கேள்வி!. ஸ்ரீ பரமேச்வரரை தமது ஒவ்வொரு அவதாரத்திலும் பலவருடங்கள் உபாஸித்து, ஸ்ரீ பரமேச்வரரை உமாமஹேச்வரராக கண்டு “வரம்” வாங்கிக்கொண்ட ஸ்ரீ கிருஷ்ணரே இவ்விதம் சொல்லிய பிறகு?,

**045**

**ஏக:பதேந சகடம்ஸஹஸாநு நோதசாந்ய:**
**பதாங்குளிநகே நகிரிநநுநோத ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **பதேந** = காலினால், **சகடம்** = வண்டியை, **சஹஸா =** விரைவில், **நுநோத** = உதைத்தான், **அந்ய ச** = இன்னொருவனோ, **பதாங் குளிநகேந** = கால் விரல் நகத்தினால், **கிரிம்** = மலையை, **நுதோத** = கீழே அழுத்தினான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருததா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரி கண்ணனாக அவதரித்த நாளில், ஹரிக்குப் பகையாயி ருந்த கம்ஸன், அசுரனொருவனை சக்கர உருவில், கண்ணனைக் கொல்ல ஏவின போது, கண்ணன் அதை அறிந்து அச்சக்கரத்தினை எட்டி உதைத்துக் கொன்றான். ஹரனோ தன்னோடு கயிலையையும் சேர்த்து பெயர்த்தெடுக்கத் துணிந்த இராவண னின் கர்வமடக்க, தன் கால் நகத்தினால் ஊன்றி கைலையை கீழே அழுத்தி, இராவ ணனை அவனது பத்து வாயால் கதறவைத்தார் !!,

இவ்விருவருமே காலால் அழுத்தின ஒற்றுமை இருந்தாலும், அவர்களால் அமுக்கப்பட்ட பதார்த்தங்களினால் எதில் உயர்வு என்பது தெரிகிறதல்லவா? சாமான்யமான ஒரு வண்டியின் சக்கரத்தை உதைத்த ஹரியிலும், மிக உயர்ந்த மலையை தூக்க முயற்சித்தவனை வெகு அலட்சியமாக தன் கால்விரல் நகத்தால்

ஊன்றியழுத்தின ஹரன் மேலானவன் என்பதினாலேயே நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

(பாரதயுத்தத்திலும், ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனிடம் பீஷ்மரைக் கொல்ல பல உபாயங்களைக் கூறியபோதெல்லாம் அர்ஜுனன் அதைக்கேளாது வாளாயிருக்கவே, மிகுந்த கோவமும், ஆக்ரோஷமும் கொண்டு கீழேகிடந்த ஓர் தேர்ச்சக்கரத்தை தூக்கி பீஷ்மர் மீது வெறிகொண்டு வீசினான்!. ஹரனோ ஜலந்தராசுரனை வதம் செய்ய, தன் கால்நகத்தினால் சக்கரம் வரைந்தெடுத்து அதையே ஆயுதமாகக் கொண்டு, அவ்வசுரனக் கொன்றார். நம்மால் சக்ராயுதத்தை உருவாக்கமுடிய வில்லை என்றாலும், கட்டைவண்டி சக்கரம், மாட்டு வண்டி சக்கரம், தேரினுடைய சக்கரம் என்று ஏதாவது ஒரு சக்கரத்தை கையில் கொள்வோம் என்று கிருஷ்ணன் தீர் மானித்திருந்தான் போலும்!!.)

**046.**

**ஏக: பதத்ரய மிதந்திரி ஜகங்சகாரஹ்யந்ய:**
**பதாங்குளிஹதஞ்சஜகங்சகார: ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச் ரயாம;:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **பதத்ரயமிதம்** = மூன்றடியாக, **திரிஜகத்** = மூவுலகையும், **சகாரஹா =** அளந்தான், **அந்ய:து** = இன்னொருவனோ, **ஜகத்** = உலகத்தினை, **பதாங்குளிஹதம்** = கால்விரல் நுணியால் அழுத்தப்பட்டதாக, **சகாரஹா** = செய்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக: =** சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** வாமனாவதாரம் செய்த ஹரியோ, தன் காலினால் மூன்று உலகங்களையும் தன் மூன்றடியாக அளந்தான். நிலம் வாங்கும் போது அதை அளந்து கொடுக்க, ‘சர்வேயர்’ என்கிற பெயரில் அரசு அலுவலர் தம் கையில் அளக்கும் நாடாவுடன் வந்து, அளப்பது போல் அளந்த ஹரியிலும், திரிபுர சம்ஹார த்தின்போது ஹரன் தனக்கு இரதமாக அமைந்த பூமியில் தன் கால் ஊன்றி ஏறின சமயம், பூமி கீழே சாய்ந்து நிலைதடுமாற்றம் அடைந்தது. தனது காலடியில் உலகை அளந்த ஹரியிலும், தன் கால் விரல் நுணியால் உலகை அழுத்தி நிலை தடுமாறச் செய்த ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின் றோம்.

**047.**

**ஏகஸ்ய ஸுகரஜநிஸ் ஸுலபாஸ்தி ஹீநாஹ்யந்யஸ்து**
**சேத்ஸுரபிரூப இதிப்ரஸித்த:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்ய:** = ஒருவனுக்கு, **ஹீநா** = இழிவு பொருந்தியதும், **ஸுலபயா** = எளிதானதுமான, **ஸுகரஜநி** = ஊர்ப்பன்றியாக, **அஸ்திஹி** = பிறந்தவன், **அந்யஸ்து** = இன்னொருவனோ, **சித் =** பிரகாசிக்கின்ற, **சுரபி:** = பசுவினுடைய, **ரூப** = ரூபமானவன், **இதி** = என்று, **ப்ரஸித்த:** = பிரசித்தி பெற்றவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ அசுரனான இரண்யாக்ஷகனை வதை செய்யும் பொருட்டு, மிகவும் கேவலமான ஊர்ப்பன்றி உருவைக் கொண்டவனாக இருந்தான். ஹரனோ சுரபி என்னும் பசுவுருவடைந்தவன். இழிந்த பன்றியை சிறந்தவன் என்று அங்கீகரிப்பவன் எவன் இருக்கின்றான்? பசுவை வெறுத்து ஒதுக்குபவன் இவ்வுலகில் எவன் இருக்கின்றான்? இழிவான பன்றியுருக்கொண்ட ஹரியை மிகதாழ்ந்தவன் என்றொதுக்கி, உயர்ந்த பசுவுருக்கொண்ட பசுபதியான ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம்.

மஹாகவி காளிதாஸன் தனது **"ரகு வம்ஸத்தில்"** இராமனுடைய கொள்ளு தாத்தாவான ரகுவின் தகப்பனாரான திலீபன், தனக்கு பிள்ளைவரம் வேண்டி வஸிஷ்டரை அணுக, அவர் காமதேனுவின் கன்றான *நந்தினியை' கொடுத்து, அதன் நிழல்போல் கூடவே இருந்து அதை விட்டு விலகாமல் மேய்த்துவரச் சொன்னார். ராமனின் கொள்ளு தாத்தாவான திலீபனும் அவ்விதமே செய்துவரலானார். திலீபனின் மனைவியான ஸுதட்சிணையும் நந்தினியை மேய்க்கும் தன் கணவனுடன் சென்றாள்." - என்று வரும் அப்பகுதியில் மஹாகவி காளிதாஸன், "மாட்டின் குளம்பில் கிளம்பும் புழுதி பாவங்களைப் போக்கும் சக்தியுள்ளது; மாட்டின் குளம்புடன் புழுதியும் இருப்பதுபோல குற்றமற்ற ஸுதட்சனையும் தன் கணவனுடன் கூடவே சென்றாள்." என்று வருணித்திருக்கிறார்.

மஹாகவி காளிதாசன், பன்றியைப் பற்றியோ, பன்றியின் காலடிப் புழுதி பற்றியோ சொல்லவில்லை!!. திலீபனுக்கு பிள்ளை பிறந்து அப்பிள்ளைக்கு "ரகு" என்று நாமகரணம் இட்டனர். இந்த ரகுவின் பெயரத்தான் தசரதன் தன் மகனுக்கு ரகுராமன் என்று வைத்தார். ஆனால் சங்கரர், உருத்திரர், மஹாதேவர், முதலிய சிவபெருமானுடைய அநந்தகோடித் திருநாமங்கள் எதுவும் அவருடைய "கொள்ளு தாத்தா" வினுடையது அல்ல. அறுபத்து நான்கு திருவிளையாடல்களிலும், மற்றும் **அறுபத்து மூன்று நாயன்மார்களது வாழ்வில் அவர்களுக்கு அருள வந்த**

**சிவபெருமா னுக்கு "பெயர்களே" கிடையாது**. விறகு வியாபாரி, பிட்டிற்கு மண்சுமந்தவன், ரத்ன வியாபாரி, எல்லாம் வல்ல சித்தர், பைராகி, சிவனடியார் முதலிய வார்த்தைகளைக் கொண்டே அவர் குறிப்பிடப்பட்டிருப்பார்|!)

தமிழிலே புராணங்களுக்கு பாஷியம் எழுதுவோர், வராகம் என்றால் பன்றி என்று ஒரு இடத்திலும் குறிப்பிட்டதில்லை. வராகம் என்றால் தமிழிலே பன்றி தானே? பிறகு ஏன் "வராகமூர்த்தி" என்கிறார்கள்? படிப்பறிவு இருப்போரும் சரி, படிப்பறிவு இல்லாதோரும் சரி வராகப்பெருமாள் என்றால் ஏதோ புனிதமான ஸ்வாமி என்கிற மாதிரியான எண்ணத்தில் இருக்கிறார்கள்.!!

**048.**

**ஏகோ விபாதிப்ருசமேக முகாம்புஜே நஹ்யந்யோ**
**விபாதிகலுபஞ்சமுகைப்ரசித்த:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஏகமுகாம்புஜே** = தாமரை போன்ற ஒரு முகத் தால், **ப்ருசம் =** மிகவும், **விபாதிஹி** = பிரகாசிக்கின்றான், **அந்ய:** = இன்னொருவ னோ, **பஞ்சமுகை:** = ஐந்து முகங்களினால், **ப்ரஸித்த:** = பிரசித்தமானவனாக, **விபாதிகலு** = திகழ்கின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்,

**தாரதம்மியம்:** ஹரியோ கமல மலர் போன்ற ஒரு முகத்தால் பிரகாசிப்பவன். ஹரனோ ஐந்து முகங்கொண்டு (அகோரம், வாமதேவம், ருத்ரன், ஈசானன், பசுபதி) இருப்பவன். ஒரு முகத்துடன் விளங்கும் இவ்விஷயத்தில் ஹரியை அப்பிரதான மாக ஒதுக்கி சிறந்த ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம். ஹரனுடைய அவ்வைந்து முகத்தின் மகிமைகளை சொல்லும் உபநிஷத்துக்கள் மற்றும் புராணங் கள் இருப்பதால் ஸ்ரீ மஹாதேவரின் மகிமை சொல்லாமலே விளங்கும்!,

சிவ பெருமானுக்குண்டான ஆலயத்தில் ஒருமுக லிங்கம், இருமுக லிங்கம், மூன்று முகலிங்கம், நான்கு முகலிங்கம், பஞ்ச முகலிங்கம், நூற்றியெட்டு லிங்கம், சஹஸ்ர லிங்கம் முதலியவை இருப்பதை பார்த்திருப்பீர்கள். அவை அந்தந்த ஆலயங்களின் ஸ்தல புராணத்தை அடிப்படையாகக் கொண்டு பிரதிட்டை செய்யப் பட்டதையும், அவ்வாலயங்களை சென்று தரிசித்த புண்ணியர் களது வாழ்வும் அதன் மகிமையைச் சொல்லும்!|,

049.

**ஏகோக்ரஹீதுமதிவாஞ்ச திவித்தஹீநம் வித்தேசமேவ**
**குருதேநிஜபக்தமந்ய:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **வித்தஹிநம்** = செல்வமில்லாதோரை, **க்ரஹீதும்** = சேர்த்துக் கொள்வதற்கு, **அதிவாஞ்சதி =** மிக விரும்புகின்றான், **அந்ய:** = இன்னொருவனோ, **வித்தேசமேவ =** பெரும் செல்வனானவனை, **நிஜபக்தம்** = தன்னுடையபக்தனாக, **குருதே** = செய்துகொண்டான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தரித்திரத்தில் வாடின குசேலனையும், வேடனான குகனையும் தன் நண்பனாக உடையவன், ஹரனோ தன் தோழனாக குபேரனைக் கொண்டவன். தனக்கும், பிறர்க்கும் சிறிதும் பிரயோஜனமில்லாத வறிய வாழ்வு வாழ்ந்தவர்களை சிநேகம் கொண்ட ஹரியிலும், ஹரன் சிறந்தவன் ஆதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

இவ்விஷயத்தில் வைஷ்ணவத்தை அநுசரிப்போர், கதாகாலட்சேபம் செய்வோர் முதலிய சிலர் துருபதன் - துரோணர் ஆகிய இருவரின் நட்பையும், குசேலர் - கிருஷ்ணர் ஆகிய இருவரின் நட்பையும் ஒப்பீடு செய்து கிருஷ்ணரின் மகிமையை பார்த்தீர்களா? என்று அகமகிழ்ந்து ஜன்ம சாபல்யமடைந்தோரைப் போன்று, தன் நா தழுதழுக்கவும், கண்ணீரை ஆறாகப் பெருக்கியும் கிருஷ்ணனு டைய பெருமையைப் பேசி, கேட்பவர்களையும் தன்வயமிழக்கச் செய்து, "இனிமேல் நமக்கென்ன கவலை?. வீட்டிற்குச் சென்று குவிந்துகிடக்கும் பொற்குவியல்களை ஒழுங்குபடுத்தி அடுக்கிவைக்க வேண்டியதுதான் பாக்கி!" என்று வெறுமே செல்லா மல், அவர்களது கதாகாலட்சேபத்திற்கு பேசின அவர்கள் ஒப்புக்கொண்ட தொகையு டன், தாம் சொன்னவற்றையெல்லாம் உண்மையென்று நம்பிக் கேட்டு கண்ணீர் விட்டு அழுத ஏழை ஜனங்கள் தரும் காணிக்கையையும் பெற்று, அப்பணத்தைத் தன் வீட்டிற்குச் சென்று தன் மனைவியிடம் அன்றைய சாப்பாட்டு சிலவுக்கு தருவா ர்கள்!!, (இந்த கிருஷ்ணன் - குசேலன் சம்பந்தப்பட்ட வரலாறு பாகவதத்தில் மட்டும்தான் சொல்லப்பட்டிருக்கும். மற்றெந்த புராணத்திலும் இல்லாதது இவ்விரு வர் வரலாறு!!. பாரதத்தில் சாந்தீபிநி என்பவரிடம் கிருஷ்ணன் பயின்ற விவரமும், குருதட்சிணைக்காக அவரது பிள்ளையை கடலிலிருந்து மீட்டுத்தந்த விவரமும் உள்ளதே தவிர்த்து, குசேலன் பற்றி இல்லவேயில்லை!)

அதே பாரதத்தில் துரியோதனன் - கர்ணன் இருவரது நட்பும்தான் சொல்லப் பட்டிருக்கிறது. அதை ஒப்பீடு செய்யவேண்டியதுதானே? இருவரும் ஒன்றாக

படித்தவர்கள் அல்ல என்பார்கள்!. ஒன்றாக படிக்காதபோதே கர்ணனுக்கு இராஜ்ஜிய த்தை அளித்த துரியோதனன் கிருஷ்ணனைவிட மேலானவன் ஆகவில்லையா?. அர்ஜுனனுக்கு நிகரான வீரன் தனக்குத்தேவை என்கிற உள்நோக்கம் துரியோதனனு க்கு இருந்ததாக சொல்வார்கள்!. துரியோதனன் ஓர் சத்ரிய அரசன். தவிர, அவனும் ஓர் சிறந்த வீரன்தான். வீரன் வீரனை விரும்புவதில் தவறு என்ன இருக்கமுடியும்?

**பாரதம்/துரோணபர்வம்/181வது அத்தியாயத்தில்** கர்ணனது புகழை ஸ்ரீ கிருஷ்ணன் தமது திருவாக்கால் அர்ஜுனனுக்கு சொல்லுவதாக வரும் பகுதியில், கர்ணன் சக்தி ஆயுதத்துடன் இருப்பதால் அவன் சுப்ரமண்யருக்கு சமமானவன் என்றும், நாம் செய்த பாக்கியத்தினால் முன்பு அவன் கவசத்தையும், குண்டலங்க ளையும் இழந்தவன் ஆனான் என்றும்; அவ்விதம் அவன் எதுவும் இழக்காதவனாக இருக்கும் பட்சத்தில் அவனை சங்கு சக்கரமுடைய தன்னால் கூட வெல்லமுடியாது என்றும்; கர்ணனோ பிராமணப் பிரியன். உண்மையைச் சொல்லும் தன்மையை உடையவன், தவமுள்ளவன், உறுதியான விரதங்களை அநுஷ்டிப்பவன், எதிரியிட மும் கருணையுள்ளவன் என்றும், இதனால்தான் அவன் தர்மப் பிரதானன் என்று அழைக்கப் படுகிறான் என்றும்; அவனை வெல்ல இந்திரன், குபேரன், யமன், வருணன் முதலிய எவராலும் வெல்ல முடியாது என்றும் அர்ஜுனனுக்குச் சொல்லிய விவரம் இருப்பதிலிருந்தே அவன் துரியோதனனுடன் ஏன் இருந்தான்? என்று தெரிவிக்கிறதே?!

(பழக்கடையில் உள்ள பழக்கூடையில் இருந்து எவரும் அழுகின பழத்தை யோ, பழுக்காததையோ வாங்கிச் செல்வதில்லை!) தன் கர்மத்தின் பயனாய் தான் அநுபவித்த வறுமையை சுயமாகவே முயற்சித்துப் போக்கச் சக்தியற்ற குசேலனை தனக்கு தளபதியாக கொண்டால் இவ்வுலகம் துரியோதனனை ஏற்குமா? தவிர பாரத யுத்தத்தில் வெகுவாக உடம்பிலே காயம்பட்ட துரியோதனன் ஓர் மடுவில் மறைந்திருந்து தன் உடல்நலம் தேறியதும் யுத்தம் செய்யக்காத்திருந்ததை கிருஷ் ணன் அறிந்து, பாண்டவர்கள் முதலிய எல்லோருடனும் அங்கு சென்று, காயப் பட்டுக்கிடந்த துரியோதனனை போருக்கு அழைத்து, அப்போதும் அவனை வெல்ல முடியாத அளவிற்கு யுத்தம் நீடிக்கவே, கிருஷ்ணன் பீமனுக்கு தொடையைத் தட்டிக் காட்டி சைகை செய்து அவனைக்கொன்றான் .

தான் சத்திரிய தர்மத்துக்கு எதிராகவும், யுத்த நெறிக்கு முரணாகவும் கிருஷ் ணனால் கபடமாக கொல்லப்பட்ட அவமானம் தாங்காமல் தனது மரண தருவாயில் துரியோதனன் கேட்ட சூடான கேள்விகளுக்கு பதில் பேசாமல் இருந்தவன்தான் இந்த கிருஷ்ணன். எந்த அர்ஜுனனுக்காக கிருஷ்ணன் தேரோட்டினானோ, அந்த அர்ஜுனனும் இவ்விதம் துரியோதனனைப்போல தான் சாகும்வரை வீரனாக இருந்தவன் அல்ல!!, நீச வேடர்களின் கையால் அடிவாங்கியவன்தான்!!, கர்ணன் எப்படிப்பட்டவன் என்பதை விளக்க பாரதத்தில், கர்ணபர்வம் என்று தனி பாகமும், மற்றுமுள்ள பாகங்களின் இடையிலும் மிகவும் சிறப்பித்து பேசப்படுபவையே!,

தவிர பாரதத்தில், வனவாசமுடித்து வந்த பாண்டவர்கள் பொருட்டு நன்மை செய்ய விரும்பிய ஸ்ரீ கிருஷ்ணன் யுத்தத்தை நிறுத்தும் பொருட்டு திருதராஷ்டிரன்,

துரியோதனன், பீஷ்மர், விதுரன் முதலியோரிடம் பேச்சுவார்த்தை நடத்தி, ஸ்ரீ கர்ணனிடமும் அது குறித்தே பேச வந்த பகுதியும், அதற்கு ஸ்ரீ கர்ணனோ, தகுந்த காரணங்களை நிறையவே சொல்லி மறுத்த பகுதியும் உள்ளது **(பாரதம்/உத்யோக பர்வம்/143வது அத்தியாயம்)** இந்த பகுதியில் ஸ்ரீ கர்ணன் ஸ்ரீ கண்ணனுக்கு சொல்லிய பதிலில் இருந்து நாம் நிறைய புரிந்து கொள்ளக் கூடிய பல விஷயங்கள் உள்ளன.

ஸ்ரீ கிருஷ்ணனைப் போலவே குழந்தையாக இருந்த போது பெற்றோரால் கைவிடப் பட்டு வேறு ஒருவரிடம் (அவர்களையே தாய் தந்தை என்று நம்பி) வளர்ந்து வந்த ஸ்ரீ கர்ணன், தன்னை வளர்த்தவர்களையும், தான் சார்ந்திருப் போரையும் கைவிடாதிருந்த ஒரு பெரும் வள்ளல் குணம் பெற்றவன் என்பதை நமக்கு பாரதத்தில் அவன் சம்பந்தப் பட்ட பகுதியில் சொல்லப் பட்டது போல இந்த கண்ணன் சம்பந்தப் பட்ட பகுதியில் கிடையாது.

இந்த ஒரு ஒற்றுமையுள்ள வளர்ப்பு முறையில் தான் பெற்ற குணநலன்கள் எவருக்கு "மிகச் சிறந்ததாக" இருந்தது என்பதை பட்சபாதமில்லாத நடுநிலையோடு உள்ள மனம் கொண்டவர்கள் உணர்வார்கள். இந்த விஷயத்தில் ஸ்ரீ கிருஷ்ணனை விட ஸ்ரீ கர்ணன் உயர்ந்தவன் என்கிற உண்மையே பெறப்படுவதற்கும். இந்த கிருஷ்ணன் என்னவோ இவ்வுலகில் எல்லாமே தம் விருப்பப்படி நடப்பது போன்றும், அதற்காக அவன் அவதரித்தவன் போலவும் தம்பட்டமாக பேசுவதிலும், நடந்து கொள்வதும் கண்டிப்பாக அவன் அந்த குசேலனுக்குக் கூட நண்பனாக இருக்க லாயக்கற்றவன் என்றல்லவா தெரிகிறது? !

**050.**

**ஏகச்சதுர் புஜ இதிப்ரதிதஸ்திரி லோக்யாமந்யோ**
**புஜைஸ்துதசபி: ப்ரதிதத்ரிலோக்யாம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** ஒருவன், **சதுர்புஜ:** = நான்கு தோள்களுடையவன், **இதி** = என்று, **திரிலோக்யாம்** = மூவுலகிலும், **ப்ரதே** = பிரசித்தி பெற்றவன். **அந்யஸ்து** = இன்னொருவனோ, **தசபி:** பத்து புஜை தோள்கள் (கைகள்), **திரிலோக்யாம்** = கொண்டவனாக மூவுலகிலும், **ப்ரதீத** = பிரசித்தி பெற்றவன், **அநயோ:** = இவ்விரு வருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம**: = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சதுர்புஜன் என்று (நான்கு தோள்களுள்ளவன்) அழைக்கப்படுகின்றான். ஹரனோ தசபுஜன் (பத்து தோள்கள் உள்ளவன்) என்று அழைக்கப்படுகிறான். ஆறு கரங்கள் கூடுதலாக உள்ள ஹரன் சிறந்தவனாதலால்

நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம். இதில் ஏதோ கைகள் கூடுதல் என்பதற்காக மாத்திரமல்ல, ஹரனுடைய ஒவ்வொரு கரங்களிலும் உள்ள ஆயுதமும் அவரது பெருமையையும், மகத்துவத்தையும் பகர்வதினாலும் இதன் மகிமை விளங்கும்!.

051.

**பஞ்சாயுதப்ரபல சக்திமுபதிசைகஸர் வாயுத:**
**ப்ரபலசக்திமுபைதிசாந்ய: |**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **பஞ்சாயுத:** = ஐந்து ஆயுதங்களைக் கொண்டு, **ப்ரபலசக்திம்** = பிரபலமான திறமையை, **உபைதி** = அடைந்தான், **அந்ய:** = மற்றொருவனோ, **ஸர்வாயுத:** = எல்லா ஆயுதங்களையும் உடையவனாய், **ப்ரபலசக்தி:** = பிரபலமான சக்தியை, **உபைதி** = அடைந்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சங்க, சக்ர, கதா, கட்க, கோதண்டமென்னும் ஐந்து ஆயுதங்களை உடையவனாக இருக்கின்றான். ஹரனோ சர்வாயுத தாரியாக இருப்பவன். (ஸ்ரீ பாரதத்தில், ஹரனே தண்ட நீதி என்னும் ராஜ்ய பரிபாலனத்திற்குண்டான விதிமுறைகளையும், இராஜ்ய பரிபாலனம் செய்யும் இராஜனுக்கு, கத்தியை ஆயுதமாக வழங்கினான் என்றும், உயர்ந்த பாசுபதாஸ்திரத்தினை அர்ஜுனனுக்கு அளித்தமையும், முருகனுக்கும் அசுரனை அழிக்க சர்வ வல்லமை பொருந்திய பாசுபதத்தினையும் அளித்தமையும் விவரிக்கப்பட்டுள்ளது.)

சர்வாயுதபாணியாக இருந்தாலும், ஹரனோ அவ்வாயுதங்களை லோகரக்ஷணைக்கு என்று யார் கேட்கிறார்களோ அவர்களுக்கு சிறந்த வரமாக தனதாயுதத்தினை தந்தவனாக இருக்கின்றான். ஹரன் கொண்ட ஆயுதங்களைக் காட்டிலும், மிகக் குறைந்த ஆயுதங்களைக் கொண்ட ஹரி எவ்விதத்தில் சிறந்தவனாவான்? எனவே நாங்கள் மிகிமை பொருந்திய ஹரனை சரணம் அடைகின்றோம். (ஹரி தம் கையில் ஏந்திய ஆயுதங்கள் அனைத்தும் சிவ பெருமானால் அருளப்பட்டதே ஆகும்!)

052.

**ஏக:ப்ரஸாத்த இஹதேநுவதம்விதாய**
**வ்யாக்ரம்நிஹத்ய நிதராமிதர:ப்ரஸித்த ;|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **தேதுவதம்** = பசுவதையை, **விதாய** = செய்து, **இஹ** = இவ்விடத்தில், **ப்ரசித்த:** = பெருமைபெற்றவன், **இதர:** = இன்னொருவனோ, **வ்யாக்ரம்** = புலியை, **நிஹத்ய** = கொன்று, **நிதராம்** = மிகவும், **ப்ரசித்த:** = பிரசித்தன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம் =** உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ கண்ணனாக இடைச்சேரியில் அவதரித்த நாளில், தன்னைக் கொல்ல கம்ஸன் அனுப்பிய பகாசுரன் என்பவன் கண்ணன் மேய்க்கும் பசுக்கூட்டங்களில் உள்ள கன்றுகளுடன், தானும் ஒரு கன்றாக இருந்து கண்ண னைக் கொல்ல சமயம் பார்த்திருந்தான். இதையுணர்ந்த ஹரி, அக் கன்றின் காலைப் பிடித்து தூக்கி, சுழற்றி விளா மரத்தில் அடித்துக் கொன்றான். எவ்வகையிலேனும் நடந்தாலும், பசுவதை என்பது நிந்திக்கப்பட்ட ஒன்றாக இருப்பதனாலும், பசுவை ஒரு கசாப்பு கடைக்காரன் கூட வெட்டி பிழைப்பு நடத்துவதாலும் இதில் என்ன பெருமை இருக்கின்றது?.

பசுவையா கொன்றான்? பசுவினுள் இருந்த அசுரனை அல்லவா கொன்றான்? என்பார்கள். ஜலந்தரன் என்னும் அசுரனின் மனைவியை அடைய அச்சலந்திரன் உருவில் அல்லவா இந்த ஹரியானவன் இருந்தான்? இம்மாதிரி உங்கள் வீட்டிற்கு அந்த ஹரி வந்தால்? வேண்டாம்; போதும்!!,

ஹரனோ, தாருகாவனத்து முனிவர்கள் மற்றும் அவர்களது பத்தினிகளின் கர்வமடக்க, பிட்சாடனராக எழுந்தருளி, தன்னைக் கொல்ல அவர்கள் ஏவிய புலியைக் கொன்று தனது மேலாடையாக உடுத்தான், "பிச்சைக்கார" வேடத்தில் வந்து, ரிஷிகளையும், அவர் தம் பத்தினிகளின் கர்வத்தினையும் அடக்கி, புலியைக் கொன்று ஆடையாக்கிக் கொண்ட ஹரனது மகிமை அதனினும் மேம்பட்டதாதலால் நாங்கள் அந்த ஹரனையே என்றும் சரணம் அடைகின்றோம்,

(சாதாரண மனிதன், மிக உயர்ந்த ஸ்தானத்தில் இருப்பவன் ஒருவனை அவமதித்து விட்டால் அதை இவ்வுலகம் அநுமதிக்கும் விதத்தினை நாம் பார்க்கின் றோம். பிச்சைக்காரனுக்கு உள்ள மதிப்பும் தெரிந்ததுதான். தானேற்ற பிச்சைக்கார வடிவத்திலும், உயர்ந்த ஸ்தானத்தில் இருந்த ரிஷிகளையும், ரிஷி பத்தினிகளையும் கர்வபங்கம் செய்த ஹரன் சிறந்தவனே! இந்த விஷயத்தில் ஒப்புநோக்கினால், கேவலம் ஒரு பசுவைக் கொல்ல கண்ணனாகத்தான் தோன்ற வேண்டுமா? என்று தான் யாருக்குமே தோன்றும்!)

053.

**ஏகோமுமூர்ச்ச கஹநேஹிகிராத பாணித்தாஸேந**
**மூர்ச்சயதிதத் த்ரிபுரம்ஹாஸாந்ய:**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **கிராதபாணித்** = வேடனம்பினால், **கஹநே** = காட்டில், **முமூர்ச்சஹீ =** மூர்ச்சித்தான், **அந்யச** = இன்னொருவனானால், **ஹாஸேந** = அட்டஹாசத்தினால், **தத் த்ரிபுரம்** = அம்முப்புரங்களை, **மூர்ச்சயதிஹி** = மூர்ச்சிக்குமாறு செய்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ, தனது கண்ணனவதாரத்தில் கானகத்தில் வேடுவன் ஒருவனது அம்பு பட்டு மூர்ச்சித்து கீழே விழுந்திறந்து வைகுண்டம் போனவன். ஹரனோ தன் திரிபுரசம்ஹாரத்தில் தன் தீவிழியால் அம்முப்புரங்களை எரித்து சாம்பலாக்கினவன். இப்படி சாதாரண வேடுவனது அம்பிற்கு பலியான ஹரியைக் காட்டிலும், தன் அட்டஹாசம் ஒன்றினால் முப்புரங்களையும் மூர் ச்சிக்கச்செய்த ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

தான் இறந்ததும் தனதிருப்பிடமான வைகுந்தம் ஏகின ஸ்ரீ கிருஷ்ணனைக் காட்டிலும், ஹரனது அடிமையான சம்பந்தர் தமது திருமணத்தன்று, திருமணத்திற்கு வந்திருந்த அனைவரையும் சிவஜ்யோதியில் ஐக்கியப்படுத்தி, கயிலைக்கு இட்டுச் சென்று பிறவா நெறியாகிய முக்தியின்பத்தை நல்கின அவரது சரிதம் பல்லோர் முன்னிலையில் நடந்ததும், அதனாலேயே அவரது திருமணம் நடந்த தலத்திற்கு “திருநல்லூர் பெருமணம்” என்று பெயர் வந்த வரலாறு இன்றும் அவ்வூர் ஸ்தல புராணம் பேசுமே!. இப்படி தனதிருப்பிடம் சென்ற ஹரிக்கும், தனதடிமைகளுக்கும், தனது அடிமைகளின் அடிமைகளுக்கும் சிவலோகம் அளித்துக் கொண்டிருக்கும் சிவபெருமான் மிகமிக உயர்ந்தவர் என்பதில் சந்தேகம் என்ன?

054.

**ஏகஸ்து சக்ரமதிகம்யரரக்ஷலோகாநந்யது சக்ரஜநக:**
**ஸ்வபதாங்குள் பி:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **சக்ரம்** = சக்கரத்தை, **அதிகம்ய** = பெற்று, **லோஹாந்** = லோகங்களை, **ராக்ஷ** = ரக்ஷித்தான், **அந்யஸ்து** = இன்னொருவனா னால், **ஸ்வபதாங்குளீபி:** = தன்கால் விரல்களாலே அங்சக்கரத்தினை உண்டாக்கின

வன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக: =** சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம் .

**தாரதம்மியம்:** ஹரனுடைய பரிச்சயத்தால், அதிக கர்வம் கொண்ட இந்திரன் ஸ்ரீகண்ட பரமேஸ்வரனைக் காணும் பொருட்டு ஸ்ரீ கயிலைக்கு வரும் பொழுதெல் லாம் மிகுந்த கர்வம் கொண்டு கயிலையில் உள்ள எவரையும் மதியாமல் இருந்தான். இவ்விதமான அவனுடைய கர்வத்தால் அவனழியும் முன்பாக அவனை ரக்ஷிக்க விரும்பிய ஸ்ரீ மஹாதேவர், தானே துவாரபாலகராய் கயிலையின் வாயிலில் நின்றார். துவாரபாலகராய் ஈசன் நின்றதறியாத இந்திரன், அவரைக் கேலியாக பேசியும், அவமதித்தும் நடந்துகொண்டான். அதற்கு பிரதியாக மறுவார்த் தை எதுவும் கூறாது நின்ற சிவபெருமனை, பின் அச்சுருத்திப் பார்த்தான். அப்போ தும் அவர் வாளாயிருக்கவே, மிகுந்த சினம் கொண்ட இந்திரன் தனது வச்சிராயுதத் தால் அடிக்க, அவ்வாயுதம் அவர் மீது படுமுன்பே எதற்கும் உதவாமல் அது சுக்கல் நூறாக உடைந்தது. இந்திரனுக்கு அவர்மீது மேலும் வன்மம் அதிகரித்தது.

பின் இறைவரும் உருத்திரனாக தோன்றி அவன் முன் தன் சீற்றத்தினைக் காட்ட அதைப்பொறாத இந்திரன், தான் இதுவரை செய்த அறியாபிழைகள் அனைத் தையும் ருத்ரரிடமே காண்பித்திருக்கிறோமே? என்று அதற்கு மிகவும் அருந்தி, தன் அகமடங்கி, பகவானை பலவாறு துதித்து தம் குற்றம் பொறுக்கவும், மன்னிக்கவும் வேண்டினான்.

அவனது அகமறுமாறு தான் வெளியிட்ட சீற்றத்தீயை உருத்திரர் இந்திரனை மன்னித்து அதைக் கடலில்விடவே, அத்தீயானது ஜலந்தரன் என்னும் அசுரனானது. இச்சலந்திரனைத்தான் ஹரியானவன் அவனது மனைவியான பிருந்தையை அடையும் பொருட்டு, கொல்ல சமயம் பார் த்தவனாக இருந்தான். தன்னால் கொல்ல முடியாத அந்த ஜலந்தரனை, தேவர்களின் நன்மைக்காக ஸ்ரீ மஹாதேவர் தன் கால் நகத்தினால் பூமியில் சக்கரம் வரைந்து பெயர்த்தெடுத்து, அங்சலந்திரன் தலைமீது பிரயோகித்து அவனை இரு கூறாக்கிக் கொன்றார். இம்மகிமை பொருந்திய சக்கரத் தினை தான் ஆயுதமாகக் கொண்டு லோகரகஷனை செய்யவதற்கு ஹரியானவன், இறைவனை ப்ரார்த்தித்துப் சக்கரம் பெற்றான். இப்படி தன்னாலே உண்டாக்கப் பட்ட சக்கரத்தினை ஆயுதமாக உடைய ஹரியைக்காட்டிலும், அச்சக்கரத்தினை தன் கால்விரல் நுணியால் உண்டாக்கின ஹரன் சிறந்தவன் என்று நாங்கள் அந்த ஹர னையே சரணம் அடைகின்றோம்,

**055.**

**ஏகச்சகாரபுவிசங்கரசாப பங்கமந்யச்சகார**
**ஹரிஸூநுசிரோவிபங்கம் ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **புவி:** = உலகத்தில், **சங்கர:** = சங்கரனுடைய **சரபபங்கம்** = வில்லை உடைத்து, **சகார** = விட்டான், **அந்ய:** = இன்னொருவனோ, **ஹரிகுநுசிரோவிபங்கம்** = பிரம்ம விஷ்ணுக்களின் கபாலமறுத்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரி யவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** முன்பு தக்ஷயாகத்தை அழிக்க சிவபெருமான் அனுப்பிய வீரப த்திரரால் உபயோகிக்கப்பட்ட வில்லை, பின்னர் அநேக வருடங்கள் அவ்வில்லைப் பாதுகாத்து வைத்திருந்ததை, ஜனக மகாராஜாவின் மூதாதையருக்குப் பிறகு, ஏர் முனையில் அகப்பட்ட சீதையை வளர்த்து அவளை மணக்க விருப்பம் உள்ளவர்கள் அப்பழைய வில்லை உடைத்து, திருமணம் செய்து கொள்ளலாம் என்று ஜனகன் அறிவித்தான். விசுவாமிதிரருடன் ஜனகனின் விதேஹ நாட்டிற்கு வந்த ஹரி, மிகப்பழைய அவ்வில்லை வளைத்துடைத்து சீதையை மணந்தான். ஹரனோ, தாமே பிரம்மம் என்று நினைத்து கர்வமடைந்த பிரம்மனின் தலையை தம் இடக்கை விரலால் கிள்ளி எரிந்தவனாக இருப்பவன். ஏற்கனவே பலமுறை உபயோகப் படுத்தப்பட்டு, வெகுகாலம் கிடப்பில் போட்டு வைத்த ஓர் பழைய வில்லை ஒடித்த ஹரியைக்காட்டிலும், பிரம்மன் தலையறுத்த ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**056.**

**ஏகஸ்திரீ பாதிதராந்ஜகதிப்ரஸித்தோ ஹயந்யஸ்ய**
**ஸேவக ஜநோபிததாப்ரஸாத்த:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **த்ரிபாத் =** மூன்று கால்கள் கொண்டவன், **இதி** = என்று, **ஜகதி =** உலகத்தில், **ப்ரஸாத்தோஹா** = பிரசித்தி பெற்றவன், **அந்யஸ்ய:** = இன்னொருவனோ, **ஸேவகஜநோபி** அடிமையும் ததாப்ரசித்த: அவ்விதமே பிரசித்தி அடைந்தவன், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனக்கும் மூன்று கால்கள் கொண்டவனாக திரிபாத மூர்த்தி என்று பிரசித்தி பெற்றவனாயினும். ஹரனோ, மூன்று கால்களை உடைய பிருங்கி எனும் ரிஷியைத் தனது ஊழியனாகக் கொண்டவனாக இருப்பவன். மூன்று கால்களைக் கொண்ட ஹரி சிறந்தவன் என்றால், அதே போன்று மூன்று கால்களை கொண்ட ஸ்ரீ பிருங்கி என்பவரை தனது ஊழியனாகக் கொண்ட ஹரன் சிறந்தவன் என்பது தெளிவானதால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**057.**

**ஏகஸ்யஸாது ஹயவக்த்ர இதிப்ரஸித்தி ரந்யஸ்யபுத்ர**
**இபவக்த்ர இதிப்ரஸித்தி:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்ய** = ஒருவன், **ஹயவக்த்ர =** குதிரைமுகன், **இதி** = என்று, **ஸாது** = மிகவும், **ப்ரஸித்தி** = பிரசித்தியடைந்தான், **அந்யஸ்ய** = இன்னொருவனோ, **புத்ரம்** = தன் பிள்ளை, **இபவக்த்ர** = யானைமுகன், **இதி** = என்று, **ப்ரஸித்தி** = பிரசித்தியானவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ குதிரையின் முகம் கொண்டு ஹயக்ரீவன் என்று ப்ரசித்தி பெற்றவன். ஹரனோ குதிரையிலும் சிறந்த யானையை முகமாகக் கொண்ட விநாயகனைத் தன் மகனாகக் கொண்டவன். ஹரி குதிரை முகம் கொண்டு ஹயக்ரீவனாகத் தோன்றும் விஷயத்தினைக் காட்டிலும், யானை முகமானவனை தன் பிள்ளையாகக் கொண்ட ஹரன் சிறந்தவன் என்பதினாலும் நாங்கள் அந்த ஹர னையே சரணம் அடைகின்றோம்.

**058.**

**ஏகஸ்யபாதிசதுராநந ஏவஸூது: அந்யஸ்யபாதிஹி**
**ஷடாநந ஏவஸூது:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்ய** = ஒருவனுடைய, **சூநு:** = பிள்ளை, **சதுராநந =** நான்முகன், **ஏவ** = என்று, **பாதி** = திகழ்கின்றான், **அந்யஸ்து** = இன்னொருவனோ, **சூநு:** = தன் பிள்ளையை, **ஷடாநநஏவ =** ஆறுமுகனாக, **பாதிஹி** = திகழச்செய்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** நான்முகனாகிய பிரம்மாவை தன் மகனாகக் கொண்ட ஹூரி யிலும், ஆறுமுகனை தன் மகனாகக் கொண்ட ஹரன் சிறந்தவன். பிரம்மாவுக்கும் ஆரம்பம், முடிவு என்பது உண்டென்பதாலும், அவன் தான் படைத்தவளையே (திலோத்தமை) தாரமாகக் கொள்ள அலைந்தவன் என்பதாலும், அகங்காரத்தில் இறைவன் ஈசனது திருமுடி தரிசனம் பெற்றேன் என்று பொய் சொன்னவனாதலா

லும், இன்ன பிற சாமான்யமான நடத்தையினாலும் அவன் முக விஷயத்திலும், ஆறுமுகனாக உள்ள ஸ்ரீ சுப்ரமண்யனுக்கு எவ்விதத்திலும் ஈடாகான் என்பதினால், அந்த ஆறுமுகனைத் தன் மகனாக உடைய ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

("குமாரசம்பவம்" என்கிற பகுதி சாட்சாத் வால்மீகி ராமாயணத்திலும் வருகிறது. அதில் பாலகாண்டப் பகுதியில் விசுவாமித்திரர் ராம லக்ஷமணர்களுக்கு ஸ்கந்த உற்பத்தி கதையை விரிவாகச் சொல்லி, முடிவில், வால்மீகி சாதாரணமாக இந்தக் கதை கேட்டதற்கு இந்தப் பலன் என்று தன்னுடைய எதற்குமே பலச்ருதி (படிப்பதன் கேட்பதன் பலனை) சொல்வதில்லை என்றாலும், விதிவிலக்காக இங்கு அவ்விருவருக்கும் அவர் சொல்கிறார். ஸ்கந்த உற்பத்தியை படிப்பதால் அது தனத்தையும் கொடுக்கும். புண்ணியத்தையும் கொடுக்கும். இந்த லோகத்தில் ஒரு மனுஷ்யன் கார்த்திகேயனிடம் பக்தி வைத்துவிட்டால் போதும். தீர்க்காயுஸ், புத்திர பௌத்திர சௌபாக்கியம் எல்லாம் அவனுக்குக் கிடைத்துவிடும், முடிவிலோ ஸ்கந்த லோகத்துக்கே போய் அவனுடைய நித்தியவாசம் செய்யலாம்!" என்கிறார். **(பாலகாண்டம் - 7வது ஸ்ர்க்கம். சுலோ** 1). இம்மாதிரியான நற்பலனகளைக் கொடுக்கும் என்பதாக ஸ்ரீ வால்மீகி பிரும்மா சம்பந்தப்பட்டதை இராம-இலக்குமணர் களுக்கு சொல்லவில்லை. ஸ்ரீ பரமேச்வரரது புதல்வனாயும் வேற்படையை கொண்டவனாகவும் விளங்கும் கந்தனது உற்பத்தி வரலாற்றை கேட்டால் கிடைப்ப தாக சொல்லப்படும் பலன்களைவிட ஸ்ரீ பரமேச்வரரது மஹிமையை கேட்டாலும் சொன்னாலும்? அவரவர் ஊகித்தறிக!)

**059.**

**ஆதாயவேதமதிசத்விததே புரைகோந்யஸ்து**
**வேதநிசயம்விததே த்ரிலோக்யாம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **புரா** = முன்னர், **வேதம்** = வேதத்தை, **ஆதாய** = வாங்கிக்கொண்டு, **விததே** = பிரம்மன் பொருட்டு, **அதிசத்** = கொடுத்தவன், **அந்யஸ்து =** இன்னொருவனோ, **வேதநிசயம்** = வேதசமூகத்தினை, **த்ரிலோக்யாம்** = மூவுலகிலும், **விததே** = விதியின்பொருட்டுக் கொடுத்தான், **அநயோ:** = இவ்விரு வருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** பிரம்மனிடமிருந்த வேதங்களை மதுகைடபர்கள் என்னும் அசுரர்கள் திருடிச் சென்று, கடலில் ஒளிந்து கொள்ள, வேதத்தினை மீட்க ஹரி மீனுருக்கொண்டு, மதுகைடபர்களோடு போரிட்டுக் கொன்று அவர்கள் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டு பிரம்மனிடம் தந்தான். ஹரனோ வேதங்களை தன்

சுவாசமாகக் கொண்டவன். அறியத் தகுந்தவர்கள் மூலம் மூன்று லோகங்களின் பொருட்டு அவற்றை அளித்தவன். ஒருவன் பொருட்டு வேதத்தை திருப்பித் தந்தவனுக்கும், சமஸ்த லோகங்களில் நன்மை பொருட்டு வேதங்களை அருளியவ னுக்கும் வித்தியாசம் நிறையவே இருப்பதினால், நாங்கள் இதிலும் சிறந்த ஹர னையே சரணம் அடைகின்றோம்.

தவிர இம்மதுகைடவர்கள் ஏதோ தாருகாசுரன் மாதிரியோ ஜலந்தரன் மாதிரி யோ பாணாசுரன் மாதிரியோ, பெரிய அசுரர்கள் என்று எண்ண வேண்டியதில்லை. இவ்விருவரும் திருமாலின் காதிலிருந்து வந்த அழுக்குகளே!! (ஒரு குறும்பி கடினமாக இருந்ததால் அதற்கு பிரும்மா கைடவன் என்றும், இன்னொரு குறும்பி மெதுவாய் இருந்ததினால் அதற்கு மதூகன் என்றும் பெயர் வைத்தாராம்!)

சிவபெருமானின் சீற்றத்தீயானது ஜலத்தில் விழுந்து உருவானதினால் ஜலந்தரன் எனும் பெயரடைந்த மாதிரி இவ்வழுக்கு உருண்டைகள் விஷ்ணுவின் காதுக்குறும்பி எனும் பெயர் விளங்காமால் வேலை மெனக்கெட்டு அதற்கு மது - கைடவன் என்று நாமகரணம் வைத்த பிரும்மா, விஷ்ணுவின் தொப்புள் கொடியில் உருவானவன் என்பதில் வியப்பென்ன? பத்து ரூபாய்க்கு விற்கும் காது குடையும் பஞ்சினால் காதுக் குறும்பியை வெளியே எடுத்து குப்பைத்தொட்டியில் சாதாரண மாக எல்லோரும் செய்வதை விஷ்ணுவும் செய்ததில் வியப்பென்ன? தவிர வேதம் என்பது "திருடு" போகக்கூடியதும் அல்ல!!. திருடப்படும் பொருளும் அல்ல.!! கிரஹிப்பதும், கிரஹிப்பதை உருப்போட்டு திரும்ப அதை தன் குருவிடம் சொல்லி திருத்திக் கொள்வதும்தான் வழக்கம். இன்றைய நாளில் செய்வது போல காகிதத்தில் எழுதி வைத்துக் கொள்வதோ, pen drive ல் copy செய்வது போலவோ, CD யில் பதிவு செய்வது போலவோ அந்நாளில் கிடையாது. சாஸ்திர தர்மப்படி அவ்விதம் செய்யவும் கூடாது, மனனம் செய்து மனதில் வைத்துக்கொள்வது ஒன்றே அந்நாளைய வழக்கமும், முறையும் கூட!!

வேதம் கற்பது என்பதன் அடிப்படை இவ்விதமானால், அதை விஷ்ணுவின் காது அழுக்கு உருண்டைகள் திருடியதாகவும், கடலில் ஒளித்து வைத்தன என்றால் எப்படி ஏற்பது?! ஸ்ரீ பரமேச்வரர் தமது சுவாசமாகக் கொண்டதும், தமது நான்கு முகத்தில் இருந்து அருளியதுமான வேதத்தை விஷ்ணுவின் காது அழுக்கு உருண்டைகள் திருடியது என்றால். ... விஷயமறிந்த பண்டிதர்கள் விளக்குவார் களாக!.

**060.**

**ஏகோ ஜகாநநரகம் ஸுதராமிஹை கோஹ்யந்யோ**
**ஜகாநநரகாந்ஸு தராமநேகாந் ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **நரகம்** = நரகனை, **ஸுதராம்** = ரொம்பவும், **ஜநாந** = அழித்தான், **அந்ய: =** இன்னொருவனோ, **அநேகாந்** = அநேக, **நரகாந்** = நரகர்களை, **ஹுதராம்** = மிகவும், **ஜகாந =** போக்கடித்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், ஆச்ரயாம: = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரி, நரகாசுரன் என்னும் ஒர் நரகனை வதம் செய்யும் பொருட்டு கருடவாகனம் ஏறிச்சென்று கடும் சண்டையிட்டு அந்நரகாசுரனைக் கொன்று இந்திரனை சுகப்படுத்தினான். ஹரனோ, தம்மடிமையான கௌதம முனியின் வேண்டுதலுக்காக இத்தனை வருடங்கள் நரகில் இருந்தார்கள் என்று எமனுக்கே தெரியாத பல நரகர்களை, அம்முனிவரின் பொருட்டு அக்கொடிய நரகிலிருந்து நீக்கினவன். “நரகாசுரன்” என்று பெயரில் மாத்திரம் கொண்ட ஒரு நரகனைக் கொன்ற ஹரியிலும், பலகொடிய நரகர்களை நரகிலிருந்து நீங்கச்செய்த ஹரன் சிறந்தவன் என்பதினால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின் றோம்.

கௌதம முனிவர் நரகைச் சுற்றிப் பார்த்த போது அங்கு இன்ன காலத்தில் இருந்து அப்பாழ் நரகில் இருக்கிறார்கள் என்று எமதர்மனுக்கே தெரியாத நரக வாசிகள் பலர் மீது மிகுந்த இரக்கம் கொண்ட கௌதமர் அவர்கள் எப்பாவம் செய்தவர்கள் ஆனாலும் அவர்களை அக்கொடிய நரகில் இருந்து விடுவிக்க ஸ்ரீ பரமேச்வரரை வேண்டி விடுவித்த விவரம் சூதசம்ஹிதையில் விரிவாகவே வருகி றது.

**061.**

**ஏகோஹியாஜகபலிம் ஹிபுராயயாசேஹ்யந்யோததா**
**இஹஹிபரத்ரச ஸர்வஸெகெயம்||**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** =ஒருவன், **புரா** = முன்னர், **யாஜகபலிம்** = (யாகம் செய்யும் சமயம்), பலியிடம் யாசகம், **யயாசேஹி** = கேட்டவன், **அந்யஹி** = இன்னொருவ னோ, **இஹஹிபரத்ரச =** இகத்திலும் பரத்திலும், **ஸர்வஸௌக்யம் ததௌ =** எல்லா மங்களங்களையும் கொடுக்கின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், ஆச்ரயாம: ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ வாமந ரூபமடைந்து, மாவலிச்சக்ரவர்த்தியிடம், “நீ என்மீது இரக்கம் உள்ளவனானால் எனக்கு மூன்றடி மண் தருவாயாக” என்று

இரந்தவனாக இருப்பவன். (ஹரியின் ஒவ்வொரு அவதாரத்திலும், தன் பொருட்டு அடுத்தவரிடம் எதையேனும் யாசிப்பவனாகவே இருக்கின்றான் என்பதை அவனது அவதார மஹிமை பேசும் புராணம் படித்து அறியலாம்.) ஆனால் ஹரனோ, இகத்திலும், பரத்திலும் அடுத்தவருக்கு பரம சௌக்கியத்தைக் கொடுப்பவனாக இருப்பவன் என்று அறியப்படுகின்றான். இவ்விதத்தில் ஒருவனைச் சென்று யாசிப்பவனிலும், பலர்க்கு சுகமளிப்பவன் சிறந்தவன் என்பதினால் நாங்கள் அந்த ஹரனை சரணமடைகின்றோம்.

ஹரியினது ஒவ்வொரு அவதாரத்தின் போதும் ஹரிக்கும், தேவர்கள், ரிஷிகள், முனிகள், மானிடர்கள், விலங்குகள், தாவரங்கள், மற்றும் சமஸ்த லோக ஜீவன்களுக்கும் மங்களத்தைச் செய்வதாலேயே "சங்கரர்" எனும் திருநாமம் அடைந்ததும், ஸ்ரீ பரமேச்வரரது மஹிமை பேசும் ஒவ்வொரு சிவாலயங்களிலும் அவரை யார் யார் வணங்கினார்களோ அவரவரது பெயர்களால் தமது திருநாமத் தைக் கொண்டு அருளும் அவருடைய ஆலய புராணமும், நடந்த வரலாறும் பகர் வதை அறியலாம்.

- ஓணன் காந்தன் எனும் அசுரர்கள் வழிபட்டதால். **ஸ்ரீ ஓணகாந்தேஸ்வரர்**
- தர்ப்பைகள் வழிபட்டதால்: **ஸ்ரீ தர்ப்பாரண்யேச்வரர்**.
- வாலி வழிபட்டதால்: **ஸ்ரீ வாலீஸ்வரர்**.
- இராமர் வழிபட்டதால்: **ஸ்ரீ இராமநாதேச்வரர்.**
- பார்வதி வழிபட்டதால்: **ஸ்ரீ ஏகாம்பரேச்வர்**.
- பிரும்மாவும், திருமாலும் வழிபட்டதால்: **ஸ்ரீ அருணாச்சலேச்ஹரர்**.
- கண்ணன் வழிபட்டதால்: வீழிமிழலை **ஸ்ரீ கல்யாண சுந்தரேச்வரர்**.
- யானையும், சிலந்தியும் வழிபட்டதால்: **ஸ்ரீ ஜம்புகேஸ்வரர்**.
- எறும்பு வழிபட்டதால்: **ஸ்ரீ எறும்பீசர்**.
- குரங்கு, அணில், காகம் வழிபட்டதால்: **ஸ்ரீ வாலீச்வரர்**.
- வழி தெரியாதோருக்காக: **ஸ்ரீ மார்கபந்தீச்வரர்**.
- உலகஉயிர்கள் அனைத்திற்கும் தாயாகவும் விளங்குவதால்: **ஸ்ரீ தாயுமானவர்**

**062.**

**ஏகோததௌஜலஜமேககராம்புஜேகஹ்ய**
**அந்யோததௌஜ்வாலநமேககராம்புஜேந|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஏககராம்புஜேந** = தனது ஒரு கரத்தில், **ஜலஜம்** சங்கத்தை, **ததௌ** = தரித்திருக்கின்றான், **அந்ய:** = இன்னொருவன், **ஏககாராம்பு ஜேந =** தன் கரத்தில், **ஜ்வலநம்** = அக்னியை, **ததௌ** = வைத்திருக்கின்றவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை,

**ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தன் கையில் சங்கைப் பிடித்திருக்கின்றான். ஹரனோ தன் கையொன்றில் தீயை தாங்கினவனாக இருக்கின்றான். சாதாரண சங்கை எவனும் வைத்துக் கொண்டிருக்க முடியுமாதலால் அதில் என்ன பெருமை இருக்கின்றது? இக்காலத்திலே சிறு சிறு சங்கினால் அலங்கரிக்கப்பட்ட வாயில் தோரணங்களை கடற்கரை ஓர பிரசித்தி பெற்ற ஊர்களில் விற்பதும், அதை வாங்கி வந்து தமது வீட்டு வாசலில் தொங்க விடுவதையும் காண்கிறோமே? சாதாரண மரத்தினால் ஆன வாயிற்படி அத்தனை சங்குகளையும் தாங்கி நிற்கிறதையும்தான் காண்கிறோமே?. இவ்விஷயத்திலும் தாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக ஒதுக்கி நாங்கள் சிறந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**063.**

**ஏகோத் விஜோபிநிஜமாத்ரு சிரச்சிதாசீ**
**தந்யோவிபாதிரிதராம் த்விஜராமெலெ:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **த்விஜோபி** = பிராமணனான போதும், **நிஜமாத்ரு சிரச்சித்** = தன் தாயின் தலையறுத்தவன், **ஆஸீத்** = என்றானவன், **அந்ய:** = இன்னொருவனோ, **நிதராம்** = மிகவும், **த்விஜராஜமெலி:** = பிராமணனென்றும், சந்திரனைத் தலையில் கொண்டவனாகவும், **விபாதி** = சிறந்து விளங்குகிறான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்,

**தாரதம்மியம்:** பிராமணனைக் கொன்றால் பிராயச்சித்தமில்லை என்பதும் (ப்ரும்மஹத்தி), தாயைக் கொன்றவனுக்கு பரிகாரமே இல்லை என்பதும் ஸ்மிருதி யாதிகளால் நிந்திக்கப்பட்ட செயல்களாகும். ஹரியோ பிராமணனாகப் பிறந்த பரசுராம அவதாரத்தில், தன் தாயின் தலையை அறுத்துக்கொன்று அபகீர்த்தி யுடையவனாக ஆனவன். ஹரனோ பிறவாமலே பிராமணச் சிரேஷ்டனாக விளங்குகின்றான், (வேதத்திலும், காஞ்சிபுராணத்திலும், இராமலிங்க அடிகளும், தாயுமானவரும், இதிகாச காலதிலிருந்த முனி சிரேஷ்டர்களும், தேவர்களும், ஆன்மீக வாழ்வில் தன் வாழ்நாளைக் கழிப்போரும் ஹரனை "பிராமணன்" என்றே குறிப்பிட்டுச் சொல்கிறார்கள்!)

**சாம வேதப் பிரமாணம்**, "த்வம்தேவேஷ" ப்ராஹ்மணோஸா அஹம்மநுஷ்யேஷு ப்ராஹ்மணொஹா ப்ராஹ்மணமுபதாவதி உபத்வாதாவாமி" **இதன் பொருள்:** 'ருத்திரனெனும் நீ தேவர்களுள் பிராமணன்; நான் மனிதர்களுள் பிராம

ணன்; பிராமணன் பிராமணனைத்தான் வழிபடுவான்; ஆகவே நான் உன்னைத்தான் வழிபடுவேன் என்றும்;

**மனுஸ்மிருதியும்,**

**“விப்ராணாம்தைவதம் சம்பும் க்ஷத்ரியாணாந்துமாதவ: |**
**வைச்யாநாந்துபவேத்ப்ரஹ்மா சூத்ராணாம் கணநாயக :||**

**இதன் பொருள்:** 'பிராம்மணர்களுக்குத் தெய்வம் சிவன்; க்ஷத்திரியர்களுக்கு தெய்வம் விஷ்ணு; வைசியர்களுக்கு தெய்வம் பிரம்மன்; சூத்திரர்களுக்கு தெய்வம் கணபதி” என்றும் சொல்கின்றது. **கூர்ம புராணத்தில்**, "விசேஷாத் ப்ராம்மணோ ருத்ரம் ஈசானம் சரணம் வ்ரஜேத்" என்கிற வசனம் உள்ளது.

அடியார்களுள் அனைவருமே ஸ்ரீ மஹாதேவரை *பிராமணராகவே' அறிந்து, நமக்கும் அவர்களது பதிகப்பாடல்கள் மூலம் தெரிவித்திருக்கின்றனர் , (இதில் நாம் தெரிந்துகொள்ளக் கூடிய விஷயம் ஒன்றுள்ளது. அதாவது, தற்காலத்தில் “பிராமணர்” என்கிற அடையாளத்தில் காணப்படுவோரை அல்ல, என்பதே அது!)

இப்படி த்விராஜமௌலியாகவும் (பிராமணச்ரேஷ்டன்) சந்திரனை தரித்தவனு மாக உள்ள ஹரனையே நாங்கள் சரணம் அடைகின்றோம்.

(ஈன்ற தாயைக்கொன்ற பாவம் தீரும் பொருட்டு பரசுராமன் ஸ்ரீ பரமேச்வரரை வழிபட்டு தம் பாவம் போக்கிக் கொண்டதும், பிராமணான இராவணனைக் கொன்ற ப்ரும்மஹத்தி போக்கிக் கொள்ள ஸ்ரீ பரமேச்வரரை வழி பட்டு போக்கிக் கொண்டதும் புராணப் பிரமாணம்!!, இவ்விதம் இவர்களைப்போல் பலரும் “ப்ரும்மஹத்தி” செய்த பாவம் தீர ஸ்ரீ பரமேச்வரரைப் பணிவதும், அவரது பெருங்கருணையால் அவர்களது அப்பாவம் நீங்குவதும் பல புராணங்கள் மூலம் அறியலாம்.)

**064.**

**சங்காத்தநோநிதி நிதராம்த்வ நிமாத்ரமேக**
**ஓங்காரமேவஹ்ருதயாத்ஸ கலார்த்தமந்ய:||**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ் ஸத்யம்**
**ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன் சங்கினாலே, **த்வநிமாத்ரம்** = ஓசையை, **நிதராம்** = அதிகமாக, **தனோதி =** செய்து கொண்டிருக்கின்றான், **அந்ய:** = இன்னொருவன், **ஹ்ருதயாத்** = மனசினாலேயே, **சகலார்த்தம்** = சகல அர்த்தங்களையும் அடக்கின, **ஓங்கார ஏவ** = ஓம் எனும் பிரணவத்தினை, **தநோதி** = ஜபிப்பவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** =

கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ வீணே பொருளற்ற ஓசையைத் தரும் சங்கொலி எழுப்பினவனாக உள்ளவன். ஹரனோ தமக்கு ஞானோபதேசம் செய்விக்க வேண்டின சனற்குமாரர்களுக்கு, சகலார்த்த ரூபமான பிரணவத்தின் பொருளை வாய்திறந்து உபதேசியாமலே சின்முத்திரை மாத்திரம் காட்டி (புருஷார்த்தத்தை) தெளிவித்தனன். நாங்கள் சிறந்த இந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்,

சங்கிலிருந்து பெறப்படும் ஓசைக்கு பூர்வ இதிஹாசங்களில் (பரம இதிஹாசம் எனும் சிவரஹஸ்யம், இராமாயணம், மற்றும் பாரதம் ஆகிய) எதிலுமே சிறப்பித்துச் சொல்லப்படவில்லை. ஆனால் குரு தட்சிணாமூர்த்தியாக வீற்றிருந்து நான்கு மறைகளும், அதன் ஆறு அங்கங்களையும், கல்வி கேள்விகளில் சிறந்த நால்வருக்கு வாக்கிறந்த பூரணராக அந்நால்வருக்கும் உபதேசித்தார் என்பது ஆழ்ந்த பொருள் கொண்டது. சங்கின் ஓசையை விட "மௌனம்" மேலானது.

**065.**

**ஏகஸ்து சக்ரஸஹிதோபிதநோதி ரக்ஷமந்யஸ்து**
**கண்டபரசுர்வி தநோதிசிக்ஷிம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாவ்ருதாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனானால், **சக்ரஹிதோபி** = சக்ராயுதத்துடன் இருந்தாலும், **ரக்ஷிம் =** காத்தல், **தநோதி** = செய்துகொண்டிருக்கின்றான், **அந்யஸ்து** = இன்னொருவனோ, **கண்டபரசு: =** பரசு எனும் ஆயுதத்துடன் இருந்தாலும், **சிக்ஷிம்** = தண்டித்துக், **விதநோதி =** கொண்டிருக்கின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்,

**தாரதம்மியம்:** ஹரியோ தம் கையில் சக்கரம் தாங்கி இவ்வுலகின் காத்தல் தொழில் செய்பவனாகவும், உலகை ரக்ஷிப்பவனாகவும் இருக்கின்றான். ஹரனோ தம் கையில் பரசு என்னும் ஆயுதம் தாங்கி உலகைத் தண்டிப்பவனாக உள்ளான். (ஒரு நிர்வாகத்தில் மேலாளராக இருந்து அந்த நிறுவனத்தை நடத்துபவனைவிட, அந்நிறுவனத்தினை, "இன்றோடுவேண்டாம்" என்று முடிவு செய்து நிறுவனத்தையே மூடுபவனுக்குத் (முதலாளி) தான் சுதந்திரம் அதிகம். இது வெளிப்படையான தேற்றம்.) இதன்படி ரக்ஷிப்பவனை விட தண்டிப்பவனுக்குள்ள சுதந்திரத்தினால் ஹரனே சிறந்தவன் என்று நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

அலுவலகம் என்பது இவ்வுலகை சுட்டுவதற்காக பயன்படுத்தப் பட்டிருக்கிறது. அலுவலகம் என்னும் இவ்வுலகை, அதில் பணிபுரிவோர் (ஜீவராசிகள்) தர்மப்படி (சரிவர பணி செய்யாமல்) இல்லாமலிருந்தாலோ, தர்மத் தைக் கடைபிடியாது இருப்போரைக் கண்டித்து ஒழுங்குபடுத்தும் உயர்பதவியில் இருப்போர் (பிரும்மா, விஷ்ணு, யமன் முதலியவர்கள்) தன்கடமை மறந்தாலோ, அந்நிறுவனத்தை நடத்தும் "முதலாளி" (சிவபெருமான்) நிறுவனத்தை மேற்கொண்டு நடத்த தாமே ஒரு சில நடவடிக்கையை (தாண்டவம்) எடுத்துப் பார்ப்பார். "சரிவரவில்லை" (அதர்மம் அதிகரித்து எவரும் தனக்குள்ள தர்மப்படி இல்லை) என்கிற தீர்மானத்திற்கு முதலாளி வந்துவிட்டால், அந்த நிறுவனத்தில் பணி புரிந்தவர்களுக்கு "நிவாரணத் தொகையை" (அவரவரது பாவ புண்ணியங்களுக்குள்ள பலனை) அளித்து, நிறுவனத்தை "மூடி" (சம்ஹாரம் செய்து) விடுவார். பிறகு, திரும்பவும் அந்நிறுவனத்தை தொடங்குவதும், தொடங்காமலிருப்பதும் அம்முத லாளி கையில்தான் எல்லாமே.

சைவ ஆகமங்கள் இதைத்தான் பஞ்சக்ருத்தியம் (சிவபெருமானின் ஐந்து தொழில்கள்) என்கின்றது, ஆனால் வைணவ நூல்கள் எதுவுமே விஷ்ணுவுக்கு இம்மாதிரியான ஐந்தொழில்கள் பற்றி சொன்னதில்லை!

**066.**

**ஏகோ தசாக்ருதி விபிந்நஇதிஹிஹ்யபாஷி**
**சாந்யத்வபிந்நதமமூர் த்தி ரிதிஹ்யபாஷி|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச் ரயாம:||**

**பதவுரை: ஏகச்ச** = ஒருவனானால், **தசாக்ருதிவிபிந்ந** = பத்தாக வேறுபட்ட வன், **இதி** = என்று, **அபாஷிஹி** = சொல்லப்படுபவன், **அந்யஸ்து** = இன்னொரு வனோ, **அபிந்நதமமூர்த்தி** = மாறாத தன்மையினன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கி ன்றோம்.

**தூரதம்மியம்:** ஹரியோ பலபிறப்புள்ளவன் என்றும், பிரசித்தமான அவனது பிறப்பு பத்து என்றும், பலவகையான வேறுபாடுகளுமுடையவன். ஹரனோ பிறவியில்லாதவன். பிறக்கவேண்டிய அவசியம் என்பது கடவுள் என்கிற தத்துவத்திற்கு முரணானது - என்பதினால் பிறப்பிறப்பும், ஆதியந்தமும் இல்லாத அந்த பரமனான ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம்.

**067.**

**க்ரஹாந்நிஹத்யக ஜராஜமரக்ஷதே கோம்ருத்யுந்**
**நிஹத்யமுறிபுத்ரம ரக்ஷதந்யா।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **க்ராஹம்** = முதலையை, **நிஹத்ய** = கொன்று, **கஜராஜம்** = கஜேந்திரனை, **அரக்ஷத்** = காப்பாற்றியவன், **அந்ய:** = இன்னொருவனோ, **ம்ருத்யும்** = எமனை, **நிஹத்ய** = கொன்று, **முநிபுத்ரம்** = முனிவன் மகனை (மார்கண்டேயனை), **அரக்ஷத்** = காப்பாற்றினான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ, அகத்திய முனிவரது சாபத்தினால் யானையாக மாறின பாண்டிய மன்னன் கஜேந்திரனை, தடாகம் ஒன்றில் இருந்த முதலை யொன்று அம்மன்னனின் காலைப் பற்றி இழுக்கவே, மரண ஓலத்துடன் “ஆதிமூலம்!...” என்று அவன் அருகில் இருந்த ஹரியை அழைக்க, ஹரி அவ்விடம் சென்று அந்த யானையைக் காத்தான். ஹரனோ, மிருகண்டு என்னும் முனிவரின் மகனான மார்கண்டேயன் பொருட்டு எமனை உதைத்துக் கொன்று, மார்கண்டேய னை சிரஞ்சீவித்துவ வரமளித்து காத்தான். நீர் வாழினங்களான முதலை, சுறா, மீன்கள் முதலியவற்றை கொல்வதென்பது சாதாரணமான எவராலும் செய்யத்தக் கதே. முதலையைக் கொன்று யானையைக் காத்ததைவிட, அனைத்து உயிர்களுக் கும் காலனான எமனைக் கொன்று ப்ரும்மரிஷி என்ற முனிசிரேஷ்டனைக் காத்தது விசேஷமாதலால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**068.**

**ஏக:பபௌபுவந பீகரகாளகூட மந்ய:பபௌஸ்த**
**நவிஷ்ம்கலு பூதநாயா:।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **புவநபீகரகாளகூடம்** = உலகிற்கு பயமளித்த காளகூட விஷத்தினை, **பபௌ** = குடித்தான், **அந்ய:** = இன்னொருவன், **பூதநா** = பூதனையென்பவளின், **ஸ்தநவிஷம் =** மார்பிலுள்ள விஷத்தினை, **பபௌகலு** = புசித்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம் =** நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ, தனது கிருஷ்ணாவதாரத்தின் போது, தன்னைக் கொல்ல கம்சன் அனுப்பிய பூதனை என்னும் அரக்கி தன் மார்பில் விஷத்தினைத் தடவிக் கொண்டு வந்து, கிருஷ்ணனுக்கு பால் கொடுக்க வந்தபொழுது, ஹரி அவளது மார்பில் சிறிதளவே பூசிக்கொண்டு வந்த விஷத்தையும் குடித்து, அவளது உயிரையும் உறிஞ்சிக் குடித்து அவளைக் கொன்றான். சிறிதளவு பூசிக்கொண்டு வந்த அவ்விஷமானது, அப்பூதனை என்னும் அரக்கியையே ஒருவகையிலும் ஒன்றும் ஊறுவிளைவிக்காதபோது கிருஷ்ணனை மட்டும் அது என்னசெய்து விடும்?

திருமால் முதலிய அனைத்து தேவர்களையும் பாற்கடலில் உண்டான ஆலகால விஷமானது பீதியடையச்செய்ததோடல்லாமல், அத்திருமாலை கரிய நிறமாக மாற்றியது. அவ்வாறு ஹரியின் உடல் வண்ணத்தை மாற்றியதான அந்த ஆலகால விஷத்திற்கும், பூதனை தடவிக்கொண்டு வந்த சாதாரண விஷத்திற்கும் வித்தியாசம் உண்டு. சிவபெருமான் லோகோபஹாரத்திற்காக அக்கொடிய விஷத்தினை சமஸ்த லோக ஜீவராசிகளுடைய நன்மையின் பொருட்டு தன் கண்டத்தில் தாங்கினவர். ஒரு அரக்கியின் மார்பில் தடவப்பட்ட சாதாரண விஷமுண்டு, அவ்வரக்கியைக் கொன்ற ஹரியை அப்பிரதானமாக ஒதுக்கி நாங்கள் ஹரனையே சரணம் அடைகின்றோம்.

“பூதனை என்பவள் கிருஷ்ணனுக்கு பாலூட்ட தனது மார்பில் விஷத்தை தடவிக்கொண்டு வந்தாள்” என்பதிலிருந்தே அக்கிருஷ்ணன் அதற்கு முன்பாக வேறு பெண்களிடமும் “முலைப்பால்” குடித்தவன்தான் என்று அர்த்தம் ஆகிறது. இவ்விதமான இழிநிலையில் இருக்கும் தனக்கு பால் என்னும் பெயரில் விஷத்தை கொடுக்க வந்த அரக்கியை அவன் காப்பாற்றி நல்லபுத்தி சொல்லி, அவளை திருத்தி, பிறகு “விஷமில்லாத பாலையே” அவளிடமிருந்து குடித்திருக்கலாம்!. தன் உயிரைக்குடிக்க அனுமதித்த பூதனை “விஷமில்லாத பால்” தரமாட்டாளா என்ன?. அதுவும் தன் முலைப்பாலை குடிக்கத் துணிந்தவனுக்கு?!

கம்ஸனால் சிறையிலிடப்பட்டு மிகவும் துயரமான அந்நாளிலும் ஸ்ரீ கிருஷ்ணரது தகப்பனார் அவரது மனையாளை சிறையில் புணர்ந்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கு முன்பாகவே பல பிள்ளைகளைப் பெற்று அவற்றை கம்ஸனால் இழந்ததிலிருந்து, தமக்கு முன்னர் பிறந்திறந்த தம் சகோதரர்களை அக் கிருஷ்ணன் ஏன் காப்பாற்றவில்லை? பால் குடித்து அரக்கியை வதைக்கும் வித்தையை அவன் எங்கு கற்றான்? எனும் கேள்வியை அல்லவா எழுப்புகிறது?

தவிர, மூல மூர்த்தியான நாராயணனை கருநீலமாக்கியது நம் பரமேச்வரரால் பாணம் பண்ணப்பட்ட ஆலகாலம். இந்த கிருஷ்ணனோ அம்மூல மூர் த்தியினுடைய மயிர் என்கிறது பாரதம், சாதாரணமாக ஒருவனது மயிரை பாதிக்காத இப்பூதனையினுடைய விஷத்திற்கும், அவனையே பாதிப்பிற்கு உள்ளாக்கிய ஆலகால விஷத்திற்கும் வித்தியாசம் உண்டா, இல்லையா?!

இந்த இலட்சணத்தில், சிறையில் வாடும் காலத்திலும் புத்திரோற்பத்தி செய்ய காம இச்சையுடன் ஸ்ரீ கிருஷ்ணனைப் பெற்றெடுத்த காலம் வரை சிறையிலே புணர்ந்து வாழ்ந்த இந்த வசுதேவரையும், அவரது வாரிசான கிருஷ்ணனையும் ஸ்ரீ கிருஷ்ண பாகவதத்தில் சத்வகுண ஈசனைத் தேடிப் புறப்பட்ட ஸ்ரீ பிருகுமுனி தம்முடைய "அந்த" ஞானக் கண்களால் காணவில்லை போலும்!. (இம்மாதிரி தம் மனைவியோடு சிறையிலடைபட்ட காலத்தும், அடைபட்ட கைதிகள் சிறையில் புத்திரோற்பத்தி செய்த வரலாறு இதற்கு முன்போ; அதற்குப் பிறகோ கிடையாது! தற்காலத்தில் பெண்களுக்கான சிறை ப்ரத்யேகமாக இருப்பதன் காரணம் இதுதானோ?!)

இவ்வாலகாள விஷத்தை பாணம் பண்ணின சரிதத்தில் வைணவர்கள், "விஷ்ணு உண்டு மிஞ்சிய சேஷத்தை சிவன் தின்றதால்தான் சிவனுக்கு கண்டம் கருத்தது; விஷ்ணுவுக்கு உடல் கருத்தது' என்றும்; சிவனார் அவ்வாலகாள விஷத்தின் வீர்யத்தைத் தாங்கி தான் ஜீவிக்கும் பொருட்டு கருடனை தியானம் செய்தார் என்பார்கள். தர்கத்தில் முன்சொல்லிய விஷயம் அடிபட்டும், இரண்டாவது மிதிபட்டும் போய்விட்டது!

சிவன் தியானித்த விஷவீர்யத்தைத் தடுத்துக்கொள்ளும் ஆற்றலும், மகிமையும் கருடனுக்கு உண்டானால். தேவர்கள் கூட்டம் கருடனையே "சரணம்" அடைந்திருப்பார்கள்!!, கருடனைத் தமக்கு வாகனமாக இருக்க வரம் வேண்டிய விஷ்ணு, கருடனை நோக்கி, "கருடா!... இவ்வாலகாள விஷத்தை நீயே பாணம் பண்ணு!" என்று சொல்லித் தாமும் கருமைநிறமடையாமலும், சிவனாருடைய கண்டம் கருக்காமலும் காத்திருக்கலாம்!!. (இந்த கருடன் தம் தாயின் அடிமைத்தனம் நீக்கும் பொருட்டு "அமிர்தத்தை' எடுக்க வந்த விவரம் **பாரதம்/ஆதிபர்வத்தில்** விரிவாக சொல்லப்பட்டிருக்கிறது)

அமிர்தத்தை உண்டது விஷ்ணுவாதிகள். விஷத்தையுண்டது பரமேச்வரர். அமிர்தத்தை உண்டும் விஷ்ணுவாதிகள் வாழ்ந்ததில்லை. விஷத்தையுண்டு சிவனார் செத்தாரில்லை. அநித்யர்களாகிய விஷ்ணுவாதியர் அமிர்தத்தை உண்டாலும் சாகிறவர்கள் என்பதும்; நித்தியராகிய சிவபெருமான் விஷத்தையுண்டாலும் சாகாதவர் (ம்ருத்யுஞ்சயர்) என்பதும் தெளிவாகிறதல்லவா?!

அமிர்தம் விஷ்ணுவாதியர்களுக்கு விஷமானதையும், விஷம் சிவனாருக்கு அமிர்தமுமாக ஆயிற்று என்பதே "பாற்கடல் கடைந்த வைபவம்" நமக்குத் தெரிவிக்கிறது.

**069.**

**ஏகஸ்ய ஸப்தஜலதீந்பிபதி ஸ்மபக்ததஸ்யைகதேச**
**மிதரஸ்துபபந்தயத்நாத்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருதாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்ய** = ஒருவனுடைய, **பக்த:** = பக்தன், **ஸப்த** = ஏழு, **ஜலதீந்** = கடல்களை, **ப்ரதிஸ்ம** = குடிக்கச்செய்தான், **இதரஸ்து** = மற்றவனோ, **தஸ்ய** = அக்கடலினுடைய, **ஏகதேசம் யத்நாத்** = ஒரு பகுதியில் மிகுந்த சிரமத்துடன், **பபந்த** = (பாலம்) கட்டினான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனது இராமாவதாரம் செய்த காலத்தில், இலங்கையில் இராவணனால் சிறைவைக்கப்பட்ட தன் மனைவியை அடையும் பொருட்டு, மிகுந்த பிரயாசையைக் கொண்டும், பலபேர்களின் ஒத்துழைப்பினாலுமே கடலைக் கடக்க இலங்கைக்கு பாலம் அமைக்க முடிந்தது, அனால், விருத்திரன் என்னும் அசுரனை இந்திரன் கொல்வதற்காக அவனை துரத்தினபோது அவ்வசுரன் கடலில் போய் ஒளிந்து கொண்டான். கடலில் மறைந்த அவ்வசுரனை கண்டுபிடிக்க இந்திரன் அகத்திய முனிவரை வேண்ட, அம்முனிவர், சிவத்யானம் செய்து கடலனைத்தையும் தன் உள்ளங்கையில் ஏந்திப் பாணம் செய்ய, கடல் நீர் முழுதும்வற்றியது. பின் இந்திரன் மறைந்திருந்த விருத்திராகரனை கண்டுபிடித்துக் கொன்றான்.

அகத்திய முனியோ சிவபெருமானுக்கு ஊழியன்... இந்த ஊழியன் செய்யுமளவு கூட இன்னொருவன் செய்யவில்லை என்றால் அவனும், அகத்தியனும் இணையானவர்கள் என்று எப்படி சொல்லமுடியும்? இச்சமுத்ர விஷயத்திலும், தாழ்வடைந்த ஹரியை மிக ஒதுக்கி, நாங்கள் அந்த அகத்தியன் பணிந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**070.**

**விச்வாத் மகத்வமயதே கலுதத்ரசைகே**
**விச்வேச்வரத்வ பதலீமயதேததாந்ய: |**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருதாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **விச்வமகத்வம்**= விசுவசொரூபத்தை, **அயதேஹலு =** அடைந்தவன், **ததா** = அப்படியே, **அந்ய:** = இன்னொருவனோ **விச்வேச்வரபதலீம்** = ஜகதீஸ்வரபதவியை, **அயதேஹலு** = அடைந்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** விச்வரூபமடைந்த ஹரியிலும், விச்வரூபம் செய்யும் விச்வனுக்கும் ஈஸ்வரன் என்பதால் "விஸ்வேஸ்வரன்" என்னும் நாமமடைந்த ஹரன்

சிறந்தவன். (சிற்றரசன் என்பவனுக்கு சக்ரவர்த்தி மேலானவன் என்பவன் போல) ஹரனே சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

(விச்வரூபம் என்றால் ஏதோ ஸ்ரீ கிருஷ்ணரால் மாத்திரம்தான் காட்டமுடியும் என்பதல்ல! வீரவாகுத் தேவர் ஸ்கந்த புராணத்திலும், ஸ்ரீ அநுமன் பீமனுக்கு பாரதத் திலும் காட்டியிருக்கிறார்கள்.)

**071.**

**ஏகோ புஜங்கசயநே தநுதேதிஸூப்திமந்ய:**
**கரோதிபுஜகேந்த்ரவிபூஷணிநி ।**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம: ॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **புஜங்கசயநே** = சர்ப்பசயனத்தில், **அதிஸூப்திம்** = மிகுந்தவிருப்பம், **தநுதே** = கொள்கின்றான், **அந்ய:** = இன்னொருவனோ, **புஜங்கேந்திரவிபூஷணிநி** = சர்ப்பேந்திங்களை (ஆபரணமாக), **கரோதி** = அணிந்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனது சயனத்திற்கு அரவத்தைக் கட்டிலாகக் கொண்டு, அவ்வரவத்தினால் தாங்கப்பட்டவனாக உள்ளவன். ஹரனோ அந்நாகேந்தி ரர்கள் மகிழும் பொருட்டு அவற்றைத் தமக்கு ஆபரணமாகக் கொண்டு தன் சரீரத் தால் அவற்றைத் தாங்குபவனாக உள்ளவன். ஹரனுடைய ஆபரணங்களில் ஒன் றான அச்சேஷ மோதிரத்தில் துயிலும் ஹரியையும் ஹரனே தாங்குபவனாக இருப்பது இதில் புலனாகிறது. (நாம் அணியும் மோதிரத்தில் ஏதேனும் ஒரு கல் இருப்பதைப் போன்று!!!) அரவத்தின் மீது படுத்துத் தூங்கும் ஹரியிலும், அவ்வரவத் தினை ஆபரணமாகக் கொண்ட சிவபெருமான் சிறந்தவன் என்பதாலும் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**072.**

**ஏகோர் ஜுநஸ்யஜயத:கலுஸூதபாவா தந்யோர்**
**ஜுனஸ்யஜயதோபவ தஸ்த்ரதாநாத்।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம;॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **அர்ச்சநஸ்ய** = அர்ஜுனனுக்கு, **சூதபரவாத்** = சாரதியாய் இருந்து, **ஜயத:கலு** = வெற்றியை கொடுத்தவன், **அந்ய:** = இன்னொரு வனோ, **அர்ச்சுனஸ்ய** = அர்ஜுனனுக்கு, **அஸ்திரதாநாத்** = அஸ்திரங்களைக்

கொடுத்து, **ஜயத:** = வெற்றியைக் கொடுத்தவன், **அபவத்** = ஆனான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம்: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ பாரத யுத்தத்தின் போது, தன் கடமை நிறைவேறும் பொருட்டு அர்ஜுனனை தன் சாதுர்யமான பேச்சால் மயக்கி, (இதற்கு பகவத் கீதை என்று பெயர்!) அவனை அப்போரில் ஈடுபடச் செய்து, அவனுக்குச் சாரதியாகவும் இருந்து உதவினவன். ஹரனோ தன்னை சரணம் அடைந்து பாரத யுத்தத்தில் ஜெயமடையும் பொருட்டு பாசுபதம் வேண்டின அவ்வர்ஜுனனுக்குப் பாசுபதம் அருளியவனாக உள்ளவன். தேர்ப்பாகனாய் இருந்து உதவிய ஹரியிலும், அப்பார்த்தனுக்கு அம்புகளை அளித்து ஜயமடையச்செய்த ஹரன் சிறந்தவனென்பது தெளிவாயிருப்பதனால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**(பாரதம்/ ஆதிபர்வம்/ 260 வது அத்தியாயம்/மயதர்சன பர்வம்** என்னும் பகுதியில், "அக்னி, மிகுந்த ப்ரீத்தியுடன், அந்தக் கிருஷ்ணார்ஜனர்களைப் பார்த்து, புருஷச்ரேஷ்டர்களான உங்கள் இருவராலும், நான் என் விருப்பப்படி திருப்தியடைவிக்கப்பட்டேன். வீரர்களே!.. உங்களுக்கு விடை கொடுக்கிறேன். நீங்கள் இஷ்டமான இடம் செல்லுங்கள்!. அர்ஜுனா! சிறந்த புத்தியுள்ளவனே! காண்டீவம் என்னும் உயர்ந்த வில்லும், பாணம் வற்றாத பெருந்தூணிகளும், ஹநுமத்வஜமுள்ள (அநுமார் வீற்றிருக்கும் கொடி) இந்தத் தேரும் உனக்குக் கொடுக்கப்பட்டன. இந்த வில்லினாலும், இந்தத் தேரினலும் தேவாஸீர மனிதர்கள் உட்படச் சத்ருக்கள் எல்லோரையும் யுத்தத்தில் ஜயிப்பாய்" என்று சொன்னான்." என்று வருவதிலிருந்தும், அர்ஜுனன் உபயோகித்த வில், அம்பு, தேர் முதலியவையும் ஸ்ரீ மஹாதேவருடைய கைகளிலும், நெற்றியிலும் விளங்கும் அக்னியால் வரமாக தரப்பட்டதும் தெளிவாகிறது. ஸ்ரீ கிருஷ்ணன் செய்தது தேரோட்டியது மட்டுமே!!)

**பாரதம்/துரோண பர்வத்தில்** வியாசரிடம், தன்னால் வேடர்களை எதிர்க்க முடியாமல் போனதற்கும், பாரத யுத்தத்தில் தான் ஜயமடைந்ததற்கும் காரணம் கேட்க, (பாரத யுத்தத்திற்கு முன்பாக இதே அர் ஜனணுக்குத்தான் கிருஷ்ணர் கீதோபதேசம் சொன்னார். அவனும் தன்னை அறிவு ஜீவியாகக் கருதிக்கொண்டு கிருஷ்ணனிடம் கேள்விமேல் கேள்வி கேட்டு எல்லாம் புரிந்து கொண்டது மாதிரி (கிருஷ்ணன் சொன்னான் என்பதற்காக) போரிலும் ஈடுபட்டான்.)

"போரின்போது உனக்கு முன்பாக சூலாயுத பாணியாகச் சென்று உன் ஜயத்தின் பொருட்டு எதிரிகள் மீது சூல மழை பொழிந்து பாண்டவ சேனைகளுக்கு ஜயத்தினைத் தந்தது சாட்சாத் அந்த பசுபதியே!." என்றும்; மேலும் அர்ஜுனனிடம், ஸ்ரீ பரமேஸ்வரரின் மகிமைகளையும், சதருத்ரியம் பற்றியும், அதைப் படிப்பதினால் - கேட்பதினால் கிட்டும் பலன்களையும், காலத்தின் வன்மையினையும் எடுத்துக் கூறி "நீ வெற்றி பெற்றாய் என்பது தவறு, நீ எதுவும் செய்யவில்லை! எல்லாம் ஸ்ரீ

மஹாதேவரின் செயல்!" என்று துரோணரும், பாரதமியற்றிய வேதவியாசரும் கூறியிருக்கின்றனர் .

இதுதவிர, **பீஷ்மபர்வம்/23வது அத்தியாயத்தில்** யுத்தத்தில் ஜயமடையும் பொருட்டு, ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனிடம் துர்கையை ஸ்தோத்திரம் செய்யச் சொன்னதும், அவ்விதமே அவன் துர்கையை துத்தித்த சுலோகமும், அச்சுலோகத் தை நாம் சொன்னால் என்னென்ன பலன்களை அடையலாம் என்கிற பலச்ருதியும் வருகிறது, ஸ்ரீ கிருஷ்ணன் துர்கையை ஸ்தோத்திரம் செய்யச் சொன்னது ஏன்? அவன் ஏன் லட்சுமி அஷ்டோத்திரம், லட்சுமி சஹஸ்ரநாமம் முதலியவற்றை சொல்லச் சொல்லவில்லை என்பதை சைவத்தையும், சிவபெருமானையும் கீழ்படுத் திப் பேசுவோர் சொன்னால் தேவலாம்!!,

**073.**

**ஏக:புமாநிதிபரோதயிதேதி புத்ரச்சாஸ்தா**
**தயோரிதிசஸர் வஜகத் ப்ரஸித்தி :|**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **புமாந் =** புருஷன், **இதி** = என்றும், **பர:** = மற்றொருவன், **தயிதா =** மனைவி (பெண்), **இதி** = என்றும், **தயோ:** = அவர்களுக்குப் பிள்ளை, **சாஸ்தா** = சாஸ்தா, **இதிச** = என்றும், **ஸர்வஜகப்ரஸித்தி** = எல்லாவுல கங்களிலும் பிரசித்தியுள்ளது, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ அமிர்த கடையலின் போது பெண்ணுருவான மோகினி உருவை அடைந்த போது, அம்மோகினியின் அழகில் மயங்கிக் காமுற்ற ஹரனுக்கு அடங்கி, ஹரிஹர புத்திரனை பெற்றவனாக இருந்தான். மனைவியாக இருப்பவள் கணவனுக்கு கட்டுப்பட்டவள் என்பதினாலும், ஆணுக்குப் பெண் அடங்கி நடத்தலாலும், பெண்ணினும் ஆண் சிறந்தவன் என்பதினாலும், ஹரன் சிறந்தவன் என்பதினால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

தாருகாவன ரிஷிபத்தினிகளை சிவபெருமான் "பிட்சாண்டியாய்" சென்று, அந்த ரிஷிபத்தினிகளை காழமுறச் செய்தது நியாயமா? என்பார்கள்! ஒருவனுடைய மனைவி வேறொருவனிடம் முறைதவறிச் சென்றாள் என்று "வதந்தி" இருந்தாலே அப்பெண்ணையும், அப்பெண்ணின் புருஷனையும் இவ்வுலகம் எவ்விதம் ஏற்கிறது என்பது கண்கூடு!. வதந்திக்கே இவ்வளவு வலிமையும், அவ்வலிமையினால் அந்த சாதாரண பெண்ணின் வாழ்க்கையும் அலங்கோலமாகும்போது? ரிஷிபத்தினிகளைப் பற்றிக் கேட்பானேன்?!!.

ரிஷிபத்தினிகளுக்கு "உண்மை" யாகவே "பிட்சாடன மூர்த்தியால்" நடந்த அந்த கர்வபங்க செயலானது அவர்களுக்கு கவுரவத்தையா அளித்திருக்கும்?. பிட்சாண்டியை மோகித்தலைந்த ரிஷிபத்தினிகளின் புருஷர்களான அந்த ரிஷிகளுக்கு மிகுந்த மரியாதையையா அது ஏற்படுத்தியிருக்கும்?.

இப்புராணத்திலும், ஹரியானவன் "பெண்ணுரு" அடைந்தே ரிஷிகளைச் சேர்ந்தான்!. பெண்ணிற்கு கற்பு என்பது உடல் ரீதியானதாகவும், ஆணுக்கு கற்பு என்பது சொன்ன சொல் தவறாத "சத்தியமுமே" ஆகும். மிகுந்த கர்வம் கொண்ட அந்த ரிஷிபத்தினிகளை ஸ்ரீ பரமேச்வரர், சங்கரராகவோ, மஹாதேவராகவோ, பசுபதியாகவோ, ரிஷபாரூடர் முதலிய உருவிலோ சென்று அந்த ரிஷிபத்தினிகளை "கர்வபங்கப்" படுத்தாமல் "பிட்சாடனராக"ச் சென்று அவர்களை இழிவுபடுத்தியது ஏன்? -என்பது அவரவர்கள் தத்தமது "அநுபவ அறிவைக்" கொண்டு உணர்ந்து கொள்ள வேண்டியது!,

**074.**

**ஏகச்சகாரசரணிப்ஜநகாஞ்சலேக பெலெஸ்த்ய**
**பங்கமிதரஸ்துரணேதிக்ருச்சிரராத்|**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **சரணிம்பஜநகாம்சலேந** = காலிலுள்ள சிறுவிரல் நுணியினால், **பெலெஸ்த்யபங்கம் =** வெகுவான அவமானத்தினை, **சகார** = செய்தான், **இதரஸ்து** = இன்னொருவனானால், **ரணே** = யுத்தத்தில், **அதிக்ருச்சிராத்** = வெகு சிரமத்தினால், **பெலெஸ்த்யபங்கம்** = வெகுவான அவமானத்தினை, **சகார** = செய்தான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** தன்னை அடையும் பொருட்டு மிகுந்த அகந்தையில் இராவணன் கயிலை மலையுடன் ஹரனை பெயர்த்தெடுக்க துணிந்த போது ஹரன், அவனைக் கர்வபங்கம் செய்ய தன் கால்விரல் நுணியினால் கயிலையை அழுத்தி இராவணனுக்கு அவமானத்தை உண்டாக்கி அந்த இராவணனை அவனது பத்து வாயால் கதறச் செய்தார். ஆனால் ஹரியோ இந்த இராவணனைக் கொல்ல குரங்கினங்களின் நட்பு, ஜடாயு எனும் பறவையின் உதவி, அணில், படகோட்டி, என்று பலருடைய உதவியைக் கொண்டு, மிகுந்த கஷ்டப்பட்டே யுத்தத்தில் இராவணனை வதம் செய்தான், தன் கால்நகத்தினாலேயே அந்த இராவணனைப் பங்கமடையச் செய்த ஹரன் சிறந்தவன் ஆதலால் நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

**075.**

**ஏகோத்விஜாதிமகிலேஷு ஸுரேஷுமத்யே க்ஷித்ரம்பரந்து**
**பரமார்த்த கிரோக்ருணந்தி|**
**கோவாந்யோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: பரமார்த்தகிர:** = யதார்த்த அறிஞர்கள், **ஏகம்** = ஒருவனை, **அகிலேஷு** = எல்லாரும் கூடின, **சுரேஷுமத்யே** = தேவதைகளின் மத்தியில், **த்விஜாதிம் =** அந்தணனாக, **க்ருணந்தி** = சொல்லுகிறார்கள் பரந்து மற்றவனையோ, **க்ஷித்ரம்** = க்ஷத்திரியனாக, **க்ருணந்தி =** சொல்லுகின்றார்கள், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ க்ஷத்திரியனாக கருதப்படுபவன். ஹரனையோ யதார்த்த பண்டிதர்களான அனைவருமே அவனைப் பிராமணனாக கொண்டாடு கின்றார்கள். (எத்தகையவன் 'பிராமணன்' என்பதற்கு நிறைய விளக்கங்கள் ஸ்ரீ பாரதத்தில் இருக்கின்றது. இப்போது இருக்கும் பிராமணர்களைக் கொண்டு இந்த விஷயத்தை அணுகவேண்டாம்!. சுருக்கமாக பிராமணன் என்றால் "தன் குணம் ஒன்றினாலும் வாழும் வழியினாலும் மேம்பட்ட வாழ்வைப் பெற்றவன்" என்று சொல்லலாம்.) அரசகுல க்ஷத்திரியனாக அறியப்படும் ஹரி, ஓர் அரசனைப் போன்றே தனக்காகவும், தன்னை சார்ந்தோருக்காகவும் ஒருதலைப் பட்சமாகவே தனது ஒவ்வொரு செயலிலும் வாழ்பவனாக உள்ளான்.

"பிராமணன்" என்று ஹரனுடைய அடிமைகளினாலும் பிராமண சிரேஷ்டர் களினாலும் அறியப்படும் அந்த ஹரன் "வேண்டுதல் வேண்டாமை இலானா"கவும், "உள்ளானும் இல்லானுமாகவும்", "அறியப் படுபவனாகவும் - அறியப்படாதவனா கவும்" மற்றெல்லா தேவர்களுக்கும் சிறந்த ஸ்ரீ மஹாதேவனாகவும் இருக்கின்றான். சிறந்த பிராமண சிரேஷ்டர்களை அரசர்கள் முதல் ஆண்டிகள் வரை வணங்குவதும், அவர்களை பூஜிப்பதும் க்ஷத்திரிய அரசர் களும் செய்தவையே. அரசனிலும் பிராமணன் சிறந்தவனாதலால் நாங்கள் ஹரனையே சரணம் அடைகின்றோம்.

அகலிகையின் காலிலும், கௌதமரது காலிலும் இராம-இலக்குமணர்கள் வீழ்ந்து வணங்கியதும், தருமர் செய்த இராஜசூய யாகத்தில் கிருஷ்ணன் அந்த யாகத்திற்கு வந்த "பிராமணர்களுக்கு" பாதரக்ஷாளனம் செய்ததும் இவ்வித காரணங்களினால்தான்!

**076.**

**எகோ ஜகாநரி புமீக்ஷணத:க்ஷணேந**
**யத்நாத்ரிபும்ச நிஜகாநநககேந்சாந்ய|**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ரிபும்** = எதிரியை, **ஈக்ஷணத:** = தன்பார்வையினாலே, **க்ஷணேந** = கணப்பொழுதில், **ஜநாந** = கொன்றான், **அந்யச** = இன்னொருவனானால், **ரிபும்ச** = தன் பகைவனை, **நகேந** = கைவிரல் நகத்தினால், **நிஜகாந** = கொன்றான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரனோ தனக்கு பாதகச்செயல் செய்ய வந்த மன்மதனை தன் தீவிழியால் அவனை எரித்து காமாரி (காமத்தை ஜெயித்தவன்) என்று பிரசித்தி பெற்ற நாமத்தை அடைந்தவன். ஹரியோ தனது எதிரிகளான பலரை மிகுந்த பிரயாசையினாலேதான் கொல்ல முடிந்தது. தீவிழியால் மன்மதனை எரித்து சாம்பலாக்கின ஹரனை விட, தன் கைவிரல் நகத்தால் மிகவும் போராடி, இரண்யனின் வயிற்றைக் கிழித்த ஹரி மேம்பட்டவன் அல்ல என்பதால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**077.**

**ப்ருந்தாவநேசரதிகோ பிருபேத்யசைகஸ்த்வந்யோ**
**ப்ருசம்பித்ருவநேச ரதீஹபூதை:|**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **கோபி:** = கோபிகைகளுடன், **உபேத்ய** = கூடிக்கொண்டு, **ப்ருந்தாவநே =** பிருந்தாவனத்திலே, **சரதி** = திரிந்தவன், **அந்ய:** = இன்னொருவனோ, **ப்ருசம்பூதை: =** பூதங்களினால் சூழப்பட்டவனாக, **இஹ** = இப்போதும், **பிதிர்வநே** = சுடுகாட்டில், **சரதி =** சஞ்சரிக்கின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ பிருந்தாவனத்தில் கோபிகைகளுடன் உலாவினவனாகவும், அவர்களுடனான சம்பவத்தாலும், மிகவும் பிரசித்தி பெற்றவனாக இருக்கின்றான். ஹரனோ பூதங்களுடன் சுடுகாட்டில் வசித்தவராகவும், வசிப்பவராகவும்

இருக்கின்றார். (பாரதத்தில் அநுசாசன பர்வத்தில், உமாமகேச்வர சம்வாதம் - என்னும் பகுதியில் உமை தன் பதியை நோக்கி, "உலகில் சௌம்யமான இடங்கள் அநேகமிருக்க, வெருக்கத்தக்க மயானத்தில் வசிப்பதேன்? என்று கேட்க, ஸ்ரீ பரமேச்வரர், "இயற்கையில் ஸ்ருஷ்டியான பூத பிசாசங்களினால் மனுஷர்களுக்கு ஏற்படும் துன்பத்தைப் போக்க, பிரும்மா என்னிடம் வேண்டினதாலும், மயானம் பிராம்மணர்களால் விரும்பப்படும் இடமாதலாலும், மிகவும் பரிசுத்தமான இடமாக மயானம் விளங்குவதாலும், நான் அங்கே பூத பிசாசங்களுடன் விளையாடிக் கொண் டிருக்கிறேன்!" என்றார்.)

தவிர பூதங்களுடன் இருப்பவர் என்பது எதற்காக என்றால் மண், ஆகாயம், நீர், நிலம், நெருப்பு என்பவையும் பஞ்சபூதங்கள் என்று சொல்லப்படுவதையும், அவற்றுக்குரியவராக ஸ்ரீ பரமேச்வரர் திகழ்வதும், அந்தந்த ஸ்தலங்களில் வீற்றிருந்து அருள்பாலிப்பதும் இன்றும் நாம் காணக்கிடைப்பதே!. காமிகாகமத்தின் படி மயானத்தை ஒட்டி மேற்கு நோக்கிய சிவாலயங்கள் மிகவும் போற்றத்தக்கதாக சொல்லப்பட்டிருக்கிறது.

சர்வ சம்ஹார காலத்தில் ஹரிப்ரும்மாதியர் களுட்பட சமஸ்த உயிர்களும் சர்வ நாசமடைந்து எஞ்சியிருக்கிற இடமே மயானம். அப்போது அங்கு மிச்சம் இருப்பவர் சகலத்தையும் சம்ஹாரம் பண்ணின சம்ஹார கர்த்தாவான ஸ்ரீ பரமேச்வரரே!, இந்த "மயானவாசி" என்னும் நாமமே ஸ்ரீ பரமேச்வரருடைய சர் வேஸ்வரத்துவத்தையும், "ஏகத்துவத்தையும்" விளக்குவதாலும்; "மாயா மமதஹங் கார தஹனம் ச்மசானே" (மாயை, மமதை, அகங்காரம் முதலியவை தகிக்கப்பட்ட இடம் மயானம்) என்றும், மஹாச்மசானேப்யா நந்தவனே வாஸ" (மயானமே ஆனந்தவனம்!) என்றும் நிர்வாணோபநிஷத் கூறுவதுபோல மற்ற இடங்களின் மஹிமைகள் சொல்லப்படவில்லை. தவிர மயானத்தின் மஹிமை உணரவும், மயானவாசியாய் இருக்கும் ஸ்ரீ பரமேச்வரருடைய அந்த ரூபத்தின் அழகில் மயங்கவும் முன்வினைப்பயனும், ஸ்ரீ பரமேச்வரருடைய அருளும் இல்லாமல் தெரிந்துகொள்ள முடியாது.

தன் காமக் களியாட்டத்திற்கு கோபிகளுடன் பிருந்தாவனத்தில் (ரோம் நகர் பற்றி எரிந்தபோது, நீரோ மன்னன் பிடில் வாசித்தது போல!) உலவும் ஹரியைக்காட்டிலும், தான் சுடலையில் இருந்து சகல ஜீவன்களையும் ரக்ஷிக்கும் சுடலையாண்டியான ஹரன் சிறந்தவன் என்பதினாலும், பிருந்தாவனத்தில் உலவும் ஹரி தாழ்ந்தவன் என்பதாலும், நாங்கள் அந்த ஹரனையே எப்போதும் சரணம் அடைகின்றோம்.

**078.**

**ஏகோபுஜங்கசயநே ஸுப்திஹநித்யமந்யோ**
**புஜங்ககடகோ நடதீஹநித்யம் ।**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம: ॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **புஜங்கசயனே =** சர்ப்பசயனத்தில், **இஹ** = இப்போதும், **நித்தியம் =** எவ்வேளையிலும், **சுப்தி** = தூங்குகின்றான், **அந்ய:** = இன்னொருவன், **புஜங்கநடக:** = புஜங்கத்தில் அந்நாகத்துடனே, **இஹ** = இப்போதும், **நித்தியம்** = எப்போதும், **நடதி** = நடனமாடுகின்றான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ அரவத்தின் மேலே சதா படுத்துத் தூங்குபவனாக இருக்கின்றான். ஹரனே அந்த அரவத்தை தான் தரித்து நடனமாடுபவனாக இருக்கின்றான். இதில் சிறந்தவன் யாரென்று சொல்லாமலே தெரிவதால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**079.**

**ஏகஸ்யஜாத இதிஸந்ததலோகவார்த்தா நாந்யஸ்யதாத்ருச**
**விதூஷித லோகவார் த்தா]**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம;||**

**பதவுரை: அயம்** = ஒருவனுக்கு, **ஜாத:** = பிறந்தவன் (ஜாதகமுள்ளவன்), **இதி** = என்று, **ஸந்ததலோகவார்த்தா** = எப்போதும் உலகவார்த்தையுள்ளது, **அந்யஸ்ய** = இன்னொருவனுக்கு, **தாத்ருசவிதூஷிதலோக** = அம்மாதிரியான, **வார்த்தாந அஸ்தி** = லோகநிந்தை என்பது இல்லை, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம்:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ இப்பூமியில் "பிறந்தவன்" என்கின்ற உலகநிந்தையை உடையவனாக இருக்கின்றான். ஹரனோ பிறப்பிறப்பில்லாதவன் என்கின்ற கீர்த்தி பெற்றவனாக இருக்கின்றான். பிறந்திறக்கும் சாதாரண மானுடனுக்கும், பிறவிலியாக தெய்வத் தன்மையுடைய அந்த பரத்துவத்திற்கும் வித்தியாசத்தினை ஆராய வேண்டிய அவசிமில்லையாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

அநஸூயைக்கு மகனாக (துர்வாஸர்) ஸ்ரீ பரமேச்வரர் பிறக்கவில்லையா? என்று அறியாமல் கேட்போரும் உண்டு!. **ஸநற்குமார ஸம்ஹிதை** அவ்விதம் கூறவில்லையே? சிவனுருவான துர்வாஸர் அநஸூயையின் கையில் வைத்திருந்த புஷ்பத்தில் மறைவாக இருந்து ஆவிர்ப்பித்தார் என்றுதான் அதில் வருகிறது. அவள் கர்ப்பத்தில் இருந்ததாகவும், மல மூத்திராதிகளுடன் பிறந்ததாகச் சொல்லவில்லை!!.

இதிஹாச, புராணாதிகளில் பிரம்ம-விஷ்ணுவாதியர்களுக்குத்தான் சுக்கில-சோனித, கர்ப்ப வாஸங்கள் சொல்லப்பட்டிருக்கிறது!

**"கர்பவாஸோ ஹி துர்வாஸ: ஸர்வாவாஸேஷ்விதீவயத்|**
**துர்வாஸா நாம புத்ரோ பூத்தஸ்யா: புஷ்பாஞ்சலே: சிசு:||"**

என்பது விஷ்ணு சொல்லுவதாக ஸநற்குமார ஸம்ஹிதையில் வரும் வாக்கியம்.

அத்ரி முநியின் பத்தினியாகிய அநஸூயையின் தவத்திற்கு இரங்கி திரிமூர்த்திகளும் தரிசனம் தந்தனர். "நீவிர் மூவரும் எனக்குப் புத்திரர்களாக வேண்டும்! என்று வரம் கேட்ட அநஸூயைக்கு, "அப்படியே! என்று வரமளித்து மறைந்த மூவருள், நடுநின்ற சிவனார் உடனேயே (ஆசுதோஷி!) அஞ்சலி செய்த கரத்தோடு நின்ற அவளது கரத்திலிருந்து "துர்வாஸ:" என்று சொல்லிக்கொண்டே குதித்தார் .

ஏன்? அநஸூயையினுடைய கர்ப்பத்தில் வசிப்பதும், சுக்கில சோனித வயப்பட்டும், யோநிவயப்பட்டும் பிறவியெடுப்பது என்பது ஹரியைப்போல சாபமேற்றோ, விரும்பியோ அவதரித்தான் என்பது போலல்லாமல், அவ்விதம் வந்தாலும் அது 'துர்வாசம்' என்பதினாலும் ஸ்ரீ பரமேச்வரர் அவள் கரத்திலுள்ள நறுமண மலர்களுக்கு மத்தியில் ஆவிர்ப்பித்தார்! இவ்விதம் "தூர்வாஸ:" என்று ஸ்ரீ பரமேச்வரர் சொல்லிக்கொண்டு குத்தித்தமையால்தான் குழந்தைக்கு "துர்வாசர்" எனும் திவ்யநாமம் உண்டாயிற்று!!.

விஷ்ணு பிறந்தபின்பு செய்த அற்புதச் செயல்களையும், பிறப்பதற்கு முன்பு தாம் பிறக்கப் போவதாகச் சொல்லியிருக்கும் வாக்கியங்களையும் ஆதாரமாகக் கொள்வது சரியல்ல!. விஷ்ணு அவதரித்த பிறகு அவர் சொல்லியவிதமே "பிறந்தார்" என்று கொண்டு, அவரை பிறந்த மற்ற உயிர்களினின்றும் பிரித்துக் காட்டி விடலாம் என்பது 'பாஞ்சராத்திர நீதி' போலிருக்கிறது!.

சிவனுக்கு 'பிறப்பு' உண்டு என்று வைணவர்கள் எவ்வளவு எழுதினாலும், சொல்லித்திரிந்தாலும், விஷ்ணுவுக்கு பிறப்புண்டு என்பதைக் "குற்றமாகாது" என்று சாதிப்பதற்காக அவர்கள் கொண்ட துணிவு அது என்பதைக் காட்டிவிடுகிறது!!.

விஷ்ணுவாக இருந்தபோது அவர் செய்தனவாகவுள்ள அற்புதங்கள் எல்லாமே மற்ற ரிஷிகளாலும், சிவனடியார்களாலும் செய்யப்பட்டவையாக இருப்பவையே!, இந்நியாயம் கொண்டு இன்றும் சில ஏழைகள் - ரிஷிகளையும், சித்த புருஷர்களையும், சந்நியாஸ வேடம் பூண்டவர்களையும் "தெய்வமாக" பாவித்து மதிமயங்கி போற்றுவதையும் நாம் காணக்கூடியதாக இருப்பது மிக கேவலம் அல்லவா?!

விஷ்ணு தாம் பிறக்கும் முன்பு தாம் பிறக்கப் போவதாக (அவதரிக்கப் போவதாக) சொல்லியுள்ள சரிதங்கள் கடவுளுக்கு கர்ப்பவாஸம் உண்டு எனும் கொள்கையுடைய வைணவர்கள் போன்றோரே நம்பத் தகுந்தன. இந்நியாயத்தைக் கொண்டு ஒரு பெரிய நியமத்தை புரட்டிவிட முடியாது. கர்ப்பவாஸம் ஒன்றே

உயிரையும் (பதியையும் - பசுவையும்) கடவுளையும் பிரித்துக் காட்டவல்லன. *தோற்றமுண்டேல் மரணமுண்டு” ‘பிறந்தன இறக்கும்’ என்பன திருமுறை வாக்கியங்கள். இத்தகைய ஜனன மரணமில்லாதவர் நம் பரமேச்வரர் ஒருவரே!, கர்ப்ப வாஸத்தை நல்ல சித்தம் உள்ளவரும், ஞானிகளும், பெரியோர்களும் விரும்புவதில்லை, ஆனால் இந்த வைணவ அபிமானமுள்ளவர்களும், வைணவர் களும் ஹரிக்கு பரத்துவம் ஸ்தாபிக்க, ‘கர்ப்ப வாஸத்தை ஹரி, இவ்வுலக ரட்சணைக்காக விரும்பி ஏற்றான்!’ என்பார்கள்!, கர்ப்ப வாஸம் என்பது கொடுமை யானது என்பதினால் யாருக்குத்தான் அதில் வசிக்க விருப்பம் வரும்?. நற்கதி விரும்பும் ஒருவனும் கர்ப்ப வாஸத்தை விரும்ப மாட்டான்!!. கர்ம வசத்தில் அகப்பட்டவன்தான் கர்ப்ப வாஸத்திற்கு தள்ளப்படுவான்! என்பது சுருதியாதிகள் காட்டும் நிலை!. இதற்கு ஹரி எப்படி விதிவிலக்காவான்?!,

**080.**

**ஏகஸ்ஸுரைரூப கிரம்ஹிதச்சகார தஸ்மைததௌ**
**ஸுதமதிக்ஷிதிஸாம்பமந்ய: ।**
**கோவாநயோரதிக இத்யநு சிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஸுரை:** = தேவர்களாலே சூழப்பட்டவனாக **உபகிரம் =** மலைச்சாரல்களில், **தப:** = தவத்தை, **சகாரஹி =** செய்தவனானான், **அந்ய:** = இன்னொருவன், **அதிக்ஷிதி** = பூலோகத்தில், **ஸாம்பம்** = சாம்பன் என்கின்ற, **சுத:** = பிள்ளையை, **ததௌஹி** = அவனுக்கு கொடுத்தான், **அநயோ:** = இவ்விருவரு க்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தன் மனைவியான ஜாம்பவதி என்பவளுக்கு சற்புத் திரப்பேறு வேண்டி, ஸ்ரீ உபமந்யு மஹரிஷியை அடைந்து சிவதீகை பெற்று, மந்தார மலைச்சாரலில் அநேக வருடங்கள் தவமிருந்து, மஹேச்வரரிடம் வரம் பெற்று புத்திரப் பேறடைந்தவனாக உள்ளவன். அருந்தவம் செய்பவனிலும், அத்தவம் செய்தவனுக்கு வரம் தருபவன் சிறந்தவன் என்று சொல்லவும் வேண்டுமோ? இழிந்த ஹரியை அப்பிரதானமாக ஒதுக்கி நாங்கள் அந்த மிக உயர்ந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**பாரதம்/அநுசாஸன பர்வம்/5வது அத்யாயம்/தானதர்மபர்வத்தில்** கிருஷ் ணன் தமக்கும் தன் மனைவி ஜாம்பவதிக்கும் ஓர் சற்புத்திரன் வேண்டி உபமன்யு மஹரிஷியை அடைந்து, சிவபெருமானை நோக்கித் தவம் செய்யும் வகையும், அவரை அறியும் வழியும் கேட்டு, அவ்வுபமன்யு மஹரிஷியின் மூலம் **“ஸ்ரீ சிவசஹஸ்ர நாமம்”** என்னும் 'மந்திர ராஜா’ வைப் பெற்று அதைத்துதித்து அநேக வருடம் மலைச்சாரல்களில் பிள்ளைவரத்திற்காக தவம் செய்ததும், உமாமகேஸ்வ

ரர் பிரசன்னமாகி அவரும் உமையும் கிருஷ்ணனுக்கு தலா எட்டு எட்டு வரங்களை அருளியதும் மிக விரிவாக ஸ்ரீ பாரதத்தில் உள்ளது.

**081.**

**ஏகஸ்துபாணகதிமேத்யகரம்வ்ருணேதி சாந்யோக்ஷித்**
**புரஜயாயதமேவபாணம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனானால், **பாணகதிம்** = அம்பினை, **ஏத்ய** = பெற்று, **கரம்** = கரனை, **வ்ருணோதி** = அழித்தான், **அந்ய:** = இன்னொருவனோ, **புரஜயாய** = திரிபுர சம்ஹாரத்திற்காக, **தமேவ** = அவனையே, **பாணம்** = அம்பாக, **அக்ஷிவத்** = உபயோகித்தான், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனது இராமாவதாரத்தின் போது சுக்ரீவனுக்கு உதவி செய்ய, வாலியென்னும் (குரங்கினம்) அசுரனைக் கொல்ல சாதாரண அம்பினைக் கொண்டு அவன் மீது அதை எய்தி கொன்றான். ஹரனோ, திரிபுர சம்ஹாரத்தில் அந்த ஹரியையே தம் கையில் அம்பாகக் கொண்டு திரிபுராதிகளை (அவ்வம்பை உபயோகிக்காமலே) தன் அட்டகாசத்தினால் அழித்தான் என்று பிரசித்தி பெற்றவன்.

கானகத்தில் இருக்கும் சாதாரண குரங்கினத்தினை சாதாரண அம்பு கொண்டு கொல்வதில் என்ன பெருமை இருக்கின்றது?! ஹரியையே ஓர் பாணமாகக் கொண்டு, அவனைத் தன் கையில் ஏந்திய ஹரன் சிறந்தவனல்லவா! தன்னுடைய சாதாரணமான ஓர் அம்பினால் வாலியைக் கொன்ற ஹரியிலும், அந்த ஹரியையே ஓர் அம்பாகக் கொண்ட ஹரன் சிறந்தவனாதலால், இவ்விஷயத்திலும் தாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக ஒதுக்கி, ஹரனையே சரணம் அடைகின்றோம்,

(வால்மீகி இராமாயணத்தில், சுக்ரீவனுடைய மனைவியை வாலி அடைய முயற்சித்ததும், தனக்கு உதவினால் தன் குரங்குச் சேனைகளை இராமருக்கு தந்து உதவ பிரதிபலனான உபாயத்தை சுக்ரீவன் தெரிவித்ததும், அதற்கிசைந்த இராமன், வாலியை மறைந்து நின்று கொன்றதும், அதன் பிறகு சுக்ரீவன் எந்த காரணத்திற்காக வாலியைக் கொல்லச் சொன்னானோ, அதைப்போன்றே அதே சுக்ரீவன், வாலியின் வதைக்குப் பிறகு அவ்வாலியின் மனைவியான தாரையைச் சிதையில் தீக்குளிக்காமல் தடுத்து, தன்னுடனே வைத்துக் கொண்டதும், இராமாயணத்தில் விவரிக்கப்பட்டிருப்பதுதான்!, இந்த சுக்ரீவனை யார் மறைந்திருந்து கொல்வது? கேட்டால் வானர நீதி வேறு; மனித நீதி வேறு என்று வியாக்யானம் பேசுவார்கள்!.)

(இவ்விதம் இராமன் உதவியதற்கு சுக்ரீவன் செய்த "பிரதிபலன்" ஒன்றை அதே இராமாயணம் பகர்கிறது! அது என்னவென்றால், சீதையைத் தேடும் பணிக்கு வானர சேனையைத் தந்து உதவுவதாகச் சொன்ன சுக்ரீவன், தான் சொன்னவாறே வானரச் சேனகளை சீதையைத் தேடும் பணிக்கு அனுப்பிவிட்டு, தாம் இவ்விதம் வாக்குத் தவறாமல் செய்தது இராமனுக்குத் தெரியாமலா இருக்கப் போகிறது? என்றோ, அல்லது - இராமன் மிகவும் நல்லவன், நம்மீது மிகுந்த நம்பிக்கை உள்ளவன், நாம் கேட்டவாறு சுக்ரீவன் வானர சேனைகளை அனுப்பியிருப்பான் என்றே தம்மை அவன் கருதுவான் என்றோ; இதில் எதுவோ, அல்லது வேறு என்ன காரணமோ; இராமன் மீதுள்ள நம்பிக்கையில், இராமனுக்கு உதவ வானர சேனை களை அனுப்பிய விவரத்தைச் சொல்லாமலே விட்டுவிட்டான்.

சுக்ரீவனுக்கிருந்த இம்மாதிரியான எண்ணம் இராமனுக்கு இருக்குமா? அண்ணனைக் கொன்று அவன் மனைவியை தம்பியுடன் சேர்த்தவன் ஆயிற்றே? சந்தேகம் வந்துவிட்டது! வானரச் சேனைகளை அனுப்பினானா? இல்லையா? என்று!. அண்ணனது உளக்குறிப்பறிந்து செயல்படும் தம்பி இருக்க வீண்கவலை எதற்கு இராமனுக்கு? வானர சேனையை அனுப்பவில்லையோ என்கிற அண்ணனது மன ஓட்டத்தை அறிந்த தம்பி இலட்சுமணன், நேரே சுக்ரீவனிடம் அதுபற்றி கேட்கச் சென்றான். (இதிலிருந்துதான் 'தம்பியுடையான் படைக்கு அஞ்சான்" எனும் புகழ் மிக்க வசனம் வந்தது போலும்!!)

வாலியின் வதத்திற்கு முன்பாக இருந்தால் சுக்ரீவன் எழுந்தோடி வந்திருப் பான்; இந்த இலட்சுமணனை வரவேற்க.!! சுக்ரீவன் என்ன செய்தான் தெரியுமா? கால்மேல் கால்வைத்து தூங்கிக்கொண்டிருந்தான்! அதைவிடக் கொடுமை அடுத்து அவன் செய்தது!. வாலியின் மனைவி தாரையை அழைத்து அவளைவிட்டு "அனுப்பியாயிற்று" என்று கோவத்தோடு வந்த இலட்சுமணனிடம் "பதில்" சொல்லச் சொன்னான்!. (அவள் வாய் ஜாலத்தில் கில்லாடியாம்!). இராமன் இந்த தாரையின் கணவன் வாலியைக் கொன்று, தூங்கியவாறே பதில் சொன்ன சாட்சாத் இந்த சுக்ரீவனுக்குத்தான் "உதவினான்"!! வானர சேனைகளை அனுப்பியாகிவிட்டதா? இல் லையா? என்று அறிய வந்த இலக்குமணனிடம், இராமனால் கொல்லப்பட்ட வாலி யின் மனைவி தாரையின் மூலமாக சுக்ரீவன் "பதில்" சொல்லி அனுப்பிய விஷயம், அர்த்தங்கள் பல நிறைந்ததாகும், (வைணவர்களுக்கு!)

**082**

**ஏகஸ்ஸதாஸவித்ருமண்டல மத்யவர்த்தீசாந்யஸ்ஸ**
**தாஸவித்ருதத்தபிதாவரீயாந் ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஸதா** = எப்போதும், **ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ** = சூரியமண்டலதின் ஓரங்கமாக உள்ளவன், **அந்ய:** = இன்னொருவனோ, **ஸதா** = எப்போதும், **ஸவித்ருதந்தபிதா =** அச்குரியனின் பல்லை, **வரீயாந்** = உடைத்தவன்,

**அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக: =** சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ பன்னிரு ஆதித்தியர்களில் ஒருவனாக இருக்கின்ற வன். ஹரனோ தக்ஷயாகத்தில் அவிர்ப்பாகம் பெறும் பொருட்டு வந்த சூர்யனின் பல்லை உடைத்து துரத்தினவன். (சமஸ்கிருத ஸ்லோகம் சொல்வதற்கு பற்கள் மிகமிக முக்கியம். பல்லில்லாதவர்கள் மந்திர உச்சாடனம் செய்யக்கூடாது என்பது மட்டுமல்ல, பல்லில்லாதவன் சொல்லும் மந்திரத்திற்கு அர்த்தம் எல்லாமே அநர்த்தம்தான் என்பதும் இங்கு கவனத்தில் கொள்ளத்தக்கது!. இழிவான காரியங்களுக்கு (சூன்யம், வைப்பு முதலிய) தன் சிஷ்யன் செல்லுவான் என்று தெரிந்தால், குருவானவர் அச்சிஷ்யனது பல்லை உடைத்து விடுவது அன்றைய வழக்கம்.) பன்னிரு சூர்யனாக சூர்ய மண்டலவாசியாக) இருக்கும் ஹரியிலும், அச்சூர்யனின் பல்லைப் பிடுங்கி உடைத்த ஹரன் சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

காச்யப முனிவருக்கும் அதிதிக்கும் பிறந்த பன்னிரு ஆதித்தியர்களில் ஒருவனாக விளங்கும் ஹரியிலும், அவ்வாதித்தியர்களில் ஒருவனுடைய பல்லை உடைத்ததினால் விளங்கும் ஸ்ரீ பரமேச்வரரின் மஹிமை சொல்லவும் வேண்டு மோ?।

**083.**

**ஏகஸ்து மாதவ இதிப்ரஸித்தித: ஸ்வநாம்நா த்வந்யோஹ்யு**
**மாதவ இதிப்ரசித:ஸ்வநாம்நா।**
**கோவாந்யோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:।।**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனானால், **மாதவ:** = மாதவன், **இதி** = என்று, **ப்ரதித:** = பிரசித்தியடைந்தான், **அந்ய:** = இன்னொருவனோ, **உமாதவ:** = உமாதவன் (உமையினால் தவம் செய்யப்பட்டவன்), **இதி** = என்று, **ஸ்வநாம்நா** = தன் பெயராகவே, **ப்ரதித:** = பிரசித்தி அடைந்தவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின் றோம்.

**தாரதம்மியம்:** தனது ஒவ்வொரு அவதார காரியமும் இனிது நிறைவேறுவத ற்கு மாதவம் செய்ததினால் ஹரி “மாதவன்” என்றழைக்கப் படுவது அனைவருமே அறிந்த ஒன்றுதான். ஆனால் ஹரனோ தன்னில் பாதியாக விளங்கும் உமைக்கு, அவளது மாதவத்திற்கிரங்கி அவளைத்தன் சரீரத்தில் பாதியாகக் கொண்டதினால்

ஹரன் "உமாதவன்" என்ற திருநாமம் அடைந்து மிகவும் பிரசித்தி பெற்றவனாக இருக்கின்றான். மாதவன் எனும் சொல்லைக்காட்டிலும் உமாதவன் என்பதில் ஓரெழுத்து கூடுதலாகவும், அவ்வொரு எழுத்து கூடுதலானதால் விளங்கும் அர்த்த விசேஷங்களினாலும் ஹரன் சிறந்தவன் என்பது தெளிவு, நாங்கள் இந்த ஹரனை யே சரணம் அடைகின்றோம்,

**084.**

**கோபால கஸ்த்வநுஸ்ருதஸ் ஸுதராமிகைகோதிக்பாலகைஸ்த்வ**
**அநுஸ்ருதஸ்துதிகம்பரோந்ய|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** ஒருவன், **இஹ** = இவ்விடத்தில், **கோபாலகைஸுதராம் =** இடையர்களால் ரொம்பவும், **அநுஸ்ருத:** = அநுசரிக்கப்படவனானான், **திகம்பர =** திகம்பரனாகிய, **அந்யந் =** மற்றொருவனோ, **திக்பாலகை:து** = அட்டதிக்கு பாலர் களாலே, **அநுஸ்ருத:** = அநுசரிக்கப்பட்டவன், **அநயோ**: இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி =** இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம: =** ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ; ஒன்று கோபிகைகளுடனோ, அல்லது இடைச்சேரி யிலுள்ள இடையர்களுடன் சகவாசம் செய்பவனாகவோ இருக்கின்றான். ஹரனோ அவ்விருவரைக் காட்டிலும் மேம்பட்டவர்களான ஈசான - குபேராதிகள் எனும் பெருமை மிக்க அட்டதிக்கு பாலகர்களுடன் சதா சகவாசமுள்ளவனாக உள்ளான். இதிலுள்ள பெருமைகள் ஹரனையே சிறந்தவன் என்று எடுத்துரைப்பதினால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**085.**

**ஏகோ களத்யநுதநந் நவநீதமேவ மந்யோகளத்யதி**
**பயங்கர காளகூடம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **அநுதிநம்** = ஒவ்வொரு நாளும், **நவநீதம்** = வெண்ணையை, **களதி =** சாப்பிட்டவன், **அந்ய:** = இன்னொருவனோ, **அதிபயங்கர காளகூடம்** = மிகக் கொடிய ஆலகால விஷத்தினை, **களதி** = விழுங்கினவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்**: வெண்ணையுண்டு தன் நாவின் சுவைக்காக வாழும் ஹரியை விட, காளகூடம் என்னும் கொடும் விஷத்தினை லோகோபகாரத்திற்காக உண்டு வாழும் ஹரனை சிறந்தவன் என்பதினாலும், எல்லோராலும் உண்ணக்கூடிய வெண் ணையைத் தின்பதில் என்ன பெருமை இருக்கின்றது? என்பதினாலும் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம். தாமஸ குணத்தை அபிவிருத்தி செய்யும் உணவு வகைகளில் வெண்ணையும் ஒன்று. தவிர இந்த வெண்ணையை எவர் வேண்டுமானாலும் சாப்பிடலாம். எந்த சிரமமும் சாப்பிடுபவனுக்கு உண்டாகாது. ஆனால் ஹரன் உண்ட காளகூட விஷம்?!

**086.**

**ஏகஸ்து சைலநிசயைர்ஜலதிம்ப பந்தத்வந்யஸ்தமேவ**
**ஜலதிம்சரதிஞ்சகார ।**
**கோவாந்யோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனானால், **சைலநிசயை:** = மலைகளிலுள்ள கற்களினாலே, **ஜலதிம்** = கடலில், **பபந்த** = வழியமைத்தான், **அந்ய:து** = மற்றொரு வனோ, **தமேவஜலதிம்** = அக்கடலையே, **சரதிம்** = அம்புக்கூடுகளாக, **சகார** = செய்துகொண்டவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்,

**தாரதம்மியம்**: ஹரியோ மலைகளைக் கொண்டு கடலுக்கு அணை கட்டிய வனாக உள்ளவன், ஹரனோ அக்கடலையே தன் அம்பறாத்தூணியாகக் கொண்ட வன். வெளிப்படையாக இதில் சிறந்தவன் யார் என்று தெரிவதால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்,

**087.**

**ஏகோ விவேசஸரயூ ஸலிலாந்தராளேஹ்யந்யோத**
**தௌத்ரிபதகாம் கடவஜ்ஜடாயாம்।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஸரயூஸலிலாந்தராளே** = சரயு நதியின் மத்தியில், **விவேசஹி =** பிரவேசித்தவன், **அந்ய:** = இன்னொருவனோ, **ஜடாயாம்** = தன் தலைச்சடையிலே, **த்ரிபதகாம் =** கங்கையை, **கடவத்** = குடத்தினைப்போல், **ததௌ** = தாங்கினவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** =

உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சரயு நதி புனிதம் என்று அதில் மூழ்கினவனாக உள்ளவன். (இராமாவதாரத்தில், வைகுந்தம் போகும் நாளில் அயோத்தியின் அருகில் உள்ள சரயுவில் மூழ்கி விண்ணுலகை அடைந்தான்.) ஹரனோ பித்ருக்களுக்கு உண்டான கடன் தீரவேண்டும் என்று பகீரதனுக்காக விண்ணுலகில் இருந்து புவிக்கு வந்த கங்கையினை அதன் வீறடங்க தன் சடையில் தாங்கினவனாக இருப்பவன். விண்ணுலகம் செல்ல ஒர் நதியில் முழுகினவனைக் காட்டிலும், விண்ணுலகம் சென்றோருக்கு பித்ரு தர்ப்பணாதி காரியங்களுக்காக அவ்விண்ணிலிருந்த கங்கையை கீழே விழச்செய்து அவளைத் தன் ஜடாமகுடத்தில் இருத்திய கங்காதரனாகிய ஹரன் சிறந்தவன் என்பதில் அந்த ஹரிக்கே சந்தேகம் இருக்காது!, பிறகு நம்மைக் கேட்பானேன்? நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

**088.**

**ஏகஸ்ய ரூபமதிகச்சதி தாமஸத்வமந்யஸ்வரூப**
**மதிகச்சதி ஸாத்விகத்வம்|**
**கோவாந்யோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்ய** = ஒருவனுடைய, **ரூபம்** = உருவமானது, **தாமஸத்வம்** = தாமஸத்தன்மையை, **அதிகச்சதி** = அடைந்தது, **அந்யஸ்ய** = இன்னொருவனுடைய, **ரூபம்** = உருவமானது, **ஸாத்விகத்வம்** = சாத்துவிகத் தன்மையை, **அதிகச்சதி** = கொண்டது, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** =ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** கரிய நிறம், நித்திரையில் விருப்பம், பாம்புப்படுக்கை, தயிர், வெண்ணை போன்ற தாமஸ உணவு வகைகள், ஆகியவை தமோ குணத்தினருக்குண்டான அடையாளமானவையாதலால் ஹரிக்கு இவை அனைத்துமே பொருந்தி, தமோகுணத்தவனாக இருக்கின்றான். ஹரனோ சத்வகுணபோதனாக வெண்மை நிறமும், உயர்ந்த இடத்தில் இருப்பிடமும் கொண்டு, ஞானத்தை உபதேசிக்கும் குருமூர் த்தியாகவும் இருப்பதால் நாங்கள் அந்த சத்வ குணமூர்த்தயான ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம்,

**பாரதம்/ஆச்வமேதிக பர்வம்/87 வது அத்தியாயத்தில்**, பிரும்ம தேவர் காச்யப முனிவரிடமும் மற்றுமுள்ள ரிஷிகளுக்கும், தாமஸ குணத்தைப் பற்றியும், அதன் லட்சணத்தைப் பற்றியும் விவரிக்கும் பகுதியில்; **"மோஹம், அஞ்ஞானம். ஈயாமை, கர்மங்களை நிச்சயிக்காமை, நித்திரை, கர்வம், பயம், பேராசை, சோகம், புண்ணியத்தை தூஷிப்பது, மறதி, நல்லபுத்தியின்மை, நாஸ்திகனாக**

**இருப்பது, கெட்டநடை. யுக்தாயுக்தத்களை தெரிந்து கொள்ளாமை, எல்லா இந்திரியங்களையும் உள்ளபடி அறியாமை, தாழ்ந்த ஜாதியின் தொழில்களைச் செய்வது, செய்யப்படா ததை செய்தததாக நினைப்பது, அஞ்ஞானத்தை ஞானமாக நினைப்பது, நட்பின்மை, கெட்ட அபிப்ராயம், அசிரத்தை, மூடபுத்தி, நேர்மை யில்லாமை, பாவகார்யம், அறியாமை, சோம்பல், தேவதையிடத்தில் பக்தியில் லாமை, இந்திரியங்களை ஐயிக்காமலி ருப்பது, இழிவான கார்யத்தில் ஆசை, இவை எல்லாம் தாமஸ குணத்தினால் ஏற்பட்ட காரியங்கள் என்று சொல்ல லாம்"** என்று உபதேசித்திருக்கிறார் . ஸ்ரீ பிரும்ம தேவர் தாமஸ குணங்களுக்குண் டான இலக்கணத்தை சொன்னபடி அவை எல்லாமே ஹரிக்கு பொருந்துகிறதை அவன் சம்பந்தப் பட்ட புராணங்களை படித்து அறிந்து கொள்ளலாம்,

இதில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய தாமஸ குணலட்சணத்தை விவரிக்கும் பகுதி **வனபர்வம்/13வது அத்தியாயத்தில்** தெளிவாகவே வருகிறது. அதில் ஸ்ரீ கிருஷ்ணரது வார்த்தையாகவே சொல்லப்பட்ட பகுதியில் இருந்து, அவனுக்கு மேற்சொன்ன தாமஸ குணத்தின் தகுதிகள் என்னென்ன பொருந்துகிறது என்று பாருங்கள்!

துரியோதனது சபையில் சூதாட்டத்தில் சகலத்தையும் இழந்து, "ஊசிமுனை நிலம் கூட கிடையாது!" என்று துரியோதனாதிகளால் நாட்டைவிட்டு வனத்திற்கு விரட்டப்பட்ட பாண்டவர்களை ஸ்ரீ கிருஷ்ணன் சந்தித்து, சூதாட்ட காலத்தில் தாம் துவாரகையில் இல்லாததால் துரியோதனனுடைய சபைக்கு வரவில்லை என்றும்; அவ்விதம் தாம் வந்திருந்தால் துரியோதனனை கொன்று போட்டிருப்பேன் என்றும்; சூதாட்டமும் நடந்திராமல் தடுக்கப் பட்டிருக்கும் என்றும் பாண்டவர் களிடம் சொல்லி, அச்சமயத்தில் தாம் துவாரகையில் இல்லாததற்கு காரணமாக தம்மால் கொல்லப்பட்ட சிசுபாலனின் மரணத்தை தாங்காத சால்வராஜன் அதற்குத் தம்மைப் பழிவாங்க, துவாரகையை நிர் மூலமாக்கி அந்நகரத்து மக்களையும் கொன்று குவித்து, **தன்னையும் கொல்ல அவன் தேடியலைந்த விவரத்தை தம் தேசத்து மக்களால் சொல்லக் கேட்டறிந்து, சால்வனை எப்படியேனும் கொல்ல, தாம் அவனைத்தேடி அலைந்ததினாலும்**, பின் கடும் போர் ஏற்பட்டதினாலும்தான் தான் அஸ்தினாபுரத்திற்கு வரமுடியவில்லை! என்று சொல்லும் **வனபர்வம்/20வது அத்தியாயத்தில்** உள்ளது. ஸ்ரீ கிருஷ்ணனது திருவாக்கிலிருந்து வந்த மற்றதையும் பாருங்கள்!

"நான் பிராம்மண சிரேஷ்டர்களை ஸ்வஸ்தி வாசகங்கள் சொல்லச்செய்து, மிக்க மனக்களிப்புற்ற அந்த யாதவ வீரர்களாலும், **ஆசீர்வாதங்களால்** மகிழ்விக்கப் பட்டு **சிவபெருமானை தலையில் வணங்கிப் பாஞ்சஜன்யம் என்கிற சிறந்த சங்கை ஊதித்** திக்குகளை....." என்றும்;

"தேரோட்டியான தாருகன் அந்த சால்வனுடைய அம்பு மழையில் கொல்லப் பட்ட சமயம், துவாரகையில் வசிப்பவனும், ஆஹுகனுடைய வேலைக்காரனுமான ஒருவன் வந்து "துவாரகையில் உன் பிதா வசுதேவர் சால்வனால் கொல்லப்பட்டார்" என்று சொல்லியதும் நான் மிக்க மன வருத்தம் அடைந்து செய்யத்தக்கதும், செய்ய

த்தகாததுமான காரியத்தின் நிச்சயத்தை அறியவில்லை. அவனது அப்பிரியமான அந்த வார்த்தையைக் கேட்டதும் எனக்கு சாத்யகி, பலதேவர், பீரத்யும்னன் முதலி யோரை மனதினால் நிந்தித்து, அவர்கள் மேல் மிகுந்த கோவம் அடைந்தேன். **நான் துவாரகையின் பாதுகாப்பிற்காகவும், என் பிதா வசுதேவருடைய ரட்சணைக்காக வும் அவர்களை நம்பி ஒப்படைத்தேன். அவர்களுடன் சேர்ந்த சாருதேஷ்ணனும், சாம்ப னும் உயிரோடு இருக்கிறார்களோ இல்லையோ?! இதையெல்லாம் எண்ணிய போது மிகுந்த மனக்களக்கத்தில் விற்களுள் சிறந்த சாரங்கமானது என்னுடைய கையில் இருந்து நழுவிற்று! நானும் மோகத்தை அடைந்தவனாகி (மயக்கமுற்று) தேரினுள் விழுந்தேன். தேரில் விழுந்த என்னை, என் சேனைகள் இறந்து விட்டதாகக் கருதி, என்னைப் பார்த்து ஓ! ஓ!! என்று அலறின**," என்றும்;

பின் தன் தேரோட்டி ஸுதன் என்பவன் சொல்லியபடி சால்வனைக் கொல்ல நிச்சயித்து, "எவர்கள் இப்பொழுது எனது சத்ருக்களோ அவர்களையும், சௌபத்தை யும் (சால்வராஜனுடைய தேசம்) உன்னுடைய் வீரியத்தால் நாசம் செய்!" என்று தனது கையில் வைத்துள்ள சக்கரத்தைப் ப்ரார்த்தித்து பிரயோகித்ததையும், சால்வ னைக் கொன்றதையும் வனத்தில் இருந்த யுதிஷ்டிரரிடம் சொல்லி, இவ்விதமாக சால்வராஜனைக் கொல்லும் நிமித்தமான போரில் தாம் ஈடுபட்டிருந்தமையால்தான் தம்மால் ஹஸ்தினாபுரம் வரமுடியவில்லை என்றும்; தான் வந்திருந்தால் சகுனியுட னான சூதாட்டமும், பாண்டவர்களுடைய வனவாசமும் ஏற்பட்டிருக்காது என்றும்; துரியோதனனும் தன்னால் கொல்லப்பட்டிருப்பான் என்றும் சொல்லி, **பாண்டவர்க ளிடம் அநுமதி பெற்றுக் கொண்டு, தர்மராஜனான யுதிஷ்டிரரை நமஸ்கரித்துச்** சென்றார் - என்று வரும் பாரதத்தின் **வனபர்வம்/21வது அத்தியாயம்** சொல்வதி லிருந்து ஸ்ரீ கிருஷ்ணன் சாதாரண மனிதர்களுடைய அஞ்ஞானத்தை உடையவனாக இருந்ததையும்; மேலும், கர்மங்களை நிச்சயிக்காமை, கர்வம், மறதி, நல்லபுத்தியி ன்மை, யுக்தாயுக்தங்களை தெரிந்து கொள்ளாமை, அஞ்ஞானத்தை ஞானமாக நினை ப்பது, நட்பின்மை, கெட்ட அபிப்ராயம், அசிரத்தை, மூடபுத்தி, நேர்மையில்லாமை, பாவகார்யம், அறியாமை, சோம்பல், முதலிய பல தாமஸ குணத்தின் லட்சணங் களை நமக்குத் தெரிவிப்பதை அறியலாம், மேலும்;

விருத்திரனுக்கு பயந்து அஞ்ஞாதவாசம் இருந்த இந்திரனுக்கு உதவ அவ்விரு த்தரனைக் கொல்ல ஹரியானவன் கடல் நுரையில் பிரவேசித்து விருத்திரனைக் கொன்ற விவரமும், அவ்விதம் கொன்றும், இந்திரன் வெளியே தலைகாட்ட முடியாமல் இருந்த விவரம் **பாரதம்/உத்யோகபர்வம்/9வது அத்தியாயம்** பகுதி யிலும், தலைமறைவான அந்த இந்திரன் இல்லாது தம்மை ரட்சிக்க ஓர் தேவேந் திரன் வேண்டும் என்று தேவர்கள் "நகுஷன்" என்பவனை சரணடைந்து அவனை இந்திரனாக இருக்க வேண்டிய பகுதியும், அதற்கிசைந்த நகுஷன் தேவேந்திரனாக பதவியேற்று ஆண்டதையும், அவ்வாறு ஆண்டுவரும் நாளில் இந்திரனின் மனைவி யை தம்மிடம் அனுப்ப தேவர்களை நகுஷன் பணித்த விவரமும்; இந்த நகுஷனுக்கு பயந்து இந்திரன் தாமரைத்தண்டில் ஒளிந்து வாழ்ந்த பகுதியும் பாரதத்தில் இதே உத்யோக பர்வத்தில் வருகிறது.

பின் நகுஷன் தனக்கு ரிஷிகளை வாகனமாக சுமக்கச் செய்த பழிக்காக ஸ்ரீ மஹாதேவருடைய அடிமையான ஸ்ரீ அகத்திய முனிவர் அவனை இந்திர பதவியில் இல்லாது இருக்கவும், பதினாயிரம் வருடங்கள் பாம்பாக இருக்க சபித்ததையும் அவ்வகத்திய முனியால் அறிந்த இந்திரன், அவ்வகத்திய முனிவரது ஆசியால் மீண்டும் இந்திரபதவி பெற்றதையும் அதே உத்யோக பர்வம் பகர்வதை அறியலாம்.

ஆனால் இந்த இந்திரன் விஷயமாக இதே பகுதியைச் சொல்லும் பகுதி **துரோண பர்வம்/94 மற்றும் 103 வது அத்தியாயத்தில்** சற்று வேறு மாதிரி (இந்நிகழ்ச்சிக்கு சம்மந்தமில்லாத அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சொல்லுவதாக வரும் பகுதியில்) வருகிறது. 94ம் அத்தியாயத்தில்;

த்வஷ்டாவினால் பத்து லட்சம் வருஷங்கள் கடும் தவமிருந்து உண்டான விருத்திரனால் இந்திரனுக்கு ஆபத்து என்பதால் இந்திரனது நன்மையைக் கருதி தேவர்கள் ஸ்ரீ மஹாதேவரை வேண்ட, இந்திரனுக்கு ஒரு கவசத்தைக் கொடுத்து, அதை அணியும் போது சொல்லவேண்டிய மந்திரத்தையும் சொல்லிக் கொடுத்து அவ்விருத்திரனைக் கொல்ல அனுக்ரஹித்ததையும், ஸ்ரீ மஹாதேவரால் இந்திரனுக்கு தரப்பட்ட அந்த கவசத்தை இந்திரனிடமிருந்து ஆங்கீரசும், ஆங்கீரசிடமிருந்து பிருஹஸ்பதியும், பிருஹஸ்பதியிடமிருந்து அக்நிவேச்யரும், அக்நிவேச்யரிடமிருந்து துரோணரும் பெற்ற விவரம் சொல்லப்பட்டுள்ளது, (**இந்த கவசத்தை துரியோதனன் அணிந்து கொண்டதினால்தான் அர்ஜுனன் விடும் அம்புகள் பயனற்று வீழ்ந்தன என்றும்; அர்ஜுனனது பாணங்கள் துரியோதனனை தாக்காது வீணே போவதையும் கண்ட ஸ்ரீ கிருஷ்ணன் மிகுந்த ஆச்சர்யம் அடைந்ததும், அது குறித்து அர்ஜுனனிடம் கேட்ட பகுதியும் பாரதத்தில் துரோண பர்வம்/103வது அத்தியாயத்தில் உள்ளது**)

துரியோதனனுக்கு துரோணர் அக்கவசத்தின் சரிதத்தைச் சொல்லி, அதை அணியும்போது சொல்லவேண்டிய மந்திரத்தையும் உபதேசித்துக் கொடுத்த விவரமும், அதன் மகிமை ஸ்ரீ கிருஷ்ணனது பிரமிப்பினாலும் நமக்கு தெரியப்படுத்தப்பட்டுள்ளது.

அக்கவசம் பற்றி எதுவும் தெரியாமல், “அஸ்திரம் வீணாவது எனக்கு பிரமிப்பு ஊட்டுகிறது, அதற்கு காரணம் என்ன?” என்று ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனை கேட்பதும், “அக்கவசத்தை ஸ்ரீ மஹேச்வரர் (தேவநாதர்) ஆங்கீரசுக்கு முதலில் தந்தார், அவர் அதை பிருஹஸ்பதிக்கு தந்தார், பிருஹஸ்பதி இந்திரனுக்கு கொடுத்தார்!” என்று அர்ஜுனன் எல்லாம் தெரிந்தவன் போல ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அக்கவச சரிதத்தை தலைகீழாக மாற்றி சொன்னதும் அப்பாரதத்தில் வருகிறது.

தான் பெற்ற கவசத்தினுடைய சரிதமானது, பாண்டவர்களுக்கும் - கௌரவர்களுக்கும் குருவாக இருந்த துரோணருக்குத் தெரியுமா? அல்லது அத்துரோணரான குருவிடம் பாடம் படித்த சிஷ்யனான அர்ஜுனனுக்குத் தெரியுமா? இதிலுள்ள உண்மை நமக்குத் தெரிகிறதோ இல்லையோ?........ அர்ஜுனனது அஸ்திரம் வீணே போவது ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் தெரியாமல் போனதும், அதைத்

தெரிந்து கொள்ள அர்ஜுனனைக் கேட்டதும், அதற்கு வாய்க்கு வந்தபடி கவசம் வந்த சரிதத்தை அதன் வரிசைக் கிரமத்தை மாற்றி சொன்னதும், அதை ஸ்ரீ கிருஷ்ணன் செவிமடுத்து கேட்டதும் அந்த கிருஷ்ணனை யார்? என்றல்லவா நமக்கும் தெரிவிக் கிறது?!

இது தவிர பாரதத்தில் ஜயத்ரதன் கொல்லப்பட்ட விவரமும், ஸ்ரீ கிருஷ்ணன் யார்? என்பதை தெரிவிப்பதாக அமைந்துள்ள பகுதியே!

விருத்தக்ஷத்திரன் என்பவருடைய கடுமையான தவத்தால் சைந்தவன் (ஜயத்ரதன்) பிள்ளையாகப் பிறந்ததும், "உன் மகன் க்ஷத்திரியன் ஒருவனால் தலை துண்டிக்கப் படுவான்!" எனும் அசரீரி வாக்கு உண்டாக, புத்திரனது நன்மையை விரும்பிய விருத்தக்ஷத்திரன் மேலும் கடும் தவமிருந்து, அவ்விதம் யார் கொய்தா லும், கொய்தவனுடைய தலையும் சுக்கு நூறாகும்!" என்று சபித்து தம் மகனை சிறந்தவனாகவும், வீரனாகவும் வளர்த்தான்.

இவ்விதமான பின்னனியுள்ள ஜயத்ரதனுடைய பராக்ரமத்தை அறிந்த ஸ்ரீ கிருஷ்ணன், பாரதப் போரில் தம் சக்கரத்தால் சூரியனை மறைத்து செயற்கையாக இருள் சூழச் செய்து ஜயத்ரதனை வெளியே வரச்செய்து அர்ஜுனனது அம்பு மழையால் ஜயத்ரதனின் தலையைக் கொய்து, அவனது தந்தையின் சாபம் பலியா திருக்க ஜயத்ரதனின் சிரத்தை பூமியில் போடாமல், அதை அவனது தகப்பனாரின் மடியில் போடச்செய்து விருத்தக்ஷத்திரனையும் சேர்த்துக் கபடமாகக் கொன்றான். (இதில் ஜயத்ரதனுடைய தந்தையான விருத்தக்ஷத்திரன் செய்த தவறு என்ன? அவனை ஏன் கொல்லவேண்டும்? இவ்விரு விஷயங்கள் பாரதத்தில் அவர்கள் சம்பந்தப் பட்ட பகுதியிலோ மற்றைய பகுதிகளிலோ சொல்லப் படவில்லை,)

ஜயத்ரதனின் வதம் பேசும் **துரோண பர்வம்/148வது அத்தியாயத்தில்** வரும் மேற்படி விஷயங்கள் சிறந்தவை என்று ஏற்பவர் யார்? இதில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு உண்டான பிரபாவம்தான் என்ன?! இதெல்லாம் சத்வ குணத்தவன் செய்யும் செயல்களா?! இக் கிருஷ்ணனை எப்படி சத்துவ குணமுடையவனாக ஏற்பது?! தவிர தம் சக்கரத்தால் சூரியனை மறைத்து இருளை வரவழைத்த விவரத்தை இவ்வை ணவர்கள் அது ஏதோ வேறு எவராலும் செய்ய முடியாத காரியத்தைப் போல பேசுவதும் உண்டு!. ஒரு ஊரில் ககூ மேகக்கூட்டங்கள் சூழ்ந்து சூரியனை மறைத்து, அந்த இடத்தில் மழை பெய்வதும், அவ்வூருக்கு அடுத்த ஊரில் நல்ல வெயில் அடிப்பதும் இன்றும் நாம் அனைவரும் காணக்கூடியதாக இருக்கும் ஒரு நிகழ்ச் சியே!.

திருக்கடையூர் எனும் ஸ்தலத்தில் வாழ்ந்த ஸ்ரீ அபிராமபட்டர் அமாவாசை யன்று அவர் வாக்கிலிருந்து வந்த சொல் தவறாது இருக்கும்பொருட்டு, வானத்தில் முழு நிலவு (பௌர்ணமி) தெரியக் காரணமாய் இருந்தார் என்பது அனைவரும் கண்ட உண்மைச் சம்பவம். வானில் அமாவாசை அன்று சந்திரன் தோன்றவே தோன்றவே தோன்றாது. ஒரு ஊருக்கு மாத்திரம் அமாவாசை என்றும், பக்கத்து ஊரில் அன்று பவுர்ணமி என்பதும் கிடையாது!!. அமாவாசை பவுர்ணமியாக மாறி

யது என்பது இறையருளால் இயற்கையாகவே அது ஸ்ரீ அபிராமபட்டருடைய வாக்கிற்காக சம்பந்தப் பட்ட தினத்தில் நடந்தேறிய ஒரு மாபெரும் நிகழ்ச்சி. அந் நிகழ்ச்சியால்தான் ஸ்ரீ அபிராமபட்டரின் மஹிமை அவரைப் பற்றி தெரியாதவர்களுக்கும் தெரிய காரணமாகியது. ஸ்ரீ அபிராம பட்டருக்காக நடந்த அந்த நிகழ்ச்சியால் யாரும் கொல்லப்படவில்லை என்பதும் கவனத்தில் கொள்ளத்தக்கது!

**பாரதம்/ஆச்வமேதிக பர்வம்/39 வது அத்தியாயத்தில்**; பிரும்மதேவர் காச்யபர் மற்றுமுள்ள முநிச்ரேஷ்டர்களுக்கு ஸத்வ குணத்தைப்பற்றியும், அதன் லட்சணத்தையும் விவரிக்கும் பகுதியும் உள்ளது, அதில்; "ஆனந்தம், ப்ரீதி, மேன்மை, பிரகாசமாக இருத்தல், சுகம், தைன்யமில்லாதிருத்தல், பயமற்று இருத்தல், சிரத்தையோடு இருத்தல். உண்மை, நேர்மை, கோபமின்மை, அஸூயையின்மை, சுத்தனாக இருத்தல், சாமர்த்தியம், பராக்ரமம், ஈதல், சோம்பலில்லாமை, பிராணிகளிடம் கருணை, கோள் சொல்லாமை, கர்மமின்மை, வணக்கம், மோட்சத்திற்குரிய கர்மங்களை கபடமில்லாமல் செய்தல், விஷய சுகங்களில் பற்று இல்லாமலிருத்தல், பிரம்மச்சர்யம், ஒன்றையும் விரும்பாமை, தர்மம் கெடாமல் இருப்பது முதலியவை, ஸத்வ குணத்தின் காரணங்கள்." என்று சொல்லியிருக்கும் ஸத்வ குணங்கள் அனைத்தும் ஸ்ரீ மஹாதேவருக்கு பொருந்துவதை அவரைப்பற்றின "பக்தி" இருந்தாலே அறிந்துகொள்ளலாம் ,

**089.**

**நீலோபிநீலய முநாஜலமக்நகாத்ரச்சுப்ரோபி**
**சுப்ரதாதிவ்யதுந்தரோந்ய|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **நீலோபி** = நீலநிறமானவன், **நீலயமுநாஜலமக்நகாத்ர:** = அவன் நிறத்திலுள்ள யமுனையில் மூழ்குபவன், **அந்ய:** = இன்னொருவனோ, **சுப்ரதரதவ்யதுநீதுர =** வெண்ணிறமானவனாக இருந்துகொண்டு, மிகவும் வெண்மையான தேவ கங்கையையே தாங்குபவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** கருநீல நிறம் கொண்ட ஹரியோ அக் கருநீல நிறமான யமுனையில் மூழ்கினவனாக இருந்தவன். ஹரனோ வெண்ணிறமானவனாக இருந்து கொண்டு, வெண்மையான தேவகங்கையை தன் தலையில் தாங்கினவனாக இருக்கின்றான். யமுனைக்கு ஒப்பிட்டால் கங்கையின் மகத்துவம் இதிகாச புராணாதிகளில் அடங்காதது. இவ்விதம் யமுனைக்கு கங்கை சிறந்தது என்பதினாலும், கரிய நிறத்தினும் - வெண்மை உயர்ந்ததாக இருப்பதாலும், நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

090.

**ஏகோ வராகதநுமேத்ய புவம்லிலேகயந்யோ**
**புவம்புரஜாயாய ரதஞ்சகார|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்திய வ்ருத்தாஸ்**
**ஸத்யம்ப்ருவந்து தமிமம் வயமாச் ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **வராகதநும்** = பன்றியடலை, **ஏத்ய** = அடைந்து, **புவம்** = உலகத்தை, **லிலேகஹா** = கிளறியவன், **அந்ய:** = இன்னொருவனோ, **புரஜயாய** = திரிபுர சம்ஹாரத்திற்கு, **புவம் =** அப்புவியை, **ரதம்சகாரஹா** = இரதமாக கொண்டவன், **அநயோ:** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம் =** நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** பன்றியுருக் கொண்டு பூமியைக் கிளறின ஹரியைக் காட்டி லும், திரிபுரசம்ஹாரத்தில் அப்புவியை, ஹரனோ தனக்கு இரதமாகக் கொண்டு கௌரவப்படுத்தினார். ஊர்ப்பன்றியின் உருக்கொண்டு பூமியை கிளறிய ஹரியை விட, புவியை இரதமாகக் கொண்ட ஹரன் சிறந்தவன் ஆதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

வைணவன் ஒருவனும் சைவரொருவரும் ஒரு வீட்டில் தம் தாகத்திற்கு தண்ணீர் கேட்க உள்ளே செல்லும் சமயம் அவ்வீட்டுக் குழந்தையொன்று 'அசுத்தம்" செய்துவைத்ததைக் கண்ட வைணவன், "நீங்கள் பூசும் திருநீற்றை தாருங்கள், அதன் மேல் தூவி சுத்தம் செய்யட்டும்!!" என்றானாம். அவனது திருநீற்றின் இகழ்ச்சியை பொறுக்காத அச்சைவர், "வீணே எதற்கு நாம் சிரமப் பட வேண்டும்?!..... வராகப் பெருமாளைக் கூப்பிட்டால் அவர் வந்து நக்கி சுத்தம் செய்துவிட்டு போகிறார்!," என்றாராம், பன்றியொன்று வைணவன் வீட்டிற் வந்தால் வராக மூர்த்தி வந்திருக்கின்றார் என்று கொண்டாடுவார்களோ என்னவோ?!

091.

**ஏகச் சலாந்நிஜவதூகசாகரோத்து மந்யச்**
**சகாநிதாம்ஸ்புடமர்த்தகாத்ரே||**
**கோவாநயோரதிக இத்யநுசிந் தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **சலாம்** =அலுத்துக்கொள்ளும் மனைவியை, **நிஜவதூம்** = தடுப்பதற்கு, **நசசாக** = திறமற்றவன், **அந்ய:** = இன்னொருவனோ, **அர்த்தகாத்ரே** = தன் பாதியுடம்பில், **வநிதாம் =** தன் மனைவியை, **ஸ்புடம்** = நன்றாக, **சகார** = கொண்டான், **அநயோ:** = இவவிருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து,

**ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனதவதாரத்திலும், ஹரியாகவே உள்ளபோதும் சலனமுள்ள மனைவியைக் கொண்டவனாக உள்ளவன். ஹரனோ சலனமில்லாத, சலிப்பில்லாத உமையை தன்னுடலில் ஒருபாகத்தில் உடையவனாக உள்ளவன். இவ்விதம் சலனமுள்ள மனைவியைச் சலியாதிருக்கச் செய்ய வக்கில்லாத ஹரியிலும், தன்னுடலில் தன் மனைவியை சரிபாதியாகக் கொண்ட ஹரன் சிறந்தவன் ஆதலால் நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

**வால்மீகி எழுதிய இராமாயணத்தில்**, (அயோத்யா காண்டம்):

**கிம்த்வா மன்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப: |**
**ராமம் ஜாமாதரம் பிராப்ய ஸ்திரியம் புருஷவிக்ரஹம் ||**

**பொருள்:** சீதை கூறுகிறாள்: "என் தந்தையாரான விதேஹ மன்னன், புருஷ வடிவில் இருக்கும் - ஆனால் உண்மையில் ஸ்திரீயின் தன்மையுடைய இராமனை தனக்கு மாப்பிள்ளையாக அடைந்து என்ன கண்டாரோ?"

வனவாஸம் செல்ல தானும் இராமனுடன் வருவதை சீதை தெரிவிக்கும் யோக்யதையே மேற்சொன்ன வாசகம்!, ஒரு அலியை மருமகனாக கொண்ட மாமனாரைப் பற்றி யோசிக்கும் சீதை, தன் நிலையையும் அவள் உதிர்த்த அந்த மஹோந்நதமான வார்த்தைகளில் தெரிவித்துக் கொண்டு சலித்துக் கொள்ளுகிறாளா? சந்தோஷப்படுகிறாளா? இந்த சீதா தேவியே பிற்பாடு, இராமன் 14000 அசுரர்களைக் கொன்று, தன்னுடலில் காயங்களுடன் வந்ததும் ஓடிப்போய் இறுக அணைத்துக்கொண்டாளாம்!, (இது ஆரண்ய காண்டம்!) அக்காயங்களும் உடனே ஆறிவிட்டதாம்!. (அடிக்கிற கைதான் அணைக்கும் என்பது இதுதானோ என்னவோ?)

மேற்சொன்ன இராமாயண வரிகள் தென்னகத்தில் பிரசுரமாகும் வால்மீகி இராமாயணத்தில் காணப்படுகிறது. ஆனால் "புருஷ உருவில் இருக்கும் பெண்" என்கிற *ஸ்திரியம் புருஷ விக்ரஹம்" என்கிற அந்த வார்த்தை, வடதேசத்தில் காணப்படும் பிரதிகளில், "க்லீபம் புருஷமானினம்" அதாவது, "புருஷனாக தன்னை பாவித்துக்கொள்ளும் ஆனால் உண்மையில் அலியின் தன்மை உடைய" என்கிற பொருளில் அப்பதமானது பயன்படுத்தப் பட்டிருக்கின்றது, எதுவாக இருந்தாலும், சீதை தன் புருஷனிடம் மிகவும் சலித்துக் கொண்டவளே!, (தன் புருஷனிடம்தானே சலித்துக் கொண்டாள்?! என்பார்கள்!!)

**092.**

**ஏகம்வதந்திநிசமாந் தவசாம்ஸ்யதீசம் விச்வஸ்ய**
**விச்வமிதரந்து வதந்திதாநி|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச் ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவனை, **நிகமாந்தவசாம்சி** = வேதாந்த வாக்கியங்கள், **விச்வஸ்ய =** உலகத்திற்கு, **அதீசம்** = பிரபுவாக, **வதந்தி** = சொல்லுகின்றன, **இதரந்து =** மற்றவனையோ, **தாநி =** அந்த வாக்கியங்கள், **விச்வம்வதந்தி** விசுவம் என்று சொல்லுகின்றன, **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர் களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** வேதாந்த வாக்கியங்கள் ஹரியை இவ்வுலகம் வயாபித்திருப் பதினால் விச்வம் என்கின்றது. அதே வேதாந்த வாக்கியங்கள் ஹரனை இவ்வுலகி ற்கு பிரபு என்கிறது. விச்வமான ஹரிக்கு பிரபுவாக இருத்தலினால் விச்வேச்வரன் எனும் பெருமை பெற்ற ஹரனை நாங்கள் சரணம் அடைகின்றோம்.

**093.**

**ஏகம் யஜுச்சுருதிரசேஷ பலாவளீநாந்தாதாரமாஹ**
**பலகோடி நிவிஷ்டந்யம் ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச் ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவனை, **யஜுச்சுருதி:** = யஜுர் வேதம், **அசேஷபலாவ ளீநாம்** = சமஸ்த பலன்களையும், **தாதாரம்** = அளிப்பவனாக, **ஆஹ:** = கூறுகின்றது **அந்யம்** = இன்னொருவனையோ, **பலகோடிநிவிஷ்டம்** = அநேக பலன்களில் ப்ரவேசிப்பவன், **ஆஹ:** என்று சொல்லுகின்றது, **அநயோ:** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** யஜுர் வேதமானது ஹரனை சமஸ்த (எல்லா) பலன்களையும் அளிப்பவன் என்றும், அப்பலன்களில் அநேகங்களில் ப்ரவேசிப்பவனாக இருப்பவன் ஹரியென்றும் உரைக்கின்றது. எல்லாப் பலன்களையளிப்பனான ஹரனைவிட, அப்பலன்களில் "பலப்ரவேசி" யாக இருப்பவன் தாழ்ந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

ஒரு பெரிய மாளிகை இருக்கின்றது, அந்த மாளிகைக்கு சொந்தக்காரனுக்கோ அதுபோல நிறைய பல மாளிகைகள் இருக்கின்றது. அம்மாளிகை ஒன்றில் குடியேறி அதில் வசிக்கும் "குடித்தனக்காரன்" அம்மாளிகையினும்; அம்மாளிகைக்கு உரியவ னைக் காட்டிலும்; சிறந்தவன் என்று யார் சொல்வார்கள்?!

**094.**

**க்ராஹாசிதசிசுமஜாவய தேகதாஸோகத்வாபர:**
**புரவரம்ஸ்வயமந்தகஸ்ய:||**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகதாஸ:** = ஒருவனுடைய தாசன், **க்ராஹாசிதம்** = முதலையினால் கொல்லப்பட்ட, **சிசும்** = பிள்ளையை, **அஜ்வத்** = பிழைக்கச் செய்தான், **பர:** = இன்னொருவனோ, **ச்வயம் =** தானே, **அந்தகஸ்ய** = எமனுடைய, **புரவரம் =** நரகிற்கு, **கத்வா** = சென்று, **க்ராஹாசிதம்** = முதலையினால் காலலப்பட்ட, **சிசும்** = பிள்ளையை, **அஜீவத்** = பிழைப்பித்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தனது கண்ணனவதாரத்தில், சாந்தீபன் என்னும் மறையவனிடம் வேதமாதி கலைகளைக் கற்றமைக்கு, குரு தக்ஷணையாகக் கடல் கொண்ட தன்குருவின் மகனை கருடத்தேரேரி யமனுலகம் சென்று எமனை யாசித்து, தன் குருமகனை மீட்டவனாக உள்ளவன்.

ஹரனுடைய தாசனான சுந்தரமூர்த்தி நாயனார், அவினாசி என்னும் தலத்திலே முதலைவாயில் அகப்பட்டு மாண்ட அவ்வாலய குருக்கள் மகனை உயிர்ப்பித்து தந்ததும், திங்களூரில் திருநாவுக்கரசு நாயனார் அப்பூதியடிகளின் அரவு தீண்டி மாண்ட அவரது மகனை உயிர்ப்பித்ததும் பிரதிபலனோ, மற்ற எந்த எதிர்பார்ப்போ இல்லாமல் வெகு சாதாரணமாக அவர்களது பதிகத்தால் செய்தவையே!, இப்படி ஹரனுக்கு தாசனாகவுள்ளவர்களே இறந்து போனவர்களை மீட்கும் பொழுது, தான் தரவேண்டிய குருதஷினைக்காக மாண்டவனை எமனிடம் சென்று மீட்ட ஹரி எவ்விதத்தில் சிறந்தவனாக இருப்பான்? எமனிடம் செல்லாமலே இறந்தவர்களை மீட்ட ஹரனுடைய தாசர்களானவர்களே அக்காரியத்தினை செய்யும் போது, அம் மஹாதேவருடைய மஹிமை விளங்குவதால், நாங்கள் அந்த ஹரனையே சிறந்தவன் என்று சரணம் அடைகின்றோம்.

**095.**

**ஏகஸ்துகேசவ இதிப்ரதிதஸ்துலோகே**
**ந்யோவ்யோமகேச இதியாதிஜகத்ப்ரசித்திம்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தா**
**ஸ்ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவன், **லோகே** = உலகத்தில், **கேசவஇதிப்ரஸித்தி:** **=** கேசவனென்று ப்ரஸித்தியடைந்தான், **அந்ய:** இன்னொருவனோ, **வ்யோமகேசஇதி**

= வியோமகேசன் என்று (வானத்தினை ஆடையாக உடையவன்) யாதி என்று பிரசித்தி பெற்றவன், **அநயோ: =** இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** கேசி என்பவனைக் கொன்றதினாலோ, அல்லது கேசம் உள்ள வன் என்பதாலோ கேசவன் என்று அழைக்கப்படும் ஹரியைவிட, ஆகாயத்தினை தனது கேசமாகக் கொண்டதினால் வ்யோமகேசன் என்றழைக்கப்படும் ஹரனே சிறந்தவனாதலால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

கேசவன் என்றால் சவத்தை தலையில் உடையவன் என்றும் பொருள் உண்டு. தட்சனது யாகத்தில் யாகப் பதியாக கலந்து கொண்ட திருமால் வீரபத்திரருக்குப் பயந்து மான் வடிவம் தாங்கி ஓடியதை அறிந்த வீரபத்திரர், திருமாலை நாகபாசத் தால் கட்டி, தட்ச யாகத்தில் தம்மால் கொன்று குவிக்கப்பட்ட தேவர்களது பிணத்தை திருமால் தலையில் ஏற்றி, யாக குண்டத்தை சுற்றிவர தண்டித்த விவரம் பாகவதத் திலும் கந்தபுராணத்திலும் உண்டு!.

சிவபெருமானுடைய ரோமங்கள் வெகுவிதமான விசேஷங்களை உடையது. அதனால்தான் ஸ்ரீ பரமேச்வரர் ஹிரண்யகேசி, ஊர்த்வகேசி, வ்யோமகேசி என்றெல் லாம் அழைக்கப்படுகிறார். உலகத்தில் சூர்யசந்திரர்களுடைய பிரகாசிக்கிற காந்திகள் கேசம் என்கிற பெயரை உடையவை. அவைகள் முக்கண்ணரிடத்தில் நிலை பெற்றி ருப்பதால் அவர் வ்யோமகேசர் என்று சொல்லப்படுகிறார்" என்று **பாரதம் / துரோண பர்வம்/203 வது அத்தியாயம் சொல்லுகிறது**.

**096.**

**ஏகோ பபூவரதிகஸ்திஸ்ருணாம் புராணாம்**
**ஸம்ஹாரகர்மணி பர:ப்ருதநாங்கமாசீத்|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **திஸ்ருணாம்** = முன்னர், **புராணம் =** திரிபுர சம்ஹாரத்தின்போது, **ரதிக**: = தேரோட்டியாக, **பவூவ:** = இருந்தான், **பர:** = இன்னொரு வன், **ப்ருதநாங்கம்** = அத்தேரோட்டியின் கையிலோர் அங்கமாக, **ஆஸீத்** = இருந்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக: =** சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம் =** நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ ஹரனுடைய திரிபுர சம்ஹாரத்தின்போது ஹரனு டைய கையில் உள்ள பல ஆயுதங்களில் ஒன்றான, அம்பாக இருந்தவன், அம்பும்,

ஆயுதமும் வைத்திருப்பவனது சுதந்திரத்திற்கு கட்டுப்பட்ட ஓர் வஸ்து, அம்பாக ஓர் வஸ்துவாக ஒருவனது உபயோகத்திற்கு கட்டுப்பட்டு இருக்கும் ஹரியிலும், தனது உபயோகத்திற்காக அவனைத் தன் கையில் கொண்டு ரதிதனாக இருந்த அந்த ஹரனே சிறந்தவன் என்பதினால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின் றோம்.

**097.**

**ஏகஸ்து கைடபவதேநி புணோபபூவ ஹ்யந்யஸ்து**
**ம்ருத்யுஹந்நேநி புணோபபூவ:|**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:||**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **கைடபவதே** = கைடபவ வதத்தில், **நிபுண** = சாமர்த்தியம் உள்ளவனாக, **பபூவ:ஹா** = இருந்தான், **அந்யஸ்து** = இன்னொரு வனோ, **ம்ருத்யுஹநநே** = யமனைக் கொல்வதில், **நிபுண** = நிபுணனாக, **பபூவ** = இருந்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக: =** சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம் =** நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தன்னிடம் பிறந்த மது - கைடவன் என்னும் சாதாரணமானவனை வதஞ்செய்தான். பிறந்த உயிர்களனைத்தையும் வதைத்து தண்டிக்கும் ம்ருத்யுவென்னும் யமனை தன் அன்பனுக்காக கொன்ற ஹரன் சிறந்த வனென்பது இதில் தெளிவாயிருப் பதினால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

விஷ்ணுவின் காதில் இருந்து விழுந்த இரண்டு அழுக்கு உருண்டைகளை (குரும்பி), பிரும்மாவால் ஏவப்பட்ட வாயு, அவ்வழுக்கு உருண்டையில் பிரவேசிக்க, அவ்வழுக்கு உருண்டைகள் வான்முட்ட வளர்ந்து, மறைத்து அசுரவுரு அடைந்தது. பிரும்மா வளர்ந்த அவ்வழுக்கு உருண்டைகளைத் தடவிப் பார்க்கையில் மிருதுவாக இருந்ததற்கு "மது" என்றும், கடினமாக இருந்த மற்றொரு பகுதிக்கு "கைடவன்" என்றும் பிரும்மா பெயர் வைத்தார். இந்த அழுக்குருண்டை அசுரர்கள் தேவர் களுக்கு இடையூறு செய்தும், மிகுந்த கர்வம் கொண்டும் திரிந்ததை சகியாத விஷ்ணு, அம்மது கைடவர்களுடன் ஆயிரக்கணக்கான வருஷங்கள் சண்டை இட்டு, இறுதியில் அம்மது கைடவர்களது வேண்டுதல் படியே அவர்களை தான் துயிலும் ஜலப்பிரதேசத்திலிருந்து நீங்கி, கரைக்கு வந்து அவர் களைக் கொன்றான். (**பாரதம்/ சபாபர்வம்/44வது அத்தியாயம்**) கருடனை தனக்கு வாகனமாக ஆக்கிக்கொள்ள கருடனிடம், "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டது போலவே இங்கு மது - கைடவர்களிடமும் ஸ்ரீ கிருஷ்ணர் கேட்டாராம்!!

தன் காது அழுக்கு உருண்டையுடன் ஆயிரக்கணக்கான வருடங்கள் சண்டையிட்ட ஹரி, பாணாசுரனுடைய ஆயிரம் கைகளை வெட்டச் சென்றபோது அப்பாணாசுரனுடைய அரணைக்காவல் புரிந்த சிவபெருமான், துர்கை, விநாயகர் ஆகியோரை உடனே வென்று உள்ளே சென்று பாணாசுரனால் சிறைப்பிடிக்கப்பட்ட அநிருத்திரனை சிறையிலிருந்து மீட்டுச் சென்றானாம். வேடிக்கை!!, (ஆயிரம் வருஷம் ஹரி தன் காது அழுக்கு உருண்டையுடன் சண்டை போட்டான் என்றால்.... வியாக்கியானம் செய்து பிழைப்பவர்கள், "ஒருவன் தன் உடல் நோயுடன் சாகும் வரை போராடுவதில்லையா? அதுபோல!" என்று சொல்லி சமாளிப்பார்கள்!!)

**098.**

**ஏகஸ்து தீநகஜரக்ஷணதத்தபுத்தி ரந்யஸ்து**
**மத்தகஜ சிக்ஷணதத்தபுத்தி ।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏகஸ்து** = ஒருவனானால், **தீநகஜாரக்ஷணதத்தபுத்தி** = இளைத்த யானையை ரக்ஷிக்கும் புத்தியுள்ளவன், **அந்ய:து** = இன்னொருவனோ, **மத்தகஜ சிக்ஷணதத்தபுத்தி** = மதயானையினை தண்டிப்பதில் புத்தியை உடையவன், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா =** ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** தன்னைக் காக்கும் பொருட்டு உயிருக்குக் கதறிய கஜேந்திரன் எனும் யானையை (அகத்திய முனியால் சபிக்கப்பட்டு யானையான பாண்டிய மன்னன்) சாதாரண முதலையிடமிருந்து காத்தான். ஹரனோ தாருகாவன ரிஷிகள் தன்னைக் கொல்ல ஏவின மதம் கொண்ட யானையைக் கொன்று அதன் தோலை யுறித்து அணிந்து கஜசம்ஹாரி என்ற நாமமும் அடைந்தவன். உயிருக்கு போராடின யானைக்கு முதலையிடமிருந்து தப்பிப்பதே குறியாக இருந்திருக்கும். அந்த யானை முதலைவாயில் அகப்பட்டு மரணித்திருந்தால் அது வைகுந்தம் போகாமல் நரகம் தான் சென்றடையுமா என்ன? தவிர மரண போராட்டத்தில் இருக்கும் அந்த யானை தான் தப்பிப்பதற்காக கண்ணனுக்கு ஒத்தாசையாகவும் ஈடுபட்டிருக்கும் அல்லவா?. இப்படி இளைத்த யானையை காப்பதிலும், தன்னை கொல்லவந்த யானையை தண்டித்த ஹரன் சிறந்தவன் என்பதினால் நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்.

தன் உயிரைப்பற்றின கவலையில் வாடும் ஓர் யானைக்கும், தன்னைத் துன்புறுத்துவதற் கென்றே ரிஷிகளால் ஏவப்பட்ட மதயானைக்கும் வித்தியாசம் உண்டு.

**099.**

**ப்ரஹ்மாணமாப நிஜநாபிஜஸூநுமேகோந்யோ**
**ப்ரஹ்மணோ நகமுகேந்சிரச்சகர்த்தா।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ப்ரஹ்மாணம்** = பிரம்மாவை, **நிஜ** = தன்னுடைய, **நாபிஜ** = தொப்புள் கொடியில் உண்டான, **ஸூநும்** = பிள்ளையாக, **அலாப** = பெற்றான், **அந்ய:** = இன்னொருவனோ, **ப்ரஹ்மணோ** = பிரம்மாவினுடைய, **சிர:** = தலையை, **நகமுகேந** = விரல் நகத்தால், **சகர்த்தா** = கிள்ளி எரிந்தான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா: =** பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து =** கூறலாம், **தமிமம்** = அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ தன் உந்திக்கமலத்தில் பிரம்மனை தன் மைந்தனாக உடையவன். ஹரனோ அந்த பிரம்மனின் அகந்தையைப் போக்க அவனது தலையை தன் இடக்கை நகத்தால் கிள்ளி எரிந்தவனாக உள்ளவன். இவ்விஷயத்திலும் ஹரனே சிறந்தவன் என்பதால், நாங்கள் அந்த ஹரனையே சரணம் அடைகின்றோம்,

**100.**

**ஏக ஸ்ஸபக்த்யுத ஹரந்நிஜமக்ஷிபுஷ்ப மந்யோம்**
**புஜந்நநயநமஸ்யத தெளஸசக்ரம்।**
**கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ்**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாம:॥**

**பதவுரை: ஏக:** = ஒருவன், **ஸ்பக்தி** = பக்திபூர்வமாக, **நிஜம்** = தன்னதான, **அக்ஷிபுஷ்பம் =** கண்மலரை, **உதஹரத்** = அர்ப்பித்தான், **அந்ய:** = இன்னொருவனோ, **ஸ சக்ரம்** = சக்கரத்துடன், **அம்புஜ:** = தாமரை போன்ற, **நயநம்** = கண்ணையும், **அஸ்ய** = அவனுக்கு, **ததெள** = அருளினான், **அநயோ:** = இவ்விருவருக்குள், **அதிக:** = சிறந்தவன் யாவன்?, **இதி** = இதனை, **வ்ருத்தா:** = பெரியவர்கள், **அநுசிந்தியா** = ஆலோசித்து, **ஸத்யம்** = உண்மையை, **ப்ருவந்து** = கூறலாம், **தமிமம் =** அவ்விதம் சொல்பவர்களை, **வயம்** = நாங்கள், **ஆச்ரயாம:** = ஆராதிக்கின்றோம்.

**தாரதம்மியம்:** ஹரியோ சக்கரம் என்னும் ஆயுதம் பெறும் பொருட்டு, ஆயிரம் மலர் கொண்டு ஹரனை அர்ச்சிக்கையில் ஓர் மலர் குறையவே, அதற்கீடாக தன் அரச்சனைக்கு இடையூறு ஏற்படாவண்ணம் தன் கண்ணைப் பிடுங்கி அவ்வாயிரம் மலரிலொன்றாக அருச்சித்தான். தன் கண் மலரால் அருச்சித்த ஹரியைவிட, தன்னை அருச்சித்த ஹரிக்கு மனமகிழ்ந்து வரமளித்த ஹரன்

சிறந்தவன் (வேண்டுபவனை விட வேண்டப்படுபவன் சிறந்தவனாதலால்) என்பதால் நாங்கள் அந்த ஹரனை சரணம் அடைகின்றோம்.

**ஹரிஹர தாரதம்மியம் பகுதி முற்றிற்று.**

---

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
| சிவாத்பரதரம் நாஸ்தி |



# சிவபெருமான் என்பவர் யார்?

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்

# சிவபெருமான் என்பவர் யார்?

## காலத்தின் வன்மை!

மேற்கண்ட தலைப்பைக் கொண்டு நாங்களும் எங்கள் பங்கிற்கு ஏதேதோ சொல்ல வந்துவிட்டதாக தயவு செய்து யாருமே கலவரமடையத் தேவையில்லை!, “பார்வதி என்றொரு சீமாட்டி அன்று பாதியைத் தின்றதுண்டு, இன்னும் பாதியிரு க்கு....” என்று சிவத்தைப் பாடினார் மாயூரம் கோபாலகிருஷ்ண பாரதியார். எத்தனை யோ பேர் சிவத்தைச் சொல்லியும் இன்னமும் சொல்லாமல் விட்ட, எஞ்சி நிற்கிற சிவம் பற்றி எவரால் சொல்லமுடியும்?!

இதிகாசமும், புராணமும் சிவபெருமானைத்தான் “கடவுள்” என்று நமக்கு அடையாளம் காட்டி இருக்கின்றது. வரலாற்றாலும்; காலத்தால் முந்தையது “சைவம்” என்றும், கடவுள் “சிவபெருமான்” என்றும் தெரிவிக்கின்றது. காலத்தின் சுழற்சியில். இன்று எவை எவையோ மதம் என்றும், எது எதுவோ “தெய்வம்” என்றும் விளங்குகின்றது.

அடிமட்ட ஊழியம் செய்யவும், சில்லரை வர்த்தகம் செய்வதற்காகவும் நமது பரந்துபட்ட பாரதத்திற்கு வந்த வெள்ளையன் நமது வரலாற்றை புரட்டி, மாற்றி, நாம் என்னவோ அவர்களது தயவால் சென்ற நூற்றாண்டில். இருந்துதான் நாகரீகமாக வும், பேசவும், எழுதவும், உடை உடுத்தவும், சமூகத்தில் நடமாடவும் ஆரம்பித்தோம் என்பது போன்றும், இன்ன காலத்திலிருந்து என்று அறிய முடியாத; - நாம் சார்ந்திருந்த மஹோன்னதமான சைவத்தினை மறக்கச்செய்து நம்மை “ஹிந்து” என்று ஒரு புதிய முத்திரைக் குத்தி, இன்றுவரை அதுவே உண்மை என்று நம்மையே நம்பச்செய்து அரசாங்கத்தின் திட்டங்களிலும் அதையே வழக்கமாக ஆக்கி, நாமும் நம் சந்ததிகளும் அதைப் பின்பற்றுமாறு செய்த ஆங்கிலேயனின் சூழ்ச்சிக்கு அளவேது?. அதைப் பின்பற்றி பின்னனிபாடிய ஒரு சில தமிழ் அமைப்பும், ஒரு சில அரசியல் அமைப்பும், அதை உண்மை என்று நம்பிய சைவரில் ஒரு பிரிவினரது அறியாமையையும் என்னென்பது?!

கீழ்த்தரமான, ஒழுக்கம் கெட்ட, நாகரீகமென்றால் என்னவென்று அறியாத, தமக்கென ஒரு பண்பாடும், கலாச்சாரமும், சிறப்பான வரலாற்றுப் பின்னனியும் இல்லாத தேசத்திலிருந்து வந்து நம்மையும் ஆண்டு, நமது கலாச்சாரத்தினையும் கெடுத்து, நமது பெயரில்லா மதத்திற்குப் பெயரையும் அளித்து, நமது செல்வம் அனைத்தினையும் சூறையாடி அதன்மூலம் சுயலாபம் அடைந்த அந்த *வெள்ளை

யன்' சொல்வதையும், கிறுக்குவதையும் நம்புவதற்கு நம்மில் நிறையபேர் இருப்பதைப் பார்த்தால் வெட்கமாக இருக்கின்றது. அவர்கள் நம்மை ஆண்ட காலத்திலே அவர்களை "நீங்களே ஆளுங்கள்!.. எங்கள் தேசத்தினை விட்டுப் போகாதீர்கள்!!!" என்று கெஞ்சவும் நமது தேசத்தில் ஒரு கூட்டமிருந்ததை எண்ணும்போது, சுதந்திரத்திற்குப் பிறகு கப்பலேறிய அவ்வெள்ளையர் கள், தம்மை அன்போடு ஆளச்சொன்ன அந்த மகோன்னத மானவர்களையும் அவர்தம் உறவினர் களையும் கூண்டோடு தம்மோடு அழைத்துச் சென்றிருக்கக் கூடாதா?.. என்றே தோன்றுகிறது. இந்த விஷயத்தில் வேண்டுமானால் வெள்ளையன் "புத்திசாலியாக இருக்கலாம்!! (அப்புண்ணிய வான்களை அழைத்துச் செல்லவில்லையே!)

மொழிபெயர்ப்புக் கலையைப் பயன்படுத்தி "வெள்ளையர்கள் நமது இதி ஹாஸ புராணங்கள் சம்பந்தப்பட்டவையை நேர்மையாக மொழிபெயர்க்காது, தம்மு டைய சுயலாப எண்ணத்துடன் தமது மதத்தைப் பரப்புவதற்காகவே அதைப் பயன்படு த்தினார்கள். இம் மொழிபெயர்ப்புத் தொழிலைச் செய்தவர்களுக்கு (அவர்கள் சார்ந்த மத கொள்கைக்கு எதிரானதாக இருக்கும் பட்சத்தில்) அம்மத பாதிரிகளுடைய "எதிர்ப்பும்" அவர்களுக்கு இருந்திருக்கிறது; அவர்களுடைய மதத்தைப் பரப்பும் நோக்குடன் செயல்பட்ட ஆங்கில எழுத்தாளர் களுக்கு அதே பாதிரிகளின் ஆசீர் வாதமும், ஆதரவும் பெருகியது என்பதும் வரலாற்றுச் செய்தி.

"மேற்கத்திய அறிஞர்களில் ஷோபன்ஹாவர் (Schopenhauer) என்பவர் தான் முதன்முதலாக கிறிஸ்துவ பாதிரிகளின் பலத்த கர்ஜனையைப் பொருட்படுத்தாமல் இந்திய தத்துவ ஞானத்தை பயமின்றி எடுத்துரைத்தார்" (by HENRICH "New Indian Antiquary" April 1938, P 67) என்று உண்மையை எடுத்துரைத்து பாராட்டைப் பெற்றவர் களும் உண்டு என்பதும், அவதூறு பரப்பி உள்நோக்கத்துடன் செயல்பட்டவர்களும் உண்டு என்றே அவர்கள் சம்மந்தப்பட்ட பழைய நிகழ்ச்சிகள் சொல்லும்.

இவ்விதம் ஹிந்து மதத்தின் சமஸ்கிருத நூல்களை ஓரளவு நேர்மையுடன் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஷோபன்ஹாவர் மாதிரியானவர்களை அடம்பிடித் தலைந்த பாதிரிகளும் யஹூதி பாதிரிகளும் எவ்வாறு கொடுமைப் படுத்த முயன்றனர் என்பது (Religion of the Semites) என்கிற நூலின் ஆசிரியரும், Free Church College Aberdeen -ன் யஹூதி மொழி ஆசிரியருமான ராபர்ட்சன் ஸ்மித் (1846-94) என்பவருடைய உதாரணத்தினின்று தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

இவர் தாம் கண்டறிந்த உண்மைகளை சற்றும் அச்சமின்றி கிறிஸ்தவ வேதபுத்தகத்தைப் பற்றி பல்கலைக் களஞ்சியம் (Encyclopaedia) என்னும் நூலில் காணப்பட்ட கருத்தை மறுத்து அதற்கு எதிரிடையாக இவர் கூறியதால், இவர் மீது கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டதும், அதிலிருந்து கோர்ட்டாரால் விடுவிக்கப்பட்ட தும், பின்னர் இவருடைய Free Church College Aberdeen நூலில், இவர் எழுதிய கட்டுரைக்காக இவரை கல்லூரியின் பேராசிரியர் பதவியிலிருந்து அம்மத வெறியர்கள் விலக்கிவிட்டதும் வரலாற்றுச் செய்தி.

Oxford University -ல் உள்ள ஸமஸ்கிருத ஆசிரியர் பதவியை நாமெல்லோரும் பெருமையாக நினைத்துக்கொண்டிருக்கிறோம். அந்த பதவியை அக்காலத்தில் (1890 ம் ஆண்டு) கர்னல் போடன் என்பவர் எதற்காக, எந்த நோக்கத்திற்காக நியமனம் செய்தார் என்பதை அவரது உயிலில் தெரிவித்திருக்கிறார். அதில், “கிருஸ்தவ மத நூல்களை சமஸ்கிருதத்தில் மொழிபெயர்த்து அதன் உதவியால் இந்தியர்களை கிருஸ்தவ மதத்தை தழுவும்படி செய்வதில் தம் தேசத்தினருக்கு உதவி செய்வதே” அவரது நோக்கம் என்று எழுதியிருக்கிறார், இதுவும் வரலாறு.

ஹாலிஸ்பரியைச் சேர்ந்தவரும், சம்ஸ்கிருதத்தில் சிறந்த வித்வானாக கருதப்பட்ட ஜான்முயிர் என்பவர், ஹிந்து மதத்தின் முறைகளை நன்றாக கண்டித்து எழுதப்படும் சிறந்த சமஸ்கிருத கட்டுரைகளுக்கு அக்காலத்திலேயே 200 பவுன் பரிசு அறிவித்ததும் வரலாறு. (Eminent Orientalists, Madras,p70)

அக்காலகட்டத்தில் உலகின் பிறபாகத்தைச் சேர்ந்த மொழியியல் வல்லுனர்களான ரூடோல்ப்ரூத், W.D. விட்னி, மாக்ஸ்முல்லர், வைஸ், வேபர், போஹ்தலிங், கூன், ரிச்சர்ட்கார்பெ, மைக்கன்சி, ரிபலே (Ripley) முதலிய பலரும் நம் நாட்டின் நூல்களை உள்நோக்கத்துடனும் பாரபட்சத்துடனும் உண்மைக்கு வேறுபட்ட கூற்றுக் களுடன் வெளியிட்டார்கள் என்பதை அவர்களது நூல்கள் படித்து அறியலாம்.

நம் நாட்டில் இன்றும் கூட மாக்ஸ்முல்லருடைய நூல்களை மிகவும் பெருமையுடன் (தமது கருத்திற்கு வலு சேர்ப்பதற்காகவோ, அல்லது தாம் பலபேருடைய நூல்களை படித்திருப்பதை பறைசாற்றவோ, அவரை மிகவும் ஒரு உயர்ந்த இடத்தில் வைத்து) பேசுவோர் அநேகம்பேர் இந்நாட்டில் உலவுகிறார்கள்.

உதாரணத்திற்கு மேற்படி மேதாவி மேக்ஸ்முல்லருடைய History of Ancient Sanskrit Lliteratures (1860), Chips from a German Work-Shop (second edition 1866) மற்றும் India What can it teach us. Lecture IV 1882 ஆகிய மூன்று நூல்களில் மட்டுமல்லாது இவர் தமது நண்பர்கள், மனைவி, மற்றும் பலருக்கு எழுதிய கடிதங்களில் இருந்தும் இவர் தெரிவித்திருக்கும் பாரபட்சமான கருத்துக்களை தெரிந்துகொண்டாலே போதும், இவர் எப்படிப்பட்டவர் என்பதை அறிய.

**1. History of Ancient Sanskrit Literatures (1860)** பக்கம் 32ல்:

‘மானிடகுலம் மேலும் மேலும் கல்வியறிவு பெறுவது மிக மிக அவசியமென்று தோன்றுகிறது. ஏனெனில் அப்பொழுதுதான் கிருஸ்துவ மதத்தின் உண்மைகளை அவர்கள் அறியமுடியும். சீரிய உண்மைகளின் ஒளியைப் பெருவதற்குமுன் அவர்கள் தர்க்க ரீதியாக கொண்டுள்ள குழப்பங்களில் இருந்து விடுதலை அடையவேண்டும். இவ்வுலகில் பழைய மதங்கள் குழந்தைப் பருவத்தில் போஷாக்களிக்கும் பாலை ஒத்தவை, நாளடைவில் இப்பாலின் இடத்தை ரொட்டி போன்ற உணவுகள் பெறவேண்டும். பௌத்தமதம் ஆரியபூமியின் எல்லையைக் கடந்து வெகுதூரம் பரவிவிட்டது. இது மனிதவர்கத்தின் பெரும்பகுதியினரிடையே கிருஸ்துவமதம் பரவுவதை இதுவரை தடுத்துவிட்டது.’

**2. Chips from a German work-shop (second edition 1866)** பக்கம் 27ல்

‘வேதங்களின் பெரும்பான்மையான உபதேச வாக்கியங்கள் சிறுபிள்ளைத்தன மாக உள்ளன. சில புரிந்துகொள்வதற்கு கடினமாகவும், சில கீழ்த்தரமாகவும், சாதாரணமானவையாகவும் உள்ளன.’

**3. India What can it teach us. Lecture IV 1882** பக்கம் 118ல்

‘இதுமட்டுமல்ல, அவைகளில் அநேகம் இரண்டாம் மூன்றாம் தரத்தை கொண் டவையாக உள்ளன’

இது இவர் எழுதிய நூல்களில் காணப்பெறும் விஷமக் கருத்துக்கள். இனி இவர் பிறருக்கு எழுதிய கடிதங்களில் என்ன சொல்லுகிறார் என்பதைப் பார்ப்போம்:

ஓருவர் தாம் எழுதும் நூலில் நிர்பந்தம் காரணமாக தாம் கொண்ட கொள்கைக்கு விரோதமாக எழுதுவதற்கு வாய்ப்பிருக்கிறது என்று கொண்டாலும், அவ்விதம் விரோதமாக நண்பர்கள், மனைவி மற்றும் பலருக்கு எழுதுகிற கடிதத்தில் கொள்கை விரோதபோக்கு இருக்குமா? இருக்காதல்லவா? மேற்படி மொழிபெயர்ப் புத் திலகம் பலருக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பு இரண்டு பாகங்களாக வெளிவந்த Chips from a German workshop (second edition 1866) பாகம் 2ல் தெரிவித் திருக்கும் கருத்துக்கள் இவர் நம் மதத்தின் மீதும், நம் மத நூல்களான வேதம் மற்றும் உபநிஷத்துக்களுக்கு எந்த “இடத்தை’ கொடுத்திருக்கிறார் என்பதை நீங்களெ ல்லாம் அறிந்தால் உங்களுக்கும் அதிர்ச்சியே மிஞ்சும்!. அதில்;

“உலகத்தின் எல்லா புனிதமான நூல்களில் மிக மிக உயர்ந்தது எது? - என்று நீங்கள் கேட்டால், நியூ டெஸ்டமண்ட்தான் என்று உறுதியாகக் கூறுவேன். அதற்கு அடுத்த இடம் குரானுக்கு அளிப்பேன். அதற்கடுத்த படியாக ஓல்டு டெஸ்டமண்ட், தெற்கத்திய பௌத்த திரிபீடக், தி டாவோட் கிங் ஆப் லாவோட்ஸே, தி கிங் ஆப் கன்பியூஷியஸ், வேதங்கள் மற்றும் அவெஸ்தா ஆகும்!” என்று எழுதியிருக்கிறார் .

இம்மாதிரியான லட்சணத்தில் செயல்பட்ட இவரைப் போன்றவர்கள் இன் னொரு கேலிக்கூத்திலும் இறங்கினார்கள். ஆம்!!, சமஸ்கிருத மொழிக்கு அகராதி தயாரிக்கும் பணியிலும் ஈடுபட்டார்கள். அது எந்த லட்சணத்தில் இருக்கும்? வேபர் என்பவரும் போஹ்தலிங் என்பவரும் கூட்டு சேர்ந்து சமஸ்கிருத மொழிக்கு அகராதியை எண்ணற்ற பிழைகளுடன் வெளியிட்டனர். அதிலுள்ள குறைகளை கோல்டஸ்டகர் என்பவர் சுட்டிக்காட்டியதற்கு அவரை மிகவும் கீழ்த்தரமான வார்த்தைகளில் திட்டினதோடன்றி, இறுதியில் மூளை பிசகியவர் என்கிற சான்றித ழும் அளித்தார்கள்!. (Panini His Place in Sanskrit Literature- Allahabad Edn, P200-1914)

இந்த கோல்டஸ்டகர் அக்காலத்தில் மொழிமாற்றம் என்ற பெயரில் நம் தேசத்து பண்டிதர்களை நையாண்டி செய்தவர்களையும், அவர்கள் எழுதிய நூல்

களை கீழ்த்தரமாக விமர்சித்தவர்களையும், வேதங்களை தாங்கள்தான் சரியாக புரிந்து கொண்டதாக டம்பம் அடித்து திரிந்தவர்களையும் அப்போதைக்கப்போது சரியாய் கண்டித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. இவரைப்போலவே அக்காலத்தில் நம் தேசத்தின் கௌரவம் கெடாமல் பாதுகாத்தவர்களில் முதன்மையானவர், ஆரிய சமாஜத்தின் நிறுவனரான ஸ்வாமி தயானந்தர் ஆவார். மொழியாக்கம் என்ற பெயரில் அந்நியர்கள் ஈடுபட்ட மோசடிக்கு அவ்வப்போது மறுப்பும் கண்டனமும் செய்து அவர்களது உண்மையான முகத்திரையை இவர்தான் கிழித்தெரிந்தார்.

அப்போதைய ஆங்கிலேய அரசினுடைய போக்கும், அவ்வரசுக்கு துணை போனவர்களுடைய போக்கும் சிப்பாய் கலகத்திலிருந்தே தொடங்கியதாக சரித்திரம் படித்தவர்களது அல்லது தெரிந்தவர்களது துணிபாகும், அல்லது 1857ம் ஆண்டிற்கு முன்பாக கிட்டத்தட்ட 5லிருந்து 10 ஆண்டுகளுக்கு முன்பாகவே மதமாற்றம் மற்றும் மொழிமாற்றம் என்கிற துணிச்சலான காரியத்தில் பிரவேசித்தார்கள். சக உயிர் களிடத்தில் கருணை, அன்பு மற்றும் “எல்லாம் ஈசன் செயல்!' என்பதான நம் தேசத்து மக்களுடைய மன நிலை அவர்களுக்கு முழு தைரியத்தை அளித்திருக்கக் கூடும். கூடவே இன்னொரு மதத்தினருடைய போக்கும் அவர்களுக்கு துணை செய் ததும் சரித்திரமே.

நம் தேசத்தில் அப்போது இந்துக்களைவிட அதிகம் வருத்தம் அடைந்த,- 1857ம் ஆண்டில் நடந்த கலகத்தை நேரில் கண்ட, நம் தேசத்து முகம்மதிய சமூகத்தினருடைய ஏகோபித்த செல்வாக்கைப் பெற்றவரும், அவர் களுக்கு தலைவராகவும் கருதப்பட்டவரான சர் சையது அகமது கான் என்பவர் தமது **“இந்திய புரட்சியின் காரணங்கள்”** (An Enquiry on the causes of the Indian Revolt) என்கிற கட்டுரையில் ‘கிறித்துவ மதப் பிரசாரகர்களும் நற்சேதியை (காஸ்பல்) புதிய முறையிலே புகுத்த முயன்றனர். மதம் பற்றின கேள்வி-பதில்கள் கொண்ட புத்தகங் கள் அச்சிடப்பட்டு மக்களிடையே விநியோகிக்கப்பட்டன. தாங்களாகவே அவற்றை மசூதிகளிலும் இந்துக்களுடைய ஆலயங்களிலும் நடைபெற்ற திருவிழாக்களின் போது வருகை தந்து அப்பிரசுரங்களை விநியோகித்து மதப்பிரச் சாரத்தை மேற் கொண்டார்கள். அதிகாரிகளுக்கு பயந்து எதிர்ப்பதற்கு எவருக்கும் துணிவு இல்லை, சில இடங்களில் இந்தப் பிரச்சாரகர்கள் பிரசுரங்களுடன் காவல் நிலையத்தில் இருந்து காவலர்கள் (அ) வேலையாட்களுடன் வந்து பிரச்சாரம் செய்து - புனித இடங்களையும் பக்திமான்களையும் மிகவும் அவமரியாதையுடன் சுட்டிக்காட்டினர். கேட்பவர்களுக்கு இது மிகுந்த வருத்தத்தை அளித்தது...”

அப்போது அரசாண்டவர்களுடைய சூழ்ச்சிக்கு இந்த ஒரு உதாரணம் போதுமா னது - என்றாலும் அவர்கள் சட்டத்தின் மூலமாகவும் - மறைமுகமாகவும், நேரிடையாகவும் ‘மதமாற்றத்திற்கு’ உழைத்தவர்கள் அவர்கள் என்பது 1850ல் அவர்கள் 21வது சட்டமாக (சொத்துரிமை பற்றியது) கொண்டு வந்த அந்த சட்டத்தைப்பற்றி மேற்படி சர் சையது அகமது கான் சொல்லுவதிலிருந்து அறியலாம்.

"இந்த 21வது சட்டம் பிற சமயங்களைப் பின்பற்றுகிறவர்களுக்கு பாரபட்சமாக உள்ளது என்பதில் சந்தேகமே இல்லை. கிறித்துவ சமயத்திற்கு மக்களை ஈர்க்கும் எண்ணத்துடன் இச்சட்டம் இயற்றப்பட்டுள்ளதாக கருதப்பட்டுள்ளது. **இந்து சமயம் மதம் மாறுவதை அநுமதிப்பதில்லை. இந்துக்களுக்கு இந்த சட்டத்தினால் எந்த லாபமும் இல்லை**. இஸ்லாம் மதத்திற்கு ஒருவன் திரும்பவும் மதம் மாறி வருவா ன்னேயானால், வேறு மதத்தை சார்ந்தவரிடமிருந்து அவனுக்கு சொத்து வருவதை ஏற்கலாகாது என அந்த *மதசட்டம்' தடை செய்கிறது. மதம் மாறிய முகம்மதியர் களுக்கு இச்சட்டத்தால் நன்மை ஏதுமில்லை. **மதம் மாறின கிறித்துவனுக்கு இச்சட்டம் பெரிதும் சலுகையைத் தருகிறது**."

இஸ்லாம் மதத்தை சேர்ந்த சர் சையத் அகமது கான் போன்றவர்கள் அவரவரது மதம் சம்மந்தமாக நாட்டின் 'எதிர்காலம்' கருதி நல்லவிதமாய் சிந்தித்தவர்களாய் இருந்தாலும்; மேற்படி அவரது கூற்றில் அவரது 'எண்ணமும்' வெள்ளையனுக்கு இருந்ததையே பிரதிபலித்திருப்பதை நல்லமதியுள்ளவர் கள் யூகிக்காமல் இருக்க மாட்டார்கள்!

நார்டன் என்பவர் தமது 'Topics for Indian Statesmen' எனும் நூலில் ஹைதராபாத் நிஜாம் பிரிட்டிஷாருடைய பக்கம் பெரும் ஆதரவாய் நின்றதைத் தெரிவித்து, 'ஹைதராபாத் மட்டும் எழுச்சியுற்றிருந்தால், தக்காணத்திலும் தென்னிந் தியா முழுவதிலும் நாம் அழிவிலிருந்து தப்பித்திருக்க முடியாது!' என்று ஒப்புக் கொண்டதையும் 'சமன் செய்து சீர்தூக்கிப் பார்க்கும் சான்றோர்கள்' சிந்திந்துப் பாராமல் இருக்கமாட்டார்கள்!.

நம் தேசத்தில் அன்று முதல் இன்றுவரை அரசியல் காரணம் மட்டுமல்லாது, ஒரு தனிமனிதனைக் கொண்டாடும் வழக்கத்தினாலும் ஆன்மீகத்தில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டுவிட்டது. (இன்றும் அது தொடர்வதுதான் வேதனை!!) பாரதத்தின் இலக்கண ஆசிரியர்களின் பெருமையை மறைப்பதிலும், நம் தேசத்தின் நாகரீகத் தின் பண்பாட்டையும் இழிவுபடுத்துவதிலும் கிறிஸ்தவர்கள் அக்காலத்தில் எடுத்துக் கொண்ட தீவிர முயற்சிகளுக்கு அன்றைய ஆங்கில அரசினுடைய கைப்பாவையாக இருந்து செயல்பட்டது அவர்களுடைய நூலின் வாயிலாகவே அறியலாம். அவர் களது நூலிற்கு அதற்குப்பிறகு நம் தேசத்தை ஆண்ட நம்மவர்களும் துணை போவதும், போனதும் வேதனையான - கசப்பான உண்மை.

இம்மாதிரியான ஆங்கிலேய எழுத்தாளர்கள் தமது சரித்திர ஆராய்ச்சியையும் விட்டுவைக்காது அதிலும் தமது 'உள்நுழைப்பு' வேலையை காண்பித்திருக்கிறார் கள். இவர்களால்தான் ஆரிய-திராவிட பாகுபாடு நம் நாட்டில் பரப்பப்பட்டது. இவர்களுடைய இந்த ஆரிய-திராவிடம் பற்றிய தவறான பிரச்சாரம் சரி என்று ஒப்புக்கொள்வோர் இன்றும் நம் தேசத்தில் அநேகர் இருப்பது ஆச்சர்யமே!.

இவர்களுடைய ஆரிய-திராவிட ஆராய்ச்சியை நாம் சரியென ஒப்புக்கொள் வோமாயின், மநு, இஷ்வாகு, பரதன், பகீரதன், குரு, ஸ்ரீ இராமன் ஆகியவர்கள் நம் தேசத்தவர்கள் என்பதற்கு ஆதாரமில்லாமலல்லவா போகிறது? இதைவிட கேவலம்

வேறென்ன வேண்டும்? இவர்கள் வேதத்தை தவறாக மொழிபெயர்த்து, அவ்வேத காலம் பற்றிய ஆராய்ச்சியையும் தவறாகவல்லவா நமக்கு விவரித்தனர்?.

இவ்விதம் தவறான நோக்கத்தில் செயல்பட்டவர்களால் நாமடைந்த துன்பமும், இழப்பும் கொஞ்சநஞ்சமல்ல!. தனிமனிதர்களாய் இருந்து ஆங்கில அரசின் தயவில் செயல்பட்ட இவர்களுடைய திட்டம் முழு வெற்றி அடையாமல் போனதற்கு அந்தந்த சமயத்தில் தோன்றி அவர்களுடைய நூல்களுக்கு கண்டன மும், மறுப்பும் தெரிவித்து பல இன்னல்களுக்கு ஆட்பட்டு பிரச்சாரமும் செய்தது தான் காரணம்!.

நம் சைவ அன்பர்கள் பலரும் ஜி.யூ. போப் என்பவர் 'திருவாசகத்திற்கு' ஆங்கிலத்தில் உரை எழுதிய ஒரே காரணத்திற்காக அவரை விண்ணளாவ புகழ்ந்து வருகிறார்கள். அவர் செய்தது என்ன? அந்நிய மொழியில் இருந்த ஒரு நூலை, தாம் கற்ற அம்மொழியை சரிபார்த்துக்கொள்ள தம் தாய்மொழியில் மொழிமாற்றம் செய்து பார்த்தார். அவ்வளவே. இதிலென்ன பெருமை வேண்டியிருக்கிறது? அதுவும் சரியான அர்த்தத்தில் மொழி பெயர்த்தாரா? என்பதை மொழியியல் வல்லுநர்கள் கணித்து சொன்னதாகவோ, நம் சைவ சமயத்தில் சிறந்து விளங்கின அடியவர்கள் போற்றியதாகவோ இதுவரை செய்தியில்லை, ஆனால் தமிழுக்கு பதவுரையுடன் "போற்றித் திருவகவல்" படிக்கத் தெரிந்த தமிழ்ச் சைவ அன்பர்கள் மாத்திரம் ஜி யூ போப்பை தலைமேல் வைத்து போற்றுவது உசிதமல்ல.

கிட்டத்தட்ட இவர் நமது சிவஸ்ரீ மஹாவித்வான். திருச்சிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் காலத்தவர். அவரோ அல்லது அவரது சமகாலத்தில் வாழ்ந்த மற்ற பண்டிதர்களோ மேற்படி ஜி யூ போப்பை பாராட்டி, அவரது திருவாசக மொழிபெயர்ப்பு பணியை போற்றியதாகவும் செய்தியில்லை!,

அவர் வாழ்ந்த காலத்தில் நடந்த சம்பவம் இங்கு நினைவு கூறத்தக்கது. மஹாவித்வான். மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் பயின்ற சிவத்திரு. பூவாளூர். தியாகராஜ செட்டியாரிடம் ஒரு ஆங்கிலேயன் வந்து தாம் தமிழ் பயின்று வருவதை யும், அதன் பயனாய் திருக்குறளை மொழிபெயர்த்திருப்பதாகவும், அக்குறளில் ஒரு குறளை திருவள்ளுவர் தப்பாய் எழுதியிருப்பதை தாம் கண்டுபிடித்து "திருத்தியதை' யும் தெரிவித்தபோது பூவாளூர் தியாகராஜ செட்டியாரிடம் 'உதை' பட்டு திரும்பிய (திருந்திய?!) விவரத்தை ஸ்ரீ மஹாமஹோபாத்யாய உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள் வெளியிட்ட தியாகராஜ செட்டியார் வாழ்க்கை வரலாற்றில் பதிவு செய்திருக்கிறார்

இப்படி அவ்வப்போது தக்கோருடைய செயல்பாடுகளும், அவர்களது சைவ வாழ்க்கை முறையும் இருந்ததினால்தான் இன்று நாம் ஓரளவேனும் "சைவத்தின்" பெருமையை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம் என்றால் அது மிகையாகாது!. ஒரு சிலர் அவ்விதம் 'உதை' படாமல் போனதினால்தான் மற்ற சிலர் அவர்களுடைய நூல்களை 'ஆதாரமாக' க் கொண்டு பேசித்திரிகிறார்கள்.

இப்புத்தகத்தில் நாங்கள் மேற்கோள் காட்டுபவர்களும் தனிமனிதர்களே என்றாலும் அவர்களது வாழ்க்கைமுறையும், அவர்கள் தமது சந்ததிகளுக்கு செய்த பெரும் தொண்டுகளும் நாம் விமர்சனம் செய்யும் அளவுக்குத் தாழ்ந்தவைகள் அல்ல!!.

இப்புத்தகம் ஏதோ பெரிய ஆராய்ச்சி நூல் என்று மலைக்கவேண்டாம். நம் முன்னோர்கள் பலரும் அனுபவித்த நிறைய நல்லவிஷயங்களை உங்களுக்கும் தெரியப்படுத்துகிற ஓர் சிறிய முயற்சியே இது, நல்ல விஷயம் என்றால் சுருக்க மாகச் "சிவபெருமான்" பற்றியது என்று அறியவும். மற்றதெல்லாம்?.... உங்கள் ஊழ்வினையின் பயனாய் நீங்கள் அடைந்த "பிறவிப்பயன்" என்பதைப்பொருத்து!!

"சைவம்" பற்றி நிறையபேர் நிறையவே எழுதிவிட்டார்கள். அதுபற்றி நீங்களும் ஓரளவு அறிந்திருப்பீர்கள். ஆனால் சைவம் போற்றும் சிவபெருமான் பற்றிக் கிட்டத்தட்ட சென்ற நூற்றாண்டிற்கு முன்பு வெளிவந்த நூல்களைப் போன்று இப்போது வெளிவருவது அரிதாகிவிட்டது. வருவதே இல்லை என்றும் சொல்ல லாம். கிட்டத்தட்ட சென்ற நூற்றாண்டிற்குப் பிறகு வெளிவந்த பக்தி நூல்களெல்லாம் வெறும் குப்பை என்றே சொல்லலாம்.

அந்தச் சமயத்தில் வெளிவந்ததெல்லாம் அந்தந்தச் சமயத்தில் பிரபலமான, அல்லது மக்கள் மத்தியில் ஒரு மாயத் தோற்றத்தில் இருந்த ஒரு சூழலைப் பயன்படுத்தி "வியாபாரம்" பண்ணப்பட்ட விஷயங்களே!.

"ஒன்றே குலம். ஒருவனே தேவன்" என்பது திருமூலருடைய வாக்கு, அந்த ஒரு தேவன் யார் என்று யாரைச் சொன்னார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி, **"ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி"** என்பது நான்கு வேதங்களில் ஒன்றான ரிக் வேத வாக்கு, தெய்வம் ஒன்றே. அதனைக் கற்றறிந்த பண்டிதர்கள் பலவாறாகச் சொல்லுகின்றார்கள்? என்பது அதன் அர்த்தம், கற்றறிந்தப் பண்டிதர்கள் என்பது இங்கு சூட்சமமாகப் பயன் படுத்தப்பட்டுள்ளது.

அதாவது, திருவள்ளுவப் பெருமான் சொன்னது போல "கசடற கற்றவர்கள்" பண்டிதர்கள் ஆவார்கள். சகல உயிர்களையும். ஒரு சமநோக்கில் பார்ப்பவர்கள் அவர்கள். அவர்களுக்கு அத்தி முதல் எரும்பீறான உயிர்கள் அத்தனையும் 'சிவம்' தான். அவர்கள் சிவபெருமானைப் பலவாறாக அறிவதிலும், அப்படி அறிந்ததைப் பலவாறாகச் சொல்வதிலும் பெரிய விஷயமில்லை, தாம் பண்டிதர்களாக இருந்த மைக்கு அடையாளமாக, எதிர் காலச்சந்ததியர்கள் மீது மிகப்பெரிய அக்கறை கொண்டு பெரிய அளவில் தொண்டுகள் செய்த அவர்கள் பலவற்றையும் தெய்வமாக வணங்கியவர்கள் அல்ல, அவ்விதம் பலவற்றையும் தெய்வமாக வணங்கிய மற்றவ ர்களை வெறுத்தவர்களும் அல்ல, இவ்வுலகில் இருக்கிற அனைத்திலும் சிவத்தைப் பார்த்தவர்கள் அவர்கள். இந்த ஒரு விஷயத்தில் அவர்களது அணுகுமுறையை நாம் தெரிந்து கொண்டாலே போதும்.

அவ்வைப் பிராட்டியும்;

> **"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
> **மூவர் தமிழும் முனிமொழியும் - கோவைத்**
> **திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
> **ஒருவா சகமென் றுணர்"**

என்று நமக்கு திருக்குறள், ருக், யஜூர், சாமம், அதர்வம் எனும் நான்கு வேதங்கள், மூவர் தேவாரம், அகத்திய முனிவர் அருளியவை, திருக்கோவையார், திருவாசகம், (இவ்விரு நூல்களையும் அவ்வைப் பிராட்டி கோவைத் திருவாசகம் என்று ஒரே வார்த்தையாக சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது) திருமந்திரம் முதலியவை சொல்வது ஒருவாசகம் என்றும்; அந்த ஒருவாசகம் 'நமசிவாய' என்பதும் அப்பாட லின் பொருள்!,

## ஒன்றே குலம்! ஒருவனே தேவன்!

ஸ்ரீ காஞ்சிப்பெரியவர்கள் கூட, தமது அருளுரையில், 'சிவனையும், விஷ்ணுவையும் பிரித்துப் பார்ப்பதும் - பேசுவதும், எண்ணுவதும் மஹா தப்பு!" என்று சொல்லியிருக்கின்றார். (கூர்மபுராணத்தில் "ஸ்ரீ பரமேச்வரரை யாருக்கும் சமமாக சொல்வது கூடாது. அவரை சமஸ்த தேவர்களுக்கும் (ஸ்ரீ விஷ்ணு உட்பட) மிக உயர் ந்தவராகவே சொல்லவேண்டும். அப்படிச் சமமாகச் சொல்பவன் பதிதன் ஆவான்" என்று சொல்லியிருப்பதை ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் அறியாதவர் அல்ல!!)

அவர் பலதெய்வத்தையும் வணங்கியவரா என்றால், அவர் வாழ்ந்து காட்டிய வாழ்க்கை இல்லை என்றே சொல்லும்!, தினமும் அவர் பூஜை செய்து ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாள் அருளியதாக நம்பப்படும் சந்திரமவுலீஸ் வரருக்குத்தான்!. அவரே பிற்பாடு தமது அருளுரையில் பரத்துவ நிர்ணயமாக 'அரியும் சிவனும் ஒன்று" என்பதில் சிவபெருமானே பரம் என்பதாக ஒப்புக் கொண்டு அதை நமக்கும் தெரிவிக்கிறார், இவருடைய இவ்விதமான செயல் முரணானது என்று கருதவேண்டியதில்லை. ஏனென்றால், அவர் தமக்குத் தோன்றிய அவரது சொந்தக் கருத்துக்களையும், அல்லது தான் படித்த விஷயங்களையும் தெள்ளத்தெளிவாகச் சொல்லியிருக்கிறார். பூதூர். இராமாநுஜனைப் போன்று, எல்லாமே தன் கருத்து என்று புளுகவில்லை.

ஆனால் பல சமயங்களில் இவர் ஆன்மீகத்தைப் பரப்புவதாகக் கருதி, தம்மு டைய பிரசங்கங்களின் போது "சுத்தாத்வைதம்" பற்றிப் பேசுவதாக எண்ணி, ஸ்ரீ ஆதிசங்கரர் போதித்த (அ) கண்டுபிடித்துப் பரப்பிய 'அத்வைத' கொள்கைகளை சிவபெருமான் மீதும், சைவர்களின் மீதுமேற்றி பேசியதுண்டு. தமது பிரசங்கத்தை நூலாக (தெய்வத்தின் குரல்) வெளியிட்டதில் கூட பல இடங்களில், "சைவர்கள் கோவிப்பார்கள்'" "சைவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்" என்று இவரே தீர்மானி த்து பேசிய பகுதிகளில் இருந்தும் இதையறியலாம்.

காஞ்சிப் பெரியவர் என்று எல்லோராலும் அழைக்கப்படும் இவர் ஒருமுறை மதுரை நகர சபையில் (05.9.1963 தினமணி செய்தி) உபந்யாஸம் செய்யும் போது, ஞானசம்பந்தப் பெருமான் சமணரை வாதில் வென்று சைவத்தை நிலைநாட்டியதும் சமணர்கள் கழுவில் ஏற்றப்பட்டதாக சொல்லப்படுகிறது, அந்த சம்பவத்தை இன்றும் மதுரையில் உற்சவமாக கொண்டாடுகிறோம். ஆனால் சகிப்புத்தன்மைக்கு சிறந்த தான நம் சமயம் இப்படிப்பட்ட கொலை செய்யும் கொடூரமான செயலில் ஈடுபட்ட தென்பது கேட்பதற்கே அநுசிதமாக இருக்கிறது!" என்று பேசியிருக்கிறார் .

இதில் அவர் பேசிய பேச்சின் நடுவே வந்த "நம் சமயம்' என்பதைக் கலவடமாகப் பயன்படுத்தியிருப்பதுடன், "சமணர்கள் கழுவிலேற்றப் பட்டதாக சொல்லப் படுகிறது" என்றும் சொல்லியிருக்கிறார் . (இந்தத் தகவல் எந்த நூலில் இருந்து பெறப்பட்டது, அந்நூலை இயற்றியது யார்? என்பது முதலியவை அவரது பேச்சில் இல்லை!)

ஸ்ரீ பெரியவர் சொன்ன அந்த சம்பவத்தைக் கூறும் நூல் தெய்வத்திரு சேக்கிழார் பெருமான் அருளிய "திருத்தொண்டர் புராணத்தில்". இந்நூல் சைவத்தின் பிரமாண நூல்கள் பலவற்றுள் முக்கியமான ஒன்று, இதிலுள்ளவாறு தமது பேச்சில் குறிப்பிடாமல், அவர் வீதியில் (மடத்தில்?) எவரோ சொன்னதைக் கேட்டுச் சொன்னவர் போல 'சொல்லப்படுகிறது' என்றிருக்கிறார்.

சமணர்கள் எட்டாயிரம் பேரும் கழுவில் ஏற்றப்பட்டவரேயன்றி, வலியப் போய் ஏறியவர்கள் அல்ல!, அவர்களை அவ்விதம் ஏற்றுவித்தவர் பாண்டிய மன்னர். மன்னரது கட்டளையை நிறைவேற்றியவர் 'பண்புடையமைச்சனாராக' விளங்கிய ஸ்ரீ குலச்சிறை நாயனார்.

பதினாராயிரம் அடியவருடன் மதுரையம்பதிக்கு வந்து மடத்தில் தங்கியிருந்த சம்மந்தப் பெருமானை, கூண்டோடு ஒழித்துக்கட்ட அவர்கள் தங்கியிருந்த மடத்தை தீயிட்டுக் கொளுத்திய பெருங்குற்றத்தை செய்தவர்கள் சமணர்கள். இப்பெருங்குற்ற த்தை செய்த சமணர்களுக்குத் தண்டனை, 'கழுவேற்றம்' என்பது மன்னனது ஆணை, ஒரு குற்றம் - அதற்கு தண்டனை; எனுமளவில் இது ஓர் அரசாங்க விஷயம். இதை சமயவிஷயமாகச் சொல்வது என்பது மயக்கம். இதில் பெரியவர் 'அநுசிதமாக க் கருதுவது எதை?! சிறந்த சகிப்புத் தன்மையைக் கொண்ட 'நம் சமயம்' என்று சொல்வது எதை?! இவர் தம்மை சைவராகக் கருதியவராக இருப்பின், இவரது திருவாய் இவ்வார்த்தைகளை உதிர் த்திருக்குமா?!

ஸ்கந்த சஷ்டி என்பது ஸ்கந்தனுடைய 'வெற்றிவிழா'. இது சைவாலயங் களில் வெகுவிசேஷமாக கொண்டாடப்பட்டு வருவதை எல்லோருமே அறிவர். இதில் சூரனுடைய சம்ஹாரமின்றி, அவ்விழா நடத்தப் பெறுவதில்லை. "சூரசம்ஹா ரம்" என்றும் இவ்விழாவுக்கு பெயருண்டு. சமணர்களுடைய கழுவேற்ற சம்பவமும் இதுபோன்றதே! சூரசம்ஹாரம் போன்றே, சைவஸ்தாபன வெற்றி விழாவாக 'கழுவேற்றி விழா' வும் மதுரையில் கொண்டாடப் பட்டது. அவ்வளவே.!!

ஸ்மார்த்தர்கள் முதல் பலரும் கொண்டாடும் இப் பெரியவர் மட்டுமல்ல, நிறைய கற்றிருந்தும், சமயம் பற்றின நுகர்ச்சி இருந்தும் நிறையபேர், சிவபெருமானை தாழ்த்தியும், சிவனடியார்களை தாழ்த்தியும், சைவ சம்பந்தமான ஆராய்ச்சிக்குதவாத வதந்திகளைப் பரப்பியும் வருகிறார்கள். சைவம் சம்பந்தமாக பலவற்றைப் பரப்பவேண்டிய “சைவ மடங்களின்” செயல்பாடுகள் “சங்கர மடத்தை” விட மோசமாகவே இருக்கிறது.

ஸ்ரீ காஞ்சிப் பெரியவரும் சரி அவருக்கு முன்பு ஸ்ரீ சங்கர மடத்தை நிர்வகித்த பல பெரியோர்களும் சரி; அவர்களது ‘க்ஷேத்திராடன’த்தின் போது அங்கமைந்துள்ள சிவாலயங்களுக்குச் சென்று, அங்கு அவர்களே பூஜை செய்து வழிபாடு நடத்துவது போல அங்கிருந்த வைணவர்களது ஆலயத்திற்குச் சென்று பூஜித்தார்கள்; வழிபட்டா ர்கள் என்று சொல்லமுடியுமா? (அதை வைணவர்கள் ஒப்புக் கொண்டாலும்?!)

காஞ்சிப் பெரியவர் தமது அருளுரையில் "ஒருவன்" யார் என்பதைப் பற்றி மிகவும் தெளிவாக சொல்லியிருக்கிறார் .

"வேதங்களிலும், இருப்பது ஒரே கடவுள்தான்; அவனேதான் இந்த ஜீவனும் கூட என்று சொல்லியிருக்கிறது. ஆனால் அப்படிப்பட்ட ஒரே பரமாத்ம வஸ்துவை ஞானமார்க்கத்தில் ஆத்ம விசாரம் பண்ணிப் பண்ணித்தான் அநுபவத்தில தெரிந்து கொள்ள முடிகிறது. அந்த நிலை அடைவதற்கு ரொம்பவும் பக்குவம் வேண்டியிருக் கிறது. ஒரே கடவுளோடு நாம் ஐக்கியமாகி விடுகிற போது லோகமே நம் பார்வையி லிருந்து போய்விடுகிறது. அப்படிப்பட்ட நிலை வருவதற்கு நம்மை எப்படிப் பக்குவப் படுத்திக் கொள்வது என்றால், இந்த லோக வாழ்க்கையில் நாம் நன்றாக ஈடுபட்டிரு க்கிற இப்போதைய நிலையிலேதான். இதிலே இருந்து கொண்டே தர்மமாக வாழ்க் கை நடத்தி, கர்மாக்களைப் பண்ணிக் கொண்டேயிருந்தால், அதனால் நாம் சித்த சுத்தி அடைந்து பக்குவமாகிக் கொண்டே போகிற போது லோகம் நம்மை விட்டுப் போய்விடும். இதற்கான தர்மங்களையும் கர்மங்களையும் வேதம் யதேஷ்டமாக நமக்குக் கொடுத்திருக்கிறது.

ஒரே கடவுள்தான், ஒரே ஸத்வஸ்துதான் அத்தனை தேவதைகளாகவும் ஆகியிருக்கிறது என்று வேதத்தில் அழுத்தந்திருத்தமாகச் சொல்லியிருக்கிறது. ஒவ்வொரு தேவதையைப் பற்றிச் சொல்லும்போதும், அதுவே பரமாத்மா என்று சிலாகித்துச் சொல்லியிருப்பதாலும் வேதம் ஒரே கடவுட்-கொள்கை (monotheism) உடையதுதான் என்று தீர்மானமாகிறது. பல தேவதைகளைச் சொல்லியிருப்பதால், வேதம் பல கடவுள்கள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறது. Polytheism பல தெய்வ வழிபாட்டைச் சொல்கிறது என்று நினைப்பது பிசகு, ஒரே கடவுள் பல தேவதை களாயிருப்பதைத்தான் அது சொல்கிறது. பிரபஞ்ச வியாபாரத்தை நடத்துவதற்காக ஒரே பரமாத்மாதான் தன்னுடைய சக்தியைக் கொண்டே இந்தத் தேவதைகள் என்ற அதிகாரிகளை உண்டாயிருக்கிறார். இயற்கை என்று நாம் சொல்கிறதில் உஷ்ணம், மழை, காற்று, உணவு, ஸந்ததி, செல்வம், மநுஷ்யனின் உணர்ச்சிகள் முதலான பல விஷயங்களையும் நிர்வாகம் பண்ணுவதற்காக இந்த தேவதைகளை நியமித்திருக் கிறார் . நம்மைப் புடைத்தது போலவே தேவதைகளையும் படைத்திருக்கிறார்.

நம்மைத் தன்னிலிருந்துதானே படைத்தார். அதாவது அவரேதான் நாமாக ஆனார். அதனால் தான் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்று அத்வைதத்தில் சொல் வது.

இதே மாதிரி தேவர்களாகவும் அவரேதான் ஆகியிருக்கிறார். ஆனாலும் நாம் அத்வைதத்துக்கு நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்கிற வரையில், நம்மை வேறு வேறாக நினைத்துக் கர்மாக்களைப் பண்ணி நமக்குள் பரஸ்பர ஸஹாயம் செய்து கொள்வதால், தேவர்களையும் தனித்தனியாக நினைத்து, அவரவர்களுக்குரிய யக்ஞ ஆராதனையைப் பண்ணத்தான் வேண்டும் என்பது வேதம் போட்ட சட்டம். லோக வாழ்க்கை நமக்கும் ஸகல ஜீவகுலத்துக்கும் அநுகூலமாக இருக்க வேண்டுமானால் பிரபஞ்ச சக்திகளைப் பரமாத்மாவின் உத்தரவின்படி நிர்வாகம் பண்ணி வரும் தேவ தைகளின் அநுக்ரஹம் நமக்கு இருக்கவேண்டும் என்று சொல்லி, அவர்களின் அநுக்ரஹத்தைப் பெற்றுத் தரவே அவர்களுக்குப் பிரீதியாக யக்ஞங்களைப் பண்ண வேண்டும் என்று வேதம் சொல்கிறது. ஞானம் வந்தபின் இந்த தேவர்கள் வேண்டாம். நேராகப் பரமாத்மாவை உபாஸிக்கலாம். ஆனால் த்வைதப் பிரபஞ்சத்தி லிருந்து கொண்டே, இதிலிருந்து விடுபடுவதற்கான முயற்சிகளை நாம் செய்கிற காலத்தில், வேறு. வேறாக தேவதைகளையும் உபாஸிக்கத்தான் வேண்டும் என்று வைத்திருக்கிறது."

தவிர ஹிந்துக்கள் என்று பொதுவாக அடையாளப் படுத்தப்பட்ட நம்மையும், பலவற்றையும் "தெய்வம்' என்று வழிபடும் மற்றவர்களையும் அரவணைத்துச் செல்லும் கடமையும் அவருக்கு “மடாதிபதி” என்பதினால். அதிகமாகவே உண்டு. ரொட்டிக்கும், கூழுக்கும், சில்லரைக்கும் ஆசைப்பட்டு “கண்ட” மதத்தில் சேரும் “நம்மவர்களை”த் தடுக்கவேண்டிய பொறுப்பும் அவருக்கு இருந்ததினாலோ அல்லது கருதியதினாலோ என்னவோ, அவர் பல தெய்வ வழிபாட்டை ஆதரித்தவராக விளங் கியிருக்கக் கூடும். இல்லாவிட்டால் ஷண்மத ஸ்தாபகராயும், ‘ஜகத்குரு’ வாகவும் போற்றப்பட்ட ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாளின் தொடர்புடைய மடத்திற்கு பீடாதி பதியாக இருப்பது என்பது வேஷம் என்றாகியிருக்கும்.

(இது மாதிரியான “பரம்” சம்மந்தப் பட்ட விஷயங்களில், இவரைப் போன்றோ ரும், இவரை மதித்து வாழும் மற்றோரும் “அத்வைதம்” பற்றி நிறையவே வேண்டிய மட்டும் பேசியும், எழுதியும் வருவது எல்லாமே “சைவர்” களுக்கு எதிரான கருத்து என்பதில் மாற்றுக் கருத்து நமக்கு இல்லை!!, நாம் சார்ந்திருக்கும் “சைவம்” ஓரளவு இன்னல்களை சந்தித்ததற்கும், சைவம் பற்றி ஓர் தவறான எண்ணம் கற்றவர்கள் மத்தியில் ஏற்படவும் ஆதி சங்கரருடைய “ஷண்மத ஸ்தாபனம்” ஓர் முக்கிய காரணம் என்றால் அது மிகையல்ல. ஆதி சங்கரருடைய காலத்தில் பல மதங்கள் இருந்ததாகவும், அதை அவர் ஆறு மதங்களாக சுருக்கி உருவாக்கி தந்தருளியதாக சொல்லுகிறார் கள் . அவர் உருவாக்கியதாக கருதப்படும் ஆறு மதங்களுள் ஒரு சில மதங்களுக்கு சாஸ்திர நூல்களோ, வழி நூல்களோ கிடையாது. “ஒன்றே” என்று சொல்லுவதில் இருக்கிற அர்த்தம், “இரண்டல்ல!” என்பதில் கிடையாது. இரண்டல்ல என்றாலே, அதற்கு மேற்பட்டது இருக்கலாம் என்கிற பொருளல்லவா அதில் பொதிந்திருக்கிறத? “ஒன்று” என்றால் சரியான பொருள் இருப்பதை வீணே ஏன்

மாற்றுவானேன்? ஆதி சங்கரர் சிவபெருமானால் “பஞ்சமன்” வேடம் கொண்டு “சோதிக்கப்பட்டவர்” என்பதும்; அவரால் ஐந்து லிங்கங்கள் அளிக்கப்பட்டு, அவற்றை அவர் ஐந்து ஸ்தலங்களில் வழிபாட்டிற்காக வைத்தார் என்பதும் ஆதிசங்கரரது வாழ்க்கை வரலாற்றில் சொல்லப்படுபவை, இவ்விரண்டு செய்திகளும் உண்மையா கவே “நடந்தன” என்பது ‘உண்மையாக’ இருக்குமேயானால், ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாள் “ஷண்மத ஸ்தாபகர்” என்று பெயரை பெற்றிருக்க மாட்டார். சகல மதத்தின் கொள்கைகளையும் ஏற்றுக்கொள்ளும் விதத்தில் “ஷண்மத ஸ்தாபனம்” செய்திருக்க வும் மாட்டார்! ஆதி சங்கரரது ‘ஷண்மதத்தை' ஏற்றுக் கொள்வோர் சகல மதத்தை யும் ஏற்று, அவற்றையும் அவரே ஸ்தாபித்ததாக கற்பித்துக் கொண்டு அவரை “சர்வமத ஸ்தாபகராக’ கொண்டாடட்டும்.)

வெள்ளையன் நம்மை ஆண்டு ஒரு பெரிய கலாச்சார மாற்றத்தையும், நம் மதம் சம்பந்தமான தவறான கருத்தையும் உலக அளவில் ஏற்படுத்திச் சென்றதும், அதற்கு நம்மவர்கள் உடன்பட்டதும் பல .மாற்றங்களை ஏற்படுத்தி விட்டது. அந்த பாதிப்புகள் நம் நாட்டு மடங்களையும் விட்டு வைக்கவில்லை என்பது அந்தந்த மடங்களை நடத்துபவர்களுடைய செயல்பாடுகளும், பிரசங்கங்களும் பட்டவர் த்தனமாக நம் சைவத்திற்கு எதிரானவையாக அமைவதையும் காண்கிறோம். மேற் சொன்ன காஞ்சி மடாதிபதி விஷயம் கூட அவர்களது மடம் சம்பந்தமான விதிகளையும், நிர்வாகத்தினையும் பொருத்தது என்றாலும், அம்மடத்தைச் சார்ந்தவ ர்கள் “மாயாவாத கொள்கை” யை கைகழுவி, சைவத்தின் ' மஹிமையை பரவச் செய்திருக்கலாம். மக்கள் நலன் என்பதை காரணம் காட்டி இறை சேவையில் ஈடுபடுவது சரியல்ல; நியாயமும் அல்ல. இறைவன் சிவபெருமான் என்று சொல் லிக் கொண்டே புறச்சமயங்களை ஆதரிப்பதும், மற்றவற்றையும் “தெய்வம்” என்று சொல்லி மக்களை குழப்புவதும்தான் மடாதிபதிகளின் பணியா? என்றும், அவைதிகம் என்றும், “பாஷண்ட மதம்" என்றும் நம் சைவாச்சாரியர்களால் நிந்திக்கப்பட்ட வைணவத்தை ஏற்கும் இம்மடாதிபதிகள் கிறித்துவத்தையும், முஸ்லீம் மதத்தையும் அவர்கள் . தெய்வமாக ஏற்பவற்றையும் ஏற்று தம் சமரச பாவனையை பறைசாற்றிக் கொள்ளலாமே? “சங்கரமடம்” என்கிற பெயரில் மடத்தை நடத்துவதும், அம்மடத்தில் ஒருவர் தலைமைப் பொறுப்பில் ஒரு ஸந்நியாஸி இருப்பதும், அதை அச்சந்நியாஸி நிர் வகிப்பதும் சரியல்ல என்பதும்; மற்ற சைவசமய மடங்களைப் போல இவர் களது மடத்தைக் கருதக் கூடாது என்பதும் நம் கருத்து.

சைவ மடம் என்றால் அது எப்படி இருக்க வேண்டும், அதற்கு மடாதிபதியாக உள்ளவரின் குணாதிசயம், நடத்தை, மடத்தில் சிவாலயம் இருக்க வேண்டிய முறை, அவ்வாலயத்தை நிர்வகிக்க வேண்டிய முறை, அதன் நித்திய பூஜாவிதி முதலியவை சிவபெருமானால் அருளப்பட்ட 28 ஆகமங்கள் சிலவற்றுள் கண்டிப் பாகவே சொல்லப்பட்டிருக்கிறது, இச் சிவாகம விதிகளுக்கு உட்பட்டு அன்றைய சங்கர மடமும், இன்றைய சங்கர மடமும் (அவை இருப்பதாக கருதப்படும் மற்ற மடங்களையும் சேர்த்து) இல்லை என்பதுமே நமக்குள்ள குறை. இந்த காமிகாகமத் தின் கூற்றின்படி மற்ற சைவ சமய மடாலயங்கள் மட்டும் செயல்படுகிறதா? என்பதை அந்தந்த மடாலயத்தை அலங்கரித்துக் கொண்டிருக்கிற தம்பிரான்களும், ஸ்வாமிகளும்தான் மனம் திறந்து சொல்ல வேண்டும்.

சைவ மடாலயங்களை அலங்கரிக்கும் சுவாமிகளும், தம்பிரான்களும் இன்று சைவ நீதிகளுக்கு எதிராகவே செயல்பட்டு வருவதும் கண்கூடாக நடப்பவையே. ஒவ்வொரு ஊரில் அமைந்த சிவபெருமானை வழிபடும் ஒரே காரணத்திற்காகவும், சிவனடியார்கள் பெயரில் அமைந்த அமைப்பின் காரணத்திற்காகவும் அவர்களால் நடத்தப்பெறும் விழாக்களுக்கு மடாதிபதிகள் வருவதும், அவ்வமைப்புகள் சிபாரிசு செய்யும் (தமிழே தெரியாத) நபர்களுக்கு "புலவர்" பட்டத்தையும், "சித்தாந்தம்" என்றால் என்னவென்று தெரியாதவர்களுக்கு "சித்தாந்த இரத்தினம்" பட்டத்தையும் தம் திருக்கரத்தால் தருவதும், பிறகு நிகழ்ச்சியை ஏற்பாடு செய்த நபர்கள் அவ்விழாவிற்கு வருகை தந்த நபர்களிடம் "நன்கொடை" வசூலிப்பதும்: யாரை வேண்டுமானாலும் அவர்களது இஷ்டத்திற்கு சைவத்தைப் பற்றியும், சிவபெருமா னைப் பற்றியும், அருளாலர்களது படைப்புகளைத் தம்மிஷ்டத்திற்கு விமர்சனம் செய்து பிரசிங்கிப்பதையும் கேட்டு ரசிப்பதும் நடக்கிறது. (திருவாசகத்திற்கு உரை எழுதும் தமிழறிஞர் களின் கூட்டமும் தற்போது அதிகம்!,)

புகழ்பெற்ற ஒரு சிவாலயத்தில் கர்மவினையை அநுபவித்து மாண்டுபோகும் மாந்தர்களுடைய பிறந்த நாள் கொண்டாட்டமும், வக்கீல்கள் இல்லாமலே விவாகர த்து வாங்கக் கூடிய "திருமணங்களும்" இன்னபிற வைபவங்களும் நடத்த அநுமதி தரப்படுகிறது. (கருமாதி, மஞ்சள் நீர், பிரசவம் முதலியவை மட்டும் அஅச்சிவாலயத்தில் நடத்திக் கொள்ள அநுமதி கிடையாது!) ஆனால் சம்பந்தப்பட்ட சிவாலயத்தை நிர்வகிக்கும் மடாலய மடாதிபதிகள் ஆகமங்களைப் பற்றி வாய்கிழிய பேசுவார்கள்!, இம்மாதிரியான மடாதிபதிகளுடைய பேனர் வைத்துக்கொண்டும், அவர்களுடய ஆசீர்வாதங்களுடனும் பாழ்பட்ட சிவாலயங்களில்* நிறைய பேர் ஒவ்வொருவரும் புனருத்தாரண சங்கம், மெய்கண்டார் பேரவை, நால்வர் திருமடம், போன்று சைவத்துடன் தொடர்புடைய பெயர் வைத்துக்கொண்டு ஆன்மீகத்தில் ஈடுபடுவதாக காண்பித்துக் கொண்டு தம்மை முன்னிலைப் படுத்திக் கொண்டு "கைங்கர்யங்களை' ச் செய்துவருகிறார்கள். இதுவும் நல்லதல்ல, ஒரு மடாதிபதி தன் கடமையையும், ஒரு நிர்வாகம் தன் கடமையையும், ஒரு அரசாங்கம் தன் கடமை யையும், ஒரு தனி மனிதன் தன் கடமையையும் ஒழுங்காய் செய்தாலே ஆலயப் பணிகளுக்கு *சங்கம்' வைத்து 'கைங்கர்யம்' செய்ய வேண்டியதில்லை. சங்கம் வைத்து தமிழை வளர்க்கலாம்; சிவபக்தியை வளர்க்க முடியுமா? முடியும் என்பவர் கள் 'சங்கம்' வைத்து பிள்ளை பெற்றுக் கொள்ளலாம் என்பதையும் ஒப்புக்கொள் வார்கள்!. எது எதற்குத்தான் சங்கமும் சபையும் என்கிற விவஸ்தை வேண்டாம்?!

இராமர் வந்து வழிபட்ட பெருமையை உடைய புகழ்மிக்க சிவாலயத்தினை நிர்வகிக்கும் பரம்பரை நிர்வாகம் தம்மிடமிருந்த அரிய பல நூல்களை புதுவையில் உள்ள ஒரு நிறுவனத்திடம் தந்துவிட்டது. இனி அந்த நூல்களை அவர்கள் பாதுகாத்து, தம்மிடம் பணிசெய்து பிழைக்கும் பன்மொழிப் பண்டிதர்களை விட்டு அந்நிய மொழியில் மொழிபெயர்த்து "Ram and Easwara" என்றோ; "Rameswaram in Trouble" என்றோ தலைப்பிடப்பட்டு அப்புத்தகங்கள் இந்தியாவில் ஒரு விலைக்கும், அந்நிய தேசங்களுக்கு ஒரு விலைக்கும் விற்கப்படும். அந்நிய தேசத்து ஒத்துழைப் புடன் நடத்தப்பெறும் அந்த நிறுவனம் செய்யும் அப்பணியை, அவ்வாலயத்தை நிர்

வகிக்கும் நம் சைவ மடாலயத்தாரால் செய்யமுடியாததற்கு காரணம் என்னவாக இருக்க முடியும்?

இம்மாதிரி பண்டைய நூல்களை தம்வசம் வைத்து பாதுகாத்து “பணம்” பண்ணும் அமைப்புகளும், நிறுவனங்களும் தாம் வைத்திருக்கும் பழைய நூல்களை- தம் நிறுவனத்தில் பணத்திற்காக பணி செய்யும் ஆசிரியர்களைக் கொண்டு தற்கால த்துக்கு ஏற்ற நடையில் புதிதுபோல பதிப்பித்து அதை தாம் ‘பதிப்புரிமை’ கொண்டாடி வருகின்றன. அவர்களிடத்தில் இருக்கிற எல்லா நூல்களும், சுவடிகளும் ‘பதிப்புரிமை’ காலக்கெடுவை தாண்டியவையாக இருப்பவையே, அதை அப்படியே தற்காலத்தில் அச்சுத்துறையில் இருக்கிற முன்னேற்றத்தைப் பயன்படுத்தி போட் டோ ஆப்செட் முறையில் ‘அப்படியே’ பதிப்பித்தால் யார்குடியும் முழுகிவிடாது. அவ்விதம் செய்யாமல் அதை வேறு மொழியிலும், நம் தமிழ் மொழியிலும் ‘தொகுத்து' வேறு தலைப்புகளிட்டு புதிய நூல் என்கிற தோற்றத்தில் வெளியிட்டு ‘பணம்’ பண்ணுவதை, அக்காலத்தில் அந்த மூல நூல்களை அச்சிடவும், வெளியிட வும் உதவிய சைவ மடாலயங்கள் மற்றும் அந்நூலாசிரியர்களின் வாரிசுகள் அதனை “வேடிக்கை” பார்ப்பது மிகவும். வேதனையான ஒன்று,

தமிழகத்தில் உள்ள மடாலய நூலகங்களின் கதியையும், ஆலயத்தின் நிலை யையும் அங்கு சென்று பார்த்தால் உண்மையான சைவனுக்கு கட்டாயம் கிலியை ஏற்படுத்தும்!. மறுபதிப்பை கண்டு கொண்டிருப்பவையாக இருப்பது திருவாசகம், சாத்திர நூல்கள் (14), திருமந்திரம், பெரியபுராணம், இவைமட்டுமே!. சைவத்தின் மகிமை பேசும் மற்ற பல நூல்கள் பற்றி அம்மடாலய மடாதிபதிகளுக்கே தெரியாது!, இதற்காகவா நம் முன்னோர்கள் தம்முடைய பங்களிப்பை எந்த பிரதிபலனும் பாராது செய்தார்கள்?! மடாதிபதிகள் மடத்தினுடைய சொத்துக்களையாவது ஒழுங் காகக் காப்பாற்றுகிறார்களா என்று பார்த்தால் அதுவும் சந்தேகமே!, 75 வருடங்க ளுக்கு முன்பு ஒரு சைவ மடாலயத்தின் சொத்துக்களாக இருந்தவை என்னென்ன? தற்சமயம் அதன் நிலை என்ன? ஸ்ரீ பரமேச்வரரைத் தவிர இது வேறு யாருக்குத் தெரியும்?!

செக்யூலரிசம் பேசும் ஓர் அரசு ஆலய நிர்வாகத்தில் தலையிட்டால் அவ்வாலயத்தின் நிலை என்ன? என்பதற்கு இன்றைய ஆலயங்களும், மடாலயங்க ளும் சாட்சியாய் நிற்பவைதான்.

ஆன்மீகத்தின் பெயரைச் சொல்லி பிழைப்பு (பிரசங்கம்) நடத்தும் நிறைய ‘சாமியார்களுடைய’ மடங்களின் செழிப்பும், சாமியார்களுடைய வனப்பும் அரசாங்கத் துடைய நிர்வாகத்தில் இயங்கும் ஆலயங்களுக்கு காணப்படாததற்கு காரணம் என்ன?

புதுவையில் ஒரு தனி வகுப்பினரால் நிர்வகிக்கப் பட்டுவரும் ஒரு சிவாலயம், அக்கோவிலுக்கு தானமாக வழங்கப்பட்ட சொத்துக்களை பள்ளிக்கூடம், வணிகவளாகம் முதலியவற்றுக்கு வாடகைக்கு விட்டு “பணம்” பண்ணுகிறார்கள். இன்றைய நிர்வாகத்தினர்கள் அந்த சொத்தை இப்படி வாடகை விட்டு பணம் சம்பாதி

க்கவா அன்று அவர்கள் தானமளித்திருப்பார்கள்? அந்தந்த சொத்தை தானம் செய்தவர்களது வாரிசுகள் தம் முன்னோர்கள் அளித்த அந்த சொத்துக்களை இன்று கண்டால் அவர்களது மனதில் மகிழ்ச்சியா இருக்கும்? தானமாக அளிக்கப்பட்ட சொத்துக்கள் எந்த காரணத்திற்காக தானமளிக்கப்பட்டதோ, அந்த காரணத்திற்கு மட்டுமே அதை பயன் படுத்தவேண்டும். கண்டிப்பாக பள்ளிக்கூடம் நடத்தவும், வணிக வளாகம் கட்டவும் அவர்கள் தானம் அளித்திருக்க மாட்டார்கள். அதைத் தானம் அளித்தவர்களே செய்திருப்பார்களே?!

இது போல இன்னும் நிறைய விஷயங்கள் நம் விவாதத்திற்கும், விசாரணைக்கும் இருக்கின்றன. சைவத்திற்காக வாழ்ந்து நிறைய தொண்டுகள் பல புரிந்த சைவ சித்தாந்த சிவனடியார்கள் தம் காலத்திலும், எதிர் கால சந்ததிகளுக்காகவும் செய்த தொண்டுகளும், அத்தொண்டினால் அவர்கள் அடைந்த இன்னல்களும் அம்மம்ம! கொஞ்சநஞ்சமல்ல!!!

ஆனால் அறிவில் முதிர்ச்சி பெறவும், பண்டிதர்கள் படைப்பை படித்தின் புறவும் தாம் கற்ற கல்வியால் தானும் பயனடையாமல், அடுத்தோருக்கும் அதனருமையை எடுத்துரைக்காமலும் “சைவன்” என்கிற பெயரில் வாழ்வோரும், வைணவத்தை அநுசரித்து வாழ்வோரும் தனக்கு ஒன்றுமே தெரியாமல், ஒன்றும் தெரியாத ஏழைகளிடம், ‘இதுதான் தெய்வம். சிவன் தெய்வமல்ல’ என்று பூதூர் இராமானுஜனைப் போன்றவர்கள் பிதற்றுவதும், அவர்களைப் பண்டிதர்கள் என்கிற வரிசையில் சேர்ப்பதும் என்ன நியாயம்?

‘எல்லோரும் சமம்’ என்பது ஈஸ்வரருக்கும், அனைத்தையும் சமமாகப்பாவிக்கும் பெரியோர்களுக்கும்தான் . நமக்கல்ல!! அம்மாதிரியான ஒரு மனநிலை நமக்கு இருக்கின்றதா? என்பதே கேள்வி!. அம்மாதிரி ஒரு மனநிலை இருப்பவர்களும் “சிவபெருமானை” யே முழுமுதற் கடவுளாகச் சொல்லியிருக்கின்றனர் .

## எது நல்லது?!

"இது இப்படி நடந்தது' என்பதை உள்ளவாறே விளக்குவதால் “இதிஹாஸம்” என்று பெயர் பெற்ற, ஸ்ரீ வால்மிகி முனிவர் எழுதிய இராமாயணம், மற்றும் ஸ்ரீ வியாஸர் எழுதிய பாரதம், பரம இதிஹாசம் என்றும்; பேரிதிஹாசம் என்றும் கொண்டாடப்படும் “சிவரஹஸ்யம்” என்கின்ற மூன்று இதிஹாசங்களிலும், மற்றுமுள்ள நூற்றியெட்டுப் புராணங்களிலும், ஸ்மிருதியாதிகளிலும் “பரம்” என்றால் ‘சிவபெருமானை’ த்தான் சொல்லுகின்றது.

அவ்வைப் பிராட்டி இறையடியவர்களின் மனமே பெரிது என்று சொன்ன இறையடியவர்களின் இணையற்ற சரிதத்தை தெய்வத்திரு சேக்கிழார் பெருமான் அருளிய காவியமாக “திருத்தொண்டர் புராணம்” சொல்லுவதால், அந்நூலுக்கு “பெரிய புராணம்” என்கிற பெயர் பொருத்தமானதாக ஆன்றோர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. சேக்கிழார் தாமெழுதிய தமது நூலுக்கு “திருத்தொண்டர் புராணம்”

என்றே பெயர் அமைத்துக் கொண்டார். அனைவரும் அதைத் "திருத்தொண்டர் புராணம்" என்றேதான் அழைத்தனர். அவ்வை பெரிதாக வியந்த இறைவன் ஈசனை தம் உள்ளத்தில் ஒடுக்கிய அடியவர் பற்றின வரலாற்றினைப் பேசும் புராணமாத லால், "பெரிய புராணம்" என்றும் அதற்கு பெயர் ஏற்பட்டது.

நூலிற்கு பெயர் காரணம் இவ்விதம் இருவகையிலும் பொருந்த அந்நூல், திருத்தொண்டர்ப் புராணம் என்றும் பெரிய புராணம் என்றும் அழைக்கப்படுவதில் யாருக்கு ஆட்சேபம் இருக்க முடியும்?

முன்மாதிரியான காலத்தில் "எது நல்லது?" என்று எடுத்துச் சொல்ல உண்மை யாகவே சமூக அக்கறையுள்ள பெரியோர் இருந்த மாதிரி இப்போது இல்லை, கலாச்சார மாற்றத்தில் நாம் இழந்துள்ள பெரிய இழப்பு இது, எனவே, பக்தியில் சிறந்து விளங்கி, தமக்கென வாழாமல் எதிர்கால சந்ததிகளுக்காக தாமுணர்ந்த வற்றை அளித்த 'பெரியவர்கள்? பலருடைய தொகுப்பே இந்த நூல். இனி "சிவபெருமான்" பற்றி இதிஹாஸமும், புராணமும் நமக்கு சொன்ன விஷயங்களில் இருந்து சில:

## ஸ்ரீ சிவ பெருமான்

- இவர் சாந்தராய் தமக்குமேல் நாயகமில்லாதவராதலால், சர்வகர்த்தா வாகவும், மஹா ப்ரளயகாலத்தில் சக்தி ரூபமாய் லயித்திருக்கும் நாசமிலியாகவும், ஞான சக்தியால் சகலத்தினையும் அறியும் ஸர்வஜ்ஞராயும், ஸ்வப்பிரகாசராகியும், அசலராகியும், அமேயராகியும், ஸ்வபாவ சித்தராயும், ஒப்பிலியாயும், சூக்ஷ்மராகி யும், ஸ்தூல ரூபியாயும், ஞான, கிரியா சக்தி சரீரியாயும், நிஷ்களராயும் இருப்பவர்.

- இவர் சுவேச்சையால் ஆன்மாக்கள் ஜனனக்கரைக் கண்டு தம்மை அடையும் வண்ணம் அவரவர் தியானிக்கும் வகை அவ்வுருக்கொண்டு சகளராய் அவரவர்க்கு அருளினார். அவற்றுள் சில வருமாறு:

- ஸ்வேதலோஹிதம், இரத்தம், பீதம், நீலம், விச்வரூப கற்பங்களில் பிரம்மனுக்கு காயத்திரி, சரஸ்வதி முதலியவரை அருளி, முனிவர்களுக்கு அருள் புரிபவர்.

- சிலாதருக்கு பிரத்தியக்ஷமாய்ப் புத்திரப்பேறருளி நந்திக்கு இறவாமை அருளி யவர்.

- இந்திரன் முன் யக்ஷனாகத் தோன்றி அவனது சக்தியெல்லாம் கொண்டு மறைந்தவர்.

- பிரும்மதேவருக்குச் சிருஷ்டியின் பொருட்டு அவருக்குப் *பஞ்சாக்ஷரம்' உபதேசித்தவர்.

- பிரம்ம விஷ்ணுக்கள் படைப்புத் தொழில் முதலிய அடையச் சக்தியிடம் பிறக்கச் செய்து ஸ்ருஷ்டியை அருளியவர். பிரும்ம தேவனுக்கு சிருஷ்டியின் பொருட்டுப் பஞ்சாக்ஷர உபதேசம் செய்தவர்.

- பிருத்வியில் சர்வராயும், அப்பில் பவராயும், தீயில் உருத்திரராயும், காற்றில் உக்கிரராயும், ஆகாயத்தில் வீமராயும், சூர்யமண்டலத்தில் மஹாதேவராயும், சந்திரமண்டலத்தில் ஈசானராயும், ஆன்மாவில் பசுபதியாகவும் அமர்பவர்.

- சக்தியை ஐந்துமுகத்துடன் தமது முகத்தில் சிருஷ்டித்தவர்.

- உபமன்யு முனிவர்க்கு தந்தையான வ்யாக்ரபாத முனிவர்க்குப் பாற்கடலை அளித்தவர்.

- வீரபத்திரரை ஏவி தக்ஷயாகத்தில் கலந்து கொண்ட விஷ்ணுவையும் துவைத்து, சூர்யனின் பல்லை உடைத்து, மற்ற ரிஷிகளைக் கொன்று, யாகத் தினைக் கெடுத்து அழித்தவர். உமையின் வேண்டுதலுக்கு இரங்கி, தக்ஷனை மன்னித்து அவனுக்கு ஆட்டுத்தலை அருளியவர்.

- ஒரு கல்பத்தில் பிரம்மன் வேண்ட, அவரது நெற்றியில் நீலலோகித மூர்த்தி யாய்த் தோன்றி, அவருக்கு ஸ்ருஷ்டித் தொழில் கற்பித்தவர்.

- பிரம்மன் கர்வித்த காலத்தில், பைரவரை ஏவிப் பிரம்மனது நடுத்தலையைத் தன் இடக்கை விரலால் கிள்ளி எறிந்து, பின் பிரம்மனது வேண்டுதலால் பிரம்மனை மன்னித்து அவனது கபாலத்தினை தம் கையில் ஏந்தி அவனை பெருமை படுத்தினவர்.

- உமை தனதருளால் உலகம் செழிக்கின்றது என்றெண்ணிய அவளது கர்வ மடக்க, தம்மை செயலில்லாது செய்து கொண்டு உலகை ஸ்தம்பிக்கச் செய்து பின் உமையின் வேண்டுதலுக்காக அனுக்ரஹம் செய்தவர்.

- தமக்கெனச் செயல்கள் இல்லாதிருந்தும் ஸ்ரீ கண்டருத்திரர் முதலியோரிடம் தமது சக்தியைக் கொண்டு பஞ்சக்ருத்தியம் நடப்பிப்பவர்.

- ஸர்வ சம்ஹார காலத்தில் தாம் பஞ்சப்ரேதப் பரசிவமாக இருந்து பிரம்மன், விஷ்ணு, இந்திராதி தேவர்களையும் அழித்து அவர்களது நிலையாமையை உணர்த்த அவர்களது எலும்புகளை மாலைகளாக அணிபவர்.

- தாருகாவனத்து ரிஷிகளையும், ரிஷி பத்தினிகளையும் கர்வபங்கம் செய்ய தாம் பைரவ கோலம் தாங்கி ரிஷி பத்தினிகளின் கற்பிற்கு பங்கம் செய்தவர்.

அச்சமயம் அந்த ரிஷிகள் ஏவின டமருகம், அக்னி, மான், மழு, சூலம் ஆகியவற்றை தம் கைகளில் கொண்டும், புலியின் தோலை உடுத்தும், நாகத்தினை ஆபரணமாகக் கொண்டும், பிரதம கணத்தினையும் பேயையும் தம் திருவடியில் அடக்கியும், வெண்டலயை அணிந்தும், முயலகனை அவன் முதுகெலும்பொடிய அழுத்தியும் குற்றமிலாது இருப்பவர் .

- தேவர்களை வருத்திய கயமுகாசுரனின் உடல் பிளந்து, அவன் தோலை உரித்தணிந்து “கஜாரி' என திருநாமம் அடைந்தவர்.

- இந்திரன் மீது தாமெரிந்த கோவாக்னியால் கடலில் உண்டான “ஜலந்திரன்” மிகுந்த கர்வம் கொண்டு அனைவரையும் துன்புறுத்த, அவனது கர்வமடக்க விருத்தனாக (வயதானவராக) சென்று தம் காலால் பூமியில் சக்கரம் வரைந்து பெயர்த்தெடுத்து, அச்சலந்திரனை இரு கூறாகப் பிளந்து வதைத்து “ஜலந்தாரி” எனும் திருநாமம் அடைந்தவர்.

- சர்வசம்ஹார காலத்தில் ரிஷப உருக்கொண்டு எக்காலத்திலும் தருமம் நசியக்கூடாது எனும் எண்ணத்தில் தன்னைச் சரணமடைந்த தருமதேவதை யை அனுக்ரஹித்து, தருமதேவதையின் வேண்டுதல்படி தர்மத்தை தன் வாகனமாகக் கொண்டு “ரிஷபாரூடர்” எனும் திருநாமம் அடைந்தவர்.

- அமிர்த மதன காலத்துப் (திருப்பாற்கடலைக் கடைந்த போது) பிறந்த ஆலகால விஷத்தினால் யாரும் துயருராத வண்ணம், உயிர்களின் நன்மை கருதித் தாமே அவ்விஷமுண்டு “நீலகண்டர்” எனும் திருநாமம் அடைந்தவர் .

- பார்வதி தேவி தமது திரிநேத்ரங்களை மறைத்ததால் அவர் விரல்களில் உண்டாகிப் பெருகிய கங்கையைத் தேவர்கள் வேண்ட, தம் சடையில் அணிந்து “கங்காதரன்” எனும் திருநாமம் அடைந்தவர்.

- பிரம்மன் வேண்டுகோளின்படி சனகாதியரை தம் புஜத்தில் படைத்தவர்.

- சூரபத்மனுக்கு வச்சிரயாக்கை, இந்திரனுடையத் தேர் முதலியவற்றை அளித்து, அவன் செருக்குற்ற காலத்தில், கங்கையை வரவழைத்து அவன் செய்த யாகத்தை அழித்து, முருகக் கடவுளால் அவனை சம்ஹரிக்கச் செய்தவர்.

- பகீரதன் பொருட்டு கங்கையின் வீறடக்கி, அவளை தன் விரிசடையில் தாங்கியமையினால் “கங்காதரன்” என்றும், பகீரதனின் பித்ரு சாபம் நீங்க அக்கங்கையைப் புவிக்கு அளித்தமையினால் “கங்காவிஸர்ஜன மூர்த்தி” என்ற திருநாமமும் அடைந்தவர்.

- கயமுகாசுரனை வதைக்கும் பொருட்டும், தேவர்களின் நன்மையின் பொருட்டும் வினாயக மூர்த்தியைப் பிறப்பித்தவர். வினாயகருக்கு திவ்யசித்தராய் எழுந்தருளிச் சித்திகள் பல அருளியவர்.

- விபுலன் பொருட்டு யமனை சூலத்தினால் குத்தி வதைத்தவர், மார் கண்டேயர் பொருட்டும் யமனை வதைத்தவர். ஸ்வேதனது உயிரைக்கவர்ந்த யமனைத் துன்புறுத்தி சிவனடியாரை நெருங்காதிருக்கக் கட்டளையிட்டவர். சிலாத முனிவரின் குமாரர்க்கும் யமபாசம் நீக்கினவர்.

- ஆதிசேஷன் தவத்திற்கிரங்கி அவனுக்கனுக்ரஹித்து, அவனைத் தன் விரல் மோதிரமாகக் கொண்டு "புஜங்கபயூஷணன்" எனும் திருநாமம் அடைந்தவர் .

- உமையின் தவத்தினை விருத்த வேதியராக வந்து சோதித்து, அவளது கலங்காத நிலையறிந்துத் தம் சுய உருக்காட்டி அனுக்ரஹித்து, சப்தரிஷி களால் மணம் பேசுவித்து அவளை மணம்புரிந்து "உமாமகேசன்'" எனும் திருநாமம் அடைந்தவர்.

- தமது நெற்றிக் கண்ணிலிருந்து "ஆறுமுக"க் கடவுளை உற்பவித்து, அவருக்குத் துணையாக உமையின் காற்சிலம்பில் உதித்த நவவீரர், மற்றும் லக்ஷ வீரர் களை அவருக்குத் துணைவராக்கியவர்.

- "பிரம்மனிடம் ப்ரணவ மந்திரத்திற்குப் பொருள் கேட்டு அவரைச் சிறையில் அடைத்தாயாமே?.. நீதான் எனக்குச் சொல்லேன்?!" என்று கேட்டு முருகனுக்கு ஸ்வாமிநாதன் என்னும் திருநாமம் அளித்தவர்.

- பஹாசுரன் (கொக்கின் உருவில் உள்ளவன்) என்னும் அசுரனை வதைத்து, கர்வப்பட்டொருக்கு இதுதான் கதி: என அவனது இறகினைத்தன் சிரசில் சூடிக்கொண்டவர்

- மாநந்தை என்னும் தாசியின் பொருட்டு வணிகராய்ச் சென்று தீக்குளித்து அவளுக்கு முக்தியளித்தவர்.

- தேவாஸூர யுத்தத்தில் தேவர்கள் வெல்லும் பொருட்டு அவர்களுக்கு வலிமை அளித்து அவர்களைக் காக்க, தேவர்களோ தமது வலிமையால் ஜயமடைந்ததாக கர்வம் கொள்ளவே, தாம் ஒரு புல்லாக இயக்கவுரு அடைந்து அக்னி முதலிய தேவர்களை அப்புல்லினை அசைக்கச் சொல்லி இயலாமற்போகச்செய்து அவர்களது கர்வத்தினைப் போக்கினவர்.

- அனஸூயை புஷ்பாஞ்சலி செய்ய, அத்ரி முனிவரின் வேண்டுகோளால் அவளது கையில் குழந்தையுருவில் தவழ்ந்தவர்.

- பண்டாசுரனை ஹோமத்தில் நீற்றியவர்.

- தனகுத்தன் மனிவியின் பொருட்டு, தாயுருவில் அவளுக்குப் பிரசவ மருத்துவம் செய்து, தாயுமானவர் என்னும் திரு நாமம் அடைந்தவர்.

- மன்மதனை எரித்துக் “காமாரி” என்று திருநாமம் அடைந்தவர்.

- திரிபுர சம்ஹாரம் செய்து “திரிபுராரி” என்னும் திரு நாமம் பெற்றவர்.

- தக்ஷ யாகத்தில் தன்னைச் சரணடைந்த சந்திரனுக்கு அவன் பயம் போக்கி, அவனைத் தன் சிரத்தில் சூடி, ‘சந்திரசேகரன்’ என்னும் திருநாமம் பெற்றவர்.

- பஹாக்ஷன், முஷ்டிகாசுரன், அக்கிரேசுரன், காந்தாசுரன், தண்டாசுரன், முண்டாசுரன், சார்த்தூலன், குடாசுரன், எனும் பல அசுரர்களை ஒவ்வொரு கல்பத்திலும் தேவர்களில் நலன் பொருட்டு வதைத்தவர்.

- அனலாசுரன், வச்சிரகேசி, சுந்தராசுரன், எந்திராசுரன் முதலிய அசுரர்களை தீக்கண்ணில் எரித்தவர்.

- ஒரு பிரளயத்தில் தன் பெருஞ்சிரிப்பினால் மாத்திரம் அனைத்தினையும் ஸம்ஹாரம் செய்து “வீரட்டஹாசர்” என்னும். திருநாமம் பெற்றவர்.

- மதுரையம்பதியில் அறுபத்து நான்கு திருவிளையாடல்களை நடத்தினவர். அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய வாழ்வில் அவர்களுக்கு நற்பேறு அருளியவர்.

- வருணன் மதுரையின் மீது பகைத்து கடலைப் பொங்கச்செய்ய இவர் தமது விரிசடையில் இருந்த மேகக்கூட்டத்தினால் அதைக்குடிப்பித்து, அவற்றை நான்மாடக் கூடலாக்கி வருணனின் வலிமையடக்கினவர்.

- சூர் யனது ஒளியால் இவ்வுலகம் விளங்குகிறது என்ற நாரதரின் வாக்கினால் செருக்குற்ற ஸூர்யனைத் தன் நெற்றிக்கண்ணில் தகிக்கச்செய்து கர்வம் நீக்கி னவர்.

- காமவேட்கை கொண்ட வேதியனுக்கு தன் பதக்கத்தினைத் தந்து அவனைத் தாசி வீட்டிற்கு அனுப்பியவர்.

- தாய் தந்தை இல்லாத சிறுவனுக்கு விருத்த வேதியராய் வந்து வேதம் கற்றுக் கொடுத்தமைக்கு மகிழ்ந்த பார்ப்பிணி ஒருத்தி இவருக்கு அன்னமிட விரும்ப, தயார் செய்த அன்னத்துடன் பாகம் ஆகாத அன்னங்களையும் உண்டு மறைந்தவர்.

- விஷ்ணு முதலானோருக்குத் தனது திருநடனக் காட்சியளித்தவர். கிருஷ்ணனுக்கு உபமன்யு மஹரிஷி மூலம் சிவத்யானமும், பஞ்சாக்ஷர மஹிமையையும் தெரிவித்து புத்திரப்பேறு அருளியவர்.

- விஷ்ணுவையும், பிரம்மாவையும் தம்மிடத்தில் உற்பவித்து “ஏகபாத மூர்த்தியாக” விளங்குபவர்.

- பஞ்சபூதங்கள், சூர்யன், சந்திரன், ஆன்மா என்னும் தத்துவங்களடங்கிய “எண்குண மூர்த்தி”யாக இருப்பவர்.

- பாதாள லோகத்தில் அப்ஸரஸ்களுடன் கூடிக்குலாவி தம் காத்தல் தொழில் மறந்த விஷ்ணுவைப் பணிவித்து வைகுண்டம் அனுப்பியவர்.

- தம் அசைவே உலகத்தசைவு என்றுணர்த்த; “சப்த தாண்டவம்” ஆடினவர்.

- பராசர முனிவரின் பொருட்டு வக்ராசுரர்களை அழிக்க, தம் சக்தியிடம் சண்டகாதினி முதலிய துர்கைகளை சிருஷ்டித்தவர்.

- சனகாதி முனிவர்களுக்கு வேதத்தின் பொருளுணர்த்தி, “தக்ஷிணாமூர்த்தி” என்னும் திருநாமம் அடைந்தவர்.

- பஞ்சப்ரேத பரசிவம்: சர்வசம்ஹார காலத்தில் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேச்வரர், சதாசிவன் என்னும் பஞ்ச மூர்த்திகளின் தேகங்களை தெப்பமாகக் கொண்டு அவற்றின் மீது எழுந்தருளி மீண்டும் சிருஷ்டியாதிகளைச் செய்வி க்க விஷ்ணுவாதியரை சிருஷ்டிக்கும் சிவபெருமானின் திருவுரு. இவரது . சக்தி பஞ்சப்ரேதப் பராசக்தி, (சிவனாரது இத்திருவுரு *பழமண்ணிப் படிக்கறை' (இலுப்பைப்பட்டு) எனும் ஸ்தலத்தில் பீமேஸ்வரர் சந்நிதியின் வெளிப்பகுதி யில் இருந்தது. அவ்வாலயத்தில் ஏற்பட்ட தீ விபத்தில் அச்சிலை சிதைந்து விட்டது. தற்போது சிதைந்த அடையாளம் மட்டுமே காணக்கிடைக்கின்றது.)

- உருவமில்லா சிவபெருமானுக்கு "ப்ரணவமே" அவரது திருவுரு என்பதாலும், ஹரிக்குப்பதி ஓங்கார சிவன் எனும் அர்த்தத்திலும் "ஹரி:ஓம்" என்று எல்லாத் தேவதைகளின் மந்திரத்தைச் சொல்லும் முன்பாக சொல்வது வழக்கம். இதன் காரணமாகத்தான் சிவபெருமானுக்குண்டான “பஞ்சாட்சர” த்தில் ஓம் எனும் ப்ரணவம் கிடையாது!,

- **கூர்ம புராணம்:**

  “நப்ரஹ்மாத்யை ஸமப்ரூயாச் சக்திபிச்சாபி பார்வதீம் ।
  ப்ரூயாத்யதி ஸமம்ஸம்பும் ப்ரஹ்ம விஷ்ண்வாதிபிஸ்ஸுரை: ।
  ய: கச்சித்தாமஸாவிஷ்ட: கதரசிந்நைவவதம் ஸ்ப்ருசேத் ।
  ததா தேவீம் ச கிரிஜாம் த்விஜச்ரேயோர்த்த வாக்வதேத் ॥

**பொருள்:** பிரும்ம விஷ்ணு முதலிய தேவரோடு சிவனையும் இதர சக்திகளோடு பார்வதியையும் சமத்துவம் கூறல் கூடாது. சம்ஸ்த தேவர்களுடன் சிவபெருமானையும், சமஸ்த சக்திகளுடன் பார்வதிதேவியையும் உயர்த்திக் கூறுதல் வேண்டும். எவன் தமோ பூதனாய் இம்முடிவுகு வேறாகக் கூறுவானோ அவன் பதிதனாக ஆவான்.

- **கைவல்யோபறிஷத்:**

“வேதைரநேநரஹமேவ வேத்யோவேதாந்தக்ருத் வேதவிதேசாஹம்|”

**பொருள்:** எல்லா வேதங்களிலும் நானே பிரதிபாத்யன்' வேதங்களை செய்தவனும் நானே; வேதங்களை அறிந்தவனும் நானே! (சிவபெருமான் சொல்லியது)

- **ப்ருஹதாரண்யோபநிஷத்**

“அஸ்யமஹதோ பூதஸ்ய நிச்வசிதமேதத்யத்
ருக்வேதோ யஜுர்வேத: ஸாமவேதோ தர்வாங்கிரஸ
இதிஹாச: புராணம் வித்யா உபநிஷத:”

**பொருள்:** ரிக் வேதம், யஜுர் வேதம், ஸாம வேதம், அதர்வண வேதம் எனும் நான்கு வேதங்களும், இதிஹாசம், புராணம், வித்யை, உபநிஷத்துக்கள் என்பவை எல்லாம் இந்தப் பரம்பொருளின் சுவாசம்!

**வாயு சம்ஹிதை/பூர் வபாகம்/28ம் அத்தியாயம்/22வது சுலோகம்:**

சிவோமலேச்வரச்சைவ ருத்ரோவிஷ்ணு: பிதாமஹ:|
ஸம்சாரவைத்ய: ஸர்வஜ்ஞ: பரமாத்மேதி முக்யத:||

**பொருள்:** சிவன், மஹேச்வரன், உருத்திரன், விஷ்ணு, பிதாமஹர், சம்சார வைத்யன், சர்வஜ்ஞன், பரமாத்மா என்னும் எட்டுப் பெயர்களும் முக்கியமாக சிவபெருமானுக்குச் செல்லும்!

## சிவபெருமானே துரீயம் என வரும் உபநிஷத வாக்கியங்கள்:

- “ஏக ஏவருத்ரோ நத்விதீயாயதஸ்தே”
- “ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்மா”
- “ஸர்வோஹ்யேஷ ருத்ர”
- “ஸர்வம் கல்விதம் பிரம்ம”
- “சிவமத்வைதம் சாந்தம் சதுர்த்தம் மன்யந்தே”
- “துரீயம் ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம்”

- “வேதச்சஸர் வைரஹமேவவேத்யே வேதாந்த தக்ருத வேதவிதேவசாஹம்”
- “சிவேய கேவல”

## சிவபெருமான் மும்மூர்த்திகளுக்கும் மேம்பட்டவர் என்பதை விளக்கும் உபநிஷத வாக்கியங்கள்:

**அதர்வண வேதம்**

"ப்ரத்யய ஸாரம் ப்ரபஞ்சோபசமம் சாந்தம்சிவ மத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே"

**யஜுர் வேதம்/ மண்டல ப்ராம்மணோபநிஷத்.**

"பஞ்சவக்த்ர முமாஸஹாயம் நீலகண்டம் ப்ரசாந்த மந்தர் யக்ஷ்ய மிதிகேசித்"

**கைவல்யோபநிஷத்.**

"உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம்"

**பஞ்சப்ரஹ்மோபநிஷத்**

"அவஸ்தாத்ரிதயாதீதம் துரீயம் ஸத்ய சித்ஸுகம்|
ப்ரஹ்ம விஷ்ணுவாதிபிஸ் ஸேவ்யக் ஸர்வேஷாம் ஜநகம்பரம்| ஈசானம்"

**அதர்வசீர்ஷோபநிஷத்தில்**

"எவன் பிரம்மமோ அப்பகவான் உருத்திரன்" எனும் பொருள் தரும் "ருத்ரஸ்ஸ பகவாந்யச்சப்ரஹ்ம' என்கிற வாக்கியம் உண்டு.

**மைத்ரேயோபநிஷத்தில்**

சிவபெருமான், "நான் பந்தமோட்சமில்லாதவனாக இருக்கிறேன், சுத்த பிரும்ம மாக இருக்கிறேன்" என்று சொன்ன, "புந்தமோக்ஷவிஹிநோஸ்மி சுத்தப்ரஹ்மாஸ்மி ஸோஸ்ம்யஹம்|" என்னும் வாக்கியமும் இருக்கிறது. (கீதையில் அர்ஜுனன் கிருஷ்ணரிடம், 'எது ப்ரம்மம்?'- என்று கேட்டதற்கு, நான்தான் பிரும்மம்!'- என்று சொல்லாமல், "எது அறியப்படாததோ அதுவே ப்ரும்மம்!' என்று சொல்லிய வசன மும் இருக்கிறது. இந்த கிருஷ்ணர் தான் யுதிஷ்டிரருக்கு சிவநாம மகிமையைச் சொல்லும்போது, 'சிவபெருமானுடைய ஆயிரம் நாமங்களைக் கொண்டுமட்டும் எப்படி அவரையும், அவரது மஹிமையையும் அறிவது கூடும்?'- என்று கேட்டதும் இங்கு நினைவு கொள்வது நலம்!.)

**ஸ்வேதாச்வரோபநிஷத்**

நதஸ்ய கச்சித் பதிரஸ்தி லோகே நசேசிதா
நைவச தஸ்யலிங்கம் நகாரணம் காரணாநாமதிசோ
நதஸ்ய கச்சிஜ் ஜநிதா நபோதிப:

**பொருள்:** உருத்திர மூர்த்திக்கு பிரபுவானவனும், ரட்சகனும் லோகத்தில் ஒருவனும் இல்லை, அவருக்கு ஜந்மஸ்தானமும், காரணமும் இல்லை. அவர் கார ணங்களுக்கெல்லாம் பிரபு, அவர்க்கு உற்பத்தி காரணம் ஒருவரும் இல்லை, அவர் ஆகாசாதிபதி!.

**அதர்வசிகா**

"ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ் ஸம்ப்ரஸூயஸ்தே
நகாரணம் காரணந்துத்யேயஸ் ஸர்வைச்வர்ய
ஸம்பந்நச் சம்புராகாசமத்யே"

**பொருள்:** பிரும்ம-விஷ்ணு-ருத்ரேந்திராதிகள் பிறப்பிக்கப் படுகிறார்கள். ஆகவே அவர்கள் ஜகத்திற்கு காரணமும், காரணர்களும் அல்லர். சர்வ ஐச்வர்யங்களை யுடையவரும், சகலருக்கும் ஈச்வரராயும் ஆகாசாதிபதியுமான ஸ்ரீ பரமேச்வரரே ஜகத்திற்குக் காரணமும் காரணரும்!.

**ஆதித்த புராணம்**

"ப்ரம்மாண்டௌ நாமஸம்க்யாநாம் ப்ரஹ்ம விஷ்ணு பவாத்மநாம்
உத்பவே ப்ரளயே ஹேதுர் மஹாதேவ இதிச்ருத:"

**பொருள்:** எண்ணிலாத பிரும்ம விஷ்ணு ஸ்வரூபமுடைய பிரம்ஹாண்டங்க ளுடைய உற்பத்தி, பிரளயம் இவைகளுக்குக் காரணமாக இருப்பவரும், அநேக கோடி பிரம்ஹாண்டங்களில் பிரம்ம விஷ்ணு ருத்ராதியர் களை உற்பத்தியும், லயமும் அடையக் காரணராய் இருப்பவரும் ஸ்ரீ மஹாதேவரே!.

* **விபு:** இம்மஹிமை மிகுந்த சொல்லுக்கு சிவசஹஸ்ர நாமத்தில்;அநேக ரூபங்க ளாக இருப்பவர்; எல்லா ப்ராணிகளுக்கும் ஈச்வரர்; வியாபித்து இருப்பவர்; பல ரூபங்களாக ஆகிறவர் என்று பொருள் சொல்லி இருப்பதையும், புராண இதி ஹாச சம்பவங்களும் இத்திருநாமத்தை சிவபெருமானுக்கே என்று உறுதிப்படுத் துவதாலும் அறியலாம்.

பார்வதிதேவி சிவபெருமானின் கண்களைப் பொத்திய போதும்; தட்சிணாமூர் த்தியாக மோனத்தில் இருந்த போது அவர் வாக்கிறந்த பூரணராய், எல்லாமாய் அல்லவுமாய், சனகாதியருக்கு சொல்லாமல் சொல்லிய போதும்; மதுரையம்பதியில் பிட்டுக்கு மண்சுமந்த போது பிரம்படி பட்டபோதும்; அர்ஜுனனிடம் லீலையாக

போரிட்டு அவனது வில்லால் அடிபட்டபோதும் சகல உயிர்களுக்கும் அந்தந்த விஷயங்கள் நடந்தவை போல ஹரி முதலிய தேவர்கள் பட்ட அடிகள் எதுவும் எவ்வித விளைவுகளையும் உலக உயிர்களுக்கு ஏற்படுத்தவில்லையே? இதனால் தான் ஸ்ரீ பரமேச்வரர் “விபு” என்றழைக்கப்படுகிறார்.

* **ஆசுதோஷி:** சிவபெருமானை இப்பெயரிலும் முனிச்ரேஷ்டர்கள் அழைக்கின்றனர். ஏனெனில் அவர் வெகு சீக்கிரத்தில் சந்தோஷமடைவதினாலும், மிகச் சிறிய பொரு ள்களினால் செய்யப்படும் பூஜைகளிலும் சந்தோஷித்து வேண்டிய வரத்தை அருளு வதாலும். இதற்கு பகீரதன், கண்ணப்ப நாயனார் முதலி யோரது சரிதத்திலிருந்தும், நிறைய சிவனடியவர்கள் முதலியவர்களது வரலாற்றி லிருந்தும் (சிவபக்தியில்லா விட்டாலும்) அறியலாம்.

## வேதம் சிவனின் சுவாசம்:

“ருக், யஜுர், சாம, அதர்வ வேதம் முதலியவை ஸ்ரீ பரமேச்வரரின் சுவாசம்!” எனும் பொருள் தரும் ப்ருஹதாரண்யோபநிஷத் வாக்கியம்: ‘அஸ்யமஹதோ பூதஸ்யநி: ச்வஸிதமேதத் ருக்வேதோ யஜீர் வேதஸ் ஸாமவேத:||'

**ஸ்வேதாச் வரோபநிஷத்:**

யதாதமஸ் தந்நதிவான ராத்ரிர்
நஸந்நசாஸந்சிவ ஏவகேவல:|
ததக்ஷ்ரந்தத்ஸவிதுர் வரேண்யம் ப்ரபஞ்ஞாச
தஸ்மாத் ப்ரஸ்ருதாபுராணீ ||

**பொருள்:** “எப்போது இருள் உளதாய் பகலுமின்றி இரவுமின்றிச் சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார். அந்தச் சிவ சூர்யனுடைய அந்த அழியாத முக்கியப் பொருளாகிய பிரஞ்ஞை எனப்படும் பழைய பராசக்தி உதித்தார்.”

## மற்றப் பூதங்களை எல்லாம்வியாபித்துள்ள ஆகாச தெய்வம் சதாசிவனே என்பது

மண்ணதி லயன்மானீரில் வன்னியிலரன் காலீசன்
றண்ணளி வடிவமான சதாசிவன்விண்ணி லுள்ளா
ரெண்ணிடு பூதமைந்து மேறலான்முறையா யாங்கே
நண்ணிடு மதிபர்தாமு நாசமிலதிக ரங்கன்.

**வன்னியில்** = தீயில், **அரன் =**- உருத்திரன், **கால்** = காற்றில், அயனும், மாலும் அரனும் ஈசனும் சதாசிவனும் என உம்மை விரித்து உள்ளார் என்பதற்குப் பன்மை வினைமுதல் காண்க, **ஏறலான்** = வியாபித்தலான், **ஆங்கே** = அப்பூதங்களில்,

**நண்ணிடும்** = இருக்கிற, **அதிபர்** = கடவுளர், **அதிகர்** = வியாபகர், **அங்ஙன்** = அப்பூதங்களின் வியாபக முறையில்.

**தைத்ரியோபநிஷத் மற்றும் பைங்களோபநிஷத்**

ஆகாசாத் வாயு: வாயோ ரக்கி:|
அக்நேராப:|
அத்யப்ய: ப்ருத்மி ||

**யோகசூடாமணியுபநிஷத்**

ஆகாசாத் வாயுர் வாயோரக்கி ரக்நே ராபோத்ப்ய: ப்ருத்வீ
ஆகாசாத் வாயு:| வாயோ ரக்நி: அக்நேராப: அத்யப்ய: ப்ரத்வீ
ஏதேஷாம் பஞ்சபூதாநாம் பதய:
பஞ்ச சதாசிவேச்வர ருத்ர விஷ்ணு ப்ரஹ்மாணச்சேதி:

**யோகதத்வோபநிஷத்**

ப்ருத்வீ .. சதுர் புஜாகாரம் சதுர் வக்த்ரம் ஹிரண்மயம்........ ஆப.. .. நாராயணம் தேவம்....... வஹ்நி ருத்ரம், வ வாய்: கை ட் ஈச்வரம் கயன் வக்க வ்யோம.......... சீதாசிவோம்.

## திரிமூர்த்திகளையும் சிவபெருமானே எளிதில் சம்ஹாரம் செய்பவர்!

**மஹோபநிஷத்**

பார்த்தனை யாக்குந் தேவைப் பாற்கட லிறையைச் சூலஞ்
சேர்கர முதலை யீற்றிற் சிவபிராந் சங்க ரித்த
லார் கலி நீரை முற்று மாங்குறு வடவை யங்கி
யோர்கண மதனிற் கீறி யுண்பதற் கொப்பா மன்றே.

“ப்ரஹ்மா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஸர்வேவாபூத ஜாதய:|
நாசமேவாநுதா வந்திஸலிலா நீவபாடபம்"

## உருத்திரரே சர்வத்திற்குங் காரணர்!

**ருத்ரஹ்ருதயோபநிஷத்**

கண்ணுத லுருவ மாகிக் காரண மனைத்து மோங்குங்
கண்ணர விந்த மாலோன் காரிய மனைத்து மாவான்

மண்ணுறு கிரியை யெல்லா மலரவ னுருவா மென்னி
னெண்ணுவ ரானை சர்வ காரண னென்று மேலோர்.

‘கார்யம் விஷ்ணு: க்ரியா ப்ரஹ்மா காரணம்து மஹேச்வர:’

**மண்டலப்ராஹ்மணொபநிஷத்**

‘ஸர்வேசம் --- சிவம் -- ஸர் வகாரணம்'

## உருத்திரனே எல்லா உலகிற்கும் ஆதிமூலம்

**ருத்ரஹ்ருதயோபநிஷத்**

அஸ்ய த்ரைலோக்ய வ்ருக்ஷஸ்ய பூமௌவிடபசாஹிந:।|
அக்ரம் மத்யம் ததா மூலம் விஷ்ணு ப்ரஹ்ம மஹேச்வரா:

## உருத்திரனே பரமாத்மா

**ருத்ரஹ்ருதயோபநிஷத்**

'ஆத்மாநம் பரமாத்மாந மந்தராத்மாந மேவச|
ஜ்ஞாத்வாத்ரிவித மாத்மா நம் பரமாத்மாந மாச்ரயேத் |
அந்தராத்மா பவேத் ப்ரஹ்மா பரமாத்மா மஹேச்வர:|
ஸர்வேஷா மேவ பூதாநம் விஷ்ணு ராத்மா ஸநாதந:’

## உயிர்களின் ஹ்ருதய குகையில் வசிப்பவர் சிவபெருமானே!

**ப்ருஹதாரண்யோபநிஷத்:**

மத்ய ஆத்ம நிதிஷ்டதி | ஈசாந: - கடோபறிஷத்
ப்ராணேஷு ஹ்ருத் யந்தர் ஜ்யோதி: புருஷ:

**நாராயணொபநிஷத்:**

ப்ரமாத்மாவயவஸ் தித:| ஸ ப்ரஹ்மா ஸசிவ: ஸேந்த்ர:

**கைவல்யோபநிஷத்:**

உமாஸஹாயம் ... ... ஸப்ரஹ்ம ப்ரஹ்மா ஸசிவ: ஸ விஷ்ணு:

**மஹோபநிஷத்:**

பரமாத்மாவ்யஸ் தித: ஸ ப்ரஹ்மா ஸ ஈசாந: ஸேநத்ர:

**கணபதியுபநிஷத்:**

த்வம் ப்ரஹ்மா த்வம் விஷ்ணு: த்வம் ருத்ர:

**சாண்டில்யோபநிஷத்:**

யோஸௌ தேவோ பகவாந் ஸர்வைச்வர்ய ஸம்பந்ந:
ஸர்வவ்யாபீ ஸர்வ பூதாநாம் ஹ்ருதயே ஸாந்நி விஷ்டோ
மாயாவி மாயயா க்ரீடதி ஸ ப்ரஹ்மா ச விஷ்ணு: ச ருத்ர:
ச இந்த்ர: ச ஸர்வே தேவா:

**நரஸிம்ஹாதிபிநியுபநிஷத்:**

த்ருதீயம் பாபாதம் ஜாநீயாத் ச ப்ரஹ்மா ச சிவ: ச ஹரி:

**வராஹோபநிஷத்:**

அவிஸேஷண ஸர்வம் துய: பச்யதி சிதந்வயாத்|
ச ஏவ ஸாக்ஷாத் விஜ்ஞாந் ச சிவ: ச ஹரிர் விதி:

**ப்ராணக்கினிஹோத்ரோபநிஷத்:**

த்வம் ப்ரஹ்மா த்வம் ச வை விஷ்ணு: த்வம் ருத்ரஸ்
த்வம் ருத்ரஸ் த்வம் விஷ்ணு:

## சிவபிரானே பிரமம்

| | | | |
|---|---|---|---|
| நிர்விகல்பமநந்தம் …… ….. ….. | பரமம்சிவம் | => | **பிரமபிந்தூபநிஷத்** |
| துரிய மக்ஷரம் …… ….. ….. ….. | ஈசாவாச்ச | => | **பிரமோபநிஷத்** |
| துரீயமக்ஷரம் சிந்மயம் | | => | **பரப்ரஹ்மோபநிஷத்** |
| ப்ராஹ்மீ மாஹேச்வரீச் சைவ | | => | **நிகண்டு** |

## காயத்ரீ மந்திரத்தின் உட்பொருள் ஸ்ரீ பரமேச்வரரே!!

மந்திரங்களில் மேலானது காயத்ரீ, இதன் மகத்துவம் மிகவும் மேலானது.

"தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தீயோயோந: ப்ரஜோத யாத்" என்பதே அந்த காயத்ரீ மந்திரம், இதற்குப் பொருள்: சூரியனிடத்தில் ஒரு தேவன் இருக்கிறான், அவன் பெயர் பர்கன். அப்பர்கனை என் புத்தியின் வளர்ச்சிக்கு தியானம் செய்கிறேன்" என்பதாகும்.

இந்த மந்திரத்தின் முழு விவரத்தையறிய நாம் ஈச்வரரிடத்தில் இருந்தே ஆரம்பிப்போம். ஈச்வரன் என்கிற சப்தம் சிவ எனும் சப்தம் போலவே நம் பரமேச்வ ரருக்கு உண்டான அஸாதாரணமான பெயராகும், இது வேறு எவரையும் குறிப்பி டாத பெயராகும். "சிவனெனும் நாமந் தனக்கேயுடையசெம் மேனிஎம்மான்" என்பது திருநாவுக்கரசு சுவாமிகளுடைய வாக்கு!. சிவன், ஈஸ்வரன், தேவன் என்பதற்கு அடைமொழியாக பரம், மஹான் எனும் இரண்டு சப்தமும் சேர்ந்து சிவ சப்தத்தை மேலும் மஹிமை சேர்க்கும் சொற்கள். இதுவும் மற்ற தேவர்களுக்குண்டானது கிடையாது!. அமரகோச நிஹண்டும் சிவன், ஈஸ்வரர் முதலிய பதங்களை ஸ்ரீ பரமேச்வரர் ஒருவருக்கே உரித்ததாக சொல்லுகிறது!!,

காளிதாஸனின் **ரகுவம்ஸத்தில்** "மகேச்வர: த்ர்யம்பஹ ஏவ, ந அபர:" என்று சொல்லியிருப்பது விசேஷமாகும். ஈச்வர எனும் பதம் ஸ்ரீ பரமேச்வரரையே குறிக்கி றதைப் போல, சங்கரர், சாம்பசிவன், சந்திரசேகரர் முதலிய அவரது மற்றைய நாமங்களும் ரூடப் பெயர்களே! (தாங்கும் பெயர்கள்)

எனவே, மேற்சொன்ன காயத்ரீ மந்திரத்தில் வரும் "தேவஸ்ய" மற்றும் "பர்கன்" எனும் இரண்டு சப்தங்களும் ஸ்ரீ பரமேச்வரரை குறிப்பதே. மற்றவர்களுக்கு அப்பெயர் உண்டு என்பதை அறிய சுருதிப் பிரமாணமோ, புராணப் பிரமாணமோ, உபநிஷத்துக்களுடைய பிரமாணங்களோ கிடையாது!.

"ஏதமேவ தேவம் மத்யே கோஷ்டஸ்ய யஜதே" என்கிற **விதி** வாக்கியமும், "தேவ: பூஜ்ய: பினாகி" என்கிற **நிகண்டு** வாக்கியமும், "தேவஸ்ய தனே ப்ரதிதிசம் ப்ரத்யோதயதி" எனும் **போதாயன சூத்ர** வாக்கியமும், "தேவமேவானுப்ரவிசதி" எனும் **அதர்வசிரஸ்** வசனமும், "தேவ" எனும் சப்தத்தால் ஸ்ரீ பரமேச்வரரை குறிக்கி ன்றது!!.

"சப்தா தேவப்ரமித:" என்ற அதிகரணத்தில் (**வேதாந்த சாஸ்திரத்தில்**) வியாஸ முனிவரால் தீர்மானிக்கப் பட்டிருப்பதும்; "ஈசானோ பூத பவ்யஸ்ய" என்ற **கடோபநிஷத்** வாக்யார்த்த விசார முறையும் அதை உறுதிப்படுத்துவதை அறிய லாம்!.

இவ்விதம் தேவ, ஈச்வர எனும் பதங்கள் ஸ்ரீ பரமேச்வரரைக் குறிப்பிடுவதை தெளிவு படுத்தினாலும், இனி நாம் ஆராய வேண்டுவது - இக் காயத்ரீயில் வரும் "பர்கன்" என்கிற பதம் சிவபெருமானைக் குறிக்கிறதா? பிற தேவர்களைக் குறிக்கின் றதா? - என்பதே!.

வேதத்தின் ஞான பாகமாக விளங்கும் உபநிஷத்துக்களே அந்த ஆராய்ச்சியை செய்து "உண்மை"யை நன்றாக வெளியிட்டு இருப்பதால், நாம் அவற்றைப் பற்றி பார்ப்போம்!.

**மைத்ரேயர்** காயத்ரீ மந்திரத்தை மூன்று பாகங்களாகப் பிரித்து உரை செய்து விட்டு, அதிலுள்ள 'பர்க' எனும் பதத்திற்கும் "அதபர்க...... பர்காக்ய..... பர்க இதி ருத்ரே ப்ரஹ்மவாதிக:" என்று சொல்லுவதில் இருந்து 'பர்கன் எனும் பெயருடையவர் உருத்திரன் என்று ப்ரும்மாதியர்கள் கூறுகிறார்கள்' எனும் பொருள் பெறப்படுகிறது.

**ப** - உலகங்களை விலக்கி நிற்போன். **ர** - எல்லா உயிர்களுக்கும் மங்களத்தை செய்வோன். **க** - எல்லா உயிர்களையும் அடக்கி வெளிப்படுத்துவோன். என்று பதம் பிரித்து பொருள் கொள்ளப்படுவதால் மேற்படி மைத்ரேயருடைய உபநிஷத் வாக்கியம் "அத பர்க இதி பாஸ்யதீமாந் லோகாந் இதி ரஞ்சயதீமாந் பூதாநீ கச்சத் இதி கச்சத் யஸ்மிந் நாகச்சத் யஸ்மா இமா: ப்ரஜாஸ்தஸ்மாத் பாரகத்வாத் பர்க:" என்று மேலும் விளக்கியிருக்கிறது

**திரிபுராதாபிநி**, "பர: சிவ.....பர்க உச்யதே" (பரசிவன் பர்கனேன்று சொல்லப் படுகிறான்) என்றும்; "பர்கோ தேவஸ்ய தீத்...... சிவாத்மாக்ஷரம் கண்யதே" (பர்கோ தேவஸ்ய எனும் வாக்கியத்தினால் சிவனை ஆத்மாவினுடைய அட்சரமாக அறி) என்றும்; நிகண்டுகளும் இவற்றை அநுஸரித்தே "பர்கஸ் த்ர்யம்பக;" என்றும் "ஹர: ஸ்மரஹரோ பர்க:" என்றும் சொல்வதால் "பர்க" என்பது ஸ்ரீ பரமேச்வரரை குறிப்பதை தெளிவாக்குகிறது!

முன்சொன்ன சிவபெருமானின் ரூடப் பெயர்களான சிவன், சந்திரசேகரர், பரமேச்வரர், ஈச்வரர் முதலியவை போலவே இப் பர்கன் என்பதும் சிவனாரின் ரூடப் பெயரே!. மீமாம்ஸை நியாயமும் அதனால்தான் (யோகாத் ரூடிர்பலியஸீ, ரூடிர் யோகமபஹரதி) யோகப் பெயரினும் ரூடப் பெயர்களே சிறந்தது என்றதினால், சாதாரணமான மற்றைய தேவர்களுடைய யோகப் பெயர்களைக் காட்டிலும் சிவனாரின் ரூடப் பெயர்கள் சிறந்தவை என்பது பெறப்படுவதால் இப் பர்க எனும் பெயரும் வலியுடையதாகிறது!!.

இதன் காரணமாகத்தான் காயத்ரீ தேவியும், தனது ஆத்மாவினுடைய அட்சரமாக பிறர் அதுவோ? இதுவோ? என்று மயங்குமாறு யோகப் பெயரைத் தாங்காது சிவபெருமானே அந்த வஸ்து என்று மந்தமதி படைத்தோரும் உணரும் வண்ணம் "பர்கன்" எனும் நாமத்தைத் தாங்கினாள்!!

"ஸ ஆதித்யோ விஷ்ணுச் சேச்வரச்ச" எனும் **ப்ரஹ்ம வாக்கியத்தைக்** கொண்டு இக் காயத்ரியை "விஷ்ணு பரமாக" பொருள் கொள்வோரும் உண்டு!. இவ்வாக்கியம் துரிய வஸ்துவை தெரிவிப்பதால், அது சிவபெருமான் ஒருவரையே குறிக்கும். ஏனெனில், வேதம் முழுவதும் துரிய வஸ்துவாக சிவ நாமங்கள் கொண்டு அது விளக்குவதால், இப் ப்ரஹ்ம வாக்கியத்தின் பொருளையும் கொள்ள வேண்டும். விரோதிகரண ந்யாயப்படி அது விஷ்ணுவுக்கானதல்ல!. (பன்னிரு

ஆதித்தியர்களில் ஒருவன் அந்த நாராயணன் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை! அது பற்றின ஆராய்ச்சியும் இதுவல்ல!!.)

“ஆதித்யவர்ணம்” என்கிற நிறம் விஷ்ணுவுக்கு என்றறிய சுருதி வாக்கிய பிரமாணமோ, மற்ற பிரமாணமோ இல்லையே? அவ்வாதித்ய வர்ணம் என்பது சிவ பெருமானுக்கு உடையது என்பது இந்நூலில் விளக்கப்பட்டிருக்கிறது. விஷ்ணுவை கடல்வண்ணன், கருவண்ணன், கார்மேகவர்ணன், முகில்வண்ணன், காயாம்பூ வண்ணன் முதலிய கடு நிறத்தை அடிப்படையாக வைத்தல்லவா அறியப்படுகி றான்?!

“சிவ ஏவ கேவல: ததக்ஷரம் தத்ஸவிதுர் வரேண்யம்” என்பது வேத வாக்கு!. (கேவலம் சிவமொன்றே! அது அட்சரம்! அது ஸவிதாவுக்கு மேலானது!!) என்றும்: “ஸௌரமண்டல மத்யவர்த்தீ” என்று சசூர்யமண்டலத்து மத்தியில் இருந்து ஒளியூ ட்டுபவன் ஸ்ரீ பரமேச்வரர்) வேதம் சொல்லிய பிறகு மற்றைய பிரமாணம் தேவையா?! ஹரிக்கு சொல்லப்பட்ட கருநிறங்கள் எப்படி சூர்யமண்டலத்தின் மத்திய வர்த்தியாக முடியும்?! அதை நம்புபவர்கள் யார்?! அப்படி நம்பினால் அவர்கள் எப்படிப் பட்டவர்கள்?!

**ப்ருஹதாரண்யோபநிஷத்**, “யஸ்யாதித்யச் சரீரம் ய ஆதித்ய மந்தரோ மயத்யேஷ த ஆத்மாந்தர் யாம்யம்ருத:” (எவனுக்கு ஆதித்யன் சரீரமோ, எவன் ஆதித்யனுக்கு உள்ளிருந்து அவனை இயக்குகிறானோ அவனே அவனே ஆத்மாவின் அந்தர்யாமி! அமிர்தன்!!)

**முண்டகோபநிஷத்**, “ஸூர்யத்வாரேண விரஜா: ப்ரயாந்தி யத்ராம்ருதஸ்ய புருஷோஹ யவ்ய யாத்மா” (பாபஹீனர்கள் சூரியனின் பேரொளி வழியால் அமிர்தமும், அவ்யயனுமான புருஷன் இருக்குமிடத்தை அடைவார்கள்!)

**ஜாபாலோபநிஷத்**, “சதருத்ரியே ணேத்யேதாந்யேவ ஹவா அம்ருதஸ்ய நாமாநி” (சதருத்ரத்தில் உள்ளவை யாவும் அமிர் தனாகிய சிவனுடைய நாமங்களே!)

**நரஸிம்ஹ பூர்வதாபிநி**, “ஸூர்யோந்தராதித்யே ஹிரண்மயே: புருஷ:” (ஆதித் யனுக்கு அந்தர்யாமி ஹிரண்மய புருஷனான சிவன்)

**கௌஷீதகிப்ரஷ்மணம்**, “தேநாம்ருதத்வஸ்யேசாநம்”

**ச்வேதாச்வரோபநிஷத்**, “ உதாம்ருதத்வஸ்யேசாநம்”

**தைத்ரீயம்**, “அம்ருதோ ஹிரண்மய:”' (அம்ருதமானவன் பொன்வண்ணனான சிவன்!)

**கைவல்யோபநிஷத்**, “அஹமீசோ ஹிரண்மயோஹம்” (ஈசனும் நானே! பொன்வண்ணனும் நானே!)

**பாசுபத ப்ரஹ்மம்**, "அந்தாதித்யே ஜ்யோதி: ஸ்வரூபோ ஹம்ஸ:"
"ஹம்ஸ ஏவ மஹேச்வர:"

**முண்டகோபநிஷத்**, "ருக்மவர்ணம் கர்தாரமீசம்"

**நாராயணம்**, "நமோ ஹிரண்ய பாஹவே ஹிரண்ய வர்ணாய, ஹிரண்ய ரூபாய ஹிரண்ய பதயே அம்பிகாபதயே உமாபத்யே பசுபதயே நமோ நம:"

**பஸ்மஜாபாலோபநிஷத்**, "ஹிரண்ய பாஹும் ஹிரண்ய ரூபம் ஹிரண்ய வர்ணம் ஹிரண்ய நிதி மத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதீத மே கமாசாஸ்யம் பகவந்தம் சிவம்" (பொன் தோளுடையவரும், பொன்னுருவானவரும், பொன்னிதியுள்ளவரும், இரண்டற்றவரும், சதுர்த்த சப்தவாச்சியரும், பிரஹ்ம விஷ்ணு ருத்ரர் களுக்கு மேம்பட்டவரும், உபாசிக்கத் தகுந்த ஏகருமான சிவபெரு மான்)

**ஆதித்ய புராணம்**, "யத் காயத்ர்யா: பரம் தத்வம் தேவ தேவோ மஹேச்வர:"

என்னும் முதலிய உபநிஷத் வாக்கியங்களால் சிவபெருமான் புருஷன், பர்கன், தேவன், அமிர்தன், பொன்னிறத்தவர் என்று சொல்லுவதுபோல் மறந்தும் பிற தேவர்களை அவ்விதம் அது அழைக்க வில்லையே?!

ஸுர்யஸ் யோக்ர: எனும் வேத வசனத்தால் சிவபெருமான் தம் அஷ்டமூர்த்த வடிவில் ஒன்றாக (உக்ரனாக) விளங்குவது நாம் எல்லோரும் அறிந்ததுதானே?

இம்மாதிரி காயத்ரீ மந்திரத்தின் உட்பொருளாய் விளங்கும் ஸ்ரீ பரமேச்வரரது மஹிமை வலுவுள்ளதாக நிர்ணயித்து சொல்லிய பிறகும், ஸ்ரீ மஹாதேவரது மஹிமையறியாது வாழும் பலர், தினமும் சந்தியா வந்தனம் செய்யும் காலத்தில், வழக்கமில்லாது இடையில் ஏற்படுத்தப்பட்ட வைணவ, ஸ்மார்த்தர்களுடைய நடைமுறையில், அந்தணர்கள் தவறுதலாக ஏற்று செய்துவரும் சந்தியாவந்தன சுலோகத்தில் வரும் "ஆகாஸத் பதிதம் தோயம் யதா கச்சதி ஸாகரம்| ஸர் வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி || (மற்ற தேவதைகளின் நமஸ்காரங்கள் மழை ஜலம் கடலை அடைவது போல கேசவனை அடைகிறது!) என்று சொல்லி வருகிறார் கள்.

மிகவும் தவறான வழக்கம் அது!, அவ்விதம் சொல்லலாகாது. "விரோதாதி கரண ந்யாய"ப் படியும், சுருதிக்கு மாறான கருத்து மற்றதில் (ஸ்ம்ருதியாதிகளில்) காணப்பட்டால் அது நிராகரிக்கப் படவேண்டியதே எனும் மீமாம்ஸை நியாயப் படியும் அச்சுலோகக் கருத்து தவறானதே!

காயத்ரீ மந்திரத்தை பிராம்மணர்கள் ஜபிப்பார் கள் , அவர்களுக்கு தெய்வமும் பிராம்மணரான ஸ்ரீ பரமேச்வரர்தான்!, "ஈசாந: ஸர்வவித்யாநாம் ஈஸ்வர ஸர்வ பூதாநாம் ப்ரும்ஹாதிபதி ப்ரும்ஹணோதிபதி ப்ரும்ஹா சிவோமே அஸ்து சதாசி

வோம்" என்கிற நாராயணத்தின்படியும், **மநுஸ்மிருதியும்**, "விப்ராணாம் தைவதம் சம்பும் சத்ரியாணந்து மாதவ:| வைச்யாநந்து பவேத் ப்ரஹ்மா சூத்ராணாம் கணநாயக:|" என்றும் சொல்லியிருக்கிறது. **ப்ருஹஜ்ஜாபாலம்**, "பஸ்ம தாரணமின்றி காயத்ரியை ஜபித்தல் கூடாது" என்றதினாலும், **பராசர புராணம்**, பரமேச்வரரை மஹாப்ராமணனாகச் சொல்லி, பிறரை பூஜிக்காதே! (மஹாப்ராம்மண மீசானாம் உபதாவேந் ந சேதரம்) என்றும் சொல்லியிருப்பதால் அக் காயத்ரீ மந்திரம் யாரை குறிக்கிறது? யாருடைய பெயரை தாங்குகிறது? என்பதும் விளங்கும்!!

**"ஸ்தோமம் வோ அத்யருத்ராய**
**சிக்வஸேக்ஷயத் வீராய நமஸா திதிண்டன |**
**ஏபி: சிவ ஸ்வவாம் ஏவ யாவபி திவ:**
**ஸிஷக்தி ஸ்வயசா: நிகாமபி ||"**

என்பது **ருக்வேத வாக்கு.** இதற்குப் பொருள்; "ஓ தேவர்களே! உங்களைக் குறித்து நாங்கள் கொடுக்கும் நமஸ்காரங்களையும், ஸ்துதிகளையும், ருத்ரருக்கு கொடுத்து விடுங்கள். அவைகளுக்கு அவர் ஒருவரே உரியவர்!. அவரவர்கள் வேண்டும் வரங்களை தேவர்களுக்கும், உங்களைப் போன்றோருக்கும் கொடுக்க வல்லவர் அவர் ஒருவரே!. ஆதலால் மற்ற தேவதைகள் தமக்கு பிறரால் கொடுக்கப் பட்ட ஸ்துதிகளையும், நமஸ்காரங்களையும் ஈச்வரருக்கு கொடுத்துவிட வேண்டும்!" என்பதே!.

எவருக்கு செய்யப்படும் நமஸ்காரங்கள் ஆனாலும் அது ஸ்ரீ பரமேச்வரரை சென்று அடைகிறது எனும் ருக் வேத வசனத்தில் உள்ள நியாயப்படி, அவதார மூர் த்திகளும், அவதார மூர்த்திகளுக்கு மூல மூர்த்தியான நாராயணர் துதித்த "சத ருத்ரீயத்தில்" ஆடு, மாடு, குதிரை, திருடன், நாய் முதலிய ஐந்துக்களுக்கும் நமஸ்காரம் சொல்லப் பட்டிருப்பதை காணலாம்.

**ருக்வேத ஸூத்ரக்காரான ஆச்வலாயன மஹரிஷி**, "உலகில் எவ்வளவு பதங்கள் உச்சரிக்கப் படுகின்றனவோ, அவை அனைத்தும் ஸ்ரீ பரமேச்வரருடைய நாமாக்கள்! " - எனும் பொருள் தரும் "ஸர்வாணி ஹவா ஏதஸ்ய நாமதேயானி" என்று சொல்லியிருப்பது அவரவர் தமக்கு ஸ்ரீ பரமேச்வரர் அருளிய அறிவால் அறியப்படவேண்டிய வாசகம் ஆகும்,

அப்பர். சம்பந்தர், சுந்தரர், மற்றுமுள்ள நாயன்மார்கள், பட்டினத்தடிகள் முதலிய சித்த புருஷர்கள் ஆகியோருக்கு ஆங்காங்கே தரிசனம் தந்து, திருவிளை யாடல் புரிந்து தமது அடியவர்களுக்கு அநுக்ரஹித்த இவரது சரிதங்களை எழுதவும் கூறவும் முடியாது. மனுஷர்கள், தேவர்கள், ரிஷிகள், முனிவர்கள் அன்றி குதிரை, நாய், பன்றி, சிலந்தி, ஆந்தை, சிங்கம், மயில், புறா, கொக்கு, எறும்பு, குரங்கு, நரி, வண்டு, நண்டு, தேள், எலி, இந்திரகோபப் பூச்சி, ஆமை, முயல், பாம்பு, என்று ஊர்வன, பறப்பன, நீர்வாழ் உயிரினங்கள் என பலவும் பணிந்து பேறுபெற்றச் சரிதங்களை எழுதப் புகின், இச்சிறிய நூலாலும், இவ்விஷயத்தில் சிறுமதியுள்ள எம்மாலும் இயலாது.

## சைவத்திற்கு ஆன்றோர் செய்த தொண்டுகள்!

மற்ற மதங்கள் எப்படியோ?..... ஹிந்து மதம் என்பதில் உள்ளடங்கியதாக சொல்லப்படுவதும், பாஷண்ட மதம் என்று பண்டிதர்களால் வெறுக்கப்பட்டதுமான "**வைணவம்**" எனும் ஒரு பிரிவே எது தெய்வம்? என்பதனைக் குழப்புவதிலும், இட்டுக்கட்டின பொய்ப் பிரச்சாரத்தினைச் செய்ததுமாக இருந்தது என்பதனை அவர் களது சரித்திரத்தினை ஆதியோடு அந்தமாக எழுதித் துவை துவை என்று துவைத்துப் போட்ட ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள் அருளிய '**சைவ சமய சரபம்**' மற்றும் '**நாலாயிரப் பிரபந்த விசாரம்**" என்னும் இவ்விரு நூலில் விரிவாகக் காணலாம்.

சிவபெருமானைத் தவிர்த்து மற்றதைத் தெய்வம் என்று கொண்டாடுவோ ரைத் திருத்தவும், உண்மையை நிலைநிறுத்தவும், அதற்கு அவ்வப்போது ஏற்படும் இன்னல்களைப் போக்கவும், அதற்கு ஏற்பட்ட தடையை அகற்றவும், அவ்வப்போது ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள் போன்றோரும், ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் போன்றோரும், ஸ்ரீ ஹரதத்தர் போன்றோரும் ஸ்ரீ கிருஷ்ணரைப் போன்றே அவதரித்து ஏழைகள் உண்மையறியும் வண்ணம் வாழ்ந்துகாட்டிச் சென்றிருக்கின்றார்கள்.

ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர், அவரது பிரதான சீடராகக் கருதப்படுபவ ரான ஸ்ரீ விவேகானந்தர், மற்றும் ஸ்ரீ இராமலிங்க அடிகளார், ஸ்ரீ தாயுமான ஸ்வாமி கள், ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள் முதலிய யாவருமே "பரம்" என்றால் சிவபெருமான் என்றே அறிந்து, அதை நமக்கும் தெளிவு படுத்திவிட்டு நாமும் கடைத்தேற தம்மா லான பல நல்ல காரியங்களை செய்துவிட்டுச் சென்றிருக்கின்றார்கள் .

இவர்களில் யாருமே தனது நெற்றியில் திருநீருடன் காட்சி தந்தவர்கள் அல்ல. அவர்கள் அனைத்தையும் ஓர் சமநோக்கில் பார்த்தவர்கள். இவர்களில் சிலர் ஆரம்பத்தில் பலவற்றையும் "தெய்வம்" என்று வணங்கியவர்கள்தான் என்றாலும், தமது ஆன்மபலம் பெருகி, சித்தத்தில் ஓர் தெளிவு ஏற்பட்டபின்பு, ஸ்ரீ மஹாதேவரை ஓர் இறுதிவடிவமாக "தெய்வம்" என்றுணர்ந்து, அதற்குண்டான வழியில் தம் வாழ்வை வாழ்ந்தவர்களாக இருந்தவர்கள்.

அனைத்தினையும் சமநோக்கில் பார்க்கும் பக்குவம் "பெரியோர்களுக்கே" உண்டானது. அவர்கள் அனைவருக்கும் சொந்தமானவர்கள் என்பதால் தமக்கென ஓர் அடையாளத்தினை விரும்பாமல் வாழ்ந்தவர்கள். அதனால்தான் அவர்களது சரீரத்தில் எவ்விதப் "புறச்சின்னங்களுடனும்" அவர்கள் இருப்பதில்லை.

வைணவர்களின் போக்கை கண்டித்த பாம்பன் ஸ்வாமிகள், "பெருமாள் கோவிலுக்குப் போகாதே!." என்று யாரையும் தடுக்கவில்லை. வீண் புரட்டையும், சிவநிந்தனை செய்வோரையுமே அவர் கண்டனம் செய்து தடுத்தார். அவர் ஸ்ரீ முருகப்பெருமானை "உபாசித்தாலும்" அவர் சொல்வதும் "பரம்" என்றால் "சிவபெருமான்" என்றுதான். அம்மகான் தனக்கு ஸ்ரீ முருகப்பெருமானுக்கும் -

சிவபெருமானுக்கும் வித்தியாசம் தெரியவில்லை, இருவரும் ஒன்று என்றே சொல் லியிருக்கின்றார்.

வடலூர் இராமலிங்க அடிகள் தம் வாழ்நாள் தொடக்கத்தில் பல ஆலயங்கள் தோறும் சென்று வழிபட்டவராக இருந்தாலும், இறுதியாக அவர் "ஸ்ரீ மகாதேவரை" அடிமுடி காணா ஜோதி ஸ்வரூபமாக அறிந்தவர் தான். (சிவ வாக்கியர் என்னும் சித்தரது வாழ்வு பற்றின வரலாற்றுச் செய்தி முழுமையாகக் கிடைத்திருந்தால் நிறைய விஷயங்கள் நமக்குக் கிடைத்திருக்கும். அவரை வைணவர் என்றும் சொல்கிறார்கள், நிறைய பெரியவர்களின் வாழ்க்கை இவருடையதைப் போன்றே நமக்குச் சரிவரத் தெரியாமல் போய்விட்டது. சிவவாக்கியர் நிச்சயமாக வைணவராக இருக்கமுடியாது. எப்படி என்றால் பௌத்த மத ஸ்தாபகரான கௌதம புத்தர், பௌத்தரல்ல!, என்பதைப் போன்று! , தவிர, ஆதியில் எல்லோருமே சைவர்கள் தானே?!.)

## கடையெழுத்து மாற்று கவிதைக்கு மாத்திரமே!

பழைய வாசகம் ஒன்று உள்ளது. "அரியும் சிவனும் ஒன்று; அறியாதவன் வாயில் மண்ணு!" என்பதுதான் அது, ரி - யும் றி - யும் இடம் மாறியதால் வந்த வினையைப் பார்த்தீர்களா!,.. அறிவும் சிவனும் ஒன்று; அரியாதவன் வாயில் மண்ணு! என்று இருக்கவேண்டும்!, திருவள்ளுவப் பெருமான் சொல்வதைப் பாருங் கள்: எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பது அறிவு," - என்று, மெய்ப்பொருள் என்றால் என்ன? கடவுள்!. கடவுள் என்னும் உயர் தத்துவத்தை அறிய வேண்டுமென்றால் யார் யாரோ சொல்வதையெல்லாம் கேட்காதீர்கள். அப்படிக் கேட்க நேர்ந்தால் இயற்கையாகவே அவரவர் தமக்கிருக்கும் "அறிவை" க்கொண்டு ஆராய்ந்து முடிவெடுங்கள் என்கிறார் வள்ளுவர். எதனை, எதனால் அறிய இருக்கின்றோமோ; அதற்கு 'மெய்ப்பொருள்' என்று பெயர். நாம் எதை அறிய ஆர்வம் கொண்டிருக்கின்றோமோ அதற்கு "அறிவு" அவசியம் தேவை. கடவுள் என்பவர் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதவர், அவரை அறிய முடியாது - என்று சொல்லிவிட்டு, அறிவினால் அறியப் படுபவன் இறைவன் என்பதை எப்படி ஏற்பது? உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் என்று சேக்கிழாரும் சொல்லியிருக் கின்றாரே? எவ்வுலகினரானாலும் அறியமுடியாதவரை அறிவினால் அறியலாம் என்றால் எப்படி?

இப்படிப்பட்டவர் கடவுள்; அவர் உலகெலாம் உணர்ந்தொதற்கரியவன்; என்று நாம் எதை வைத்து அறிவது? அவரை அறிவது கடினம் என்று அறிவுருத்துவதே, நமக்கு அவனளித்த அறிவுதானே? "அறியமுடியாதவன்" என்று இறுதியாக ஓர் முடிவுக்கு வருகிறோம் அல்லவா? அப்படிப்பட்ட அறிவுதான் "மெய்ப்பொருள்"!!, அப்படிப்பட்ட அறிவுதான் சிவம் என்பது!!, நம்மால் காணப்படும் இவ்வுலகத்தைப் படைக்க ஆற்றலுள்ள ஸர்வசக்தியுள்ள, காரணப்பொருள் ப்ரத்யக்ஷமாகக் காணப் படாவிடினும், கட்டாயம் இருந்தே தீரவேண்டும் என்று அநுமானிக்க அறிவு தேவைப் படுகிறது. அப்பரம காரண வஸ்துவே தேவதேவன் எனும் ஸ்ரீ பரமேச்வரர் ஆவர்.

(அறிவில்லாத முட்டாள்களான பைத்தியங்கள் எதைக் கடவுள் என்று அறியும்? என்று கேட்கத்தோன்றலாம்!. கடவுளை அறிந்தவர்கள் எல்லோருமே பித்தன் என்று தனக்குத்தானே நாமகரணம் சூட்டிக்கொண்ட பிறைசூடிய பெருமா னான சிவத்திற்குச் சமமாகின்றார்கள். பைத்தியம் என்னும் நிலை சாதாரணமானது இல்லை, நம்மைப் போன்று "கனக்கும் அறிவு இருக்கிறது" என்று எண்ணும் 'அறிவுள் ளவர்களால்'தான் பிரச்சனையே, உண்மையாகவே எதற்கும் வித்தியாசம் தெரியாத, எதையும் இரண்டிரண்டாக பார்க்கத்தெரியாத பைத்தியங்களை இனியாவது தயவு செய்து கிண்டலோ கேலியோ பேசாதீர்கள்.)

அறிவு என்பதற்கு என்ன அடையாளம்? அதற்கு என்ன உருவம்? அது எவ்வளவு பெரிது? அதற்கு என்ன நிறம்? இப்படி நம் அறிவைப் பற்றி நம் அறிவே அறியமுற்பட்டாலும் "பதில்" உண்டா? எனவேதான் திருவள்ளுவர் மெய்ப்பொருளை, மெய்ப் பொருளாகக் காண்பது அறிவு என்கின்றார். நம் அனைவருள்ளும் அறியப்ப டும் அவ்வறிவாக இருப்பவர்தான் சிவபெருமான். இதனால்தான் சிவபெருமானின் பரத்துவம் ஸ்தாபிக்க "அறிவும் சிவனும் ஒன்று" என்றார்கள். பின் "அரியாதவன் வாயில் மண்" என்றால்? அரி என்கின்ற யாதவனுடைய வாயில் மண் என்று அர்த்தம்!, கிருஷ்ணாவதாரம் செய்த கிருஷ்ணன் தன் வாயில் உண்டு காட்டியது மண்ணல்லவா!?. ஹரியும் சிவனும் ஒன்று என்பது மாதிரி ஹரனும் பிரம்மனும் ஒன்று என்று சொல்லாமல் விட்டார்களே?!

ஸ்ரீ காளமேகப் புலவரிடம் ஸ்ரீரங்கத்து வைணவன் ஒருவன், "திருமால் உலகமெல்லாம் உண்டபோது உங்கள் சிவன் எங்கிருந்தான்?? என்று கிண்டலாகக் கேட்க, "பெரிய கவளத்தை உண்ணும் யானையை, அது அவ்விதம் உண்ணுமாறு செய்யும் யானைப்பாகன் அந்த யானையின் தலையின் மீது இருந்தது போல் எங்கள் ஈசன் இருந்தான்!." என்னும் பொருள் தரும் பாடலை பதிலாகச் சொன்னார்.

அருந்தினா ரண்டமெலா மன்றுமா லீசன்
இருந்தபடி யேதென் றியம்பின் - பொருந்தி
பருங்கவளம் யானைகொளப் பாகனதன் மீதே
இருந்தபடி ஈசனிருந் தான்!

இவ்விதம் அவரவர் தமக்கிருக்கும் அறிவைக்கொண்டு "பரம்" என்பதை எளிதாக அனைவரும் உணரும் வண்ணம் பல பெரியோர் கள் அன்றைய நாளில் வாழ்ந்திருக்கிறார்கள். ஆனால் தாம் சார்ந்திருக்கும் மதத்திற்குப் பெருமை சேர்க்க வும், ஏற்கனவே பல பெரியோர்கள் சொன்ன பல நல்ல விஷயங்களை பொருள் மாறும்படி செய்யவும் இடையில் ஷண்முனிவர் களின் சாபத்தினால் "வைணவர்கள்" ஆன சிலர் செய்த வார்த்தை விளையாட்டு இருக்கிறதே?.... அதைச் சொல்ல ஆரம்பித்தால் அதற்கென ஓர் தனிப் புத்தகம் போடவேண்டிவரும். அப்புத்தகத்தின் அளவு வியாசருடைய "பாரதத்தின்" அளவு நீளும்!!,

இவ்விதம் முன்நாளில் சொல்லப்பட்ட வார்த்தைகளின் பொருள் மாறுமளவு பழமொழிகள், ஊர் பெயர்கள் என்று அவரவர் தம் சொந்த நலனுக்காக செய்து

கொண்ட மாறுதல்களை, நம் சைவ மக்கள் அவற்றுக்கு உதவியும் இருக்கின்றார் கள். உதாரணமாக "கைக்கெட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்னும் பழமொழி நீங்கள் அனைவரும் அறிந்ததுதான். ஆனால் அப் பழமொழி அவ்வித அர்த்தம் தரும் வார்த்தைகளைக் கொண்டதில்லை. "**கை கட்டியது; வாய் கட்டவில்லை**!" என்பதே சரியானதாகும். ஒருவனின் உள்ளத்தின் விருப்பை அடக்க அவனது கையானது தகாத காரியத்தைச் செய்வது, திருடுவது போன்ற தீயப்பழக்கத்திற்கு அடிமையாகா மல் கைகள் கட்டப்பட்டிருந்தாலும், அவனுடைய வாய் புலனுக்குக் கட்டுப்படாம லும், கண்டதைப் பேசுவதிலும், பெரியோரை இகழ்வதிலும், உடலுக்குத் தீங்கு தரும் உணவை உட்கொண்டும், அவ்வாயானது கட்டப் படாததினால் பெரும் அவஸ்தை தான்! - என்னும் பொருள் தரும் அந்தப் பழமொழியான்து; கை கட்டியது; வாய் கட்டவில்லை என்றிருக்க வேண்டியது, மக்கள் நாளாவட்டத்தில் தன் சுய லாபத் தைக் குறிக்கும் விதமாக அப்புலனடக்க பழமொழியை - "கைக்கு எட்டியது - வாய்க்கு எட்டவில்லை" என்பதாக சொல்லிக்கொண்டு வருகின்றார்கள்.

இதே போலத்தான் மேற்சொன்ன "அரியும் சிவனும் ஒன்று; அறியாதவன் வாயில் மண்ணு!" என்பதும். இதிலே 'ரி' எனும் எழுத்து *றி£ யானதால் மாறின அர்த்த விபரீதம் போலவே, கைக்கெட்டியது வாய்கெட்டவில்லை' என்பதில் *க" எனும் எழுத்து 'கெ' வாக மாறியது போல.

**சமீபத்திய இன்னொரு உதாரணம்:**

திண்டிவனத்தில் இருந்து புதுச்சேரி செல்லும் வழியில் "பாப்பாஞ்சாவடி" என்று ஒரு ஊர் கிட்டத்தட்ட மூன்று வருடங்களுக்கு முன்பு இருந்தது. இன்று அந்த ஊருக்குப் "பஞ்சவடீ" என்று பெயர்! காரணம்?!

அந்த ஊரில் அமைக்கப்பட்டப் பஞ்சமுக ஆஞ்சநேயர் கோவில் முதலில் அமைக்கப்பட இருந்தபோதே, அக்கோவிலுக்குப் "பஞ்சவடீ" என்னும் பெயர் சமத்கார மாக வைக்கப்பட்டு, இன்று அக்கோவில் கொஞ்சம் பிரபலமாக மாறியதும், அவ்வூரு க்கு செல்லும் பேருந்து, மற்றும் போக்குவரத்து அடையாள நிறுத்தம் "பஞ்சவடீ" என்றே ஆகிவிட்டிருக்கிறது. இம்மாற்றமானது பிறகு அஞ்சல் துறையினராலும், அரசின் சம்பந்தப்பட்ட மற்றத் துறையினராலும் "பஞ்சவடீ" என்று மாற நிறைய வாய்ப்புகள் இருக்கிறது. இவ்விதமில்லாவிட்டாலும், தமிழகத்தில் நிறைய ஊர் களின் பெயர்கள் மாற்று மதத்தினராலும், வெளியிலிருந்து குடியேறிய மற்றவர் களாலும் மாற்றப்பட்டிருக்கின்றன. செஞ்சியை ஆண்ட தேஜ்சிங் (இராஜா தேசிங்கு!) காலத்தோடு தொடர்புடைய; சரித்திரப் பின்னனி உள்ள ஊரான "பாப்பாஞ்சாவடி" தனியார் வசம் உள்ள ஒரு கோவில் நிர்வாகத்தினரால் இன்று பஞ்சவடீயாக மாறிவிட்டிருக்கிறது.

இன்னும் சில நூற்றாண்டுகள் கழித்து, இந்த இடத்தில்தான் இராமர், இலட்சுமணர், அநுமன், சீதாதேவி, இன்னபிற வானரச் சேனைகள் சாப்பிட்டு இளைப் பாறினர் என்றும், இலட்சுமணன் இங்குதான் அஸ்திராப்யாஸம் செய்தான் என்றும், வாலி மறைந்து நின்ற மரத்தின் கிளை இன்றும் இங்கு இருப்பதாகவும், அனுமன்

தூக்கிவந்த சஞ்சீவி மலையிலிருந்து ஒருசில பச்சிலைகள் இத்தலத்தில் விழுந்து விட்டதால், அவை இராமபிரானின் அருளாசியோடு, இன்றும் இங்கு வரும் பக்தர்க ளுக்குத் தரப்படும் தீர்த்தத்தில் உறைந்து அப்பக்தர்களின் தீராத நோயையும், காரணமில்லாமல் நடக்கவிருக்கும் விவாகரத்தையும் நிவர்த்தி செய்கிறது, என்பது மாதிரியான “ஸ்தலப் புராணங்கள்” ஏற்படுத்தப்படலாம். ஊர்பெயரையே மாற்றத் துணிந்தவர்கள் வேறென்ன வெல்லாம் செய்யத் துணியமாட்டார்கள்? ஜாக்கிரதை!!

இம்மாதிரியான “மாற்றுதல்” திருப்பணிகளை இதுவரை எங்காவது ஒரு சைவன் செய்ததாகச் சரித்திரம் உண்டா?

அந்தக்காலத்தில் அரசர்களால் கட்டப்பட்டவை சிவாலயமாக இருந்தாலும் சரி; வைணவக் கோவிலாக இருந்தாலும் சரி; அவ்வாலயத்தில் அநுமன் இருப்பது ஒரு தூணிலோ, பிரகாரத்தின் ஓரத்தில் சிறிதாக ஓரு இடத்திலோதான்!. பள்ளி கொண்ட பெருமாளுக்கு கோவில்கள் கட்டிய அரசர்கள் அநுமாருக்கு கட்டவில்லை யே?! கோவிலைக் கட்ட வேண்டியது; ஊர் பெயரை மாற்ற வேண்டியது (அல்லது மாறும்படி செய்ய வேண்டியது) இவ்விதமெல்லாம் நடப்பதற்கு பிள்ளையார் சுழி போட்டதும் வைணவர்களே! அல்லது வைணவமும் - சைவமும் சமமே! என்று சமரச பசப்பு வார்த்தை பேசித்திரிவோரே!

இராஜேந்திர சோழ மன்னன் கங்கையிலிருந்து குடம் குடமாக நீரைக் கொ ண்டுவந்து சிவாலயம் கட்டியதால் அவ்வூர் “கங்கை கொண்ட சோழபுரம்” என்றானது என்பது சரித்திரம். ஆனால் ஏற்கனவே பிரசித்திப் பெற்றுத் திகழ்ந்த, தனது தகப்பனா ரால் கட்டப்பட்டு இன்றுவரை மாபெரும் சரித்திரம் படைத்து நிற்கும் “பிரகதீச்வரர் ” கோவிலில் அந்த கங்கை நீரைக் கொட்டி, தஞ்சையை (இராஜ இராஜேச் சுரம்) கங்கை கொண்ட சோழபுரமாக ஆக்கினானா?

நம் நாட்டின் பண்டைய வரலாறு மிகவும் புனிதமானது. இம்மாதிரி சுயலாப நோக்கில் செயல்படும் சிலரால் வரலாறு மாற்றப்பட்டு உலக அரங்கிலே நமக்கிரு க்கும் பெருமைகள் மிகவும் குறைக்கக் காரணிகளாக இருந்து கொண்டு மகிழ்கிறா ர்கள்.

கசடறக் கற்ற பண்டிதர்களான பெரியோர்கள் தமக்கென எவ்வித அடையாள ங்களையும் கொள்ளாமல் அனைவருக்காகவும் “தாம் பொது” என்று வாழ்ந்தவர்கள் அவர்கள். அவர்கள் கடவுளாகக் கொண்டதும், நமக்குக் கடவுளாக அறிமுகப் படுத்தியதும் ஶ்ரீ மஹாதேவனான ஶ்ரீ ஶ்ரீ பரமேச்வரரையே, இம்மாதிரியான பெரியோர்கள், இவ்விதமான மிகக் கேவலமானச் செயல்களை ஆதரிக்கவும் மாட்டா ர்கள். செய்யவும் மாட்டார்கள்.

# புறச்சின்ன மஹிமையும் பஸ்மத்தின் தனிச்சிறப்பும்!

சாஸ்திர - அர்த்தங்களைப் பலர் மெச்சும்படி சொற்பொழிவாற்றும் திறத்தாலும், புத்தியின் சாதுர்யத்தாலும், பலமுறைப் பரமனைப்பற்றிக் கேட்பதாலும் மட்டும் பரமன் அடையத்தகுந்தவனல்ல. அனால், அவனது ஸ்வரூப, குணாதிசயங் களைக் கேட்டு, அவனை அடையமுடியாத துன்பநிலைக்கு மனமுருகி, ஏங்கி, கசிந்துருகி, அவனைத்தவிர மற்றவிஷயங்களில் வெறுப்புற்று), அவனையே பரம புருஷார்த்தமாகக் கருதி, அவனை அடைய உண்மையான தாகமேற்பட்டு, தவித்து எவனொருவன் முக்கரணங்களால் அப்பரமசிவனை பரமபுருஷனாகக் கருதி தம்மை தலைமகளாகவும் எண்ணி, தம் மனதில் சிவத்தை வரிக்கின்றானோ, அவனுக்கே அப்பரமன் தனது கருணையால் - வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத தன் ஸ்வரூப த்தை அடைவிக்கின்றான்.

திருவரங்கத்திலே பள்ளிகொண்டிருக்கும் பெருமாளது நெற்றியில் அங்குப் பணியாற்றும் “பட்டாச்சார்யர்களால்” இடப்படும் ஊர்த்துவ புண்ட்ரம் (நாமம்) இருக்கின்றதே தவிர்த்து, தூங்கிக்கொண்டிருக்கும் அச்சிலையில் எந்த நாமக்குறியும் கிடையாது!, (இவ்விஷயம் ஓய்வு பெற்ற சி பி ஐ உயரதிகாரியான திரு சி. ஏ, இராஜகோபாலன் (ஐயங்கார்) அவர்கள், ஸ்ரீரங்கத்தில் காவல்துறையில் பணியாற்றிய போது, ஸ்ரீரந்கத்து பெருமாள் கோவிலில் ஏற்ப்பட்ட தீ விபத்தை அவர் நேரில் ஆய்வு செய்தபோது, அவரது தனிப்பட்ட விருப்பமான, அதாவது தூங்கிக்கொண்டிருக்கும் பெருமாளின் நெற்றியில் இருப்பது வடகலை நாமமா? அல்லது தென்கலை நாமமா? என்பதை அறிய கர்ப்பக்கிரஹத்திற்குள்ளே நுழைந்து பெருமாளின் நெற்றியை தடவி ஆராய்ந்து தன் சுயசரிதையில் எழுதியதே இந்த மஹோந்நதமான கண்டுபிடிப்பு.!!) வைணவர்களது நாமமே இதிஹாச-புராண பிரமாணம் இல்லாத ஒன்று. இந்த லட்சணத்தில் படித்து நல்ல பதவியில் இருந்த ஒரு காவல்துறை அதிகாரி அது வடகலை நாமமா? தென்கலை நாமமா?! எந்கிற ஆராய்ச்சியில் ஈடுபட்டு அதைக் கண்டுபிடித்து வெளியிட்டதும் அதிசயமே!

வைணவர்கள் தெய்வமாக வணங்கும் எந்த விக்ரஹத்திலுமே நாமக்குறியு டன் தயாரிக்கப்பட்டதில்லை!. அதில் பூஜை செய்பவர்களால் அலங்காரம் செய்யும் போது சார்த்தப்படுவதே அந்த நாமக்குறி!, ஸ்ரீ பெரும்புதூரில் கூட வடகலை நாமம், தென்கலை நாமமாக மாற்றப்பட்டதுதான். ஸ்ரீ நாராயணன் நாமக்குறியோடுதான் இருந்தான் என்பதற்கு பதினெட்டுப் புராணங்கள், மூன்று இதிஹாசங்கள், மற்ற ஸ்மிருதியாதிகள் என எதிலுமே சான்றுகள் கிடையாது. அப்படி இருக்க வீண்புரட் டாக இம்மாதிரியான காரியங்களில் “வைணவர்கள்” ஈடுபடுவதையும், சிவநிந்தனை செய்வதில் ஈடுபடுவதையும்தான், நம் முன்னோர்கள் அவ்வைணவர் போன்றவர் களின் வீண்கூச்சலைக் கண்டித்து “உண்மை” தெரிய வேண்டும் என்பதற்காக ஸ்ரீ ஹரதத்தர், ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள் போன்ற மஹான்கள் நமக்குச் சிவபரத்துவத் தைப் பற்றிப் பலவாறு விளக்கி மற்றவற்றை கண்டனம் செய்துமிருக்கின்றார்கள்.

"உங்கள் சிவலிங்கத்தில் கூடத்தான் விபூதிக் குறி கிடையாது. அதில் பணி செய்யும் பூசாரிதானே அதில் விபூதியை பூசுகின்றான்?" என்பார்கள். பஸ்மத்தின் மகிமையை மூன்று இதிஹாசத்திலும், மற்றுமுள்ள எல்லாப் புராணங்களிலுமே சிறப்பித்துச் சொல்லப்பட்டிருக்கின்றது, தவிர லிங்கம் என்பது யாரைக்குறிக்கும் என்பதும்; அந்த லிங்கத்தில் விபூதியிடப்படாமல் பாழடைந்து கிடக்கும் ஆலயங் களை அருகில் உள்ளோர் அதை "ஈஸ்வரன் கோவில்" என்றழைப்பதும்- இன்றும் நாம் காணக்கூடியதே!

சிவபெருமான் "பஸ்மதாரி" என்றே சொல்லப்படுகிறவர். தவிர உருவ வழிபா ட்டினையொத்த சிவபெருமானது சிலையில் அவரது முகம் மாத்திரமும், நாராயண னின் முகம் மாத்திரம் செய்து இரண்டையும் அருகருகே வைத்து, "இதில் எது சிவன்?" என்று கேட்டால், நெற்றியில் பஸ்மம் இல்லாவிட்டாலும் பவித்ரம் இல்லாத எவராலும் தீண்டமுடியாத அக்னியைத் தன் நெற்றியில் மூன்றாவது கண்ணாகக் கொண்ட ஹரனைப் பார்த்து "இது சிவன்!." என்றே எவரும் சொல்வார் கள், ஆனால் "நாமக்குறி" இல்லாத இன்னொரு சிலை முகத்தினை, "இது நான்தான்!" என்று நாராயணனே வந்து சொன்னால்தான் உண்டு!!, அருவுருவ தோற்றத்தில் விளங்கும் லிங்கத்தினைச் "சிவலிங்கம்" என்றும், ஈஸ்வரர் என்றும் வழிபடாதவன் எவனிருக்கின்றான்?. சிவன் கோவில்களைத்தான் "ஈஸ்வரன் கோவில்" என்றழைக்கி றார்கள். (இதிஹாச புராணாதிகளில் "ஈஸ்வர" சப்தம் "பரத்தைக்" குறிப்பிட பயன்படு த்தியிருப்பதாக வைணவர்களே ஒப்புக்கொண்டதுதான்!)

இவ்விதம் தாம் சார்ந்திருக்கும் ஓர் பிரிவுக்கு உண்டான "புறச்சின்ன விஷயத்தில்" இப்பாஷண்ட வைணவர்களுக்கு எவ்வித பிரமாணமும் இல்லாமலிரு க்க, இவ்வைணவர்கள் எந்த அடிப்படையில் ஹரிக்கு 'பரத்துவம்? ஸ்தாபிக்க வருகிறார்கள்?! பாவம்! பரிதாபம்!!, ஹரிக்கு *பரத்துவம்' ஸ்தாபிக்க இவர்கள் கையா ளும் தந்திரங்கள் அனைத்தும் நீதி நூல்களில் வகுக்கப்பட்ட சாஸ்திரப்படி "நான்கு வகைப் பொய்களை" விஸ்தாரம் செய்து, அபத்தக் கதைகளைப் பரப்பி பாமர ஏழைகளை கெடுத்து வருவது வெட்ட வெளிச்சம்! இவர்கள் கையாளும் அந்த நான்கு வகைப் பொய்கள்: 1) மலடி மைந்தன் 2) கயிற்றரவு 3) கானல் நீர் 4) சொப்பன உலகம் என்பதே அது!|, இவர்களுடைய வார்த்தை ஜாலம் நிரம்பிய கட்டுக்கதைகள் எல்லாமே இந்நான்கு பொய்களுக்குள் அடங்கிவிடும்!!.

இந்த லட்சணத்தில் இவ்வைணவர்கள் ஹரியினுடைய அவதாரப் புரட்டிற்கு ஏற்றம் தருவதாக நினைத்துக் கொண்டு, பூரண அவதாரம், அம்ஸாவதாரம் என்று இரண்டாக பிரித்து மகிழ்வர் ஆதித்த புராணத்தில், நாரதர் அவதார மூர்த்திகளுக்கு மூல மூர்த்தியாய் விளங்கும் நாராயணனைக் கண்டு "ஏதோ" பேசுவதற்காக வைகுந் தம்" சென்றபோது அங்கு விஷ்ணு இல்லாமல், வாமனாவதாரம் செய்ய அவர் அதிதி என்பவளுடைய கர்ப்பத்தில் சென்றிருக்கிறார் (ப்ரவேசித்திருக்கிறார்?!) என்று கேள்விப்பட்டு, நாரதரும் அந்த அதிதி என்பவளுடைய கர்ப்பம் புகுந்து விஷ்ணு வைக் கண்டு, தான் சொல்ல வந்ததை சொல்லிச் சென்றார் என்கிற விஷயம் விவரி க்கப்பட்டிருக்கிறது!!

வைணவர்கள் கொண்டாடும் பூரணாவதார காலத்தில் விஷ்ணு 'வைகுண்டத்தில்' இல்லாமல் இருந்ததினால் அவ்வைகுண்டம் பாழாய் இருந்ததற்கு என்ன சொல்வார்களோ?! தான் நுழைந்த கர்பத்தில் நாரதரும் நுழைந்தார் என்பதிலி ருந்து நாரதரும் "பூரணரோ?" என்பதற்கும் அவர்கள் என்ன சொல்வார்களோ?!!

## விஷ்ணுவும் பஸ்மதாரியே!

கௌதமர் - அகலிகை திருமணத்திற்கு தேவர் குழாமுடன் சென்றிருந்த விஷ்ணுவுக்கு அகலிகையின் அழகைக்கண்டு தாது ஸ்கலிதமானபோது, மிகுந்த வெட்கமும், வருத்தமும் அடைந்த விஷ்ணு, அநுசிதமான இக்காரியத்திற்கு பரிகாரம் கேட்க, துர்வாஸ முநியும், தத்தாத்ரேயரும் "திருநீறே இவ்வகையான பாவங்கள் முதற்கொண்டு பல்வேறு பாவங்களுக்கும் மாற்று! என்று கூற, விஷ்ணு வும், விஷ்ணுவைப் போன்றே உணர்ச்சிவசப்பட்ட மற்ற தேவர்களும் விபூதியைத் தரித்ததோடு மட்டுமின்றி அவ்விபூதியை மருந்துபோல உட்கொண்டனர் என்று பிருஹஜ்ஜாபோலபநிஷத் வசனம் தெரிவிக்கிறது. வைணவர்க்கு எமனாய் விளங்கும் இவ்வுபநிஷத் வாக்கியத்தால் விஷ்ணு விபூதி தாரணன் என்பதும், பிராய ச்சித்தத்திற்கு மருந்தாய் அதை உட்கொண்டவன் என்பதும் வெளிப்படலாயிற்று.

**பிருஹஜ்ஜாபாலோபநிஷத்/ 6 வது பிராஹ்மனத்தில்**, "சிவவக்ஷசி .............................. ஹரிர்மஸ்தககாத்ரேஷ ............. ஹரிமாஹ ........... நசக்யம் பஸ்மநோ .............................. பவிஷ்யதி| என்கிறபடியால், ஹரியானவன் சிவபெருமானுடைய நெஞ்சிலிருந்த விபூதியை நகத்தினால் எடுத்து ப்ரணவம், காயத்ரி, பஞ்சாட்சரம் என்பவற்றால் தோத்திரம் செய்து தமது சிரசிலும், சரீரத்திலும், பூசிக்கொண்டார், பின் சிவனார், "எம்மை உன்னுடைய ஹ்ருதயத்தில் தியானிக்க!" என்று சொல்லவே, ஹரியும் அவ்விதம் செய்து 'என்னால் காணப்பட்டது! என்னால் காணப்பட்டது!' என்றான். பின்னர், "சிறிது விபூதியை உண்பாயாக!* என்று சிவனார் சொல்ல, அவ்விதமே ஹரியானவன் பஸ்மத்தில் குளித்து, விபூதியை உண்டான். பின்னர் பெரிய ஆச்சரியம் உண்டாயிற்று!; ஹரியானவனுக்கு உடல்முழுதும் முத்து வர்ண முடையவனாய் பளிங்கு போல வெண்ணிறமுடையவனானான். பின்பு சிவபெரு மானை நோக்கி, "விபூதியின் பெருமையை அறியமுடியாது!; பிரபுவே! உமது பெருமையை நான் எவ்விதம் அறிவேன்?; உமக்கு நமஸ்காரம், உமக்கு நமஸ்காரம்!! உம்மை நான் சரணமடைந்தேன், சம்புவே! உமது இரண்டு திருவடிகளிலும் எனக்கு எப்போதும் பக்தியிருக்குமாறு அருளுக! என்று ப்ரார்த்திக்க, ஸ்ரீ பரமேச்வரர் 'பஸ்மதாரணம் செய்பவன் எவனாயினும் எனது பக்தனாவான்!' என்று அருளியது அதற்குப் பொருள்!!

போதாயன சூத்திரம், "கோமயத்தை சத்யோஜாதத்தினால் எடுத்து, வாமத்தினால் பிண்டஞ்செய்து, அகோரத்தினால் அதனைத் தகித்து, தற்புருஷத்தி னால் எடுத்து, ஈசானத்தினால் தலைமுதல் பாதம் வரையில் பஸ்ம ஸ்நானம் செய்து, தர்ப்பாஸனத்தில் அமர்ந்து - ஆசமனஞ்செய்து, சிவனாகி சிவத்தைத்

தியானிக்க!” என்று சொல்வதினாலும் அந்நாராயணனைப் போன்றே விபூதியின் மஹிமையுணர்வோம்!!

தான் தெய்வமாக வணங்குபவற்றுக்கு எவ்வித குறிகளும், சிறப்புகளும் இல்லாமல் இருக்கும் போது, அவற்றை தெய்வமாகக் கருதி அவ் “வைணவர்கள்” தன் நெற்றியின் அளவை விடப் பெரிதாக நாமம் இட்டுக் கொள்வதும், சிற்றின்ப கதைகளைப் பரப்பிச் சாமானிய ஜனங்களையும் தம்போன்று ஆக்கியும், சிவ நிந்தனை செய்து வாழ்வதும் அவர்களை ஆழ்நரகில் ஆழ்த்தி அனைவரையும் “நரகாழ்வார்களாக” ஆக்கிவிடும்.

## நவீன பாஷியக்காரனான
## பூதூர் இராமானுஜன் பெருமைகள்!

பன்னிரு ஆழ்வான்களில் “ஆண்டாள்” எனும் சூடிக்கொடுத்தவள் மட்டுமே சிவாபராதச் செயல்களில் ஈடுபட்டவளில்லை. இவள் மட்டுமே ‘நற்கதி’ பெற்றவளானாள். ஏனையோர் (இராமானுஜன் உட்பட) “நோவு சாத்தி” மாண்டவர்களே!!,

“சிவத்துவேஷம்” என்பது சர்வ நாசத்தையும் உண்டு பண்ணும் என்று வைணவர்கள் போற்றும் “பாகவதத்திலேயே” சொல்லி எச்சரிக்கப் பட்டிருக்கின்றது. ‘சிவ’ என்று சொன்னாலே சொல்பவனுடைய பாவம் அப்போதே நசிக்கப்படுகிறது' எனும் பொருள் தரும் அச் சுலோகம்:

**யத் த்வயஹரம் நாம கிரேரிதம் ந்ருணாம்**
**ஸக்ருதப்ரஸங்காதகமாசு ஹந்தி தத் ।**
**பவித்ரகீர்த்திம் தமலங்க்யசாசநம்**
**பவாநஹோ த்வேஷ்டி சிவம் ச்வேதர: ॥**

ஸ்ரீ கிருஷ்ண பாகவதம் பொய் என்றும் புரட்டு என்றும் அந்நூலைப் பிரமாணமாகக் கொள்ளக் கூடாது என்றும் சொல்லிவிட்டு அந்நூலில் இருந்து மேற்கோள் காட்டுவது நியாயமா? என்று தோன்றலாம். திருவாரூரில் பிறந்து வளர்ந்து, திருவையாரில் இறந்துபோன கர்நாடக இசை வல்லுனரும், மூவரில் ஒருவரான “தியாக ராஜர்” ஸ்ரீ இராம பிரான் மீது அளவற்ற பக்தியைக் கொண்டு அவ்விராமனையே “பரமாக”வும் கொண்டு வாழ்ந்தவர் என்பதை யாவரும் அறிவர். அவருடைய எல்லா கீர்த்தனைகளிலும் ஸ்ரீ இராமனின் பெயர் பதிவு செய்யப்பட்டிருக்கும். ஆனால் இவருக்கும் தமது இறுதிக்காலத்தில் சந்தேகம் வந்துவிட்டது போலிருக்கிறது. இவர் தமது இறுதிக் காலத்தில் இயற்றி பாடியதாகக் கருதப்படும் ஓர் கீர்த்தனையில் “ஹே! இராமா!! நீ ஈச்வரரா? விஷ்ணுவா? என்பது எனக்குத் தெரியாது!, எனக்கு நீ ஸ்ரீ இராமன்!” என்று பாடியிருக்கிறார். (வைணவ சம்பிரதாயத்தைத் தழுவி வாழ்ந்த இவரைப் போன்ற எண்ணற்ற பாமரர்கள் (பன்னிரு ஆழ்வார்களும் சேர்த்தே!) கர்ம வசத்தாலும், ஷண்முனிவர்களுடைய சாபத்தாலும் விஷ்ணுவைத் தெய்வமாக

கருதி வழிபட்டாலும், ஸ்ரீ பரமேச்வரரை வெறுக்கமுடியாது இருந்தவர்கள் என்பது வரலாறு.

இம்மாதிரியே முற்காலத்தில் வைணவ அபிமானமுள்ள ஒருவர் எதிலும் திருமாலுக்கு பரத்துவம் பகராது இருக்க, தாம் அந்த குறையைப் போக்குவதாக கருதி சுருதிவசனம் எழுதப் புகுந்ததில், தம் கர்மவசத்தால் விஷ்ணுவுக்கு உயர்வு கூறினாலும், இடையிடையே முன் சொன்ன தியாகராஜர், ஆழ்வார்கள் மாதிரி 'இருந்தாலும் இருக்குமோ?' என்கிற சந்தேகத்தில் ஸ்ரீ பரமேச்வரரை துதித்ததுபோல் இப்பொய் பாகவதத்திலும் இம்மாதிரி சிவனுக்கு உயர்வு கூறும் பகுதிகள் வந்ததிலும், அவர்களுடைய உள்நோக்கத்திற்கு ஆட்பட்ட அப்பகுதிகளை நாம் அறியாதோற்கு தெரியப்படுத்துவதற்கும் எடுத்தாள்வதில் தவறில்லையே?!

சைவத்தின் மகிமை பேசும் பதிகங்களில் எவற்றிலும் "ஓ! விஷ்ணுவே!! நீயும் தெய்வமோ? என்னவோ?! என்னை மன்னித்து முக்தி கொடு!!" என்று எவராவது பாடியிருக்கிறார்களா?! இதுதான் நம் சைவர்களின் பெருமை!! இல்லாவிட்டால் வேதம் சொல்லிய கருத்தையே "ஏகன் அநேகன்" என்றிருப்பார்களா?! பாரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் சிவதீட்சை பெற்று பிள்ளைவரம் வாங்க உதவிய ஸ்ரீ உபமன்யு முனிவர் கூட, ஸ்ரீ கிருஷ்ணரிடம் சிவபெருமான் மஹிமைகளைப் பற்றிச் சொல்லும் போது, ஸ்ரீ பரமேச்வரர் இந்திரனது ரூபத்தில் தவம் செய்த தமக்கு "வரம்" அருள வந்தபோது, "மஹாதேவரைத் தவிர மற்றவர்களிடம் வரம் வாங்கும் எண்ணமே எனக்கு வெறுப்பாக இருக்கிறது. மஹாதேவரல்லாத மற்றவர் தரும் திரிபுவனம் ஆளும் வரமோ, பூரண ஆயுசோ, தனதான்யமோ எனக்கு வேண்டியதில்லை!." என்று திட்டவட்டமாக சொல்லி, இறுதியில் அவர் உமாமஹேச்வரரைக் கண்டு துதித்து வரம் வாங்கின பகுதியை, ஸ்ரீ கிருஷ்ணரே பீஷ்மருக்கும், அவரைச் சுற்றியுள்ளோருக்கும் சொல்லுவதாக வருகிறது.

இவ்விதம் எது தெய்வம்? என்கிற சந்தேகத்தில் சைவர்கள் யாரும் இருந்ததில்லை. இருக்கப் போவதும் இல்லை!. வைணவத்தைச் சார்ந்தவர்கள் வைணவம் வளர எம்மாதிரியான வழிமுறைகளையும் கையாள்வார்கள் என்பதற்கு ஒரேயொரு சரித்திர உதாரணம்:

திருநீற்றுச் சோழன் காலத்தில், பூதூர் இராமானுஜன் என்பவன் வைணவத்தில் ஒரு தனிப் பிரிவை ஏற்படுத்தி, "நமக்கு தெய்வம் விஷ்ணு, மற்றதெல்லாம் தெய்வமில்லை, சிவனை வழிபடக்கூடாது, சிவாலயம் செல்லக்கூடாது" என்றெல்லாம் தமக்குத் தோன்றியவாறெல்லாம் பிதற்றி, இதிகாசத்திலோ, மற்றைய புராணங்களிலோ சொல்லப்படாத ஊர்த்துவ புண்டரம்,, (வெறும் செம்மண் கீற்று) சித்ரோர்த்துவ புண்டரம் (செம்மண் கீற்றுடன் இருபக்கமும் வெண்கோடுகள்) என ஒரு தனி அடையாளமும் ஏற்படுத்தி ஒரு தனி மதமே ஸ்தாபிக்க ஆரம்பித்தான்.

அதற்கு முன்பாக, வைணவ நூலான 'உடையவர் சூர்ண விளக்கம்' மேற்படிப் பூதூர் இராமானுஜனைப்பற்றி கூறுவதைப் பாருங்கள்.

“உடையவர் ஜாதி அபிமானம் உடையவர் என்றும், பிராம்மணக் குலத்தில் பிறந்த ஆண் - பெண் பிள்ளைகளுக்கே ஆச்சார்யக் கியாதிலாப பூஜாதிகள் தகுமென் றும், அவர்களுக்கேதான தகுதிகள் செய்ய வேண்டும் என்றும் இத்தியாதி வஞ்சனை நிறைந்த நெஞ்சை உடையவராய் வேதமாதிகளில் உள்ள உண்மையான பொருள் களை மறைத்து இதர பாஷ்யங்களில் சில கிரஹித்து ஸ்ரீ பாஷியக்காரர் ஆனார்.”

இப்படிப்பட்ட யோக்தாம்சமுள்ள பூதூர் இராமானுஜனால் தம் நாட்டில் அவதூறு ஏற்படுவதை தவிர்ப்பதும், சிவதூஷணைப் புரட்டைத் தடுப்பதும் தம் கடமை என்றுணர்ந்த மன்னன் திருநீற்றுச்சோழன், இது என்ன புதுமையாக இருக்கி ன்றதே?!.... சிவபெருமான் தெய்வமில்லை என்றால் பின் வேறு எது தெய்வம்? புராணமும் இதிகாசமும் நமக்குச் சொல்லிக்கொடுத்தது பொய்யோ?.... நாம் இத்தனைச் சிவாலயம் கட்டியதும் வீணோ?!.. இராமானுஜன் என்பவன் என்ன இப்படி ஒரு புதுமதத்தை ஸ்தாபிக்கின்றானே?....” என்று எண்ணிய மன்னன், தன் ஏவலாட்களை விட்டு இது குறித்த விசாரணைக்கு இராமானுஜனை அழைத்து வர அனுப்பினான்.

தவிரவும் அப்பூதூர் இராமானுஜன், "சோழ மன்னன் ஒன்றும் தெரியாதவர் களிடம் எல்லாம் 'சிவனுக்கு உயர்ந்த பொருள் இல்லை!' என்று எழுதிக்கொடுத்து கையெழுத்து வாங்கி என்ன ஆகப்போகிறது? இந்த இராமானுஜனிடம் அல்லவா அம்மன்னன் அவ்வாக்கியம் குறித்து விவாதித்து கையொப்பம் வாங்கவேண்டும்?! அதுதானே மரியாதை?!" என்றெல்லாம் பேசித்திரிந்ததும் ஒரு காரணம்.

## பூதூர் இராமானுஜன் கரந்துரைதல்!!

இவ்விதம் அவைதிக நெறியைப் பரப்பி, குழப்பத்தை ஏற்படுத்தும் பூதூர் இராமானுஜனை விசாரணைக்கு அழைத்துவர அரண்மனைப் பணியாட்கள் வந்திருக்கும் செய்தியறிந்த இராமானுஜனின் சீடன் கூரத்தாழ்வான், தன் குரு இராமானுஜனிடம், “மன்னனோ சிவபக்தன் !..... சிவாலயம் நிறைய கட்டினவன்.... அம்மன்னன் உங்களைத் தண்டிக்கவே அழைக்கின்றான் போலிருக்கின்றது... மன்னனது ஆணைக்குட்பட்டு நீங்கள் போனால் மன்னன் கடுமையாகத் தண்டிப் பான்... ஆகவே நான்தான் இராமானுஜன் என்று நான் போகிறேன். ... நீங்கள் எங்காவது அதுவரைத் . தலைமறைவாக இருங்கள்...” என்று தன் குருவுக்குப் “புத்தி” சொல்லி தான் கட்டி இருந்த வெள்ளை வேட்டியைத் தன் குருவுக்கு அளித்து (சாத்தி?!) இராமானுஜன் கட்டி இருந்த காவியைத் தான் சாத்திக்கொண்டு மன்ன னைக்காண தன்னுடன் தன் குருவுக்குக் குருவான பெரிய நம்பியுடன் கங்கை கொண்ட சோழபுரத்திற்குக் கிளம்பினான்.

இராமானுஜனும் தன் காவியுடையை சீடனுக்களித்து, சீடனின் வெள்ளை வேட்டியைத் தான் “சாத்திக்கொண்டு கர்நாடகப் பிரதேசத்தில் உள்ள ‘ஸ்ரீரங்கப்பட்டின த்தில்’ கரந்துறைந்தான்!!. (இந்நிகழ்ச்சியைப் பின்பற்றித்தானோ என்னவோ, திருவரங் கத்தில ‘வெள்ளைசாத்து’ வைபவம் நடத்துகிறார்கள்!!)

இந்த பூதூர் இராமானுஜனை எவ்வித ஆதாரமும் இல்லாது 'ஆதிசேஷன்' அவதாரம் என்றும் சொல்லுவார்கள், கேட்பவர்கள் இருப்பதால்!. அவர் ஆதிசேஷன் அம்ஸம் என்றால் திருநீற்றுச் சோழன் 'விசாரனை'க்கு அழைத்த போது 1000 பணா மண்டலம் உடைய ஆதிசேஷனாய் சென்று வாதில் வென்றிருக்கலாமே?! இவர் விட்டல தேவராஜனுடைய குரு 12000 சமணராய் ஒரே காலத்தில் தோன்றி வாதிட்ட போது வெற்றி பெற்றவர் தானே?!. ஆனால் நடந்தது என்ன?...

சிவநெறி சிறந்து நிற்பார் அனைவரையும் தம் குடிமக்களாகக் கொண்டு, கங்கை கொண்ட சோழபுரத்தைத் தலைநகராகக் கொண்டும், சர்வ சாஸ்திரங்களைக் கற்று வேதோக்தமாகவும், மஹாமகிமையுடனும் ஸ்ரீ மஹாதேவரால் அருளப்பட்ட திருநற்றை அணிந்து பரமனின் அருள்பெற அது ஒன்றே போதும் என வாழ்ந்து தன் இயற்பெயரான அநபாய குலோத்துங்கச் சோழன் எனும் பெயர் நீங்கி "திருநீற்றுச் சோழன்" என்னும் திருநாமம் அடைந்த மன்னனது அரண்மனைக்கு, தான்தான் இராமானுஜன் என்று சொல்லிப் புதிதாக காவி சாத்திக்கொண்டு நுழைந்த கூரத்தாழ்வானையும், கூரத்தாழ்வான் என்று சொல்லி வந்த பெரிய நம்பியையும், மன்னரும், ஸ்ரீ வாகீச பாதசேகர சிவாச்சாரியாருடன் இருந்த பண்டிதர்களும் வரவேற்றனர்.

## பூதூர் இராமாநுஜனால் கூரத்தானுக்கும் பெரிய நம்பிக்கும் கண்பரிபோதல்!

மன்னனது இராஜ சபையில் வீற்றிருந்த ஸ்ரீ வாகீச பாதசேகர சிவாசாரியா ருடன், சதுர் வேதமறிந்த பண்டிதர்களும் ஆள்மாறாட்டம் செய்து அங்கு வந்த கூரத்தாழ்வான் மற்றும் பெரியநம்பியிடமும், "விஷ்ணு பரத்துவத்திற்கு வேத, புராணப் பிரமாணம் என்ன? என்றும், வைணவரும், நீங்களும் தரித்திருக்கும் புண்டரத்திற்கும் வைதிகமென்ன? பிரமாணம் என்ன? சொல்லும்!!" என்று கேட்க, அவர்களும் பூதூர் இராமானுஜன் விஷ்ணுவே பரம் என்று வேதங்கள், ஸ்மிருதிகளில் புராணம் உண்டென்று உண்டுபண்ணப்பட்ட கற்பனை பாகவதத்தைச் சான்றாகச் சொல்லித்திரிவதையே அரசனிடமும் குழுமியிருந்த பண்டிதர்களிடமும் கூற, அங்குக் கூடியிருந்த அனைவருமே அவர்களது பதிலுக்குப் பெரிதான மந்தஹாசம் செய்தனர். தாம் சொன்னவற்றுக்கு அரச சபையில் ஏற்பட்ட அப்பிரதி பலிப்பானது இருவரையும் கலக்கமடையச்செய்தது.

சபையிலே வீற்றிருந்த ஸ்ரீ வாகீச பாதசேகர சிவாச்சாரியார் அவ்விருவரை யும் அவர்களது அசட்டுத்தனமான பதிலுக்கு மிகுந்த கோவம் கொண்டு கண்டித்து, "பரத்திற்கு பரம் பிரும்மா; அப்பிரும்மாவுக்கு பரம் ஹரி; அவனுக்கும் பரம் ஈசனாகிய சிவன்" எனும் பொருள் தரும் அதர்வண வேத சரபோபநிஷத்தின் சுருதியாகிய;

**"பராத்பரதரம் ப்ரஹ்மதத் பராத்பரதோஹரி ।**
**தத் பராத்பரதோ ஈச."**

முதலிய சுருதியாதி பிராமாணங்களைப் பலவாறு அவர்களுக்கு விளக்கி, ஸ்ரீ ஹரதத்தர் செய்த வைணவ கண்டனமான “ஹரிஹர தாரதம்மிய” நியாயத்தினைக் கூறியும், வைணவத்திற்கு எமனாய் விளங்கும் பஸ்மஜாபாலோபநிஷத்திலிருந்து பஸ்மத்தின் மகிமையையும், வைணவரது புண்டரம் என்பது அவைதிகமானது என்றும் நிறுவித்து, இன்னும் பல புராண ஸ்மிருதியாதிகளிலிருந்து வியாக்கியானம் செய்து சிவமே பரம் என்று ஸ்தாபித்து, இராமானுஜனாக ஆள்மாறாட்டம் செய்து வந்த கூரத்தானிடம், “சிவாத் பரதரம் நாஸ்தி” (சிவனுக்கு உயர்ந்த பொருள் இல்லை) என்று எழுதிக் கொடுத்து, “மறுப்பு ஏதேனும் இருந்தால் தெரிவிக்கலாம், அல்லது ஒப்புக்கொண்டு கையெழுத்து போடவும்!!.” என்று, அவ்வோலையில் கையொப்பம் இடுமாறு மன்னரின் ஆணைக்கிணங்க அவ்விருவரிடமும் தந்தனர்.

கூரத்தாழ்வானோ, தன்னிடம் தரப்பட்ட அவ்வோலை நறுக்கில் அமைந்த ‘சிவாத் பரதரம் நாஸ்தி' என்பதில், 'சிவாத்' என்றால் *மரக்கால்' (அளக்கப் பயன்படும் பொருள்) என்னும் பொருள் கொண்டு, மன்னனது சினத்தை மேலும் அதிகரிக்கச் செய்யும் வகையில், ‘மரக்காலை விடப் பதக்கு பெரிது’ எனும் பொருளில் ‘த்ரோணமஸ்தி அத: பரம்’ என்று பதிலாக எழுதித் தந்தான்.

அவ்வாறு அவன் எழுதித்தந்ததில் பொருளில் ஒற்றுமை என்பது (சிலேடை) சிவாத் என்றால் மரக்கால் என்று வருவது போல த்ரோணம் என்பது பதக்கு என்பதை மட்டுமே குறிப்பதாகவும், பொருள் ஒற்றுமையாக அவ்வார்த்தை விஷ்ணுவுக்குப் பொருந்தாததினாலும் இவர்கள் சிவநிந்தை செய்யவே வந்திருக்கின்றார்கள் என்று திருநீற்றுச் சோழன் தீர்மானம் செய்து, தான் கற்ற பாண்டித்தியத்தை இவர்கள் இறை விஷயத்தில் காண்பிக்கின்றார்களே என்று, மிகக் கோவம் கொண்டும், சிவ புராண ஸ்லோகம் ஒன்று;

**சிவநிந்தாரதம்ஹத்வாபீடித: ஸ்வயமேவவா||**
**யஸ்த்ய ஜேத்துஸ்த்யஜாந் ப்ராணாந்நஸபூயப்ரஜாயதே ||**

(சிவபெருமானை நிந்தனை செய்வோனைக் கொன்றுவிடு, இல்லையேல் அதைக்கேட்க நேர்ந்ததே என்று நீ உன் பிராணனை விட்டுவிடு, உனக்கு மறுபிறப்பில்லை!) என்று சொல்லியிருப்பதாலும், “கண்டனனாயின் முக்கட்கடவுளை நிந்திப்போனை - தண்டனை அளித்துக் கொல்க” என நீதியும் இருப்பதாலும், திருநீற்றுச் சோழ மன்னன், கூரத்தாழ்வானுடைய கண்களையும், பெரிய நம்பியுனுடைய கண்களையும், பிடுங்கித் துரத்தினான்.

(வைணவர்கள் வரலாறு கூறும் மேற்சொன்ன நிகழ்ச்சிகளை தக்க ஆதாரமின்றி வழக்கம்போல் மறுப்பார்கள்!. கூரத்தானுக்கும், பெரிய நம்பிக்கும் எதனால், யாரால், எப்படி, எங்கு, அவ்விருவருடைய கண்கள் பறிபோயின என்பதை சொல்லவும் மாட்டார்கள்!)

பின்னர் இது விஷயமறிந்த இராமானுஜன், தான் தெய்வமாக வணங்கும் ஹரியிடம் அரசனின் செய்கையை முறையிடாமல், அவ்வரசனைக் கொல்வதற்குச்

சூனிய கருமம் செய்தான். இவன் சூன்யம் வைத்த பன்னிரண்டு ஆண்டுகள் கழித்தே திருநீற்றுச் சோழமன்னன் முக்தியடைந்தான்! இதுதான் பூதூர் இராமானுஜன் கையாண்ட இலக்ஷணம்! யோக்யதை!! பெருமை!!!,

## பூதூர் இராமானுஜன் ஏன் விஷ்ணுவிடம் முறையிடவில்லை?!

(இவ்விராமானுஜன் ஹரியிடம் மன்னனது செயலுக்கு முறையிட்டாலும் ஹரியானவன் வரமாட்டான். ஹரிக்கு ஏற்கனவே தக்ஷயாகத்தில் (சிவாபராத யாகம்) கலந்து கொண்ட முன் அனுபவம் இருப்பதால் ஹரி எப்படி வருவான்? என்றே இராமானுஜனும் தீர்மானித்து விட்டான் போலும்! அதனால்தானோ என்னவோ, சாதாரண ஜனங்கள் ஈடுபடும் மந்திரித்தல், தாயத்து, கயிறு கட்டுதல், சூன்யம் வைத்தல் போன்ற காரியங்களில் ஈடுபட்டான் போலும்!.) இவ்விதமான யோக்யதாம்ஸம் உள்ள பூதூர். இராமாநுஜனைப் போல எந்த சைவனும் ஈடுபடவே மாட்டார்கள். இவ்வித செய்கைகளில் ஈடுபட்டதாக சரித்திரமும் இல்லை!!,

ஸ்ரீ கண்ட சிவாச்சாரியார் , மற்றும் ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாள் செய்த பாஷியம் போன்று, இப்பூதூரானும் "ப்ரும்ம ஸூத்ர"த்திற்கு எழுதிய பாஷியம் எந்த லட்சணத்தில் இருக்கும் என்பது அனைவரும் அறிந்ததே!; இதைத்தான் வைணவர் கள் "ஸ்ரீ பாஷியம்" என்று கொண்டாடுகிறார்கள். ஏற்கனவே அதற்கு ஸ்ரீகண்ட சிவாச்சார்யரும், ஸ்ரீ சங்கர பகவத்பாதாளும் அதற்கு பாஷியம் செய்திருக்கின்ற னரே? என்கிற எண்ணமும், தன்னடக்கமும் இல்லாத அந்த பூதூர் இராமாநுஜன் தாமும் துணிந்து "ப்ரும்ம ஸூத்திரத்திற்கு" பாஷியம் எழுதியிருக்கிறான் என்றால் அவனை என்னென்பது? (இதில் குறிப்பாக சைவர்கள் கவனிக்க வேண்டியது யாதெனில், ஆதிசங்கரர் வியாகரணம் செய்த ப்ரும்ம சூத்திரத்தை நம் சைவர்கள் யாரும் பெரியதாக எடுத்துக்கொள்ளத் தேவையில்லை!. "அத்வைதம்" என்னும் புதிய கோட்பாடுடைய சித்தாந்தம் அது. நம் சைவக்கொள்கைக்கு அது முரணானது என்பதால்தான் ஸ்ரீலஸ்ரீ காசிவாசீ. செந்திநாத அய்யர் பெருமுயற்சி எடுத்து, ஸ்ரீ நீலகண்டசிவத்தின் பாஷியத்தையொட்டி, சிவாத்வைத ப்ரும்ம சூத்திரம் என்னும் நூலைச் செய்தார். அந்நூல் படித்துணர்ந்தாலே போதும்.)

(ப்ரும்ம சூத்திரத்திற்கு வேறு யாரும் பாஷியம் எழுதக்கூடாது என்பதில்லை. அதற்கு அடிப்படைத் தகுதிகளாக நிறைய குணாதிசயங்களும், வாழ்க்கை முறையும் தேவை என்பதை யாரும் மறுக்க முடியாது. பூதூர் இராமாநுஜன் எவ்விதமானவன் என்பதை வைணவர்கள் எழுதிய "தென் குருபரம்பரை ப்ரபாவ" த்தில் தெளிவாக எழுதி வெளியிட்டு இருக்கிறார்கள். அதை நாமும் அறிய வேண்டும் என்கிற நோக்கில் ஸ்ரீ பாம்பன் சுவாமிகள் தமது "சைவ சமய சரபம்" எனும் நூலில் விரிவாகவே தந்திருக்கிறார். அவர் தந்த வரலாற்றுத் தகவல்களைத்தான் இந்நூலி லும் நாங்கள் பயன்படுத்தி இருக்கிறோம். ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகள் தமது வாழ்நாளை முருக பக்திக்கும், வைணவர்களது வீண் புரட்டை கண்டிப்பதற்கும் கழித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது! வைணவர்களால் இவர் அநுபவித்த துன்பங்களும்,

இடையூறுகளும் அவர் போற்றிய முருகப் பெருமானின் அருளால் நீங்கியதும், அதை அவர் எதிர் கொண்ட விதமும் இந்நூற்றாண்டின் முற்பகுதியில் நடந்தவைதான்!)

தமக்கு முன் வாழ்ந்த ஸ்ரீ ஆதிசங்கரரால் பிரபல்யமடைந்த "அத்வைதம்" என்கிற வார்த்தை வேதத்தில் காணப் படுவது போல இந்த புதூர் இராமாநுஜன் கண்டுபிடித்த "விசிட்டாத்வைதம்" என்ற சொல் எதிலுமே காணப்படவில்லை, இதுபோன்றே 'இராமத்வம்' மற்றும் 'விஷ்ணுத்வம்' என்பதின் கதியும்!.

விசிட்டாத்வைதம் (ஜீவன் வேறு; உலகம் வேறு; ஈஸ்வரன் வேறு) என்பது வைணவர்களது கொள்கையா? வைணவர்கள் 'பரமாக' போற்றும் திருமாலின் கொள்கையா? விஷ்ணுவின் கொள்கையாயின் அந்த வாக்கியம் வேதத்தில் எந்தெந்த இடத்தில் உபயோகிக்கப் பட்டிருக்கிறது? வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் சாந்தம், சிவம், அத்வைதம் முதலிய வார் த்தைகளுக்கு என்ன கதி?!

இராமாநுஜனால் ஏற்படுத்தப்பட்ட "விசிட்டாத்வைத" கொள்கையை பின்பற்றும் எவருமே தம்மை "விசிட்டாத்வைதிகள்" என்று ஏன் சொல்லிக் கொள்வதில்லை? புதூர் இராமாநுஜனால் ஏற்படுத்தப்பட்ட இந்த "விசிட்டாத்வைதம்" சம்பந்தமாக பாரதத்தில் கூறப்பட்டுள்ள சம்பவத்தில் இருந்து சில கேள்விகள் எழுகிறது. அவற்றுக்கு இந்த "விசிட்டாத்வைதிகள்" அல்லது வைணவர்கள் சொல்லும் பதில் என்ன?

1. கிருஷ்ணன் அர்ஜுனனிடம் "எல்லாம் யானே!" என்று உபதேசித்தது தோல், எலும்பு, நரம்பு, உரோம உருவமுள்ள தன் சரீரத்தைக் குறித்தா? சர்வ வியாபகமுள்ள அத்வைத ஆத்மாவைக் குறித்தா?

2. கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு கீதை உபதேசித்த காலத்தில் அவருக்கு உடலாகிய அசித்துப் பொருளும், சுக துக்கம் அநுபவிக்கும் ஜீவனும், தநுகரண புவன போகம் அநுபவிக்கச் செய்யும் ஈஸ்வரனும், இவற்றிற்கு எல்லாம் ஆதரவாய் விளங்கும் ஆத்மாவும் உபதேசம் கேட்ட அர்ஜுனனுக்கு இருந்தது போல கிருஷ்ணனுக்கு இருந்தனவோ? இல்லையோ??

3. சரீரம் இல்லை என்றால் அர் ஜுனனது தேரில் கிருஷ்ணன் "சாரதி" யாக இருந்தது எப்படி? அது யார்?!.

4. ஜீவனில்லை என்றால், பாரதப் போரில் பீஷ்மரது தொடர் அம்பு மழைக்கு நொந்து, சினம் கொண்டு 'சக்கரத்தை' தூக்கி பிரயோகித்தது யார்? எப்படி?

5. கிருஷ்ணன் தாம் ஈஸ்வர சொரூபமாக இல்லாவிட்டால் அர்ஜுனனுக்கு 'விஸ்வரூப தரிசனம்' எப்படி காண்பித்தார்?

என்பன முதலிய பல கேள்விகளுக்கு "விசிட்டாத்வைதத்தில்" பதில் கிடையாது. இருந்தால் சொல்லட்டும்!.

இறுதியாக, இவ்விதம் 'பாஷியம்' என்கிற பெயரில் ஒரே விஷயம் எவ்வளவு விதமாக, ஒன்றுக்கொன்று வேறுபட்டும், மாறுபட்டும் தந்திருக்கிறார்கள் என்பதை திரு. வை.மு. கோபாலகிருஷ்ணமாச் சாரியார் பதவுரை, தெளிவுரையுடன் மிகுந்த சிரத்தையுடன் நமக்களித்த 'வில்லிபுத்தாராழ்வார் அருளிய - வில்லிபாரதம்' எனும் நூலில், மூல நூலான வியாஸர் அருளிய பாரதக் கதையை, யார் யார், எந்தெந்த நூலில், எந்தெந்த மாறுதல்களுடன் செய்திருக்கிறார்கள் என்பதையும், அவை என்னென்ன என்பதையும் நமக்கு தெரிவித்திருப்பதிலும் கோவை கம்பன் கழக வெளியீடர்க வெளிவந்த "கம்ப இராமாயணம்" நூலின் முன்னுரையில் மூல நூலான வால்மீகி இராமாயணத்தையும், அதை பலரும் பலவிதமாக தத்தமது மனம்போன போக்கில் யார் யாரெல்லாம், எப்படியெப்படி எல்லாம் மாற்றி எழுதியிருக்கிறார்கள் என்பதையும் நமக்கு தெளிவுபட வெளியிட்டிருப்பதன் மூலமும் நாம் நிறையவே தெரிந்து கொள்ளலாம்.

காளிதாஸனாகட்டும், கம்பநாட்டானாகட்டும், துளசி தாஸனாகட்டும், வில்லிப்புத்தூரானாகட்டும், இவர்களெல்லாம், மிகச்சிறந்த கவிப்பேரரசர்கள் என்பதில் யாருக்குமே மாற்றுக் கருத்து இருக்க முடியாது. இவர்களுக்கு தாம் எழுதும் சுவடிகளில், தம் கதாநாயகர்களை 'தெய்வம்' என்று புகழ்வதில் பரிபூரண உரிமையுண்டு, அதையும் மறுப்பதற்கில்லை!. ஆனால் இக்கவிஞர்களுடைய கூற்றுக்களை, உண்மையான பிரமாண நூல்களான வியாஸ பாரதம், வால்மீகி இராமாயணம் போன்று அதையும் 'பிரமாணமாக' ஆக்கும் முயற்சியையும், ஆக்கிய முயற்சியையும்தான் நல்லோர் வெறுக்கிறார்கள், நல்லோர் சிந்திப்பாராக!,

## யாருக்கும் உரிமையில்லை!!!

காஞ்சியில் வாழ்ந்து பல அரும் சாதனைகள் பல புரிந்த காஞ்சிப் பெரியவர் தமது அருளுரையில் மேற்படி பூதூர் இராமாநுஜன் செய்தமாதிரியான அட்டூழியத் தைப் போல தம்மையும் செய்யத் தூண்டிய பலருக்கு அவர் சொன்ன பதிலைப் பாருங்கள்!

"என்னிடமே பல பேர் கேட்டிருக்கிறார்கள், "காலத்தை அநுஸரித்து சாஸ்திரத் தை ஏன் மாற்றக் கூடாது?" என்று. "ஸர்க்கார் சட்டங்களை மாற்றவில்லையா?" என்று ஆதாரம் காட்டுகிறார்கள். என்னையே ரொம்ப ஸ்தோத்திரம் பண்ணின ரிஷிகள் மாதிரிதான் இந்தக் காலத்தில் நீங்கள் இருக்கிறீர்கள். அதனால் நீங்கள் மனசு வைத்தால் சாஸ்திரங்களை இந்தக் காலத்துக்குத் தகுந்தாற் போல் மாற்றி விடலாம் "என்கிறார்கள், "நாங்கள் ஆசைப் பட்டது போல் மாற்றி விடலாம்" என்கிறார்கள். "நாங்கள் ஆசைப் படுகிற மாதிரி நீங்கள் சாஸ்திரத்தை மாற்றித் தாருங்கள்" என்பதையே இப்படி கௌரவமாகச் சொல்கிறார்கள்! ஸ்மிருதிகள்

அந்தந்த ஸ்மிருதிகர்த்தாவின் சொந்த அபிப்ராயம்தான் என்றால் இவர்கள் நினைப்பதிலும் கேட்பதிலும் தப்பு இல்லை,

ஆனால் ரொம்பப் பேருக்கு - தர்ம சாஸ்திரங்களிடம் மதிப்புணர்ச்சி உள்ளவர் களுக்குக்கூட - என்ன தெரியவில்லையென்றால், இந்த ஸ்மிருதிகள் அவற்றைச் செய்தவர்களின் சொந்த அபிப்ராயமே இல்லை. ஏற்கெனவே வேதங்களில் சொல்லி யிருந்தவற்றையேதான் அவர்கள் தொகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். வேத வாக்கை ஒருகாலும் எந்த சந்தர்பத்திலும் மாற்றக் கூடாதாகையால், இந்த தர்ம சாஸ்திர விதிகளையும் மாற்றுவதற்கே இல்லைதான். சாஸ்திரப்படியே நீங்கள் நடக்கும்படிப் பண்ண எனக்கு சக்தியோ, யோக்யதையோ இல்லாமல் இருக்கலாம். ஆனாலும் அதை மாற்றுவது நிச்சயமாக என் காரியமில்லை. என்னை இங்கே (மடத்தில்) உட்கார்த்தி வைத்திருப்பது வேத தர்மங்களை ஜனங்கள் பரிபாலனம் பண்ணும் படியாகச் செய்வதற்குத்தான். ஆசார்யாள் ஆக்ஞை அது தான். அதனால் இந்தக் காலத்தின் ஸௌகரியத்துக்கு, புதுக் கொள்கைக்கும் போக்குகளுக்கும் ஸாதகமாக சாஸ்திரத்தை மாற்றிக் கொடுப்பதற்கு எனக்கு அதிகாரம் இல்லை."

இந்த கண்ணியமும், கடமையும், எதிர்கால சந்ததியினர் பற்றிய பொறுப்பு ணர்ச்சியும் வைணவர்களிடமும், அவர்கள் கொண்டாடும் பூதூர் இராமாநுஜன் மாதிரியானவர்களிடமும் நாம் எதிர் பார்க்க முடியுமா?

இப்படி நம் சைவத்திற்கெதிராகவும், சிவபெருமானையும், சிவனடியார்க ளையும் மிகவும் கீழ்த்தரமாக விமர்சித்து வந்து கொண்டிருப்பவர்களும், நெற்றி யிலே யோனிக்குறி கொண்டும், புஜங்களில் சங்கு சக்கரத்தை அக்நியில் காய்ச்சி இட்டுக்கொண்டிருக்கிற "வைணவர்களை" காண்பதும், வணங்குவதும், தீண்டுவதும், அவரோடு பேசுவதும், அவரோடு இருக்க நேர்தலும், அவர்களது கையால் அன்ன ஆகாரம், தண்ணீர் முதலிய பெறுதலும், இவர்களைக்கொண்டு வைதிக கருமங்களை செய்து கொள்வதும், அவ்விதமான வைதிகம் நடக்கும் இடத்தில் இருத்தலும், கூடவே கூடாது என்பதை ஸ்ம்ருதியாதிகள் எந்த அளவு எச்சரிக்கை செய்கிறது பாருங்கள்!

01. **விஷ்ணு ஸ்ம்ருதி**

"யதாச்மசாந கங்காஷ்டமார்ஹம் ஸர்வகர்மஸு ।
சங்கசக்ராத்யங்கநம் சந்ருத்யகீதாதிகம் ததா ॥

**பொருள்:** சுடுகாட்டிலுள்ள காஷ்டமானது எல்லா கர்மங்களிலும் எப்படி விலக்காயிற்றோ, அவ்விதமே சங்கு சக்கர முத்திரைகளை தரிப்பவரும் விலக்கப் படுபவரே!.

02. **சைவபுராண வாயு சம்ஹிதை:**

"ப்ராஹ்மனோயதிமோஹாதவா தாபயேதவஹ்றி முத்ரயா|
நகர்மார்ஹோம வேதத்ரஸஸை பாஷண்ட ஸம்ஜஞித ॥

**பொருள்:** எந்தப் பிராம்மணன் அறிவின்மையால் சங்கு சக்ர முதலிய முத்திரைகளைத் தரித்துக் கொள்வானோ அந்தப் பிராம்மணன் கர்மங்களுக்கு யோக்கியனாக மாட்டான்.

03. **ஸௌர புராணம்:**

ப்ராஹ்மனோயதிமோஹோ தாரயேந் தப்தமுத்ரிகா: ।
தஸ்யதர்ஸன மாத்ரேண குர்யாத் ஸூர்யாவலோசநம் ॥

**பொருள்:** அக்நியால் சுடப்பட்ட சங்கு சக்கர தப்த முத்திரையுள்ள பிராம்மணனைப் பார்த்தால், அவனைப் பார்த்த பாவம் தீரும் பொருட்டு உடனேயே சூரிய தரிசனம் பண்ண வேண்டும்.

04. **வெற்றி புராணம்:**

பூர்வஜஸ்து தனும் தக்த்வா சங்க சக்ராதிபி: ப்ருதத் ।
ந ஸத்யநிஷ்க்ருதிர் வாபி ஸ்நாண தான வ்ரதாபி:।|

**பொருள்:** எவன் சங்க சக்ர தப்த முத்திரைகளைக் கொண்டிருக்கிறானோ, அவனுக்கு ஸ்நாணம், தானம், விரதம் முதலிய சத்கருமங்களினால் பரிகாரம் உண்டாவதில்லை.

05. **ப்ருஹத் நாரதீயம்:**

"யஸ்து ஸந்தப்த கங்காதி லிங்கசிந்ஹ தநுர்நர:|
றூஸஸர் வயாதநாபோகி சண்டாள கோடி ஜந்மபி:|"

"யோத்விஜஸ் தப்தசங்காதி லிங்காங்கித தநுர்நர:|
ஸம்பாஷ்ய ரௌரவம்யாதி யாவதா தந்த்ர தாரகம்"

"ஜபேச்ச பௌருஷம் ஸூக்தமந்யதா ரௌரவம் வ்ரஜேத்|"

**பொருள்:** அக்நியால் இடப்படும் சங்கு சக்கர தப்த முத்திரைகளை தரித்தால் அது சண்டாளப் பிறப்பையே தரும்; இக்குறி கொண்டவரோடு பேசினாலும் நரகமே கிட்டும்; இக்குறி உடையவனைக் கண்டால், கண்ட தோஷத்திற்கு நிவாரணமாக சூரிய ஜபமும், புருஷ சூக்தமும் சொல்ல வேண்டும்.

## பாஷியக்காரர்களின் கைவண்ணம்!

இவ்விதம் புராணங்களும், இதிஹாசங்களும் விபூதியைத்தவிர்த்து மற்றவற்றை கண்டனம் செய்திருந்தாலும், அவை பாமரர்களிடம் எடுபடாமல் போவதற்கு

பண்டைய புராணங்களையும், இதிஹாசங்க ளையும், அவற்றில் உள்ள தோத்திரங்க ளையும் பாஷியம் என்ற பெயரில் தமது சொந்த சரக்கையும், பூர்வத்தில் இல்லாதவற்றை ஜெய்ப்பூரில் இதை சேர்த்து சொல்வது வழக்கம், அரேபியாவில் இதை சேர்த்து சொல்வது வழக்கம் என்று அவ்வூர்களில் பன்னெடுங்காலம் வாழ்ந்து புராண வசனங்களை மொழிபெயர்ப்பதில் தம் வாழ்நாளை கழித்தவர்கள் போல் பூர்வத்தில் சொல்லப்படாததை உத்தரபாடத்தில் இருப்பதாக சேர்த்துவிட்டதினாலும் நம் சைவத்தின் மஹிமை பரவாமல் போனது.

இப்படிச் சமூகத்தில் ஏற்பட்ட மாறுதல் ஒருபுறமும், நம் முன்னோர் அளித்த இதிஹாச, புராணங்களுக்குப் "பாஷியம்" எழுதுகிறேன் பேர்வழி என்று தன் சொந்தக் கருத்தை நுழைக்கும் விபரீதமும் நடக்க ஆரம்பித்தது.

"அண்ணா" என்பவர் உரையெழுதிய **"புருஷ ஸூக்தம்"** என்னும் நூலின் முகவுரையில், "அத்யப்ய: ஸம்பூத: - என்று ஆரம்பிக்கும் இரண்டாவது அநுவாஹத் துடனும், "ஸஹஸ்ர சீர்ஷம் தேவம்" என்று ஆரம்பிக்கும் நாராயண ஸூக்தத்துட னும் 'விஷ்ணோர் நுகம' எனும் விஷ்ணு ஸூக்த முதல் மந்திரத்துடன் சேர்த்தே புருஷ ஸூக்தத்தினை பாராயணம் செய்வது தென்னாட்டில் சம்பிரதாயம் இருப்ப தால் அவ்வாறே இந்நூலில் அச்சிடப்படுகிறது." - என்று அவர் குறிப்பிட்டுள்ளார், அப்படியானால் வடக்கே?!

எங்குமில்லாத அந்த சம்பிரதாயத்தை ஏற்படுத்தியது யார்? அநுசரிக்கப்பட்டு வந்த அந்த சம்பிரதாயமானது பூர்வத்தில் இல்லை என்பது தெரிந்தால், அதை "இப்பகுதியானது மூலத்தில் இல்லையாதலால், அதை இத்துடன் சேர்க்கவில்லை" என்று குறிப்பிட வேண்டியதுதானே? வடக்கே சம்பிரதாயம் இல்லை என்று சொல்லத் தெரிந்தவர்களுக்கு, தான் உரை எழுதும் ஆன்மீக நூல்களில் பூர்வத்தில் இருப்பதை மட்டும் அப்படியே மொழிபெயர்த்து எழுதுவதில் என்ன நஷ்டம் வந்து விடப் போகிறது?

அரசாங்கத்தில் 'பத்திரப் பதிவு துறை' யின் சட்டப்படி மூலப்பத்திரத்தில் இல்லாத விஷயங்களை புதிதாக பதியும் பத்திரங்களில் "சேர்த்தால்" அப்பத்திரம் செல்லாது!. சம்பிரதாயம் என்கிற மாதிரியான புரட்டு வேலைகளும் நடக்காது. ஆனால் புராண, இதிஹாச, ஸ்மிருதியாதிகளில்? வடக்கே சம்பிரதாயம் இருக்கிறது, மேற்கே சம்பிரதாயம் இருக்கிறது, கொலம்பியாவில் சம்பிரதாயம் இருக்கிறது என்று மூலத்தை மாற்றி, புதுப்புது தகவல்களை இடைச்செருகல்களாக நுழைத்து..... ஐயா!... பாஷியம் எழுதிப்பிழைக்கும் பெரியோர்களே... தயவு செய்து இனி இம்மாதிரி உள் நுழைப்பு வேலையில் தயவு செய்து யாரும் ஈடுபடாதீர்கள்.

நல்லதையும், உள்ளதை உள்ளபடியே செய்வதும் நல்லோர் செயலாகும். 'எல்லோரும் செய்கிறார்கள். நானும் அதைப் பின்பற்றுகின்றேன்!." என்று செய்வது என்ன நியாயம்?...

ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் இருந்திருந்தால் இம்மாதிரியான மாற்றத்தினை ஏற்கமாட்டார் . புருஷன் என்றால் ஸ்ரீ பரமேச்வரரை குறிப்பதாகவும், புருஷ சூக்தம் என்னும் அச்சுலோகம் ஸ்ரீ பரமேச்வரருக்கு உண்டானது என்பதும் அச்சுலோகமே சொல்லும்! ,

'புருஷ ஸுக்தம்' என்பது ரிக்வேதத்தில் பத்தாவது பாகத்தில், தொன்னூறா வது ஸுக்தமாக பதினாறு மந்திரங்களுடன் இருப்பது, இச்சூக்தத்தில் வரும் "ஆதித்ய வர்ணம்" என்பது சிவபெருமானுக்குரியது. விஷ்ணுவுக்குண்டானது அல்ல!!, நாராய ணனுக்கு உண்டான நாமங்கள் எதுவும் அந்த புருஷ சூக்தத்தில் இல்லை, "நாந்ய: பந்தா அயநாயவித்யதே|" எனும் வரிகள், சுருதியின் வழிநூலாய் விளங்கும் உபநிஷத்துக்களில் ஒன்றான **கைவல்யோபநிஷத்தில்**, "நாந்ய: பந்தாவிமுக்தயே" என்று சிவனைக் குறிப்பதற்காக வருகிறது. தவிர புருஷன் என்றால் சிவபெருமான் தான் என வரும் உபநிஷத வாக்கியங்கள்:

"தமேகம் புருஷம் ருத்ரம்",
"சிவ: புருஷ ஈசானோ",
"தத்புருஷாய வித்மஹே"

**நாரதபரிவ்ராஜகத்தில்**, "புருஷர்களில் உத்தமமானவர்களுக்கும் உத்தமன், சிறந்தவன் ஸ்ரீ பரமேச்வரர்" எனும் பொருள் தரும் **"புருஷோத்தமோத்தமம் ஸர் வேச்ஹம்"** எனும் வசனமுள்ளது. புருஷோத்தமன் என்கிற ஹரியினது மறு பெயரைக் கொண்டு ஏதோ புருஷன் என்றாலும் அப்புருஷனுக்கு உத்தமன் என்றா லும் ஹரி என்று கருதவேண்டியது இல்லை!!. மனிதர்களில் பிறந்த புருஷர்களுள் உத்தமமானவன் என்பதே அப்புருஷோத்தமன் என்பதற்குப் பொருள்!.

இவை தவிர, விஷ்ணு புராணத்தில், 1வது அம்ஸம், 2வது அத்தியாயத்தில் (மைத்ரேயருக்கு பராசரர் சொன்னதாக வரும் பகுதி) "பிரதான சத்தவாச்சியமான மூலப்பிரகிருதி ஒன்றுமே, சமஷ்டி புருஷ ரூபமாக இருந்தது" என்றும், "ஸ்ரீ விஷ்ணுவினுடைய சரீரமான பிரகிருதியானது மகத்துவத்தை மூடிக்கொண்டது" என்றும் வரும் வரிகள் சிவனை புருஷன் என்பது உறுதிப் படுத்துகிறது.!. இவ்விதம் மூலப்பிரகிருதியாய், மாயா ரூபிணியாய் அந்த விஷ்ணு இருப்பதினால்தானே, அவரை ஒரு யானை தன் ஆபத்துக் காலத்தில் "ஆதிமூலம்" என்று அழைத்தது?! ,

தவிர, சிவ காயத்திரியில் வரும் "தத்புருஷாய என்பதைப்போல 'விஷ்ணு காயத்திரியில்' கிடையாது!. இதைத்தவிர மற்றைய காரணங்களாலும் அப்புருஷ ஸூக்தம் என்பது சிவபெருமானுக்கு என்பது தெரிந்தும், அது விஷ்ணுவுக்குண்டான தாக பாஷியம் செய்வது ஏனோ?! அப் **புருஷ ஸுத்தத்திற்கு ரிஷி: நாராயணன் தேவதை: சிவன்** என்பது மூதறிஞர்களின் கருத்து.

மிகுந்த சைவப்பற்றும், விஷ்ணுவுக்குண்டான பரத்துவ கண்டனமும் செய்த ஸ்ரீ அப்பைய தீட்சிதரும் தமது "சிவதத்வ விவேகம்" எனும் நூலில் இதுகுறித்து, தெளிவாக சொல்லியிருக்கிறார். இவ்விவரத்தைவிட மேலும் பல விஷயங்கள்

தெரிந்த பாஷியம் எழுதும் புருஷர்கள்; மூலத்தில் இல்லாததை, "இவர்கள் சேர்த்து சொல்வது வழக்கம். அவர்கள் சொல்வது வழக்கம், இந்த ஊரில் இதுதான் வழக்கம், அந்த ஊரில் இதுதான் வழக்கம்" என்று தன் 'தனிப்பட்ட' விருப்பத்தையோ அல்லது முன்பு பாஷியம் செய்தவர்களுடைய விருப்பத்தையோ, மேலும் வலுவடையச் செய்ய இம்மாதிரி காரியத்தில் ஈடுபடலாமா?. தனக்கு முன்பாக, இம்மாதிரியான கடவுள் சம்பந்தப்பட்ட இதிஹாச, புராண, ஸ்மிருதியாதிகளுக்கும், உபநிஷதங்களுக் கும், சுலோகங்களுக்கும் எழுதப்பட்ட பாஷியங்கள் சுருதிக்கு மாறான கருத்தைப் பிரதிபலிப்பதாக இருந்தால் அதை படிப்போருக்குத் தெளிவுபடுத்தி, விவரித்து "இது மூலத்தில் இருப்பது" என்றும், "இது அதற்குப் பொருள்" என்றும் சொல்லி, பிறகு தன்னுடைய பாண்டித்தியத்தை தனியே காண்பிக்கலாம். (காண்பிக்காமலேகூட போயிருக்கலாம்.) பிறகு படிப்பவன், தான் படிக்கும் நூலின் தரத்தை அவனது அநுபவத்தினாலும், அதனால் ஏற்பட்ட அறிவினாலும் "தெரிந்து" கொண்டுவிட்டுப் போகிறான் !? இம்மாதிரியான பாஷியக்காரர்களால் எளியோர் யாவருமே, "மூலத்தை" அறியமுடியாமல் போய்விடுவதுதான் துரதிருஷ்டம்!

ஸ்ரீ கண்ட, பாஷியம் என்று மிகவும் பிரசித்தி பெற்ற பிர்ம்மசூத்திரத்தின் உரை இன்று முழுவதும் கிடைக்காமல் போனதற்கு காரணத்தை அறியும் ஆராய்ச்சியில் இரங்கினால் நமக்கு அதிர்ச்சியே மிஞ்சும்!,

மிகப்பெரிய அளவில், இம்மாதிரியான "வைணவப் புரட்டை" வளராமல் இருக்கச் செய்ய பாம்பன் ஸ்வாமிகள் தன்னுடைய எல்லா நூல்களிலும், விளக்கியிருக்கிறார் என்றாலும், அவருடைய "சைவ சமய சரபம்" மற்றும் "நாலா யிரப் பிரபந்த விசாரம்" எனும் இரு நூல்கள் மூலம் வைணவக் கண்டனம் செய்து, உபநிஷத், இதிஹாசங்கள், ஸ்மிருதியாதிகள் என்று மூல நூல்களில் இருந்து விளக்கி, எளியோரும் பயனுறும் வகையில் அரும்பணி செய்துள்ளார். இத்தனை க்கும் "துறவு" வாழ்க்கையை மேற்கொண்டவர் தான் இந்த பாம்பன் ஸ்வாமிகள். யார் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? என்று அதையும் "துறந்து" போயிருக்கலாம். தான் சந்நியாஸியானாலும், தனக்கும் அவதூறுகளை தட்டிக்கேட்கவும், அவற்றை சட்டிக்காட்டித் திருத்தவும் "கடமை" (கர்மம்) இருக்கிறது என்று வாழ்ந்தவர் அவர். (இல்லாவிட்டால் ஸ்ரீ பீஷ்மரைப் போல அம்புப்படுக்கை "வேதனையை" அல்லவா அவர் அனுபவிக்க நேரிட்டிருக்கும்?!)

மூலத்தில் உள்ளவற்றை உள்ளவாறு அப்படியே "பாஷ்யம்" என்ற பெயரில் மொழி பெயர்த்தால் என்ன குடி முழுகிவிடும்?.... "நான் நிறைய பேருடைய உரைகளைப் படித்திருக்கின்றேன் ; அவர்களுடையதையும் பின்பற்றுவேன். ." என்று தன் பாண்டித்தியத்தினைக் காண்பிக்க "இறை விஷயம்" தானா கிடைத்தது?. இவர்களைத் தண்டிப்பதற்கு திருநீற்றுச் சோழ அரசன் இல்லை என்கின்ற தைரியமோ என்னவோ?!,

சாஸ்த்ர ரத்னாகர ப்ரம்மயீ தேதியூர் ஸூப்ரமண்ய சாஸ்திரிகள்" என்பவர் தன்னுடைய "ஆதித்ய ஹ்ருதயம்" என்னும் நூலில் ஸ்ரீ மஹாதேவருடைய அடிமையான ஸ்ரீ அகத்திய முனிவர் இராமனுக்கு *உபதேசித்த' சுலோகத்தில்

வருகின்ற “ஆதித்ய ஹ்ருதம் புண்யம் சர்வசத்ரு விநாசனம், ஜயாவஹம் ஜபேத்நித்யம் அக்ஷயம் பரமம் சிவம்” என வரும் வரிக்கு இவர் செய்த பாஷியத் தைப் பாருங்கள்! (வைணவ பண்டிதர்களோ, இவ்வாதித்ய ஹிருதய பகுதியை ப்ரக்ஷிப்தம் (பிற்சேர்க்கை) என்பதுண்டு!)

“ஹே! ராமனே!! அந்த வேதத்தைப் போல் நித்தியமாகவும் மிகவும் கோபியமாகவும் உள்ள உபாயத்தைக் கேள். புண்யத்தினை விருத்திச் செய்கிறதாயும், சமஸ்த சத்ருக்களையும் நசிக்கச் செய்கிறதாயும் தன் கட்சிக்கு ஒருவிதமான குறைவுமின்றி ஜெயத்தைக் கொடுக்கக் கூடியதாயும், மோக்ஷம் என்ற மஹாபலனை, மஹாபாபத்தை செய்தவர்களைக் கூட பரிசுத்தம் செய்யும் விஷயத்தில் முதன்மையான பாவனமாயும் உள்ள ஆதித்த ஹ்ருதயம்” என்று எழுதி இருக்கின்றார். உண்மையாக அவ்வரிகளுக்கு என்ன் அர்த்தம்? “சிவம்” என்று இருப்பதற்கு ஒரு அறிகுறியுமில்லாது பாஷியம் எழுதியவருக்கு என்ன நிர்பந்தமோ?

(புண்யத்தினை தரக்கூடியதும், அனைத்து எதிரிகளையும் அழிப்பதுமாயும், ஜபிப்பவருக்கு ஜயத்தினை தருவதும், மோக்ஷமென்னும் மஹாபலனை தருகின்ற, மஹா பாவத்தினை செய்தவனையும் சிவம் என்று சொன்னவுடனே பரிசுத்தம் செய்யும் சிவனைப் போன்ற ஆதித்ய ஹ்ருதயம் .. .. என்று இருக்கவேண்டும்!) நல்லவேளை... ஶ்ரீ ருத்ரத்தில் கூட சில இடங்களில் விஷ்ணு என்கிற வார்த்தைகள் இருப்பதை வைத்து, இவர்களைப் போன்றோர் அம்மந்திரமும் விஷ்ணுவுக்கு உண்டானது என்கிற போக்கில் பாஷியம் எழுதாமல் விட்டார்களே?!. இந்த ‘ஆதித்ய ஹ்ருதயம்’: கண்டிப்பாக விஷ்ணுவுக்குண்டானது கிடையாது. அவ்விதம் அம்மந்திரம் விஷ்ணுவுக்குண்டானது என்றால் அது "அகத்தியர்" சொன்னதாக இராது!,

பன்னிரு ஆதித்தியர்களில் ஒருவன்தானே இந்த விஷ்ணு? ஆதலால் அது விஷ்ணுவுக்குண்டானது என்பார்கள். விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கும் மூத்ததான ‘ஶ்ரீ சிவ ஸஹஸ்ரநாமத்தில்' வரும் அதிதீப்தர், அர்யமா, உஷங்கு, கபஸ்தி, த்வாதஸா, தேஜஸ், நபஸ்தலர் முதலிய பல சிவநாமாக்களின் பொருளை உணர்ந்தால் இந்த சந்தேகம் வராது. தவிர, சூர்ய மத்யவர்த்தீ புருஷன் சிவபெருமான்தான் என்பதைச் சொல்லும் ஸ்மிருதி வாக்கியம் உண்டே!. (ஸௌரமண்டல மத்யஸ்தம் ஸாம்பம் ஸம்ஸார பேஷஜம்| நீலக்ரீவம் விரூபாக்ஷம் நமாமி சிவம் அவ்யயம்||)

"யயேஷாந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:" என்கிற **சாந்தோக்யோபநிஷத்தும்**,
'ஸூர்யோந்தராதித்யே ஹிரண்மய: புருஷ”: எனும் **நரசிம்ஹாபிநியுபநிஷத்தும்**,
'ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய ---அம்பிகாபதாய -- பசுபதயே நமோநம.” என்னும் **நாராயணோபநிஷத்தும்**,
'ஹிரண்யவர்ணம் ஹிரண்யரூபம் -- விரூபாட்சம்' என்னும் **ப்ருஹத்தாரண்யோபநிஷத்தும்** சிவபெருமானைக் குறிப்பதிலிருந்து அப்புருஷ சூக்தம் யாருக்கு என்பது தெளிவாகும்.

அச்சுதன் பிரம னாதி யந்நிய தேவர் தம்மை .
யிச்சகம் வாழ்வோர் பூசையியற்றிடி னதனையன்பு
மச்சமுங் கொண்டத் தேவரரனடிக் குய்ப்பாரீது
பொச்சமில் சுருதிகைகள் பொருந்திடா னவன்றான்காணே

- எனும் செய்யுளினாலும், 'ஸ்தோமம் வோ சத்ய ருத்ராய சிவஸே| க்ஷயதவீராய நமஸாதிதிஷ்டந ஏபிச் சிவஸ்வவாம் ஏவயாவபி:| தவஸ்ஸிஷக்தி மருதோ நிகாமாபி: எனும் **ருக் வேத** வாக்கியத்தினாலும், 'ஆகாசாத் பதிதம் தோயம் யதாகச்சதிசாகரம் ஸர்வதேவ நமஸ்காரம் சங்கரம் ப்ரதிகச்சதி' என்ற **ஸ்மிருதி** வசனமும் யார் எத்தேவரை வணங்கினாலும் அத்தேவர் அவ்வணக்கத்தைச் சிவபிரானுக்கே அர்ப்பணம் செய்துவிடுவர் என்று சொல்லப்பட்டிருப்பதால் இப்புருஷ சூக்தத்தை யாருக்கு உரியதாக நினைத்து, ஜபிக்கிறார்களோ, அத்தேவர் அவர்களுடைய அச் ஜெபத்தையும், அவர்களுடைய நமஸ்காரத்தையும் ஸ்ரீ பரமேச்வரருக்கு அர்ப்பணம் செய்து விடுவதால் நமக்கு ஒரு வருத்தமும் இல்லையாயினும், இடைத்தரகர் இல்லாது உடையவரையே சந்தித்து நமது நமஸ்காரத்தை செய்வது சிறந்தது என்பதற்காகவும், நேரடி மொழி பெயர்ப்பு மிகவும் அவசியம் என்பதற்காகவும், நாம் இதைத் தெரியப்படுத்துகிறோம்.

ஏற்கனவே இருந்தவற்றுக்கு பொருளுரை எழுதும்போதே இவ்விதமான பிழைகளை செய்தது ஒருபுறமும், ஏற்கனவே இருந்த புராண - இதிஹாச நூல்களில் வைணவத்திற்கு எதிரான வார்த்தைகளோ, வரிகளோ இருந்தால் அதை நீக்கி, அதற்கீடாக மாற்று வார்த்தைகளை தமக்கு சாதகமாக நிரப்பிய வேலைகளும் நடந்தன. இன்று நம் கையில் உள்ள பல புராதானமான நூல்கள் யாவும், அதற்கு முந்தய நூல்களில் இருந்து எடுத்தாளப்பட்டது என்றும், அதற்கு இன்னார் பாஷியம் எழுதினார் என்றும் இருக்குமே தவிர்த்து, அவற்றை ஒப்பிட்டுப் பார்க்க அந்த மூல நூல் நம்மிடம் கிடையாது. இந்த தைரியத்தில்தான் திருமால் கால் அலம்பின ஜலம் சிவன் தலையில் பட்டு அவன் புனிதன் ஆனான் என்றும், இச்சிவ பெருமான் தமக்கு நெடும்காலம் பிள்ளை இல்லை என்று ஏங்கித் தவித்து, உமையுடன் பலகாலம் புணர்ந்து முருகனைப் பெற்றான் என்கிற மாதிரியெல்லாம் கிறுக்க ஆரம்பித்து விட்டனர். கேட்டால், ஹவ்ருதாநோபநிஷத் என்றும், பிரக்ஜம்போபநிஷத் என்றும் மூலநூல் உளதென்றும், அதையொட்டியே பாஷியம் எழுதினார்கள் என்றும் வாய் கூசாமல் புளுகுவார்கள்.

பாமர ஏழைகளும் "இருக்கும் இருக்கும்" என்று நம்பி இவர்களது மாய்மாலத்திற்கு செவிசாய்த்தோராய் இருக்கின்றனர். மூலத்தில் இல்லாததை உத்ரபாடத்தில் இவ்விதம் நிறைய மாறுதலும், சிவத்துவேஷமும் அதிகமாக செய்தது வைணவர்களே!

சிவபெருமானை விதந்து கூறும் உபநிஷதங்கள் ஈசாவாசியம், கேநம், கடம், பிரசிநம், முண்டகம், மாண்டூக்யம், தைத்ரீயம், ஐதரேயம், சாந்தோக்யம், பிருஹதாரண்யம், சுவேதாச்வரம், பிருஹஜ்ஜாபாலம், ஜாபாலம், சரபம், காலாக்நிருத்ரம்,

கைவல்யம், நிருசிம்மோத்திரதாபிநி, மைத்திராயணம், கௌஷீதகிப்பிராஹ்மநம், அதர்வசிரசு, அதர்வசிகை, சிவசங்கற்பம் முதலிய பலவுள.

இதுபோன்றே நாராயணனை விதந்துகூறும் உபநிஷதங்கள் சிலவுள. (நாராயணம், திரிபாத விபூதி நாராயணம், சுபாலம் போன்றவை) ஏகான்மாவை உற்றுக்கூறும் உபநிஷதங்களும் சிலவுள. (சர்வசாரம், நிராலம்பம், தேஜோவிந்து முதலியவை.) உள்ள நிலைமை இவ்வாறு இருக்க, இவற்றுக்கு பாஷியம் செய்தோர் அவரவர் தத்தமது தெய்வத்திற்கு என்று பரத்துவம் சாதிக்கப் புறப்பட்டனர்.

வியாஸர் அருளிய பிரஹ்மசூத்திரம் எனப்படும் உத்திர மீமாம்சைக்கு பாஷியம் செய்தோர் ஏகான்மவாத குரவர்கள் சர்வசார முதலிய உபழிடதங்களை யும், வைஷ்ணவ குரவர்கள் நாராயணம் முதலிய உபநிஷதங்களையும் பிரமாணமா கக் கொண்டு உரை செய்யாமல், சைவர்களுக்குண்டான ஈச கேநம் முதல் சுவேதாச் வரம் இறுதியாயுள்ள உபநிஷதங்களையே முழுமையும் பிரமாணமாகக் கொண்டு வெளியிட்டிருக்கிறார்கள். வேடிக்கை என்னவென்றால், தமது சமயம் சார்ந்த வெளித்தோற்றத்திலும் வேறுபட்டுத் தோன்றும் மத்வர்களும் வைணவர்களைப் போலவே நாராயணர்க்கே பரத்துவம் சாதிப்பதுதான்!!.

இவ்விதமான பண்டிதர்களின் கைவண்ணத்தை கண்டிக்கும் விதமாகவும், சைவத்தின் வீரியத்தை விளக்கவும் ஸ்ரீ காசிவாசி செந்திநாதையர் அவர்கள் தமது 'சைவ வேதாந்தம்' மற்றும் 'பிரம்மசூத்திரம் -சைவபாடியம்' என்னும் தமது நூலின் வாயிலாக தக்க சான்றுகளின் வாயிலாக நிலைநாட்டி 'கண்டனம்' செய்திருக்கிறார்.

இவ்விதமெல்லாம் தாம் வகுத்த நான்கு வேதங்களுக்கும், புராணங்களுக்கும் பாஷியக்காரர்களால் துர்கதி ஏற்படும் என்று பயந்த ஸ்ரீ வேதவியாஸர், தமது மஹா பாரதத்தில், 'இதிகாச புராணம் கொண்டு வேதத்திற்கு பொருள் கொள்ளவேண்டும்; அற்ப புத்தியுள்ளவர்கள், அறிவுள்ளவர்கள், இதிஹாச புராணங்களை நாடாது தமக்கு நேர்ந்தவாறு பொருள் செய்பவனைக் கண்டால் வேதமானது, 'இவன் தன்னைக் கொன்று போடுவானோ?!" என்று பயப்படுகிறது!' என்று சொல்லியிருக்கிறார். (இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்|, பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரஹரிஷ்யதி||) ஆகவே 'பாஷியம்' செய்து பிழைக்கும் கூட்டத்தி னர் திருந்தி வாழ்வாராக.!!

## மூவருக்கும் மேற்பட்ட நான்காவது தெய்வம் ஸ்ரீ பரமேச்வரரே!!

**நாரதபரிவ்ராஜகம்:**

"ப்ரபஞ்சோபசமம் சிவம் சாந்தம் அத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே" என்றும்;

**மாண்டூக்யம்:**

“அமாத்ரஸ் சதுர்த்தோ வ்யவஹார்ய: ப்ரபஞ்சோப சமச் சிவோத்வைத ஏவமோங்கார” என்றும்;

**அதர்வசிகா:**

“...... சர்வமிதம் ப்ரம்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ....... காரணானாம் தாதா த்யாதா காரணேந்து ...... சம்புராகாச மத்யே ..... சிவ ஏகோ த்யேய சிவங்கரஸ் ஸர்வ மந்யந்............ சமாப்தர் வசிகா”

**பஸ்மஜாபாலோபநிஷத்:**

“அத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதீதம் ஏகமாஸாஸ்யம் பகவந்தம் சிவம்”

**பிரும்மவித்யோபநிஷத்;**

'த்ர்யக்ஷரஸ்யசிவஸ்யது" என்றும்,
'அகாரஸ்யசரீரந்துவ்யாக்யாதம் ப்ரஹ்மவாதிபி:|' என்றும்,
"ராஷ்ணுச்சபகவாந்தேவ உகார: பரிகீர் த்தித:|' என்றும்,
"ஈச்வர: பரமோதேவோமகார: பரிகீர்த்தித:|” என்றும்,

'ஸதாசிவோம்' என்று **தைத்ரீயம்** முடிவாய் கூறுவதிலிருந்தும், ப்ரஹ்மா, விஷ்ணு, உருத்திரன் என்கிற மூம்மூர்த்திகளையும் கடந்து நான்காவதாய் மேம்பட்டு விளங்கும் தெய்வம் "சிவபெருமான்" ஒருவரே என்று அறியலாம்.

ஸ்ரீ விலட்சணானந்த சுவாமிகள் என்பவர், 18.11.1928 அன்று பொன்னேரி எனும் ஊரில் எந்தப் பிரமாணமும் இல்லாது, “பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் எனுமிவர்க்கு மேலாய் விளங்கும் அந்நான்காவது தெய்வம் நம் பரவாசுதேவனே!” என்று பிரசங்கம் செய்ததைக் கேட்ட நம் “சித்தாந்த பண்டித பூஷணம்” சிவஸ்ரீ ஆ. ஈஸ்வரமூர்த்திப் பிள்ளை அவர்கள் அப்பொய்ப் பிரசாரம் செய்தவரை 20.11.1928 அன்று நேரில் சந்தித்து, “நீர் செய்த அப்பிரசங்கத்திற்கு ஆதாரம் என்ன? நாலாவதாய் விஷ்ணு விளங்கும் செய்தியைச் சொன்ன புராணம் எது? அல்லது உபநிஷத், ஸ்மிருதியாதி வாக்கியமுண்டா? அதில், அந்நான்காவது தெய்வத்திற்கு வாசுதேவ நாமாதி பிரயோகம் உள்ளதா?” என்று பல்லோர் முன்னிலையில் கேட்க, விஷ்ணுவுக்கு பரத்துவம் சொல்லவந்த அந்த ஸ்ரீ விலட்சண சுவாமிகள், “உண்டு!” என்று பிரமாணம் காட்டாது, “அவ்விதம் வழங்கிவரும் சிவநாமங்களுக்கு பரவாசுதேவன் என்றே பொருள் கொள்ளவேண்டும்!” என்றாராம்!.

சதுர்த்தப் பொருளை நிர்ணயிக்கும் உபநிஷத் வாக்கியங்களில் சிவநாமம் வருதல் போன்று விஷ்ணுவின் நாமமும் வருதல் வேண்டும்!. அவ்விதம் வருகிற

வாக்கியம் எதிலுமே இல்லையே!? தவிர, சிவன் எனும் நாமம் தனக்கென ஒரு தெய்வம் கொண்டதாக எந்த பூர்வ நூலிலும் இல்லாததாலும், நீதி சாஸ்திரப்படியும், தர்க சாஸ்திரப் படியும் இரண்டாவது பொருளை நாலாவது பொருளாக ஏற்றிக்கூற எவ்வித நியாயமும் இல்லை, நல்லதும் இல்லை!!,

'நாராயணம் பரம்..ப்ரஹ்மம்'
" பகவந் ப்ரஹ்மா ஸர்வலோக பிதாமஹ'
'அட்சரம் பரமோ நாத: சப்த ப்ரஹ்மேதி கத்யதே'
'ஆதித்ய..... த்வமேவ ப்ரத்யட்சம் ப்ரஹ்மாஸி'
'அயமாத்மா ப்ரஹ்மா'
'அந்தம் ப்ரஹ்மா'
'நமஸ்தே வாயோ த்வமேவ ப்ரத்யட்சம் ப்ரஹ்மாஸி'
'ப்ராநோ ப்ரஹ்ம'
'விஞ்ஞானம் ப்ரஹ்ம'
'ஓம் ப்ரஞ்ஞானம் ப்ரஹ்ம'

முதலிய வேத வாக்கியத்தை சிலர், "அதே வேத வாக்கியம் நாராயணன், பிரும்மா, சூரியன், அன்னம், ஆத்மா, பூதம், காற்று, அறிவு முதலியவற்றையும்தான் "ப்ரும்மம்" என்கிறது! அதற்கென்ன அர்த்தம்?" என்பார்கள்.

"ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி" என்னும் ருக் வேத வாக்கியமும், "ஏகன் அநேகன்" எனும் மணிவாசகருடைய வாக்கிற்கு அர்த்தமும், உண்மையும் தெரிந்தவனுக்கு மேற்சொன்ன பல பொருள்களுடைய பிரும்மமாதல் என்னும் மயங்க வைத்தல் எனும் குற்றம் பற்றாது. தவிர வேதம் எப்பொருளை மிகுதியும் புகழ்கிறது? எப்பொருளில் உண்மை நிறைந்து காணப்படுகிறது? எப்பொருளை வேதம் நிந்திக்கிறது? எப்பொருளை வேதம் நிந்திக்கவில்லை? பரமாக அது எதை வரிசைப் படுத்தி உயர்வும், நிச்சயித்தும் காட்டிப் புகழும் வாக்கியங்களை எதற்கு சொல்லுகிறது? என்று விசாரித்தால், நான்கு வேதங்களிலும் நாதன் நாமமாக உள்ளவை நம் பரமேச்வரருடைய நாமம்தானே!?

ஸ்ரீ பரமேச்வரரை தாழ்வாக (அபகர்ஷம்) சொல்லப்படுகிற வைணவ புராணங்களிலோ, அல்லது பிற இடத்திலோ காணப்பட்டால், அவற்றுக்கு என்ன பொருள் கொள்வது என்பதை **பராசரபுராணம்**,

வைஷ்ணவேஷு புராணேஷு யோபஹர்ஷஸ்து த்ருச்யதே ।
ருத்ரஸ்யாசௌ ஹரஸ்யாஸ்ய விபூதிரேவ கேவலம் ॥

என்று வரையறை செய்து சொல்லுகிறது. இதற்குப் பொருள்: 'வைணவ புராணங்களிலும் (பிறவிடத்தும்) சிவன் எனப்படும் உருத்திரருக்கு தாழ்வு கற்பித்திருப்பதெல்லாம், கேவலம் துரிய சிவனாரது விபூதி மாத்திரமே!!.'

## பாகவதமா? பாக வதமா?
## எது பாகவதம்??

பதினெட்டுப் புராணங்களில் ஒன்றான "தேவிபாகவதம்" என்பது பதினெட்டாயிரம் கிரந்தம் உள்ளதாக வியாஸரால் இயற்றப்பட்டது. ஆனால் அப்பதினெட்டுப் புராணத்தில் ஒன்றாக "ஸ்ரீமத்பாகவதம்" என்பதும் ஒன்று என்பதாக வைணவர் சொல்வர். ஆழ்ந்த வடமொழிப் புலமையும், இறைபக்தியுமுடைய பண்டிதர்களான பெரியோரும், மொழியியல் வல்லுநர்களும் இந்த "ஸ்ரீமத் பாகவதத்தை" வியாஸர் இயற்றியதாக ஒப்புக்கொண்டதில்லை.

இராமாயண காலத்தில் சீதையின் தகப்பனார் ஜனகரிடம் ஞானோபதேசம் பெற்ற ஸுகர், தான் பெற்ற ஞானத்தை நாரதரிடம் பரீட்சித்துப்பார்த்து தெளிவையடைந்து, ஆகாயமார்கமாகச் சென்று சூர்ய மண்டலத்தில் கலந்து ஜீவன் முக்தனான விவரம் வால்மீகி இராமாயணத்தில் இருக்கிறது. இவ்விதம் எவ்வித பிரஸ்தாபமும் இல்லாது வாழ்விழந்த ஸாகர், வைவஸ்வத மந்வந்த்ர காலமான இராமாயண காலத்திற்குப் பிறகு ஒன்பது யுகங்கள் கழித்து, பாரதத்தில் மரணமடைந்ததாகச் சொல்லப்படும் பரீட்சித்து மன்னனுக்கு கிருஷ்ணனின் மஹிமை பேசும் "கிருஷ்ண பாகவதம்" சொன்னார் என்பதை பஞ்சேந்திரியங்கள் முழுதும் பழுதுபட்டவனும் ஏற்கமாட்டானே?! புத்தியுள்ளவன்?

பதினெட்டுப் புராணங்கள் என்றால் அவை என்னென்ன என்பதை முதலில் நீங்கள் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகிறது. அவை;

01. ப்ரம்ம புராணம் 02. பாத்ம புராணம் 03. விஷ்ணு புராணம் 04. சிவ (சைவ) புராணம் 05. தேவிபுராணம் 06. நாரத புராணம் 07. மார்கண்டேய புராணம் 08. அக்நி புராணம் 09. பவிஷ்யோத்ர புராணம், 10. பிரும்ம கைவர்த்தம் 11. லிங்க புராணம் 12. வராஹ புராணம் 13. ஸ்கந்த புராணம் 14. வாமண புராணம் 15. கூர்ம புராணம் 16. மச்ச புராணம் 17. கருட புராணம் 18. ப்ரும்மாண்ட புராணம் என்பவையே அவை. பதினெட்டுப் புராணத்தில் ஒன்றாக "ஸ்ரீமத் பாகவதம்" ஒன்று என்று யாராவது சொன்னால் நன்றாக வாய்விட்டு சிரித்துவிட்டு, பிறகு அவர்களுக்கும் இதை தெரியப்படுத்துங்கள்!.

## கிருஷ்ண பாகவதத்தின் யோக்யதாம்ஸம்!

விஷ்ணுவுக்கு மற்ற புராணங்கள் எதிலும் பரத்துவம் பகராதிருக்க, விஷ்ணுவுக்கு 'பரத்துவம்' ஸ்தாபிக்க பின்னர் ஏற்படுத்திய வியாஸப்ரோக்தமல்லாத இந்த 'ஸ்ரீமத் பாகவதம்" செய்யப்பட்டது. இதிலாவது அவர்கள் ஓர் ஒழுங்கை கடைபிடித்துச் செய்தார்களா? என்றால் இப்பொய் பாகவதத்தை முழுதும் படித்து அறிய வேண்டும் என்பதில்லை. இப்பாகவதத்தில் ஹரனை இழித்துக்கூறும் சில கதைகளை உண்மையென உண்டுபண்ணி, (ஆழ்வான்களின் 4000 பாடல்களிலும் இல்லாததும், மற்றைய பூர்வ புராணங்களில் இல்லாததையும்) புனைந்து "கதை" கட்டப்பட்டி

ருப்பதிலிருந்து அறியலாம். அவர்கள் அவர்களுக்கே செய்துகொண்ட தீங்கும் அப்பா கவதத்தில் இருக்கிறது.

**இப்பாகவதத்தில் 19வது அத்தியாயத்தில்**, ஸத்வகுண ஈச்வரன் யார் என்பதையறிய பிருகு முனிவர் முதலில் ஹரனை சோதிக்கச் சென்றபோது, கயிலையில் ஹரன் ஏழுநாட்கள் விடாமல் உமையைப் புணர்ந்து கொண்டிருந்ததை தம் ஞானக்கண்ணால் அவ்விருவரையும் கண்டு, ஸ்ரீ பரமேச்வரரது பகலிங்கம் அறுமாறு *சபித்துப் (அறுந்து விழுந்த அந்த பகலிங்கங்களைத்தான் நாம் இன்று சிவாலயத்தில் வணங்குகிறோமாம்!!) பின், பிரும்ம லோகம் சென்று அங்கு பிரம்மனது செருக்கு கண்டு அவனை இகழ்ந்து, புவியில் ப்ரும்மாவுக்கு ஆலயம் இல்லாதொழிய சபித்து, இறுதியாக வைகுண்டம் சென்று "ஸத்வகுணத்தை" சோதிக்க, விஷ்ணுவின் தலையை தம் காலால் உதைத்தபோது கோபிக்காமல், பிருகுவை "புகழ்ந்து" நின்றதால், அந்த ஹரியை சாத்விக குணமுள்ள ஈச்வரரென்று அறிந்ததாக ஒரு மஹோன்னதமான 'கதை" ஒன்று பிரசித்தமாக இருக்கிறது.

மிகவும் பரிதாபத்திற்குரிய கதை இது!. கடவுளுக்கு உயிர்கள் மரியாதை செய்ய வேண்டுமா? உயிர்களுக்கு கடவுள் மரியாதை செய்யவேண்டுமா? என்கிற விவஸ்தை இல்லாது, விவஸ்தை கெட்டவன் எழுதிய புரட்டு அது!, வெட்கம்! வெட்கம்!, விஷ்ணுவை "உதைத்து பிருகுவானவர் தன் பரத்துவ சந்தேகத்தைத் தீர்த்துக் கொண்டதினால், அவரது சந்தேகம் தீர்ந்ததேயன்றி - ஏனையோரது சந்தேகம் தீர்ந்ததா? ஒவ்வொருவரும் இனி உதைத்தேயல்லவா பார் த்தறிய வேண்டும்?!.

விஷ்ணுவுக்கு என்ன கிரஹக்கோளாறு இருந்து பிருகுவிடம் உதைபட்டா ரோ? அல்லது அவரிடம் உதைபடத்தக்க "சாபம்" வேறு எந்த ரிஷி கொடுத்ததோ?!.

கோபிகைகளாகிய பரதாரங்களை இச்சித்து மானபங்கப்படுத்தி திரிந்த கிருஷ்ணனின் சரித்திரமும் அப்பாகவதத்தில் 10வது ஸ்காந்தத்தில், மேற்படி பிருகு முனிவருக்கு சம்மந்தமில்லையென்றாலும், ஞானக்கண் உள்ள அம்முனிவர் அக்கண்ணால் அதை அறியலாமே? சோதனை செய்யக் கிளம்பினார் என்பது ஏற்கக் கூடியதாக இல்லையே? மாயையின் குணமாகிய சாத்விகத்தால் ஹரிக்கு 'பரத்துவம்' ஸ்தாபிக்க, இம்முனிவரது "காலுதையை"த் தேடிப்பிடித்த இவர்களது செய்கை, "என் மனைவி விபச்சாரியானாலும் ஆகட்டும், விவேகமுள்ள பிள்ளை பிறந்தால் சரி!" -என்பதற்கே ஒக்கும்!.

உண்மை வைபவங்களையன்றி பொய்க்கதைகளை சிருஷ்டித்துக் கூறுவதால் விளையும் ஆபாஸம் இது!, உண்மையான கதைகள் இப்படிப்பட்ட ஆபாஸத்திற்கு இடம் கொடாது!!,

பரத்துவ பரீட்சை செய்யவந்த அம்முனிவர், அவருடைய பரீட்சையில் நிலைக்காத விகிருதர் இருவருக்கும் 'சமமான' தண்டனை செய்ய வேண்டியதன்றி, ஏற்றமும் - தாழ்வுமாகச் செய்தல் கூடாது. பரத்துவமல்லாத சிவனைக்காட்டிலும்

சிறிதளவே அவமதிப்பை செய்த பிரம்மாவுக்கு . கோவிலை போக்கிவிட்டபடியே - பரத்துவமல்லாத பிரம்மாவைக்காட்டிலும் பெரிதளவு அவமரியாதை செய்த சிவனுக்கும் கோவிலில்லாது செய்திருக்க வேண்டும்!

இவ்விஷயத்தில், பிரும்மாவுக்கும் சிவனுக்கும் அந்த பிருகு முனிவர் இட்ட சாபம் மிகுந்த விசாரணைக்கு உரியது!, ஒருவன் மற்றொருவனுக்கு சாபமிடுகையில், எந்த விஷயமாய் சாபம் கொடுக்கப்படுகிறதோ அந்த விஷயத்தில் அச்சாபத்தை ஏற்போனைக்காட்டிலும், சாபமிட்டவன் கௌரவஸ்தனாய் இருத்தல் அவசியம். பிருகுவோ, சிவபெருமானை பரமாக 'உபாஸிக்கும்' ரிஷிக்கூட்டங்களில் ஒருவர் . தவிர விஷ்ணுவைப் போன்றே அவரும் ஓர் பசு. தன்னிலும் கீழானவர்களுக்கு *வரமோ' 'சாபமோ' தருதல் தகும். பிருகுவின் சரிதம் பேசும் பகுதிகள் அவரை 'சிவபெருமானுக்கு' சாபமிட்டு "பிழைத்தவராக" சொல்லவில்லை!.

விஷ்ணுவுக்கு 'பரத்துவம்' ஸ்தாபித்த அப்பிருகுவே விஷ்ணுவுக்கு மற்றெல்லா அநுக்ரஹமும் செய்தார் என்றல்லவா இதில் அர்த்தமேற்படுகிறது?. அற்பக்குற்றம் செய்தவனுக்கு கோவில்களும், பூஜைகளும் போய்விட சபித்தவர், அதிக குற்றம் செய்த சிவபெருமானுக்கு அவ்விதம் செய்யாத மர்மம் யாதோ?! பாகவதத்தில் வரும் ப்ருகுவுகே வெளிச்சம்!!.

திருச்சியில் ஒரு கல்லூரி ஆண்டு விழாவில் கவியரசு கண்ணதாசன் பங்கேற்றபோது அக்கல்லூரியில் பயிலும் மாணவரது கவிதையை தன்னுடையது என்று வாசித்தபோது மிகுந்த ஆராவாரத்துடன் அக்கவிதை பாராட்டப்பட்டதாம். பின்னர் அம்மாணவர் கண்ணதாசனின் கவிதையை தன்னுடையது என்பதாக வாசித்து முடிக்க அதற்கு எவ்வித ஆரவாரமும் இன்றி வெகுகுறைவாகவே பாராட்டுக்கள் பிரதிபலித்ததாம். இறுதியில் கண்ணதாசன் "உண்மை"யைச் சொன்னதும் கண்ணதாசன் வாசித்த கவிதைக்குரிய அம்மாணவனை எல்லோரும் பாராட்டினார்களாம்.

இது போன்றே ஆன்மீகத்தில் உபந்யாஸம் செய்யும் நிறையபேர் தான் சொல்லும் கருத்துக்கு வலு சேர்க்க, ம்ருகண்டு மஹரிஷி, பாத்மோத்தரம், பத்மபுராணம், கருடபுராணம், ஸ்ரீமத்பாகவதம் மற்றும் பாரதத்தில் இருந்தும், யுதிஷ்டிரர் சொல்றார் ..... , வால்மீகி சொல்றார்... கருடன் சொல்றான்... இராமர் என்ன பண்ணினார்னா?.. . அர்ஜுனன் கிழிச்ச கோட்டுக்கு என்ன அர்த்தம்னா... வரம்வாங்கிண்டு ஈச்வரன் தலைல கைவெக்க இருக்கச்சே சாட்சாத் விஷ்ணு என்ன பண்ணார்னா? என்கிறமாதிரி எதையாவது மக்களுக்கு புரியவைக்க எங்கெங்கிருந்தோ உதாரணங்கள் "எடுக்கப்பட்டு" ஏற்ற இறக்கத்துடனும், எதுகை மோனையுடனும் சொல்லி (பிரசங்கித்து?!) "காசு" பார்க்கின்றனர்.

இவ்விஷயத்தில் கண்ணதாசனின் நேர் மை இவர்களுக்கு இருப்பதில்லை. உபந்யாசத்தைக் கேட்போரும் "இவர் சொன்னால் சரியாகத்தான் இருக்கும், பாகவதத்துக்கும் இவர்தான் அதாரிட்டியே!... சாட்சாத் வியாஸரே வந்து சொன்னாற்போல இருக்கு!" என்பதும் நடக்கிறது. வெட்கக்கேடு!

இவ்விதம் வைணவர்களின் செயல்களுக்கு அவ்வைணவர்கள் அதைப் பெரும்பாக்கியமாகக் கருதுவதே பிசகு!, இதில் வைணவரல்லாதோரும் "பலிகடா" வாகி கண்டதையும் தெய்வம் என்று, சிவநிந்தை செய்யுள்களையும், இதைப்போன்ற பிறவற்றையும் மெய்யென விழைந்து படிப்போரும், படிப்பிப்போரும், கேட்போரும், ஆதரிப்போரும், மறையிருந்த ஊரில் குடியிருந் தறியாத மந்தபுத்தி உள்ளோராக, முழுமூடராக ஒதுக்கப்பட்டவர்களாகி, இகபர சுகங்களை இழந்து, அவர்கள் அநுபவிக் கப் போகும் "நரகம்" மிகப்பெரிது என்பதற்கு எந்தச் சந்தேகமும் இல்லை.

தான் கற்ற கல்வியறிவைக் கொண்டு இப்படிப் பாஷ்யம் செய்து பிழைப்பதும், தன் சொந்த விருப்பையும், ஆச்சர்யத்தைக் காண்பிப்பதும் “சிவத்வேஷமே!”, ஏற்கனவே உள்ள இதிஹாசத்திற்கும், புராணத்திற்கும் பொருள் எழுதுவோர் வார்த் தைக்கு வார்த்தை அப்படியே அதன் நேரிடையான சொல்லைக்கொண்டு தன் பாஷியத்தை அமைக்க வேண்டியதுதானே? உங்கள் சொந்த சரக்கை காண்பித்தே ஆகவேண்டும் என்கிற வெறி இருந்தால் கம்பரைப்போன்றோ, வில்லிப்புத்தூராரைப் போன்றோ, காளிதாஸனைப் போன்றோ, துளசிதாசனைப் போன்றோ - உங்கள் இஷ்டத்துக்கு எழுதிவிட்டுப் போங்களேன்? (இந்த வில்லிப்புத்தூராராவது ஸ்ரீ அருணகிரிநாதரிடம் அவமானப்பட்டு, பின் அவரால் தேறுதல் பெற்று திருந்தி, சிவபெருமானின் பெருமையும், பரத்துவமும் பேசும் ‘பாரதத்தை’ தமிழில் பாடினார். அவ்வில்லிப்புத்தூரான் கிருஷ்ணனின் மஹிமை பேசும் பொய் பாகவதத்தை தமிழில் செய்யவில்லையே? ஏன்?!)

கவிச்சக்ரவர்த்தி கம்பரும் இராமாயணம் எழுதி பிரபலம் ஆனவர் அல்ல. அவர் இராமாயணத்தினை எழுதுவதற்கு முன்பே அவர் மிகுந்த புகழடைந் திருந்தவர் தான். இராமாயணத்தில் இவரது சொற்சித்திரமே இன்றளவும் "கம்பசித்திரம்"' என்றும் "கம்பசூத்திரம்" என்றும் சிறந்து விளங்குகின்றது. இராமாயணத்தை எழுதிய பிறகும் தன் எழுத்துத்திறமையால் இராமாயணத்தைப் புகழடையச்செய்து, தம் கவித்திறமையால், தானே புகழடைந்த "கம்பர்" போல இந்த பாஷியக்காரர்களை எதிர் பார்ப்பது மிகவும் பிசகு. (ஆனால் இவரும் வால்மீகி எழுதிய மூலத்தில் இல்லாததை எழுதியவர் தான் !)

பலவற்றையும் தெய்வம் என்று பாட்டெழுதிய கம்பனை இவ்வைணவர்கள் “கம்பநாட்டாழ்வார்” என்று புகழ்கின்றனர். இவரது சரஸ்வதி அந்தாதியில் சரஸ்வதி யை தெய்வம் என்று சொல்லியிருக்கிறார். இவரெழுதிய இராமாயணத்திலோ, பிராம்மணர்கள் கரிய திருமாலைவிட மேலானவர்கள் என்றும் எழுதியிருக்கிறார்.

**சரஸ்வதி அந்தாதியில்:**

“தேவருந் தெய்வப்பெருமானு நான்மறை செப்புகின்ற
மூவருந் தானவராகி யுள்ளோரு முனிவரும்
யாவரு மேனைய வெல்லாவுயிரு மிதழ்வெளுத்த
பூவருமாதி னருள் கொண்டு ஞானம் புரிகின்றதே” என்றும்;

**இராமாயணத்தில்:**

“கரியமாலினுங் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினும் மெய்யினும்
பெரியர் அந்தணர் பேணுதி உள்ளத்தால்”

என்று கரியமாலினும் “பிராம்மணன்” உயர்ந்தவன் என்று எழுதியிருக்கிறார். இவரையும் “கம்ப நாட்டாழ்வாராக” மாற்றி அழகு பார்த்த வைணவர்களை என்னென்று சொல்வது? “எப்படியாவது பிரபலமானவர்களை தம்மதத்தில் இருப்பவர்களாக காட்டிக்கொண்டால் போதும், மூடர்கள் பின்னால் வந்து சேர்வார்கள்!” என்கிற புறச்சமயத்தினரது கள்ளத்தனத்திலும் இவர்கள் ஈடுபட்டதையல்லவா “கம்பநாட்டாழ்வார்” பட்டம் தெரிவிக்கிறது?! கம்பர் மிகச் சிறந்த கவிச்சக்ரவர்த்தி என்பதில் யாருக்குமே சந்தேகம் கிடையாது. ஆனால் பண்டைய தமிழ் நூல்கள் பலவற்றில் அவரது சரித்திரம் பேசும் பகுதியில், அவர் சாதாரணமானவர்களைப் பாடுவதற்குக் கூட நூறு பொன் கூலி வாங்கியதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது!.

வைணவர்களால் ஏற்படுத்தப்பட்டது என்பது மாத்திரமல்ல, மற்றவர்களாலும் மாற்றியமைக்கப் பட்டதுமாக உள்ள புரட்டுப் பொய் நூல்களை கண்டறிய, 'முனைப்பாடியார்” என்னும் காலமும், இயற்பெயரும் அறியமுடியாதவர் எழுதிய “அறநெறிச்சாரம்” என்னும் நூலில் 47வது பாடலில்;

தத்தமதுஇட்டம் திருட்டம் எனஇவற்றோடு
எத்திறத்தும் மாறாப் பொருள் உரைப்பர் - பித்தர் அவர்
நூல்களும் பொய்யே அந்நூல் விதியின் நோற்பவரும்
மால்கள் என உணர் பாற்று.

**பொருள்:** தாம் சொல்லும் பொருள்களை தத்தமது விருப்பத்தின்படியும், தான் கண்ட காட்சி என்று இவ்விரண்டின்படி இவற்றுள் ஒரு சிறிதும் பொருந்தாதபடி உரைப்பவரை, பித்தன் என்றும்; அவர் உரைத்த நூல்கள் பொய்நூல்கள் என்றும், அந்நூல் விதியின்படி தவம் செய்பவர் மயக்கம் உடையவர் என்று உணரவும்.

தன் முன்னோர்கள் அனுபவித்த சைவத்தின் பெருமையையும், விபூதியின் அருமை தெரியாமலும், ஏகாதச ருத்ரம் ஜபித்ததினாலேயே பாரதயுத்தத்தில் ஜெயிக்கும் வரத்தினை நாராயணனுக்கு அருளிய ஸ்ரீ மகாதேவரின் மகிமை அறியாமலும் நிறைய ஏழைகள் இருக்கின்றார்கள்.

ஸ்ரீ வியாஸர் அருளிய புராணங்களை படித்தோரும் சரி; படிக்காதோரும் சரி பரம் என்றால் ஸ்ரீ வியாஸர் "நாராயணனை" சொல்லியிருப்பதாகக் கருதி புத்தி மயங்குவது உண்டு!. இதற்கெல்லாம் காரணம் உள்ளதை உள்ளபடியே மொழியாக்கம் செய்யாது, தம் சொந்த சரக்கை விற்றதை வாங்கியதாலும், அதை உண்மை என்று விசாரியாமல் ஏற்றதினாலும், சமூகத்தில் அவ்வப்போது தோன்றி மறைந்த

பெரியவர்கள் புதுப்புது விஷயங்களை (அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் முதலியவை) அறிமுகப்படுத்தி அதையும் 'உண்மை' என்று நம்ப வைத்ததும்தான் காரணம்!!

ஸ்ரீ வியாஸர் ஏதோ நம்மைக் குழப்பிவிட்டார் என்று வீணே எதற்கு அவரை நம் புத்திக்குறைவால் அதற்குக் காரணமாக்க வேண்டும்? அவருடைய எல்லா புராணங்களிலுமே ஸ்ரீ பரமேச்வரரைத்தான் "பரம்" என்று நிறுவியிருக்கிறார். யாருக்குமே அந்த சந்தேகம் வேண்டாம்!. **பாரதம்/சாந்திபர்வம்/331வது அத்தியாயத் தில்** இவ்வியாஸர் ஸ்ரீ பரமேச்வரரை வேண்டி வீர்யமுள்ள புத்திரராக ஸுகரைப் பெற்றதும், ஸுகரின் மகிமை பேசும் ஸுகரஹஸ்யம் எனும் உபநிஷத்தில், ஸுகர் ஸ்ரீ பரமேச்வரரை துதித்தமையினால் தத்வமஸி? எனும் பரப்பிரம்ம வாக்கியம் ஸுகருக்கு உபதேசிக்கப் பட்டதும், சிவபெருமானால் உபதேசிக்கப்பட்ட ஸுகர் லோகத்தினுடையவும், 'தத்' என்பதற்கு பொருளான ஈச்வரருடையதுமாக ஆன விவரமும் இருப்பதால் ஸ்ரீ வியாஸரையும், பரமேச்வரரது அருளால் உண்டான சுகப்பிரம்ம மஹரிஷியையும் விஷ்ணுவை பரமாக உணர்ந்தவர் கள் என்பதை எப்படி ஏற்பது?

## வியாஸ புஜஸ்தம்பனம்!

வேதம், புராணம், மற்றும் பல கலைகளும் கற்றறிந்த முனிவர்கள் பலர், ஸ்ரீ வியாஸர் அருளிய பல புராணங்களைப் படித்து உள்ளபடியே யாரை "பரம்" என்று சொல்லியிருக்கிறார் என்பதை அறிய முடியாமல் குழப்பம் ஏற்பட்டு; அம்முனி சிரேஷ்டர்கள் அனைவரும் ஸ்ரீ வியாஸரை அடைந்து, "நீங்கள் அருளிய நூல்க ளினால் எங்களுக்கு சந்தேகம் அதிகரிக்கிறது. ஆகவே நூல்முகமாக உபதேசிப்பதை நிறுத்தி, தேவரீருடைய உள்ளத்து உண்மைப் பொருளாக தெளிந்திருக்கும் பரமபதி இவன்தான் என்று பிரமாணித்து கூற வேண்டும்!" என்று வேண்ட, வியாஸரும் அம்முனிசிரேஷ்டர் களை நோக்கி, "சந்தேகம் என்ன? நாராயணன்தான் பரமபதி!" என்றார்.

இதைக்கேட்ட முனிவர்கள் வியாஸரை நோக்கி, "தேவரீர் காசியம்பதிக்கு வந்து அங்கெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ விச்வநாதர் சந்நிதியில் வந்து இவ்வார்த்தை யை சொன்னால் நாங்கள் ஏற்கிறோம்!" என்றார்கள். ஸ்ரீ வியாஸரும் அம்முனி சிரேஷ்டர்களது வேண்டுகோளை அங்கீகரித்து அவர்களுடன் காசியம்பதிக்கு எழுந்த ருளி, அவர்கள் சொன்னது போலவே, தம்மிரு கைகளையும் சிரம்மேல் தூக்கி அஞ்சலி செய்து, "நாராயணனே பரம்!" என்று சொல்லியதும், தூக்கிய கைகள் தூக்கியவாறே நின்றுவிட்டது!

அச்சமயம் அங்குவந்த நந்தியெம்பெருமான், வியாஸரது இருகைகளையும் தம் வாள் கொண்டு சேதித்து விட, அங்கிருந்த திருமால் வியாஸரை மிகவும் கோபித்து, "தத்வம்மேவசநம் வ்யாஸா ச்ருணுமூட யதார்த்தவந் அஹமேவ ஜகத்கர்த்தா மமகர்த்த மஹேச்வர: தஸ்ய தேவாதி தேவஸ்ய கர்த்தாகோபி

நவித்யதே" என்று சொல்லிய வசனப்படி, "ஏ மூட வியாஸனே! சத்தியமாகச் சொல்லுகிறேன் கேள்; உலகுக்கு எல்லாம் நானே பதி என்றாலும் எனக்குப் பதியானவர் ஸ்ரீ மஹேச்வரர் என்பதை அறிவாயாக!" என்கிற அர்த்தம் பெறப்படுவ தால், ஸ்ரீ வியாஸருக்கும் "பரம்" என்றால் யார் என்பதை சத்யம் செய்து ஸ்ரீ ஹரி சொன்ன மேற்குறித்த வசனம் சநற்குமார ஸம்ஹிதையில் இருந்து இனிது பெறப் படுதலால் அதையே நாமும் ஏற்போமே?

பகுத்தறிவு பேசுவோரும் சரி; வைணவரும் சரி இவ்விஷயத்தில்; "நான் சொல்லுகிறேன், விஷ்ணுவே பரம் என்று!..... என் கைகள் ஏன் ஸ்தம்பிக்கவில்லை?! வியாஸருக்கு ஆனதுபோல் எனக்கும் ஆகட்டும்!..... பார்த்தீர்களா என் கைகள் நன்றாக இருப்பதை?!" என்று கேட்கக்கூடும்!

வியாஸரைப் பற்றி பக்தி உலகினர் அனைவரும் ஓரளவேனும் அறிந்தவராக இருப்பவர். மஹிமைகள் பல நிரம்பினவர். வேதத்தை வகுத்ததற்காக "வேத வியாஸர்" என்றழைக்கப்படுபவர். இம்மாதிரியான பெரியவர்கள் பரம் என்பது யாரைக் குறிக்கும்? என்பதற்காக அவர்கள் கைகள் ஸ்தம்பிப்பதற்கும், செல்லாத எட்டணாவை கீழே இருந்து பொறுக்கி எடுத்தும், புளியோதரையில் மணிலாகொ ட்டை கொஞ்சம் கூடுதலாக போட்டிருக்கலாம்! என்றும், 'ததியோன்னத்தில் புளிச்ச தயிர விட்டுருக்கப்படாது!" என்றும் வாழும் இவர்களைப் போன்றோர் இவ்விதம் கேள்விகள் கேட்பதில் யாரும் அர்த்தம் இருப்பதாகக் கருத வேண்டியதில்லை, நல்லதைக் காணாத கண்கள் கண்ணல்ல, புண்கள்!!' என்கிற குறளின் வாசகப்படி இம்மாதிரியானவர்களின் கரங்கள் ஸ்தம்பித்தால் என்ன? ஸ்தம்பிக்காவிட்டால்தான் என்ன?! உலக்கைகள்!!

வியாஸர் 'சிவபெருமானே பரம்!' என்று பொய் சொன்னார் என்று சொல்லித்தி ரிவோரும் உண்டு!. வேதத்தில் உள்ள 'பரம்' என்பதை மாற்றி அது 'விஷ்ணு' என்று 'பெய் சத்தியம்' செய்ததால்தான் வியாஸருடைய கரங்கள் இயங்காமல் ஸ்தம்பித்து நின்றுவிட்டது!. தவிர, வேதத்தை அருளியவர் சிவபெருமான். அதை நான்காக வகுத்தவர் வியாஸர். வேதத்தை சொன்னவர் சர்வக்ஞர். அதை வகுத்தவர் எப்படி சர்வக்ஞர் ஆவார்?! ஆகையால் வியாஸர் பொய் சொன்னாலும் உண்மை சொன்னாலும்தான் என்ன?! நாம் வேதத்தை அநுசரிப்பதற்கும் அதற்கும் சம்பந்தமே யில்லை!.

## சிவஞான சித்தியும் - முக்தியின்பமும் தருவது யார்?

நம் புலன்களுக்குத் தோன்றுகின்ற இப்பிரபஞ்சத்தில் ஜராயுஜம் (கர்ப்பபை), அண்டஜம் (முட்டை), ஸ்வேதஜம் (புழுக்கம்), உத்பிஜ்ஜம் (பிளந்து) என்று நான்கு வகையான சிருஷ்டி பேதங்கள் இருக்கின்றன.

**ஜராயுஜம்:** மனிதன், ஆடு, மாடு முதலியவை.
**அண்டஜம்:** பறவைகள், பாம்பு, பல்லி முதலியவை.
**ஸ்வேதஜம்:** பேன், கரையான், புழு முதலியவை
**உத்பிஜ்ஜம்:** மரம். செடி முதலியவை.

இவ்விதமாக உண்டாகும் சிருஷ்டிகளில் அநேக லட்சம் ஜீவராசிகளின் பேதங்கள் அமைந்திருக்கின்றன. மனிதர்களில் எடுத்துக்கொண்டால், தனிகன், தரித்திரன், புத்திமான், புத்திஹீனன், சுகிப்பவன், துக்கிப்பவன், வித்வான், மூடன், வியாதியஸ்தன், திடசரீரமுள்ளவன், கோபமுள்ளவன், பொறுமையுள்ளவன் என்று பல்லாயிரக்கணக்கான பேதங்கள் இருப்பதை நாம் காண்கிறோம், தவிர ஒரு தாயின் வயிற்றில் பிறந்த பிள்ளைகளுக்குள்ளேயே அனேகவிதமான வேற்றுமைகள் இருப் பதையும் நாம் காண்கிறோம். இப்படி இவ்வுலக ஜீவராசிகளுக்குத் தனித்தனியே ஏற்பட்டிருக்கும் பேதங்களைக் கவனிக்கும் போது இப்பிரபஞ்ச சிருஷ்டியின் ஆச்சர் யகரமான ஸ்திதியானது, வாக்கிற்கும் மனதிற்கும் எட்டவொண்ணாத நிலைமையில் இருக்கிறது!,

உயிர்களுடைய இவ்விதமான பேதத்திற்கு காரணமென்ன? என்பதை யோசிக்கும்போது, அவற்றின் கர்மம் என்பது அதற்குக் காரணமாக ஏற்படுகிறது. ஜன்மம் பலவாறாய் இருப்பதால் அவற்றின் கர்மமும் பலவாறாகவே இருக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதாகிறது அல்லவா?, ஆதலால் ஜன்மம் காரியமாகவும், கர்மம் அதற்கு காரணமாகவும் அமைகிறது என்பதையும் நாம் உணரலாம். ஏனெனில், காரணமின்றி காரியம் உண்டாகாது என்னும் விதிப்படி யும், பிதாவின்றி புத்திரனும், மண்ணின்றி பானையும், விதையின்றி மரமும் உண்டாகாது என்கிற பிரத்யட்ச பிரமாணத்தைப் போல, எண்ணிறந்த கர்ம பேதங்களி னால் அளவற்ற ஜன்ம பேதங்கள் உண்டாகிறதையும் இதனால் அறியலாம்.

இதில் புண்ணியம், பாபம் என்று கர்மம் இரண்டு விதமாக ஜீவன்களுக்கு இருக்கிறது. ஒருவனுக்கு புண்ணியம் அதிகமானால் புண்ணிய பலனும், பாபம் பலனளிக்கும்போது தீய பயனும் உண்டாகிறது, மனிதர்களான நமக்கு நாம் செய்யும் நன்மை-தீமைகளுக்குத் தக்க தண்டனையும், வெகுமதியும் தருவதற்கு சக்தியுள்ள ஆட்சியாளன் (மன்னன்) பிரத்யட்சமாக ஏற்பட்டிருப்பதை நாம் எப்படி மறுக்க முடியாதோ, அம்மாதிரி சமஸ்த ஜீவர்களின் புண்யம், பாபம் என்ற இரு வகையான கர்மங்களைப் பகுத்து அறியவும், அவற்றிற்குறிய ஜன்மங்களைக் கொடுக்கவும், பரிபூரணமான சக்தியுள்ள ஒருவன் அவசியம் இருந்தே ஆகவேண்டும்.

ஒரு வஸ்துவை சிருஷ்டி செய்கிற மனிதன், முதலில் அப்பொருளின் ஸ்வரூபம் முழுவதையும் அறிகிறான். பிறகு அதை செய்ய விரும்புகிறான். அதன் பிறகுதான் அதை செய்து முடிக்கிறான். இதைப்போன்றே இவ்வளவு பெரிய பிரபஞ்சத்தை சிருஷ்டி செய்து முடித்திருக்கின்ற ஒரு "புருஷன்", இப்பிரபஞ்சத்தை யும், அதன் ஸ்வரூபத்தையும் அதிலமைந்த பிராணிகளின் ஸ்வரூபத்தையும் நன்கு உணர்ந்திருக்க வேண்டும் என்கிற உண்மை பெறப்படுகிறது. இம்மாதிரியான அவ்வு ணர்வு சாதாரணமான 'புருஷனுக்கு' ஏற்படாது!. அவ்விதமான விசால அறிவு

அஸாதாரணமான புருஷனுக்குத்தான் ஏற்படும். அவன்தான் (சர்வக்ஞன்) ஸ்ரீ பரமேச்வரன் எனப்படுகிறான்.

கர்மம் அறிவற்ற ஜடவஸ்துவானபடியால் அது ஒரு அறிவாளியின் வசமாக இருந்துகொண்டுதான் பலனைக் கொடுக்குமேயல்லாது ஸ்வயமாகவே அதற்கு பலனைக் கொடுக்கக்கூடிய சக்தி கிடையாது. உளி ஜடவஸ்தானபடியால், அது தச்சனின் வசமாக இல்லாமல் தானே எதையும் செதுக்காது!. தச்சன் செதுக்குகிறவனாயும், உளி அதற்கு சாதனமாயும் இருப்பது போல, ஸ்ரீ பரமேச்வரர் பலனைக் கொடுப்பவராயும், கர்மம் அதற்கு சாதனமாயும் இருக்கிறது, ஆதலால் கர்மமே ஈச்வரராக முடியாது என்னும் உண்மை பெறப்படுகிறது.

பிரும்மஜ்ஞானம் பெறுவதற்கு தவம் செய்கிற முனி சிரேஷ்டர்கள், முக்காலம் உணர்ந்த விசாலமான அறிவுடையவர்களாக இருந்த போதிலும், அவர்களைப்போய் ஈச்வரராக சொல்லமுடியுமா? முடியாது. ஏனென்றால் அவர்கள் ஈசுவரத்தன்மையை அடைவதற்கு முயற்சி செய்பவர் களாதலால் அவர்களின் அறிவு ஸாதாரணமான நம்மைப் போன்றோரது அறிவைவிட மிக்க விசாலமாயும், தெளிவாகவும் படர்ந்திருக்குமேயல்லாது, ஈச்வரருடைய அறிவைவிட மிகமிக மிகமிக மிகமிக தாழ்ந்தே இருக்கும், இம்முனிகளிலே ஒருவரைவிட ஒருவர் மேம்பட்டும், மற்றோர் தாழ்ந்தும் அவரவர்களது அறிவில் காட்சியளித்து, இவர் களுக்குள்ளேயே பரஸ்பர ஏற்றத்தாழ்வு இருப்பதால், தாரதம்யத்துடன் கூடிய இவர்கள் ஈச்வரராவது என்பது முடியவே முடியாது. **எவனுடைய அறிவிற்கு மேலான அறிவு உலகத்தில் எவனுக்கும் இல்லையோ, அவன் ஒருவனே ஈச்வரனாவான்**.

மிகப்பெரியதும் அரியதுமான இப்பிரபஞ்சத்தை சிருஷ்டி , அதிலுள்ள பிராணிகள் சுகமாக ஜீவனம் செய்யும்படியாகத்தான், பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் எனும் பஞ்ச பூதங்களையும் அமைத்து வைத்திருக்கிற பகவான், எல்லா உயிர்களிடத்தும் பரமகருணையும் ஒரேவிதமான அன்பும் கொண்டிருப்பது பற்றி அவருக்கு ஒரு ஜீவனைத் தாழ்த்தியும், ஒரு ஜீவனை உயர்த்தியும் ஸ்ருஷ்டிக்க வேண்டும் என்கிற எண்ணம் உண்டாகாது. அவரவர் செய்யும் கர்மவினைகளுக்குத் தக்க ரக்ஷையையும், தண்டனையையும் அந்தந்த ஜீவர்களே ஏற்றுக்கொள்வதும், கடமையும் என்பதை உணர்ந்து, அவரவர் தமது கர்மவினையால் அடைந்த பிறப்பைக் கொண்டு ஸ்ரீ பரமேச்வரரை பட்சபாதமுள்ளவராக எண்ணவேண்டாம்.

அனைத்திற்கும் காரணரான ஸ்ரீ பரமேச்வரர் ஒருவரே திரும்பிவாரா முக்தியின்பத்தை அளிக்க வல்லவர் என்பதையும் அறிந்துகொள்ளலாம். சிதம்பரம் அருகேயுள்ள திருநல்லூர் பெருமணம் (ஆச்சாள்புரம்) என்கிற ஸ்தலமும், மாயவரம் அருகேயுள்ள சிற்றம்பல நாடிகள் திருக்கோவிலும், துண்டுச்சீட்டுப் பெற்று பெற்றான் சாம்பன் அடைந்த முக்திவரலாறும் (சிதம்பரம்) மற்றும் சிவனடியவர் பலரது சரித்திரமும் ஸ்ரீ பரமேச்வரர் ஒருவரே முக்தியின்பத்தை அருளுபவர் என்பதை நம்மைப் போன்றோர்க்கு “உறுதி” செய்பவை, மற்றைய தேவர்களை தெய்வம் என்று கருதி வழிபட்டு, பேறுபெற்றவர்கள் சரிதம் ஒன்றும் இல்லை.

**ஸ்ரீ பரமேச்வரர் யாவராலும் தியானிக்கத்தக்கவர்** என்பதற்கு அனைத்து முனிவர்களுமே சாட்சியாயும், **சமஸ்த ஆந்மாக்களுக்கும் சிவஞானத்தை அளிப்பவர்** என்பதற்கு ஸுகர் சாட்சியாயும், **எல்லோராலும் வணங்கப்படக் கூடியவர்** என்பதற்கு வேதங்கள் சாட்சியாயும், **தன்னை சரண் அடைந்தோரை ரட்சிப்பவர்** என்பதற்கு இயமன் சாட்சியாயும், **தான் நித்தியர்** என்பதற்கு ஒவ்வொரு மஹாப்ரளய காலத்திலும் பிரும்ம-விஷ்ணுக்களின் கபாலமணிந்த அக்கபாலங்கள் சாட்சியாயும், **ஆதியந்தம் இல்லாத சூன்யர்** என்பதற்கு வராஹ - ஹம்ஸ சரீரங்க்களைத் தாங்கிய பிரும்மா விஷ்ணுவாதியர்கள் சாட்சியாயும், **அதிக சக்தியுடையவர்** என்பதற்கு பிரும்மா சாட்சியாயும், **எவராலும் அடைய முடியாத வர்** என்பதற்கு அண்ணாமலையார் சாட்சியாயும், **ம்ருத்யு பயத்தை நீக்குபவர்** என்பதற்கு ம்ருகண்டு முநியின் புதல்ஹ் மார்கண்டேயர் சாட்சியாயும், **ஸ்வல்ப சேவைக்கு சந்தோஷிப்பவர்** என்பதற்கு குபேரன் சாட்சியாயும், **ஆபத்துக் காலத்தில் சகலரையும் ஆதரிப்பவர்** என்பதற்கு அமிர்தத்தைக் குடித்த தேவர்கள் சாட்சியாயும், **எல்லோரையும் தண்டிப்பவர்** என்பதற்கு தட்ச யாகம் செய்த தட்சன் சாட்சியாயும், **அபயம் தந்து இதமாய் பேசுபவர்** என்பதற்கு ஸ்ரீ இராமன் சாட்சியா யும், **அதிபரம ஆப்தர்** என்பதற்கு வேதங்கள் சாட்சியாயும், **எல்லாம் தாமே** என்பதற்கு சாட்சியாக பாண்டிய மன்னன் முதுகில் பட்ட பிரம்படி வடுவும், அர்ஜுனன் விட்ட அம்பும், அவருடைய **அன்புக்கு** தருமதேவதை சாட்சியாயும் இருக்க, இவர்கள்;

**பசுவையும்** (கஜேந்திரனாகிய யானையும், ஆயர் குலத்து பசுக்களும்) **சிசுவை யும்** (ஹிரண்ய குமாரனான பிரஹலாதன்) **ஸ்ரீயையும்** (தம் கணவர்கள் ஐந்து பேரால் கைவிடப்பட்ட துரௌபதை), **இராட்சசனையும்** (இராவணன் தம்பி விபீஷணன்), **குரங்கையும்** (வாலி, அநுமன், சுக்ரீவன்) **பறவையையும்** (கருடன்) சாட்சியாகக் கொண்டிருக்கும் இந்த ஹரியை "பரம்" என்றும் "முக்தி"யும், "ஞான"த்தையும் தருபவர் என்று எப்படி ஏற்பது?

ஸ்ரீ சிவபெருமானுடைய பெருமைக்கு சாட்சியாய் விளங்கும் முன் சொன்னவர்களுடைய பலத்தையும் பெருமையையும் நோக்க, ஹரிக்கு சாட்சியாய் விளங்கும் மற்றோரது ப்ரபாவம் விளக்காமலே விளங்குவதால், இதில் ஹரியும் ஹரியினது பக்தர் களும் அடையும் பிரபாவமும், பலனும்தான் என்னென்ன?

விஷ்ணுவை ஆராதிப்போர் *விஷ்ணுபதம்" அடைந்தால் அது மோட்சம் இல்லையா? என்பார்கள். விந்தையிலும் விந்தை!. மோட்சம் என்பது சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம், என்கிற அதிகார பேதத்தால் சரியை, கிரியை, யோக ஞானத்தை அனுஷ்டிப்பவர்கள் அடையும் பேறாக 'முக்தியின்பத்தை' நிச்சயித்து சொல்லப் பட்டிருப்பதால், சரியைக்கு சற்றும் அதிகாரியாய் இல்லாதவனும், அருகதையில்லாதவனுமான இந்த ஹரியை ஆராதிக்கும் பாஞ்சராத்ரிகளும், ஏழைகளும் உண்மை ஞானத்தால் அடையும் சிவப்பேற்றினை எப்படி அடைவார் கள்?

விஷ்ணு மூர்த்தி கபிலராக வந்தபோது புராரியாகிய சிவனாரிடத்தில் சாங்கிய ஞானோபதேசத்தை பெற்றதை ஸ்காந்தமும், பதரிகாசிரமத்தில் நாராயணருக்கு சிவன் வெளிப்பட்டு பதினோறு அத்தியாயங்கள் உள்ள சிவகீதையை உபதேசித்தரு ளியதை கூர்மபுராணமும் (உத்திரகாண்டம்), பஞ்சவடீ தீரத்தில் (பாண்டிச்சேரி - திண்டிவனம் சாலையில் உள்ளது அல்ல!!) அகஸ்தியரிடத்தில் விரஜா தீட்சை பெற்ற ஸ்ரீ இராமனுக்கு சிவனார் வெளிப்பட்டு சிவகீதை உபதேசித்தருளியதை பத்மபுராணத்திலும் (உத்திர காண்டம்), சரஸ்வதிக்கும் விஷ்ணுவுக்கும் முன்னும் பின்னுமாக ஞானவைபவ காண்டத்தையும், பிருஹஸ்பதிக்கு முக்திகாண்டத்தை யும், பிரும்ம தேவருக்கு பிரும்ம கீதையையும் சிவனார் அருளியதை சூதஸம்ஹி தையும் தெளிவாக விஷ்ணுவாதியர்களுக்கு ஞானத்தை அளிப்பவர் ஸ்ரீ பரமேச்வரர் என்று பெறப்பட்ட உண்மை வசனம் இருக்க, இந்த விஷ்ணுவுக்கு ஞான - மோட்சங்கள் அளிக்க சக்தியுண்டு என்று நாம் எந்த மதியால் சொல்லத் துணிவது?

சிவபெருமானால் ஞானோபதேசம் பெறப்பட்ட ஸ்ரீமந் மணிவாசக சுவாமிகள்;

"கொள்ளேன் புரந்தரன் மாலயன்வாழ்வு குடிகெடினு
நள்ளேனின தடியாரொடெல்லா னரகம்புகினு
மெள்ளேன் நிருவருவருளாலேயிருகப் 'பெறினிறைவா
வுள்ளேன்பிறதேய்வ முன்னையல்ல தெங்களுத்தமனே!"

பிரும்ம - விஷ்ணுக்களுடைய பதங்களை நல்லோர் விரும்பார்! என்கிற கருத்தையல்லவா சுருக்கமாக வேதக் கருத்தையும் திரட்டி நமக்கு நிச்சயித்து சொல்லியிருக்கிறார்? சனகாதி முனிவர்கள் நால்வருக்கும் ஞானத்தை உபதேசித்த ஸ்ரீ சங்கரரே இவருக்கும் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் ஞானத்தை அருளினார் என்பது சிந்தித்தல் நலம்.

நிற்க, விஷ்ணுவால் ஞானம் அடைந்தவர்கள் உண்டு என்றால் அவர்களை இன்னார் என்று அப் பாஞ்சராத்திரிகள் வெளிப்படுத்தட்டுமே? ! (அர்ஜுனனுக்கு கீதை உபதேசிக்கவில்லையா? என்பார்கள்!, அதை உபதேசிக்கும் ஞானத்தை ஸ்ரீ உபமந்யு முனிவர் மூலமாக அல்லவா அந்த கிருஷ்ணன் அதை அடைந்தான்?, தவிர - இந்த அர்ஜுனன் திரௌபதியினுடைய சுயம்வரத்திற்காக பாஞ்சால தேசத்திற்குச் செல்லும் வழியில் கங்கைக் கரையில் சித்ரரதன் எனும் கந்தர்வனை ஜயித்து - அவனை நண்பனாகவும் அடைந்து அவன் மூலம் 1. தபதி வ்யாக்யானம், 2. வசிஷ்டோபாக்யானம், மற்றும் 3. ஔர்வோபாக்யானம் கேட்டறிந்த விவரம் பாரதம் / ஆதிபர்வத்தில் காணக்கிடைக்கிறது!!)

அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணர் கூடவே இருந்தும், கீதையுபதேசித்தும் அந்த அர்ஜுனன் கண்ட பலன் என்ன? கிருஷ்ணாவதார காலத்தில் அவன் மோட்சம் அடைந்தானா?! இல்லை வேடனம்பு பட்டு மாண்ட கிருஷ்ணருடன் வைகுந்தம் ஏகினானா?!

சர்வக்ஞனாயும், சமஸ்த வித்யைகளுக்கும், சமஸ்த தேவர்களுக்கு ஈச்வரரா யும், சர்வ பூதங்களுக்கு தலைவராயும், விளங்குபவர் ஸ்ரீ பரமேச்வரர் என்றுதான் பூர்வ நூல்களான சிவரஹஸ்யம், இராமாயணம், பாரதம் முதலிய இதிஹாசங்க ளும், மற்றுமுள்ள 18 புராணாதிகளும் உறுதியாக சொல்லுகையில் ஸ்ரீ விஷ்ணுவு க்கு ஞானாதிக்கம் உண்டு என்பதற்கு பிரமாணம் இல்லாததற்கு நாம் என்ன செய்ய முடியும்?

**"அஷ்டாதசாநாம் வித்யாநாமே தாஸாம்பிந்நவர்தமநாம்**
**அதிகர்த்தாக விஸ்ஸாக்ஷாச் சூலபாணிர்மஹேச்வர"**

என்கிற சுருதி வசனத்தில், "அஷ்டாதச வித்யைகளுக்கும் கர்த்தா சூலபாணியான ஸ்ரீ சங்கரரே! என்கிற உண்மையும், "ஈசாநஸ்ஸர்வ வித்யானாம்" என்று வரும் மந்திர வாக்கியத்தில் இருந்து சர்வ வித்யைகளுக்கும், பிரும்மனுக்கும், பிரும்மாதியர் களுக்கும் ஸ்ரீ சங்கரரே பதி! என்கிற உண்மையும் பெறப்படுவதால் அந்நிய தேவர்களை எப்படி "எல்லாவற்றுக்கும் பதி" என்றும், ஞானத்தையும், மோட்சத்தை யும் அருளுபவர்கள் என்று ஏற்பது?

**பாரதம்/வனபர்வத்தில்** விஷ்ணு தேவ சத்ருக்களைக் கொன்றபின் சுமீதீர் த்தம் சென்று நீராடி "சுத்தி" செய்துகொண்ட விவரமும், **பாரதம்/சல்யபர்வத்தில்** மதுகைடவ வதத்தை செய்த விஷ்ணு உத்தமமான தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து யோகத்தையும், உத்தமமான சித்தியையும் பெற்ற விவரமும் பெறப்படுதலால், விஷ்ணுவும் பாவமுடையவர் என்றும் அவரும் அதற்கு கழுவாய் தேடினவர் என்பதையும் தெரிவிக்கிறபோது, அந்த விஷ்ணு எப்படி பிறர் பாவத்தை நீக்குவார்!?

**“யதாகர்மவசதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மானவா:**
**ததா சிவமவிக்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி||”**

எனும் ச்வேதாச்வர உபநிஷத்தால், எவன் ஆகாசத்தை தம் தோலாய்க் கட்டுவானோ அவன் துக்கக் கடலை தாண்டுவான்! என்கிற பொருள் பெறப்படுவதால் மற்றைய தேவர்களுடைய வழிபாட்டால் அடைய முடியாத முக்தியின்பம் ஸ்ரீ பரமேச்வரரது ஆராதானையால் அடையலாம் என்பது புரியவரும்.

தவிர சிவபெருமானின் சர்வோத்க்ருஷ்டத்தை விளக்கும் அவரது அறுபத்து நான்கு மூர்த்தங்களில் 60வது மூர்த்தமான **மத்ஸ்ய சம்ஹார மூர்த்தி**, 59வது மூர்த்தமான **கூர்ம சம்ஹார மூர்த்தி**, 61வது மூர்த்தமான **வராஹ சம்ஹார மூர்த்தி**, 30வது மூர்த்தமான **சிம்ஹக்ன (சரபேச்வரர்) சம்ஹார மூர்த்தி**, மற்றும் 27வது மூர்த்தமான **கங்காள சம்ஹார மூர்த்தி** ஆகியோரது பிரபாவம் பேசும் சரித்திரத்தில் ஹரியினது மேற்படி அவதாரங்கள் பங்கப்பட்டு (நிக்ரஹம்) அழிக்கப் பட்ட விவரம் பெறப்படுவதாலும் அந்த ஹரி முக்தி கொடுக்க வல்லவன் என்று எந்த மதியால் சொல்வது?!

## கிருஷ்ணனும் அக்கிருஷ்ணனுக்கு மூலமூர்த்தியான நாராயணனும்!

ஸ்ரீ அப்பைய தீட்சிதர் தமது 'சிகரிணீமாலா' என்னும் நூலில், "ஸ்ரீ பரமேச்வரருடைய பெருமைகளை அறியவும், திடமான பக்தியை அவரிடம் செலுத்தவும், அவரைப் பூஜித்து தக்க வரங்களைப் பெறவும் கேவலமான மனிதர்களுக்கு யோக்யதை கிடையாது; தேவர்களுக்கும் கிடையாது. நாராயணன் ஒருவனுக்கே அவ்விஷயத்தில் பூர்ண தகுதி உண்டு!" என்று சொல்லியிருக்கிறார். இவ்வரிகளும் அவரவர் ஸ்ரீ பரமேச்வரர் அளித்துள்ள அனுபவ அறிவைக்கொண்டு தெரிந்து கொள்ள வேண்டியது.

**பாரதம்/துரோணபர்வம்/80வது அத்தியாயம்** பகுதியில்தான் ஸ்ரீ பரமேச்வரரை பாரதத்தில் வரும் கிருஷ்ணனும், கிருஷ்ணனுக்கு மூல மூர்த்தியுமான நாராயணனும் வணங்கிய பகுதி வருகிறது. அதன் சுருக்கத்தை தந்திருக்கிறோம்.

பாரதப்போரில் அபிமந்யுவை ஜயத்ரதன் கொன்று வீழ்த்தியதும் அதுபற்றி பலவாறு கிருஷ்ணனிடம் புலம்பிய அர்ஜுனன், எவ்வகையிலாவது ஜயத்ரதனை தான் கொல்வதாக சபதம் செய்து, அதற்கான உபாயத்தினை கிருஷ்ணனிடம் கேட்க, கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு மீண்டும் "பாசுபதம்" பெற்றாலொழிய ஜயத்ரதனை வெல்வது கடினம் என்றும், அப்பாசுபதாஸ்திரத்தை திரியம்பகரிடமிருந்து மீண்டும் பெற அவருக்கு பலி போடுமாறும், முக்கரணங்களால் ஸ்ரீ பரமேச்வரரை வழிபடுமாறும் சொல்லி அவனுக்கு நிம்மதி தரும் வார்த்தைகளைச் சொல்லி அவனை உறங்க வைக்கிறார்.

கிருஷ்ணன் சொல்லியவாறே தீர்த்தத்தினால் ஆசமனம் செய்து, ஏகாக்ர சித்தத்தோடு பூமியில் உட்கார்ந்து கொண்டு மனத்தினால் ஸ்ரீ ருத்திரரை தியானித்தான். அதன்பின் மங்களகரமான பிரும்ம முஹூர்த்த வேளையில் ஸ்ரீ கிருஷ்ணனுடன் ஆகாய வீதியில் சென்று கைலாஸத்தை அடைந்து ஸ்ரீ பரமேச்வரரைக் கண்டான். ஸ்ரீ கிருஷ்ணரோ பார்த்தனோடு ஸ்ரீ பரமேச்வரரைக் கண்டு, சாஸ்வதமான வேதமந்திரத்தை சொல்லியவாறு சிரசினால் வணங்கினார்.

உலகங்களுக்கு ஆதியும், விச்வகர்ம ஸ்வரூபியும், பிறப்பில்லாதவரும், ஜகத்திற்குப் பிரபுவும், விகாரமற்றவரும், மனத்தினுடைய ப்ரவ்ருத்தி-நிவ்ருத்திக்குக் காரணமானவரும், ஜகத்திற்குக் காரணமாய் இருப்பவரும், ஆகாச ஸ்வரூபியாயும், வாயு ஸ்வரூபியாயும், தேஜஸுகளுக்கு நிதியாயும் இருப்பவரும், வாரிதாரைகளை ஸ்ருஷ்டிக்கிறவரும், பூமிக்கு ஆதியான மூலகாரணரும் தேவர்கள் - அஸுரர்கள், யட்சர்கள், மனுஷர்கள், இவர்களுக்கு சிட்சையளிப்பவரும், யோகதர்சிகளுக்குப் பரம ஆதாரமாய் இருப்பவரும், பிரத்யட்சமாக தோன்றியிருக்கின்ற பிரம்மவித்துக்களுடைய ரகஸ்யமா யிருப்பவரும் சராசரங்களைப் படைத்து அழிக்கின்றவரும், யமன் போன்ற கோபத்தை உடையவரும், மஹாத்மாவும், இந்திரனுடைய ஐச்வர்யம் போல ஐச்வர்யமுடையவரும், ஸூர்யன் போல் பிரகாசமுடையவருமான ஸ்ரீ

மஹேச்வரரை இருவரும் வாக்கினாலும் மனத்தினாலும், புத்தியினாலும், செய்கை யினாலும் நமஸ்காரம் செய்தார்கள். (மறுபடியும் மறுபடியும் நமஸ்கரித்தார்கள்)

பின் தன்னைச் சரணடைந்த அந்த நரநாராயணர்களை நோக்கி ஸ்ரீ பரமேச்வரர், "புருஷ ச்ரேஷ்டர்களே! சிரமத்தை விட்டுவிட்டு எழுந்திருங்கள், நீங்கள் வந்த காரியம் என்ன? அதை நிறைவேற்றுகிறேன்!. எது உங்களுக்கு நன்மையான தோ அதனை விரும்புங்கள்!." என்று சொன்னதும், அவ்விருவரும் கைகளைக் குவித்துக்கொண்டு, பக்தியோடு திவ்யமாக பின்வருமாறு அவரை ஸ்தோத்திரம் செய்தார்கள்.

(இந்த இடத்தில் ஒருவிஷயம் நம் அனைவரது கவனத்திற்கும் உரியதாக இப்பாரதப் பகுதியில் சொல்லப்பட்டிருக்கிறது, கிருஷ்ணார்ஜுனர்கள் இருவரும் சிவபெருமானை கயிலையில் சந்தித்து நமஸ்கரித்து நின்றபோது, அவ்விருவரை யும் சிவனார் அதிகார தோரணையில்கூட உட்காரச் சொல்லவில்லை!! அக்கேசவ னும் நின்ற வண்ணமே தன் காரிய சாதகம் செய்து கொண்டு திரும்பியதாகவே உள்ளது!)

"ஸர்வலோகங்களுக்கும் பிரபுவாய் இருப்பவரும், வரன்களைக் கொடுக்கின்ற வரும், பசுக்களுக்குப் பதியும், எப்பொழுதும் உக்ரமாக இருப்பவரும், ஜடையுள்ள வரும், தேவர்களுள் சிறந்த தேவரும், பயங்கரமானவரும், மூன்று கண்களை உடையவரும், சாந்தியுடையவரும், ஜகத்தைஸ்வர் யமுள்ளவரும், யாகத்தை அழித்தவரும், அந்தகன் என்னும் அஸுரனைக் கொன்றவருமான தேவரீருக்கு நமஸ்காரம். சுப்ரமண்யருக்கு பிதாவும், நீலகண்டரும் உலகத்தை சிருஷ்டித்தவரும் பிநாகமென்கிற வில்லைக் கொண்டவரும் ஹவிசைப் பெறத்தக்கவரும், அழிவற்ற வரும், எப்போழுதும் விபவத்தில் நிலைபெற்றிருப்பவரும், மிக்க செந்நிறமுடைய வரும் மங்களமான காந்தியுடையவரும், வேடரும், பிறரால் ஜயிக்கப்படாதவரும் எப்பொழுதும் கருத்த சிகையை உடையவரும், சூலத்தைக் கையில் கொண்டவரும், ஞானக்கண் உடையவரும், வேடரும், அக்நியிடத்தில் இந்திரியத்தை விட்டவரும், எண்ணத்தகாதவரும், அம்பிகாநாதரும், எல்லாத் தேவர்களாலும் துதிக்கப்படுப வரும், (துதிக்கப் பெற்றவரும்) விருஷபத்தை கொடியாக உடையவரும், முண்டிதமானவரும், ஜடையையுடையவரும், பிரம்மச்சாரியாய் இருப்பவரும், ஜலத்தில் தவம் செய்கின்றவரும், பிராம்மணர்களுக்கு ஹிதத்தை தேடுகின்றவரும், உலகத்தை வடிவமாகக் கொண்டவரும், உலகத்தை சிருஷ்டித்தவரும், உலகத்தைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றவரும், பூத கணங்களால் ஸேவிக்கத்தக்கவரும், எப்போதும் பிரபுவாய் இருப்பவருமான தேவருக்கு நமஸ்காரம், நமஸ்காரம்."

"வேதங்களால் நிரம்பின முகத்தையுடையவரும், ஸர்வஸ்வரூபியும் வித்தை க்கெல்லாம் அதிபதியுமான தேவரீருக்கு நமஸ்காரம். ப்ரஜைகளுக்குப் பதியுமான தேவரீருக்கு நமஸ்காரம். அடையத்தக்கவரும், விரும்பத்தக்கவரும் ஸ்தோத்திரம் செய்யத்தக்க வரும், எப்போதும் உத்தமமான பதத்தில் இருப்பவரும், தேவர் களுக்குத் தேவரும், மஹாபூதங்களைத் தரிக்கின்றவருமான தேவரீருக்கு நமஸ்காரம். எல்லா உலகங்களுக்கும் நாதரான உமக்கு நமஸ்காரம். காலாட்களான

யுத்தவீரர்களுக்குப் பதியான தேவரீருக்கு நமஸ்காரம். உலகத்திற்கு நாதராய் இருப்பவரும், மஹத்துக்கெல்லாம் பதியாய் இருக்கின்றவருமான தேவரீருக்கு நமஸ்காரம். நமஸ்காரம்."

"ஆயிரம் சிரங்களை உடையவரும், ஆயிரம் கைகளை உடையவரும், ம்ருத்யு ஸ்வரூபியாக இருப்பவரும், ஆயிரம் கண்களையும், கால்களையும் உடையவரும், எண்ணமுடியாத செய்கைகளை உடையவருமான தேவரீருக்கு நமஸ்காரம்; நமஸ் காரம். பிரபுவே! பொன்னிறமுடையவரும் பொற்கவசம் அணிந்தவரும் எப்பொழுதும் பக்தர்கள் விஷயத்தில் தயையுள்ளவருமான தேவரீருக்கு நமஸ்காரம் செய்கிறோம். எங்களுடைய அபீஷ்டங்கள் சித்திக்கவேண்டும்."' என்று துதித்தார்கள். (இதே துதி வசனம் 'புருஷசூக்தத்தில்' வருகிறது. இதை கிருஷ்ணன் ஸ்ரீ பரமேச்வரரை நோக்கி சொல்வதாக இருக்கிறதே தவிர்த்து, நாராயணனை நோக்கியல்ல!!)

இந்த துதிக்கப் பிறகு ஸ்ரீ மஹாதேவர் அவர்களுக்கு அவர்கள் வேண்டிய 'பாசுபதாஸ்திரம்" ஒரு தடாகத்தில் இருப்பதையும், அதன் இருப்பிடத்தைச் சொல் லியும், அங்கு சென்று அவ்வில்லையும் அம்பையும் எடுத்துக் கொள்ளச் சொல்லி அநுக்ரஹித்தவாறு, ஸ்ரீ கிருஷ்ணனும், அர்ஜுனனும் அத்தடாகத்தை அடைந்து அத்தடாகத்தில் இருந்த இரண்டு ஆயிரம் தலையுள்ள நாகங்களைக் கண்டு, ஸ்ரீ ருத்திரரை ஸ்தோத்திரம் செய்து இருவரும் "சதருத்ரீயம்" ஜபித்து வில்லும் அம்பும் பெற்ற விவரம் பாரதத்தின் மேற்சொன்ன பகுதியிலும்; மூலமூர் த்தியான ஸ்ரீ நாராயணன் துதித்த பகுதியானது அதே **பாரதத்தில் துரோணபர் வம்/202வது மற்றும் 203 வது அத்தியாயங்களில்** வியாஸர் மூலம் சொல்லப்பட்டிருக்கிறது.

பாரதப்போரில் அச்வத்தாமன் ஏவிய 'ஆக்நேயாஸ்திரம்' கிருஷ்ணரையும், அர்ஜுனனையும் ஒன்றும் செய்யாது சேனைகளை மாத்திரம் அழித்தமையினால் மிகுந்த வருத்தம் அடைந்த அச்வத்தாமன் வியாஸரிடம், "ஐயா! இது என்ன மாயை?! என்னால் போடப்பட்ட இந்த அஸ்திரமானது எப்படி பொய்க்கும்? என்னிடம் என்ன தவறு ஏற்பட்டது? கிருஷ்ணனும் அர்ஜுனனும் ஜீவித்திருத்தலால் இவ்வுலகம் அவர்களால் ஜயிக்கப்பட்டதாகிவிட்டதா? என்னால் ஏவப்பட்ட அந்த ஆக்நேயாஸ்திர த்தை அசுரர்களாவது, கந்தர்வர்களாவது, யட்சர்களாவது, பட்சிகளாவது, பிசாசங்களா வது, ராட்சசர்களாவது, ஸர்ப்பங்களாவது, மனிதர்களாவது எவ்விதத்திலாவது அதைத் தடுப்பதற்கு சக்தியுள்ளவர்கள் அல்லவே?!... மனிதத்தன்மையுள்ள அந்த கேசவனையும், அர்ஜுனனுமாகிய அந்த இருவரையும் ஏன் இந்த அஸ்திரம் எரிக்க வில்லை?" என்று கேட்டான்.

"பெரியதொரு ஆச்சர்யத்தினாலே என்னை நீ கேட்டதற்கு அதன் விஷயங் களை முழுதும் உனக்குச் சொல்வேன். அர்ஜுனனும் ஸ்ரீ கிருஷ்ணரைப் போன்றே எண்ணுவாயாக, இருவரையும் நீ நரநாராயணர்கள் என்றறிவாயாக. அந்த நாராயணர் இமயமலையை அடைந்து கைகளை உயரத் தூக்கிக்கொண்டு நெருப்புக்கும் ஆதித்யனுக்கும் ஸமானராகவும் மஹாதேஜஸ்வியாகவும் அறுபது லட்சத்துப் பதினாயிரம் வருஷம் உக்கிரமாக தவம் புரிந்தார். அப்பொழுது அந்தப் புண்டரீ காட்சர் வாயுவை உணவாகக் கொண்டு, தம் தேகத்தை உலர்த்திவிட்டார். பிறகு,

முன்செய்த தவத்தைக்காட்டிலும், இரண்டு மடங்கான ஒரு பெரிய தவத்தைச் செய்து, ஆகாசம் பூமி இவைகளின் மத்தியிலுள்ள இடைவெளியைத் தேஜஸினால் நிரப்பிய அவரது அத்தவத்தின் வலிமையினால் அந்த நாராயணர் எப்பொழுது ப்ரும்ம ஸ்வரூபியானாரோ, அப்பொழுது உலகங்களுக்கெல்லாம் காரணரும், உலகங்களுக்கெல்லாம் நாதரும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரும் எல்லாத் தேவர்களாலும் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவருமான ஸ்ரீ விச்வேஸ்வரரைக் கண்டார்.

அணுக்களைக் காட்டிலும் சிறிய அணுவாக இருக்கின்றவரும் பெரிய பூதங்க ளைக் காட்டிலும் மிகவும் பெரியவராய் இருக்கின்றவரும், ருத்ரரும், பிரம்மாதிகளுக் கும் சிறந்தவரும் பக்தர்களுடைய பாபத்தை அபஹரிக்கின்றவரும் மங்களங்களுக்கு காரணமாய் இருக்கின்றவரும், ஜடைதரித்திருப் பவரும், அந்தர்யாமியாக இருந்து கொண்டு பிராணிகளுக்கு அறிவை உண்டுபண்ணுகிறவரும், ஸ்தாவரஜங்கமங்களு க்கு முக்கியமான காரணரும், ஒருவராலும் தடுக்கமுடியாதவரும், ஒருவராலும் அவமதிக்கமுடியாதவரும், பார்க்க முடியாதவரும், ஒருவராலும் அடையமுடியாதவ ரும், துஷ்டர்களிடத்தில் அடக்கமுடியாத கோபமுள்ளவரும் பெரிய வடிவமுள்ளவ ரும் எல்லாப் பிராணிகளுடைய சுபாசுபங்களான கர்மங்களுக்கும் சாட்சியாக இருப்பவரும், வில்லையும் இரண்டு அம்புப்பெட்டிகளையும் அணிந்தவரும் பொற்க வசம் பூண்டவரும் முடிவில்லாத வீர்யமுடையவரும், பிநாகமெனும் வில், வஜ்ரம், பிரகாசிக்கின்ற சூலம், கோடாலி, கதை, நீண்ட வாள் இவைகளையுடையவரும் மஞ்சள் நிறமுள்ள ஜடாமண்டலத்தையும், சந்திரனையும் முடியில் தாங்கியவரும் புலித்தோல் தரித்தவரும், பரிகத்தையும், தண்டத்தியும் கயில் கொண்டவரும், மங்களகரமான தோள்வளைகளை அணிந்தவரும், ஸர்ப்பத்தை முப்புரிநூலாக அணிந்தவரும், எல்லாப் பிரமதகணங்களாலும் பூதகணங்களாலும் விளங்குகின்ற வரும் ஒன்றுசேர்ந்திருக்கின்ற தவங்களில் நல்ல புதையல் போன்றவரும், பேசுவதில் ஸமர்த்தர்களான (ப்ரும்மாதிகளால்) இஷ்டமான வாக்குகளாலே நன்றாக ஸ்தோத்திரம் செய்யப்பட்டவரும் நீர், திசை, ஆகாயம், பூமி, சந்திரன், சூரியன் இவற்றின் வடிவமாக இருப்பவரும், தீயும் காற்றும்போன்றவரும், கெட்டநடையுள்ள ஜனங்களால் பார்க்க இயலாத தேவநாதரும், பிரம்மத்வேஷிகளை நாசம் செய்கின்ற வரும் அழிவற்ற சுகத்திற்குக் காரணமானவரும், நன்நடத்தையுள்ளவர்களும், பாவம் நீங்கியவுடன் மனத்தினாலே சோகத்தை விட்டவர் களுமான பிரம்மநிஷ்டர் களால் நேரில் தரிசிக்கப்படுகின்றவரும், தர்மஸ்வரூபியும், ஸ்தோத்திரம் செய்யத்தக்க வரும், விச்வரூபியுமானவரைத் தவத்தினால் அவரிடத்திலேயே அசஞ்சலமாக மனத்தைச் செலுத்தி அவரிடத்தில் உண்டான பக்தியினாலே கண்டார். ஸ்ரீ மஹாதேவரைக்கண்டு உள்ளம் பூரித்தவராகி, தேஜஸ்களுக்கெல்லாம் உத்தமமான நிதியாக இருக்கின்றவரும், உலகங்களுடைய சிருஷ்டிக்குக் காரணருமான ருத்திரரைக் கண்டு நமஸ்கரித்தார். பிறப்பிறப்பில்லாதவரும் ஜகதீசரும் அவ்யக்த ஸ்வரூபரும் காரண ஸ்வரூபரும், உத்தமபத்திலிருந்து எப்பொழுதும் நழுவாத வரும். முக்கண்ணருமான ருத்திரரைப் புண்டரீகாட்சர் பக்தியுடன் நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்தார்." என்று அச்வத்தாமாவிடம் சொல்லிய வியாஸர், அதன் பிறகு ஸ்ரீ நாராயணர் துதித்த துதியையும் சொல்லலானார்.

## ஸ்ரீ நாராயணர் ஸ்ரீ ருத்திரரை துதித்த துதி!

'கேசவரே!. ஸர்வோத்தமரே! ஆதிதேவரே! முற்காலத்தில் உம்முடைய புராண ஸ்ருஷ்டியான இந்தப்பூமியை அடைந்து, எவர்கள் பாதுகாத்தார்களோ அப்படிப்பட்ட லோகரட்சர்களும், பிராணிகளை ஸ்ருஷ்டித்தவர்களுமான தட்சன் முதலானவர்கள் உம்மிடத்திலிருந்தே உண்டானார்கள் தேவர்களையும் அசுரர்களையும் நரகர்களை யும், ராட்சசர்களையும் பிசாசர்களையும் பற்பலவிதமான பூதஸங்களையும், அவ் வாறே இன்னும் மற்ற எல்லா வஸ்துக்களையும் தேவரீரிடத்தினின்றே உண்டான வையாக நாங்கள் அறிகிறோம். இந்திரன், யமன், வருணன், குபேரன், பிதிருக்கள், த்வஷ்டா, சோமன், இவர்களைத் தேவதையாக உத்தேசித்து அநுஷ்டிக்கப்படுகிற கர்மாவானது உம்பொருட்டே."

"ரூபம் ஒளி, காலம், வேதங்கள், யாகங்கள், பிராம்மணர்கள், ஸ்தாவரம், ஜங்கமம், ஆகிய அனைத்தும் உம்மிடமிருந்தே உண்டாயின. ஸமுத்ர ஜலத்திலிரு ந்து நீர்த்திவளைகள் எவ்வாறு வெளிப்பட்டு வேற்றுமை அடைந்து பிரளயகாலத்தில் எவ்வாறு மறுபடியும் அந்த ஸமுத்திர ஜலத்தோடேயே ஒன்று சேர்கின்றனவோ, அவ்வாறே கற்றறிந்தவர்கள் உம்மிடமிருந்தே ப்ரபஞ்சத்தினுடைய உற்பத்தியையும், லயத்தையும் அறிகிறார்கள். இவ்வுலகமனைத்தும் உம்மிடத்திலேயே தோன்றி உம்மிடத்திலேயே ஸாயுஜ்யமடைகிறது. அதில் அற்புதமானவையும் அழிவற்றவை யும் பிராணிகளுடைய ஹ்ருதய கமலத்தில் வசிக்கின்ற ஸ்வபாவமுள்ளவையுமான இரண்டு பறவைகள் வசிக்கின்றன. கீழாகப் பரவிச்செல்லுகின்ற கிளைகளோடு கூடிய ஸம்ஸாரரூபமான அரசமரமானது ரட்சகமான ஏழு தோல்களுள்ளது. (வளை, மாம்ஸம், உதிரம், கொழுப்பு, மஜ்ஜை, அஸ்தி, சுக்கிலம்) சொற்களும், பொருள்களும் தேவதைகளும், லோகபாலர்களும் முற்காலத்தில் இவ்வுலகங்கள் அனைத்தையும் தரித்து உம்முடைய ஸாயுஜ்யம் பெற்றவர்களும், அவர் களைக்காட்டிலும் மேன்மை யான வஸ்துவும் உம்மிடமிருந்தே உண்டாயின. அவர்களைக் காட்டிலும் நீரே பரம்பொருள்.'"

"இவ்விதமான தங்களிடமிருந்தே எல்லா உலகங்களும் உண்டாகின்றன. பக்தனாக வந்தடைந்த என்னிடத்திலே நீர் பரிவுள்ளவராக இருக்க வேண்டும். தேவநாதரே!, தேவரீரை ஆத்மாவுக்கு ஆத்மாவாக நானறியவில்லை. அவ்விதம் அறிகின்ற மனிதன் நிர்மலமான பிரம்மஸ்வரூபத்தை அடைகிறான். உம்முடைய நன்மதிப்பை அடைய விரும்பி உம்மை நாடி, உமக்குத் தக்கபடி உம்மைத்துதித்தேன். என்னால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவரான தேவரீரை அடைவதற்கு மிகவும் அரியவைகளும், நான் விரும்புகின்றவைகளுமான வரங்களைக் கொடுக்கவேண்டும், கபடமில்லாது கருணையோடு அநுக்ரஹிப்பீர்!" என்று வேண்டினார் .

பிநாகம் என்னும் வில்லைக் கையில் கொண்டவரும், மனத்தினாலே நினைக்க முடியாத உருவமுள்ளவருமான ஸ்ரீ பரமேச்வரரை ரிஷியான நாராயண ரால் (ரிஷிஸம்ஸ்துத: என்பது மூலம். ஆகவே அதன் பொருளாக ரிஷியான நாராய ணரால் என்று கொள்ளப்பட்டிருக்கிறது. தற்போது வெளிவரும் பதிப்புகளில் ரிஷிக

ளால் துதிக்கப்பட்டவரும் என்னும் வாசகமே பிரயோகிக்கப்படுகிறது!) துதிக்கப் பட்டவருமான தேவதேவரான ஸ்ரீ மஹாதேவர் ஸ்தோத்திரம் செய்யப்பட்டு, தேவதைகளின் தலைவராக இருக்கும் அந்த விஷ்ணுவின் பொருட்டு, யாராலும் வெல்லமுடியாத முதலிய வரங்களைக் கொடுத்தார். பிறகு, சூலபாணியான ஸ்ரீ ருத்திரருடைய அநுக்ரஹத்தினாலே பல வரங்களைப் பெற்று அந்த நாராயணரே மாயையினால் உலகத்தை மயக்கிக் கொண்டு சஞ்சரித்தார். என்று ஸ்ரீ வியாஸர் அச்வத்தாமாவுக்கு சொல்லி, இறுதியாக;

"பிரம்மா, விஷ்ணு, ருத்திரர். இவர்களுள் விஷ்ணு ஸ்வரூபிகளான இந்த நரநாராயண ரிஷிகள் இருவரும் (அர்ஜுனன் மற்றும் கிருஷ்ணன்) மிகுந்த தவமுள் ளவர்கள்; உலகவியாபாரத்தை நடத்துவதற்கும், அசுரர்களை நாசம் செய்வதற்கும், தர்மங்களை நிலைநிறுத்துவதற்கும் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கின்றனர், நீயும் அந்த ருத்திரரிடமிருந்தே அவரம்ஸமாகத் தோன்றிவன்தான்!. உங்கள் மூவருக்கும். பிறப்பு, செய்கை, தவம், யோகம் இவைகள் பரிபூர்ணமாக இருக்கின் றன. அவ்விருவராலும் ருத்திரர் லிங்கத்தில் அர்ச்சிக்கப்பட்டார்.

ஒருவராலும் ஜயிக்கமுடியாத வரம் பெற்ற ஸ்ரீ விஷ்ணுவுக்கு உற்பத்தி ஸ்தானமாக இருக்கின்ற ஸ்ரீ ருத்திரர் உன்னால் யுகந்தோரும் விக்ரஹத்தில் பூஜிக்க ப்பட்டவராக இருக்கிறார். எவன் பிரபுவான ருத்திரரை ஸர்வஸ்வரூபி என்று எண்ணி லிங்கத்தில் பூஜிக்கிறானோ அவனிடத்தில் ஆத்ம யோகங்களும், சாச்வத மான சாஸ்திர யோகங்களும் நிலைபெற்றிருக்கின்றன . இவ்வாறு தேவர்களும், சித்தர்களும், பரமரிஷிகளும் பூஜித்துக்கொண்டு உலகத்தில் மேலானவரும் சாச்வத ருமான ஸ்தாணுவைக்குறித்தே வேண்டுகிறார்கள்!. எவன் எல்லாப்பிராணிகளுக்கும் உற்பத்தி ஸ்தானமென்று எண்ணி பிரபுவான ஸ்ரீ மஹாதேவருடைய லிங்கத்தை அர்ச்சிக்கிறானோ அந்தப் பக்தன்மீது அதிகமான ப்ரீதியை விருஷபத்வஜர் பாராட்டு கிறார்." என்று பாரதம் அருளிய வேத வியாஸர் அச்வத்தாமாவுக்கு சொன்னார்.

மேற்கண்ட இருபகுதிகளும் முறையே பாரதத்தில் **துரோண பர்வம்/80வது அத்தியாயத்திலும்**, 202, 203 **வது அத்தியாயத்திலும்** ஸ்ரீ கிருஷ்ணரும், ஸ்ரீ கிருஷ்ணனுக்கு மூலமூர்த்தியாய் விளங்கும் ஸ்ரீ நாராயணரும் ஸ்ரீ ருத்திரரை துதித்து நமஸ்கரித்த பகுதிகள் உள்ளது.

ஆனால் இப்பாரதத்திற்குப் பிறகு விஷ்ணுவுக்கு பரத்துவம் ஸ்தாபிப்பதற்கு வியாஸரின் பெயரால் புனையப்பட்ட ஸ்ரீமத்பாகவவதத்தில் பூர்வமீமாம்ஸை அருளிய ஜைமினி முனிவர் சொல்லியது போல, "பூர்வத்தில் இல்லாததை பிறகு இருப்பதாக சொல்லப்படும் உத்திரபாடத்தில் எதில் ஒன்று காணப்பட்டு இருந்தாலும் அதை ஏற்கக்கூடாது" என்கிற விதிப்படியும், வியாஸருடைய பாரதத்தை ஜனமேஜய னுக்கு சொல்லும் வைசம்பாயணருடைய "தர்மார்த்தகாம மோட்சங்களைப் பற்றி இதில் (பாரதத்தில்) என்ன இருக்கிறதோ அதுதான் மற்றவற்றிலும் இருக்கிறது; இதில் இல்லாதது எதிலும் இல்லை" என்னும் ஆதிபர்வத்து 63வது அத்தியாய வசனமும் உறுதியாக சொல்லுவதால் இதிஹாசம் என்று போற்றப்பெறும் இப்பார தம் பூர்வ நூலாகவும், ஸ்ரீமத் பாகவதம் என்பது அதற்கடுத்த 'உத்திரபாடமாக'

இருப்பதாலும் மேற்கண்ட இரண்டு விதிகளைக்கொண்டு பார்த்தோமானால் "ஸ்ரீமத் கிருஷ்ண பாகவதத்தின்" யோக்யதாம்ஸம் தெரியவரும்!

## ஒருபானை சோற்றுக்கு....

இம்மாதிரியான விதிகளையும் தவிர்த்து தர்மநியாயங்களை அறியும் நியாய நூல்களில் காணப்படும் "ஸ்தாலீபுலாக ந்யாயம்" (ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது மாதிரி!) என்பதின்படியும் வைணவர்களின் விஷ்ணு பரத்துவம் பேசும் எல்லா நூல்களையும் படிக்கவேண்டும் என்பதில்லை; இராமாயணத்தையோ; வியாஸர் அருளிய பாரதத்தையோ படித்தறிந்தால் போதுமானது! இல்லையேல், இவ்விரு நூலைப் படித்து புராண பிரசங்கம் செய்வோரது பிதற்றலை கேட்டாலும் போதும்!.)

இனி இவ்வைணவர்களின் விஷ்ணுவின் பரத்துவம் பேசும் சுவடிகளில் என்னென்ன மாதிரியான புரட்டு வேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதைக் காண்போம்! (இக்கூரேச விஜயத்தின் கருத்தையே நம்மில் பலரும் நம்புவதாலும் இங்கே அவை தரப்பட்டுள்ளன.) வைணவர்களுடைய கூரேசவிஜயத்தில் எந்த கருத்து வந்தால் என்ன? என்று யாரும் நினைத்துவிட வேண்டாம்!. காரணம், நம்மில் பலரும் அதில் கூறப்பட்டுள்ள கருத்தை “இருக்கும்” என்று நம்புவதாலும், அதே கருத்தை பலரிடமும் பரப்பி வருவதாலும் அது மேலும் பரவாமலிருக்கவே இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

(எப்போதோ சொல்லப்பட்ட விஷயத்தை இப்போது கிளறுவானேன்? என்று இந்த கூரேச விஜயம் சம்பந்தமாக நம்மவர்களுக்கும் தோன்றலாம், இந்த கூரேச விஜயத்தில் அன்றைய காலகட்டத்தில் (1800 முதல் 1900 வரையிலான காலக்கட்டத்தில்) வைணவர்கள் பரப்பிய பல புரட்டுகளை நம்மவர்களும், வைணவர்களும் “உண்மை” என்று நம்பியதால், அக்காலக் கட்டத்தில் சிவஸ்ரீ சோமசுந்தர நாயகர் தமது “கூரேசவிஜய பங்கம்” எனும் நூலின் வாயிலாகவும், ஸ்ரீ பாம்பன் சுவாமிகள் தமது “சைவ சமய நெறி” மற்றும் “நாலாயிர பிரபந்த விசாரம்” எனும் நூலின் வாயிலாகவும், தமது சைவ சமய பிரசங்கங்கள் மூலமாகவும் அப்புரட்டுக்களை தக்க பிரமாணங்கொண்டு கண்டித்து, மறுத்து வந்தனர் அவ்விதம் பிரமாணத்துடன் மறுத்தும் அப்பொய்யான புரட்டிற்கு இன்றும் வேலுக்குடி கிருஷ்ணன், முரளீதர சுவாமிகள் மாதிரியானவர்களால் அதன் ஆயுள் ஊசலாடிக்கொண்டிருப்பதால் உங்களுக்கு நாங்கள் அவற்றின் யோக்யதாம்சத்தைத் தெரிவிக்கக் கடமைப் பட்டிருப்பதால் இங்கு அவை பற்றிய விவரத்தை சுருக்கமாகத் தந்திருக்கிறோம்.)

வைணவர்கள் போற்றும் 'கூரேச விஜயம்' எனும் நூலில்;

01. **“இராவணன் உருத்திரன் மீது வைத்த அபிமானத்திலே வேதத்தில் நமக - சமகங்களை செய்தான். ஆகவே உருத்திரனுக்கு பரத்துவம் பகரவொண்ணது” - என்றுள்ளது**.

அவ்விதமாயின், இந்த உருத்திரரை ஜபித்து, யுத்தத்தில் ஜயமடையும் வரத்தினை ஸ்ரீ நாராயணனும், அர்ஜுனனும் ஏன் சிவபெருமானை பூஜித்துப் பெறுவானேன்?. உருத்திரரை பணிவதால் உண்டாகும் நன்மைகளையும் நமக்குச் சொல்வானேன்? (**பாரதம்/ துரோணபர்வம்/ 202வது அத்தியாயம்**)

**02. "ஸ்ரீ இராமாயணத்தில் சிவன் இராமனுக்கு ஊழியம் செய்ய, அனுமாராக அவதரித்தார்" என்றும் உள்ளது. (இவ்விஷயத்தை ஸ்மார்த்தர்கள் எனும் பிராமணர்கள் வகுப்பைச் சேர்ந்தவர்களே நம்புகிறார்கள்!. இவர்களில் பலர் வேதம் படித்த வைதிகர்களும் அடக்கம்!)**

இவ்விஷயம் மூல நூலான, வால்மீகி எழுதிய "இராமாயணத்தில்" இல்லை, அதில் அநுமாரை வாயுவின் அம்சம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளதை, அந்நூலைப் படித்த அனைவருமே அறிவர். பூர்வத்தில் இல்லாத ஒன்றை உத்தரத்தில் சொல்வது என்பதை அறிவுடையவர் ஏற்பதில்லை. (பூர்வ இதிஹாசமான வால்மீகி இராமாயண த்தில் இராமனுக்கு பத்தினி சீதை என்று இருப்பதை, பிற்பாடு நம் கைவண்ணத்தை காண்பிக்கிற உத்தரபாடமாக, இராமனுக்கு மனைவி மண்டோதரி, இராவணனுக்கு தம்பி இலட்சுமணன் என்றால் ஏற்பார்களோ?)

ஆனால் சிவபெருமானோ தன்னுடைய பக்தனுக்காக எந்த வடிவிலும் வருவார்; அவர்களுக்காக எதுவும் செய்வார் என்பதற்கு அர்ஜுனன், பாணன், குபேரன், கண்ணப்ப நாயனார் முதலியோரது சரித்திரம் படித்து உணரலாம். இவர்க ளுக்கெல்லாம் உதவிய ஸ்ரீ பரமேச்வரர் இராமனுக்கு உதவியிருக்க மாட்டாரா? என்றால் அவ்வைணவர்கள் கூறும் செய்தியின் விதம் அர்த்தத்தையே மாற்றும் அளவுக்கல்லவா இருக்கிறது? இதுவரை எந்த புராணாதிகளிலும் ஸ்ரீ பரமேச்வரர் கர்ப்ப வாஸம் இருந்து, வளர்ந்து, அடுத்தவருக்கு உதவ அவதரித்தார் என்பது போல எதிலுமே இல்லாத போது, இவர்கள் புதிதாக ஓர் கருத்தை வலியுறுத்தி, அதை நம்பும்படி செய்வதற்குண்டான கீழான வேலைகளில் இறங்கவேண்டாமே?

அந்த இராமாயணத்தில் இராமனுக்கு உதவத்தான் ஸ்ரீ பரமேச்வரருடைய தாசனான ஸ்ரீ அகத்தியமுனி அவர்களுக்கு "ஆதித்ய ஹ்ருதயம்" உபதேசித்திருக்கி றாரே அது ஒன்று போதாதா? அனுமாராக வந்து உதவினார் என்பதற்கு பூர்வ ஆதாரமில்லாமல் அதை ஏதோ பெருமையாக ஏழை ஜனங்கள் நம்பும் படி கிறுக்கி வைப்பானேன்? (பத்மபுராணம் பூர்வ நூலில் இராமன் சிவனாரை உபாஸித்த விவரமும், ஸ்ரீ பரமேச்வரர் அதற்கிசைந்து இராமனுக்கு உபதேசமும் (ஈஸ்வர கீதை) இராவணனைக் கொல்ல ஆயுதமும் அளித்த விவரம் உள்ளது!)

அநுமன் சிவாம்ஸம் பெற்ற வைபவத்தை நாம் சற்றே பரியாலோசிப்போம்! ,

விஷ்ணுவானவர் சிவனை நோக்கி, "நீ எமது ஏழாவது அவதாரத்தில் தூதனாகவும், சேவகனாகவும், வாகனமாகவும், குரங்கு ரூபமாகப் பிறப்பாயாக!' என்று பணித்ததாய் ஓர் "கபோதியுபநிஷத்" இருப்பதாக வைணவர் வரைந்து வைத்த சுவடியை ஆதாரமாகக் காட்டிப் பரப்பியதுண்டு!.

"எனது ஏழாவது அவதாரத்தில்" என்று விஷ்ணு பிரஸ்தாபித்ததால், அவரது ஒரு அவதார வைபவத்திற்கு முன்னதாக இந்தக் கட்டளையை சிவனாருக்கு இட்டதாக எண்ண வேண்டியிருக்கிறது!. அவரது மற்றைய ஆறு அவதார காலத்தில் அவருக்கு சிவனாரின் "சகாயம்" வேண்டியதில்லை போலும்!!. தனக்கு வரக்கூடிய தூதனைக் குரங்காய் வர ஏன் விரும்ப வேண்டும்?! அவரது ஏழாவது அவதாரமோ மநுஷ்ய ரூபம். அவரது அந்த அவதார காலத்தில் அவருக்கு வாய்த்த சத்ருவோ ஒரு இராட்சசன். தான் விரும்பிய தூதன் அல்லது அமைச்சன் ஓர் மநுஷ்யனாக வாவது இராட்சசனாகவாவது அமைந்திடலே உசிதம். இவ்விஷயத்திலும் விஷ்ணு வினது 'குரங்குப்பிடி' மிகுந்த நகைப்பிற்கிடமாயிற்று!!.

தவிர, அந்த அவதாரத்தில் இராமனோ சரயு நதியில் விழுந்திறந்த விவரமும், அவனது பத்தினி மண்ணில் படிந்து மடிந்த விவரமும் இருக்க, தமக்கு தூதனாக - சேவகனாக - அமைச்சனாக - வாகனமாக இருந்து ஏவல் செய்யப் பணிக்கப்பட்ட அநுமன் மாத்திரம் 'சிரஞ்சீவி' யாய் இன்னும் இருக்கிறான் என்றால்?!...... அந்தக் குரங்கு இன்னும் க்ஷேமாய் இருக்கிறபோது அந்த இராமனும் அவனது வாரிசுகளும் மாண்டு போனது அதிக பரிதாபமே!!

தசாவதாரங்களும் 'அம்ஸம்' என்று வாதிட்டு வருந்தும் வைணவர்கள் எந்த அவதாரத்தையாவது சாகாமல் காப்பாற்றி நிலைக்கப் பார்த்தார்களா?! துஷ்டர் களைத் தண்டித்த மூர்த்தங்கள், அந்தத் துஷ்டர்கள் செத்தது போலவே பின்னர் செத்துப் போன சரிதங்கள், "கர்மாதீனமுடையது" என்பதையல்லவா ருசுப்படுத்து கிறது?

இராவணனும் செத்தான் - இராமனும் செத்தான் என்பதும்; கம்ஸனும் செத்தான் கிருஷ்ணனும் செத்தான் என்பனவெல்லாம் அதிக ஈனமானதும், சாதுக்கள் மனதுக்கு அதிக கஷ்டமானதுமன்றோ?!

சைவ சமய பெரியோர்கள் யாரும் பூர்வத்தில் சொல்லப்பட்டதை மாற்றத் துணிந்தவர்கள் கிடையாது என்பதும், அதை அப்படியே ஏற்றவர்கள் என்பதும் இதுவரை நடந்து வருகின்ற ஒரு பெரும் புண்ணியம்,

**03. "துரோணருடைய பத்தினிக்கு நிதம்பம் பெரிதாகவும், அழகாகவும் இருப்பதைக் கேள்வியுற்று அதைக்காண வந்த சிவனுக்கு வீரியம் வெளியேற, அவ்வீரியம் குதிரைக்கு வைத்த உணவில் விழுந்து (அஸ்வ உணவில்) அதனால் குதிரைக்கு உண்டானவன் "அஸ்வத்தாமா" என்று பாரதம் சொல்கிறதாக அதே கூரேச விஜயம் கூசாமல் சொல்கிறது.**

ஆனால், ஸ்ரீ வியாசர் எழுதிய பாரதத்தில் (மூலத்தில்) சிவாநுக்ரஹத்தினால் துரோணருடைய பத்தினிக்குப் பிள்ளை பிறந்தது. பிறந்ததும் அக்குழந்தை குதிரை யைப் போல் கனைத்ததால் "அஸ்வத்தாமா" என்று பெயரிட்டார்கள் என்றே இருக்கி ன்றது. (என்னதான் இவர்களுடைய நோக்கம்?) கௌதம முனிவரின் திருமணத்திற் குத் தேவர் குழாமுடன் சென்றிருந்த ஹரிக்கும் அகலிகையின் அழகைக்கண்டு

“ஸ்கலிதம்” ஆனதும், அதற்குப் பிராயச்சித்தமாக அவர் விபூதியணிந்து, விபூதியை மருந்தாகவும் உட்கொண்ட விவரம் பஸ்மஜ்ஜாபாலோபநிஷத்தில் இருப்பதை சகியாத பாஞ்சராத்ரிகள் என்ன செய்வார்கள்? பாவம்!

04. **“நரசிம்ஹ உருவையடைந்த விஷ்ணுவே சரப உருவில் இருந்த சிவனைக் கிழித்தெறிந்தார் என்று கருட புராணம் சொல்வதாக இக் கூரேச விஜயம் கக்குகிறது.**

இது உண்மையானால், இவ்விவரம் வைணவரின் நரசிம்ஹத்தின் பெருமை விளம்பும் 'நரசிம்ஹதாபிநி' என்னும் நூலில் அல்லவா இருக்கவேண்டும்? கர்மம்!. கர்மம்!!. பாஷ்யம் என்ற பெயரில் இவர்கள் செய்யும் அட்டுழியத்திற்கும், அருவருப்புக்கும் அளவேயில்லையா? சரபத்தின் பெருமை மஹிமை அறிய “சரபோபநிஷத்” இன்றும் இருக்கின்றதே?! இவ்வுபநிஷத்தில்;

**“யோகோரம் வேஷ மாஸ்தாயசரபாக்யம் மஹேச்வர:**
**ந்ருஸிம்ஹம் லோஹஹந்தாரம் ஸஞ்ஜஹா நமஹாபல:”**

-(பயங்கரமான சரப வேஷம் தரித்து லோகத்திற்குக் கெடுதலாயிருந்த நரசிம்ஹத்தை அடித்தவர் சிவபெருமான்) என்றும், விஷ்ணுமூர்த்தியையும், அவருடைய அவதாரங்களான மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்மாதிகளையும் வாட்டிப் பீடித்து இரட்சிப்பவர் சிவபெருமான் எனும் பொருள் தரும்; ‘யோமத்ஸ்ய கூர்ம வரக ஸிம்ஹாந் விஷ்ணும்க்ரமந்தம் வாம நமாதிதேவ: விவிக்லபம்பீட்யமாநம்” எனும் புராண வசனம் அதே ‘சரபோபநிஷத்' தில்தான் இருக்கின்றது.

சரப உருவில் வந்த சிவபெருமான் நரசிம்மத்தை கிழித்தெறிந்ததை ஏற்க முடியாத இப்பாஞ்சராத்திரி பாஷண்டிகளிடம்;

- அச்சரபம் பிறகு எதற்காக ஆவிர்ப்பித்தது?
- அச்சரபம் எப்போது ஆவிர்ப்பித்தது?
- ஏன் ஆவிர்ப்பித்தது?
- தூணில் இருந்து ஹரியானவன் - நரசிம்மனாக வெளிவந்த போது இவ்வுலகில் நிகழ்ந்த அதிசயங்கள் என்னென்ன?
- நரசிம்மம் ஹிரண்யனைக் கொல்ல தூணில் ஆவிர்ப்பித்தபோது சரபம் எங்கு இருந்தது?

என்னும் அடிப்படைக் கேள்விக்கு யாது பதில் சொல்வார்களோ?

05. **தைத்ரீயத்தில் வரும்** "ஹரிம் ஹரந்தமநுயம்திதேவா: விச்வஸ் யே சாநம்வ்ருஷபம் மதீநாம்” **என வரும் வரிகளுக்கு பாஷ்யமெழுதிய மேற்படி கூரேச விஜயம்; சரபமாய் வந்த சிவனைக்கொன்ற ஹரியை தேவர்கள் பின் தொடர்ந்தார்கள் என்று கூசாமல் விளம்பியிருக்கின்றது.**

உண்மையில் அவ்வரிகளுக்கு; “ஹரியெனும் நரசிங்கத்தை ஹரித்தவரும், வித்தைகளை ஸ்வரூபமாகக் கொண்ட விருஷப தேவரும், ஈசானருமாய் விளங்கும் சரபேச்வரரை தேவர்கள் பின் தொடர்ந்தார்கள்” என்பது பொருள், பாஷியம் செய்தவர்கள் ஒரு வார்த்தைக்கும், ஒரு வரிக்கும் எவ்விதம் “பாஷியம்' செய்து பிழைத்திருக்கிறார்கள் என்பதற்கு இதுவும் சாட்சி!.

**எல்லாவற்றையும் விடச் சைவர்களுக்கு போட்டியாக ஸ்தலபுராணங்களிலும் வைணவர்கள் தம் கைவரிசையை காண்பிக்கத் தவறவில்லை!. திருவையாறு அருகில் உள்ள திருக்கண்டியூர் என்னும் ஸ்தலத்தில் பிரம்மாவின் அகம் பாவத்தைப் போக்க அவனது ஒரு தலையை வைரவராக தோன்றித் தன் இடக்கை விரலால் கிள்ளி எறிந்த புராணத்திற்கேற்ப அத்தலத்தில் சிவபெருமான் பிரும்மசிரக் கண்டீச்வரர் ஆக வீற்றிருந்து அருள்பாலிப்பது யாவரும் அறிந்ததே!**

ஆனால் இச்சிவாலயத்திற்கு எதிரே ‘ஹரசாப நிவர்த்திப் பெருமாள்’ என்னும் வைணவ கோவிலில் ஸ்தல புராணமாக பிரும்மாவின் தலையைக் கிள்ளியதால் ஏற்பட்ட 'பிரும்மஹத்தி* தோஷத்தையும், பிரும்மா சிவனுக்கு இட்ட சாபத்தை அங்கு இருக்கும் பெருமாள் நிவிருத்தி செய்ததாகவும் இட்டுக்கட்டின பொய்யை ஸ்தல புராணம் என்று இதுநாள் வரை சொல்லித் திரிகின்றனர். (யாரோ ஒரு அரசனுக்கு நேர்ந்த சாபத்தை நீக்கியதால் "அரசசாப நிவர்த்திப் பெருமாள்" என்று இருந்தாலாவது போகட்டும்! என்று விட்டு விடலாம்! ஆனால் ஹரி சம்பந்தப் பட்ட புராணங்கள் அவனுக்கு அந்த யோக்யதாம்ஸம் இல்லை என்று பகர்வதையும், அவனே அடுத்தவரது சாபத்தைக் கடக்க முடியாது பிறவிகள் பல எடுத்தான் என்பதையும் தெரிவிக்கிறபோது.. . .)

அனைத்து உயிர்களுக்கும் முக்தியின்பத்தை தந்து ரட்சிக்கும் ஸ்ரீ மஹாதேவர் கொலை செய்வாரா? பிரும்மாவை அவர் கொன்றால்தானே பிரும்மஹத்தியும், சாபமும்?!. பிரம்மப் பிரளய காலத்தில் இதுவரை அநேக பிரம்மர்களை எரித்து, அவர்களது கபாலங்களை மாலையாக தரித்தபொது ஸ்ரீ அகோர வைரவருக்கு பீடிக்காத “பிரும்மஹத்தி” ஒரு தலையை கிள்ளி, பிரும்மாவை நான்கு தலையோடு உலவ விட்டதினால் ஏற்பட்டது என்றால், அதை ஏற்க யார் இருக்கிறார்கள்? ஹரியினது அவதாரங்களான மச்ச, கூர்ம, வராஹ, நரசிம்ஹம் முதலியவற்றை “நிக்ரஹம்” செய்தபோது ஸ்ரீ பரமேச்வரரை பற்றாத ‘ப்ரும்மஹத்தி’ பிரும்மாவின் ஒரு தலையைக் கிள்ளி அவனை நான்கு தலையோடு அலையவிட்டதினால் ஏற்பட்டது என்பதை அவ்வைணவரைத் தவிர வேறு எவர் ஏற்பார்கள்?!

ஒரு நாட்டை அரசாளும் மன்னன் குற்றம் செய்தவர்களைத் தண்டிக்கும் போது, சிரச்சேதம், மாறுகால், மாறு கை வாங்குதல், கண்ணைக் குருடாக்குதல் முதலிய தண்டனைகளை விதிக்கும் போது அந்த மன்னனை எந்த “ஹத்தி”யும் பீடிக்காத போது, ஜனங்கள் நல்லவிதமாய் சட்ட திட்டத்துடன் வாழ ராஜ நீதியையும், அந்த ராஜன் நீதி பரிபாலனம் செய்ய “தண்ட நீதியையும் வகுத்தலித்ததே ஸ்ரீ பரமேச்வரர் தானே?! குடிகள் செய்யும் குற்றத்திற்கு மரண தண்டனை முதலியவை

அளிக்கும் அரசனைப் பற்றாத 'ப்ரும்மஹத்தி', அரசர்களுக்கு தண்ட நீதியை வகுத்தளித்த நம் ஹரனைப் பற்றியதாக சொல்வது ஏற்புடையதா?

ஸ்ரீ மஹாதேவர் உருத்திராக மாறினால் எவனுக்கு அவர் முன்பு நிற்கும் அருகதையிருக்கிறது? வேடிக்கை!!. தன் உந்திக்கமலத்தில் உதித்த தன் மகனை காக்கவும், அவனது ஒரு தலையை இழக்காமல் காக்கவும், இந்த லோகோபகாரத் திற்கென்றே எங்கும் வியாபித்து இருக்கும் தொப்புள் கொடியுடையத் திருமால், அப்போதே வந்து காத்து இரட்சிக்க வேண்டியதுதானே?! தன் மனதில் உதித்த மன்மதனையும் காப்பதற்கில்லை; உந்தியில் உதித்தப் பிரும்மாவையும் காக்க வக்கில்லை!. தட்சயாகத்தில் இவர் இருந்தும் மற்றைய தேவர்களை இரட்சிக்க வழியில்லை!!, தன் சகோதரனான இந்திரனுக்கு ஏற்பட்ட சாபங்களையும், அவமானங்களையும் போக்கியதில்லை!!! பாற்கடலில் விஷமுண்டான போது எங்கிருந்தார் என்று இதுநாள் வரை தெரியவில்லை!!. இவர் உலகத்தை இரட்சிப்பதற் கென்றே இருப்பவர் என்றும், இவர் சிவபெருமானுக்கு சாப விமோசனமும், பிரும்ம ஹத்தி தோஷமும் போக்கியவர் என்றால் பாமர ஏழையும் ஏற்பதில்லையே?!

07. **இக்கூரேச விஜயத்தில், மோஹினி வடிவக்காட்சியை 17வது பாடலில் "அங்கேயரனடி மீமிசையையன் பிறவியதாம்" என்று சிவனார் அமுதம் பங்கிட்ட மோகினியைப் புணரவில்லை, அது அவரது பாதத்தில் வீழ்ந்ததும், அதிலிருந்து சாஸ்தா என்னும் ஐயனார் பிறந்தார்! என்று கிறுக்கியிருக்கின்றனர்.**

அப்படியானால் சாஸ்தாவுக்கு "ஹரபாத புத்திரர்" என்றல்லவா திருநாமம் ஏற்பட்டிருக்க வேண்டும்? "ஹரிஹர புத்திரர்" என்கிற பெயர் எப்படி வந்தது? மோஹினி அவதாரத்தில் விஷ்ணு மோகித்து இருந்ததினால் "மால்" என்னும் பெயர் வந்ததை வைணவர் மறுப்பரோ?. சிவனும் விஷ்ணுவும் சாலவிருட்சத்தின் அடியில் புணர்ந்த போது சிவனுக்கு பெருகிய வியர்வையே "கண்டகி" நதி என்றும், அந்நதியின் இருமருங்கே கிடக்கும் கற்களே வைணவர்கள் "விஷ்ணு"வாகப் போற்றும் *சாலக்ராம கற்கள்" என்பதையும் வைணவர்கள் மறுப்பரோ?.

08. **வைணவர்களது பாகவதத்திலும், அவர்களது நாலாயிரப் பிரபந்தத்திலும், சிவபெருமான், விநாயகர், துர்கை முதலியோரை ஸ்ரீ கிருஷ்ணன், அநிருத்திர னை பாணாசுரனுடைய சிறையில் இருந்து மீட்க வந்தபோது அடித்து துரத்த அவர்கள் 'பிழைத்தால்போதும்!' என்று ஓடினார்கள் என்று எழுதியிருக்கிறார் கள்!. எப்படி?...**

**அ)** சூரபத்மன் தம்பியான தாரகாசுரனை வெல்லமுடியாது, அவன் கழுத்தில் ஆபரணமாக விழுந்த சக்ராயுதத்தை எடுத்துக்கொண்டு சக்ரபாணியாக ஓடினானே? அது போலவா?

**ஆ)** இரண்யாட்சகன் மகனான அந்தகாசுரனுடன் போரிட்டு, கிருஷ்ணன் இயலாமல் ஆற்றோடினானே அது போலவா?

**இ)** சப்தரிஷிகளால் இந்திரன் பொருட்டு உண்டாக்கின, இரக்தாசுரன், இரக்தபீ ஜாட்சன், பஞ்சராவணன் என்னும் ஏழு அசுரர்களுடன் ‘வைகுண்ட வாசுதேவர்’ சண்டை செய்ய இயலாமல் ஓடியது போலவா?

**ஈ)** கஜாசுரனை வெல்ல முடியாமல் ஸ்ரீ கமலக்கண்ணர், தம் கையில் விரலில்லாமல் ஓடினானே? அது போலவா?

**உ)** தட்ச யாகத்தில் வீரபத்ரரால் தன் தலை திருகப்பட்டபோது, 'மான்' வடிவந்தாங்கி ஓடினானே அது போலவா?

**ஊ)** தாருகாசுரனுக்கு பயந்து வேதத்தை ஒளித்து வைக்க ‘மீன்’ உருக்கொண்டு ஓடினானே அது போலவா?

**எ)** காலயவனன், மதுராபுரியை முற்றுகையிட்டபோது, தன்னுடைய சேனைகளை துவாரகைக்கு அனுப்பிவிட்டு, மலைக்குகையில் ஓளிந்து கொள்ள ஓடினானே அது போலவா?

**ஏ)** ஜராசந்தனை கொல்ல முடியாமல் நாடோடியைப் போல சொந்த தேசமான மதுராபுரியை விட்டு, பலத்த காவல்களை அமைத்துக் கொண்டு கடற்கரையோரத்தி லுள்ள தீவில் மறைந்து வாழ்ந்தானே அது போலவா?

இவ்விதம் வைணவர் வணங்கும் ஹரியானவன் ஓடியதையும், ஒளிந்ததையும் சகிக்காத வைணவர் சிவபெருமானும் ஓடினான்! என்று தூஷித்திருக் கிறார்கள். மூல நூலான பாரதத்தில் கிருஷ்ணனுக்கு பயந்து சிவபெருமானும், துர்கையும், விநாயகரும் ஓடி ஒளிந்தார்கள், தோற்றார்கள் என்று சொல்லப்பட வில்லை, அநிருத்திரனை மீட்க அவனது மாளிகைக்கு வந்த ஸ்ரீ கிருஷ்ணன் அம்மாளிகையின் வனப்பைக்கண்டு வியந்து நின்றான் என்றும், அம்மாளிகைக்கு காவல் புரிந்த சிவபெருமானை மீறி உள்ளே சென்று, பாணாசுரனின் கைகளை வெட்டினான் என்றும், அநிருத்திரனை மீட்டு வரும் சமயம் அம்மாளிகையில் குவிந்து கிடந்த ‘செல்வங்களை’ அள்ளிச் சென்றான் என்றும்தான் வருகிறது.

சிவபெருமானால் அபயம் கொடுக்கப்பட்டதனால் பாணனை ஒருவராலும் வதஞ்செய்யப்பட மாட்டான் எனவும், அது தெரியாமல் ஸ்ரீ கிருஷ்ணன் அப்பாணனை வதஞ்செய்ய முயன்றான் எனவும்:

"அஸ்மத்ஸம்ச்ர யதருப்தோபி நாயம்வத்யஸ்த்வயாஸ்வயம் மயாதத்த வரோதைத்ய: ததஸ்தம் க்ஷமயாம்யஹம்" என்னும் **விஷ்ணு புராண** வசனத்தால், ‘இந்த பாணன் கர்வம் கொண்டு திரிந்தாலும் என்னாலே அநுக்ரஹம் பெற்றவனாக இருத்தலால் இவனது அபராதங்கள் என்னால் க்ஷமிக்கப் (பொருத்தருளப்) பட்டன. இவன் உன்னால் கொல்லத்தக்கவன் அல்ல என்பதையும் அறியக்கடவாய்!' என்று சிவனார் ஸ்ரீ கிருஷ்ணனிடம் சொல்லியதில் இருந்து அந்த கிருஷ்ணனும் ஸ்ரீ பரமேச்வரருக்கு யார்? என்பதும் அவன் எப்படிப்பட்டவன் என்பதும் தெரிகிறதே?!

தவிர, **"பாஹுஷுச்சித்யமாநேஷு பாணஸ்ய பகவாந்சிவா: பக்தாநுகம் பீஸத்பூஜ்யச் சக்ராயுதம் பாஷதா அயம்மமேஷ்டோ தயிதோநுவர்த்தி மயாபயம் தத்தபமுஷ்யதேவ ஸம்பாத்யதாம் தத்பவத; ப்ரஸாத: யதாஹிதே தைத்யவதேப் பாஸசுத:"** என்றும் சிவனார் ஸ்ரீ கிருஷ்ணரிடம் சொன்ன வசனத்தில் இருந்து 'இப்பாணன் நமக்கு அதிக ப்ரீதி உள்ளவன். அவனுக்கு நாம் அபயம் கொடுத்திருக்கிறோம் இவனை வதம் செய்யும் விஷயத்தில் எமது அநுக்ரஹத்தை நீ எப்படி அடைய வேண்டுமோ அதைத் தேடிக்கொள் வாய்!" என்கிற பொருள் பெறப்படுவதில் இருந்தும் சிவபக்தனை கொல்வதென்றாலும் அந்த சிவனாரின் அநுக்ரஹம் தேவை என்பதும் நாம் அறிந்து கொள்ளலாம்.

பூர்வ புராணம் இவ்விதம் சொல்லியிருக்க, உத்திரபாடமாக கிறுக்கப்பட்டதிலி ருந்து, அப்புராணத்தை பொதுமக்களிடம் "கதாகாலாட்சேபம்" செய்து பிழைப்போர் தாம் வணங்கும் இவ்வித சிறுதெய்வங்களுக்கு ஏற்றம் கூற, அதை பொதுமக்களிடம் பிரசிங்கிக்கும் போது மேலும் தன் சொந்தக் கருத்துடன் கண்ணீர்மல்க பேசி, கேட்போரையும் மதியிழக்கச் செய்து பிழைப்பதும் நடக்கிறது. இவர்களது இப்பிரசங் கத்தினால் அவர்களுக்கு பணம் கிடைக்கும்!. உண்மையான சிவபக்தியும், முக்தியும் கிடைக்குமா?!

அநிருத்தன், பாணனுடைய மகள் உஷையை களவில் சந்தித்து சுகித்திருந்த விஷயமறிந்த பாணன் ஒரு பொறுப்புள்ள தகப்பன் செய்ய வேண்டியதைத்தான் செய்தான், அநிருத்தனை சிறையில் இட்டான். இதில் என்ன தவறு? தன்னைப் போலவே பெண்கள் விஷயத்தில் "களவில்" ஈடுபடுகிறானே தன் பேரன்? என்று கண்ணன் பெருமை கொண்டான் போலும்!.

தென்னந்தோப்பிற்குச் சொந்தக்காரன், தன் தோப்பில் தேங்காய் திருட வந்த வனை அம்மரத்திலே கட்டிப்போட்டு அடிப்பது (ஆனால் கொல்லத் துணியமாட்டார் கள்!) இன்றும் வழக்கத்தில் உள்ளது, அத் தேங்காய் திருடியவனின் தாத்தா, தென்னந் தோப்பிற்குச் சொந்தக்காரனை அடித்து, தன் பேரனை மரத்தோடு கட்டிப்போட்ட அவனது கையையும் வெட்டிப் போட்டு, மரத்தோடு மரமாக கட்டப்பட்டிருக்கும் - தேங்காய் திருடின தன் பேரனையும் மீட்டுச் செல்லும்போது, அத்தோப்பிலிருந்து தென்னங்கீற்றுகள், மட்டை, மற்றும் அங்கிருந்த தேங்காய்களையும் திருடிச் சென்றால் அந்த "தாத்தா"வின் செயல் நியாயம் என்று எவன் ஏற்பான்? இதில் தோட்டத்தைக் காவல் புரிந்தவனை மீறி உள்ளே சென்றான் என்கிற பெருமை வேறு!.

பிரும்ம தேவரை சிறையிட்ட முருகவேலிடம் பிரணவ உபதேசம் பெற வேண்டி சிவபெருமான் தாம் சிஷ்யபாவத்தில் இருந்து முருகனை வணங்கித் துதித்து பாராட்டியதும், பாணன் பக்திக்கு அவனது கோட்டையை காவல் புரிந்ததும், எளிய வழிபாட்டினால் பகீரதனுக்கு கங்கையை சிரசில் சுமந்ததும், கண்ணப்பனின் கால் வைக்க தம் முகத்தை காண்பித்ததும், சாக்கிய நாயனாரின் கல்லெறி வந்தனத்தை புஷ்பாபிஷேகமாக ஏற்றதும், இதுபோன்ற இன்னபிற உண்மைச் சரிதங்கள் சிவனாரின் மேன்மையை உணர்த்துகையில் தன்னால் பலமுறை

அநுக்ரஹிக்கப்பட்ட இந்தக் கிருஷ்ணனுக்கு ஸ்ரீ பரமேச்வரர் பணிந்து - அஞ்சியது போல் நாடகம் புரிதலும் சிவபெருமானைத் தாழ்த்துமா?

சமஸ்த லோகங்களையும் சம்ஹாரம் செய்யும் காலசம்ஹாரரான ஸ்ரீ சங்கரர் பாணனது கோட்டைக்கு காவல் இருந்ததற்கும், அவரை அக்கீழான பணிக்கு வைத்த அப்பாணன் அடைந்த முடிவுக்கும் நிறைய தத்துவங்கள் அடங்கியிருக்கிறது. அத்தத்துவம் புரியாதவர்கள் அந்தப் பாணன் யாரிடம் தோற்றான்? இன்னோரு சிறந்த சிவபக்தனான ஸ்ரீ கிருஷ்ணரிடம்தானே?!' என்று இத்தோடு விட்டுவிடுங்கள்!

இது தவிர, பூர்வ ப்ரமாணம் இல்லாமலும், இந்திரனே நம்பமுடியாததுமான இன்னொரு சிவநிந்தனைப் புரட்டையும் இவர்கள் உலவ விட்டுள்ளனர். "இந்திரன் விஷ்ணுவை யாகப்பதியாகக் கொண்டு யாகம் செய்தபோது, தமக்குரிய யாகப் பாகத்தை இந்திரனிடம் சிவன் யாசிக்க வந்ததாகவும், இந்திரன் மறுத்து போரிட்டு இயலாமல் அலறி ஓடியதாகவும், இந்திரனையும், யாகத்தையும் நிறைவேற்றும் பொருட்டு, விஷ்ணுவானவர் சிவனுடன் சண்டையிட்டு தம் சக்ராயுதத்தால் சிவனது ஐந்து தலையையும் வெட்டி வீழ்த்தியதாகவும்" சொல்லப்படுவதே அது!.

ஸ்ரீ பரமேச்வரருடைய ஐந்து முகங்களும் எல்லாத் தேவர்களாலும் (விஷ்ணு உட்பட) போற்றித் துதி செய்த பெருமையையும், இவ்வுலக உயிர்கள் உய்யும் பொருட்டு வேதங்களை அருளியதாகவும் சுருதி வசனத்தால் அறியப்படும் உண்மைகள். ஈசானம், தத்புருஷம், வாமதேவம், அகோரம், சத்யோஜாதம் என்னும் அவற்றின் மகிமைகளை இதுவரை எவராலும் சொல்லப்படாததே!. வேதமும், ஸ்மிருதியும், மற்றுமுள்ள உபநிஷத்துக்களும் ஸ்ரீ பரமேச்வரருடைய இவ்வைந்து முகத்தை "பஞ்சப்ரஹ்மங்கள்" என்று அழைப்பதில் இருந்து சிவனாரின் ஐந்து முகத்தின் பெருமையை நாம் தெரிந்து கொள்ளலாம்!

**நாராயணோபநிஷத்தில்:**

"ஸத்யோ ஜாதம் ப்ரபத்யாமி ஸத்யோஜாதா வை நமோ நம: பவே பவே நாதி பவே பவஸ்யமாம் பவோத் பவாய நம: வாமதேவாய நமோ ஜயேஷ்டாய நம: ச்ரேஷ்டாய நமோ ருத்ராய நம: காலாய நம: கலவிகரணாய நமோ பவாய நமோ பலப்ரமதநாய நம: ஸர்வபூததமநாய ந்மோ மநோந்மநாய நம்: அகோரேப்யோத: கோரேப்யோ கோரகோரதரேப்ய: ஸர்வேப்ய: ஸர்வசர்வேப்யோ நமஸ்தே அஸ்து ருத்ரரூபேப்ய: தத்புருஷாய வித்மஹே மஹா தேவாய தீமஹி தந்நோ ருத்ரப்ரஜோ தயாத் ஈசாந: ஸர்வ வித்யாநாமீச்வர: ஸர்வடபூதாநாம் ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்ம னோதி பதிர் ப்ரஹ்மா சிவோமே அஸ்து ஸதாசிவோம்" என்றல்லவா அந்த நாராயணன் மூலமாகத் துதிக்கிறது?.

நாராயணனனை ரிஷியாகக் (கர்த்தாவாகக்) கொண்ட நாராயணோபநிஷத்தில் இவ்விதம் இருக்க, இதற்கு முரணாய் தாம் துதி செய்து போற்றிய ஐந்து தலைக ளுடைய சிவனாரை அவர் ப்ரஸாதித்த "சக்கரத்தால்" வெட்டினான் என்றால்?!......... சிவனாரை வெட்டிய அந்த சக்கரத்திற்கும், ஹரிக்கும் அந்த வல்லமை உண்டா?!

## வரலாற்றிலும் வைணவப் புரட்டு:

திருவரங்கத்து தூங்கும் பெருமாள் கோவிலின் தெற்கு கோபுரத்தில் இருந்து அப்பாவையங்கார் என்பவரும், பெரியாழ்வார் மற்றும் இரண்டு ஜீயர்கள் முதலியவர் கள் இக்கோவிலின் கிழக்கு கோபுரத்தில் இருந்தும் (கி பி 1489) கீழே குதித்துத் தற்கொலை செய்து கொண்டனர். (இதில், முதலில் கூறப்பட்ட அப்பாவையங்கார், மற்றும் பெரியாழ்வார் சிலைகளுக்கு அருகில் அவர்கள் எதனால் தற்கொலை செய்து கொண்டனர் என்கிற கல்வெட்டு உள்ளது. ஆனால் மற்ற இரு ஜீயர்கள் என்று கருதப்படும் சிலைகளுக்கருகில் எந்த கல்வெட்டும் இல்லை)

இவர்கள் நால்வரும் திருவரங்கத்துக் கோவிலுக்கு அப்போது அங்கு ஆண்ட மன்னன் கோனேரிராயன் எவ்வித 'படித்தனமும்' (நித்திய கைங்கர்யங்களுக்கான சிலவினங்களுக்கானவை) அளிக்காமல் நித்திய 'படித்தனம்' நடவாமல் இருக்கவே, மனம் நொந்து 'பெருமாளுக்கு இப்படி ஆகிவிட்டதே?!' என்று கோபுரத்தில் ஏறி 'தற்கொலை' செய்து கொண்டார்களாம். இப்படித்தான் சொல்கிறது அக்கல்வெட்டுச் செய்தி!,

தூங்கும் பெருமாள் கோவில் உள்ள திருவரங்கத்தின் 'மஹாத்மியம்' பேசும் வைணவர்களின் "கோயிலொழுகு" நூலில் 'கந்தாடை இராமாநுஜதாஸன் கைங்கர் யம்' எனும் பகுதியில், இக்கோனேரிராயன் திருவரங்கத்துக்கருகில் உள்ள திருவா னைக்கா கோவிலுக்கு எல்லா உதவிகளும் செய்து, இப்பெருமாள் கோவிலின் சொத்துக்களையும், வருவாய்களையும் திருவானைக்கா கோவிலுக்கு திருப்பி திருவரங்கக் கோவிலை சீந்தவே இல்லை என்றும், இக்கோனேறிராயனது நசுக்கலுக்கு திருவரங்கத்து 'திருக்கோவில்' ஆளானது என்றும்; அதனால் மேற் சொன்ன நாலுபேரும் கோபுரத்திலேறி கீழேவிழுந்து (தமது இன்னுயிர்?!) உயிர் நீத்து அக்கோனேரிராயனின் நெருக்குதலுக்கு முடிவு கட்டினர் என்றும் அக்கோனேரிரா யன் எனும் மன்னனை வைணவத்துக்கும் வைணவருக்கும் எதிரி என்பது மாதிரி சித்தரிக்கப்பட்டிருக்கிறது.

இதே கோயிலொழுகு, கந்தாடை இராமாநுஜர் விஜயநகரப் பேரரசன் சாளுவ நரசிம்மனின் உடன்பிறந்தவன் என்றும்; இக்கந்தாடை இராமாநுஜர் வைணவத்தின் இன்னொரு பிரிவினருக்கு மதத்தலைவராக திருவரங்கத்திலே திகழ்ந்தவர் என்றும், (இவர் திருவரங்க ஸ்தலசாத்திரம் படித்து மிகுந்த விரக்தியடைந்து வடக்கே தீர்த்த யாத்திரை புறப்பட்டு, மற்றுமுள்ள ஸ்தலங்களைத் தரிசிக்க தமது சகோதரன் நரசிம்மனிடம் தேசாந்தரி முத்திரை நடக்கத்தக்கதாக ராயசாசனமும், நிருபமும் வாங்கிக் கொண்டு திருமலை முதலிய ஸ்தலங்களுக்கெல்லாம் சென்று ஸ்ரீ ராமமாடை சமர்ப்பித்து (கிபி 1489) கந்தாடையண்ணன் திருவடிகளில் ஆச்ரயித்து விசேஷ நிஷ்டராய் சகல சாத்திரங்களையும் படித்து ஏகாங்கி வேஷம் தரித்து அண்ணன் சந்நதியிலே 'கந்தாடை ராமாநுஜதாசர்' என தாஸ்ய நாமமும் பெற்று ராய சாசனப்படி ஏகாங்கிகளுக்கு தலைவராய் ஸ்தலத்திலே இருந்து... ) இவர் கந்தாடை இராமாநுஜதாஸர் என்னும் திருநாமத்துடன் திருவரங்கத்து வைணவ

ஏகாங்கிகளுக்குத் தலைவராக பொறுப்பேற்ற (சக ஆண்டு 1411 ஆன கிபி 1489 ல்) இந்த ஆண்டில்தான் கோனேரிராயன் ஊறுவிளைவித்ததாகக் கூறிக் கோபுரம் ஏறி அந்நால்வரும் உயிர் துறந்ததாக அக் கோயிலொழுகு விளம்புகிறது. (இக்கோனேரிராயன் மீது படையெடுத்து வரும்படி தமது அண்ணன் வீர நரசிம்மனது தளபதி நரசநாயக்கரைத் தூண்டியதும் இக்கந்தாடை இராமாநுஜதாஸரே!)

## சரித்திரம் கூறும் உண்மை என்ன?

கிபி 1486ல் விஜயநகர மன்னன் பிரபுட தேவராயனின் ஆட்சி சாளுவ நரசிம்மனால் கவிழ்க்கப் பட்டதென்பதையும், இதனால் விஜயநகரப் பேரரசின் சங்கம குலம் அழிந்து சாளுவ குலம் உதயமானதும், அச்சங்கம குல மன்னர்களைப் பேரரசர்களாக ஏற்றுக்கொண்ட கோனேரிராயனால் தமக்குச் சமமான பதவியிலோ, அந்தஸ்திலோ சாளுவ தேசத்தாரையும், அக்குலத்தில் வந்தோரையும் ஏற்றுக்கொள் ளவில்லை. இதனால் கிபி 1486 முதல் கிபி 1495 வரை கோனேரிராயனின் தனி ஆட்சி தொடர்ந்தது. தம் ஆட்சியில் அரசியல் சூழ்ச்சிகள் செய்துவந்த இக்கந்தாடை இராமாநுஜ தாஸனின் தமையனான சாளுவ நரசிம்மன் மீதும் பகைமை இருந்தது.

இதன் காரணமாக, தான் மதியாத அந்நரசிம்மனது அண்ணனான கந்தாடை இராமாநுஜதாசன் வைணவத்தின் ஒரு பிரிவினருக்கு தலைவனாக இருந்ததும், அக்கந்தாடை இராமாநுஜனது சார்பாய் இருப்போர் மீதும் கோனேரிராயனுக்கு பகைமை இருப்பது தெளிவாய் விளங்குகிறது அல்லவா?! தன்மீது படை எடுக்க தம்பியை தூண்டிவிட்டவனாகவும், தன் ஆளுகைக்குட்பட்ட பிரதேசத்தில் "சமயம்" என்னும் போர்வையில் அரசியல் குழப்பம் விளைவித்தவனுமாக இருந்த இக்கந்தாடை இராமாநுஜதாஸன் மீதும் அவனைச்சார்ந்த மற்றோர் மீதும் அக்கோ னேரிராயன் மிகுந்த நெருக்குதலை அவர்களுக்குத் தந்திருப்பான். அரசன் என்ற முறையில் இராஜ்யம் நடத்தும் எவரும் அம்மன்னன் செய்த “நெருக்கடி” வேறு எந்த மன்னரும் செய்வதுதான்!. அரசனாக இல்லாதபோதே தம் அரசனுக்கு இவர்கள் தந்த நெருக்கடியைப் பார்த்தீர்களா?!

(வரலாறு ஆசிரியர்களின் சரியான இந்த யூகம், வரலாறே தெரியாத சாதாரண மானவரும் ஒப்பக்கூடியதாக இவ்வரலாற்று செய்தி இவ்விதம் இருக்க, அப்பாவை யங்கார், பெரியாழ்வார், மற்றும் இரு ஜீயர்கள்(?) ஆகிய நால்வரும் கோபுரத்தில் ஏறி தம்முயிர் போக்கிக் கொண்டதற்கு "அரசியல்" காரணமேயன்றி "ஆன்மீகம்" காரண மல்ல என்பது அக்கோனேரிராயனின் திருக்கோயிற் பணிகள் எந்த அளவிற்கு சிவா லயங்களுக்கு செய்யப் பெற்றனவோ, அந்த அளவிற்கு வைணவ ஆலயங்களுக்கும் நடைபெற்றன - என்பதிலிருந்தே அறியலாம்.)

திருப்பதியில் தன்பெயரால் ‘அமுதுபடி'க்காக சோழநாட்டிலுள்ள இரண்டு ஊர்களை (மருத்துவக்குடி மற்றும் வாழைக்குலைச்சேரி) வழங்கிய கல்வெட்டும், பந்தநல்லூர் ஆதிகேசவ பெருமாள் கோவிலுக்கு பல அறக்கொடைகள் செய்த கல்வெட்டும், திருவரங்கத்து கோவிலுக்கு இம்மன்னன் செய்த கொடைகளும்,

இவன் பெயரால் கோபுரத்திற்கமைத்த கதவுகளும் (திருவரங்க சொர்க வாசல் கோபுரக் கதவுகள்), திருவரங்கப் பெருமாளுக்கு நாள்தோறும் ததியோன்னம் (தயிர் சாதம்) நிவேதனம் செய்ய அருகில் உள்ள பிச்சாண்டவர் கோவில் நிலத்தை அளித்த கல்வெட்டும் அத்திருவரங்கத்து கோவிலில் கல்வெட்டாக இருக்கிறது. தவிர இக்கோனேரிராயன் வைணவத்திற்கு எதிரியானவன் அல்ல என்பதை திருமலை மற்றும், திருவரங்கத்து சாஸனங்களும் உறுதி செய்கிறது.

ஒரு பெரிய அரசியல் சூழ்ச்சி இருந்த காலத்தில் (அதில் ஈடுபட்டிருக்கக் கூடிய) நால்வர் அரசனுடைய தண்டனைக்குப் பயந்து தற்கொலை செய்து கொண்ட விஷயத்தை வைணவர்கள் தமக்கு சாதகமாக அதை ஆன்மீகத்திற்கான காரணமாக ஆக்கிக்கொள்ள சிறந்த தமிழ் மன்னன் கோனேரிராயனது பெயரைப் பயன்படுத்திக் கொள்வதில் வியப்பென்ன இருக்கிறது? இவர்கள் வரலாற்றையும் விட்டு வைக்கா மல் இருப்பதுதான் வேதனை!.

இப்படி கற்றவர்களையே இவர்கள் சொல்வது உண்மையாக இருக்குமோ? என்று ஐயுற வைத்து தம் இஷ்டத்திற்கு பூர்வத்தில் இல்லாத பல விஷயங்களைப் பிறகு இவர் சொன்னார், அவர் சொன்னார் என்று பாஷ்யம் என்கின்ற பெயரில் தம் சொந்தக் கருத்தை திணிக்கும் இவர் களது மாய்மாலங்களையெல்லாம் மீறி இன்றும் நாம் சிவபெருமான்தான் “பரம்பொருள்” என்று நாம் அறிந்து. தெளிய எண்ணற்ற மஹான்கள் அவதரித்த வண்ணம் இருக்கின்றார்கள்.

சுருதி வசனத்தைப் புராண வசனம் கொண்டு வெல்லத் துணிபவரது செய்கை யானது, இரும்பை எரும்பரிக்க முயல்வதை ஒக்கும் செயலாகும், சுருதியில் இல்லாத ஏதேனும் ஒரு புது மகிமையை புராணம் கூறுமாயின் அங்கனம் அது பிரமாணமாகும். சுருதியில் இருக்கும் மகிமையை மறுக்கும் புராண வசனங்கள் பிரமாணம் ஆகாது. அவற்றை வியாஸரது வாக்கியம் என்றாலும், அவை வேதபாஷியம் செய்தவர்களது மத்திய நுழைப்பும், மத ஆச்சர்யங்களும் நுழைக்கப் பட்டதாக இருந்தாலும் அவை சாதாரண வெற்று லிகிதங்களே!.

அவதார மூர்த்தி (கண்ணன்) வழிபட்ட காலத்தில், மூல விஷ்ணுவும் (நாராயணரும்) சிவபெருமானை வழிபட்ட விவரம் வியாஸரின் பாரதத்தில் துரோண பர்வம் சொல்லப்பட்டிருப்பதால், சிவபெருமானைத் தாழ்த்தும் மற்ற புரட்டு க்கள் யாவும் புரட்டே!

இவ்விதமான புரட்டுக்கள் ஒருபுறமும், பன்னிரு ஆழ்வான்களில் ஒருவனான திருமங்கை ஆழ்வான் மயிலையில் வாழ்ந்து வந்தபோது கிழிந்த துணியை துவைத்துக் கொண்டிருந்த அவன்மீது ஸ்ரீ பரமேச்வரர் உமையுடன் ஆகாய மார்கமாக வந்த அவரது நிழல் அவ்வாழ்வான் மீது பட்டதாம். உடனே பதைபதைத்து, தான் அசுசி (தீட்டு) ஆகிவிட்டால் என்ன செய்வது? என்று ஸ்ரீ பரமேச்வரரின் நிழல் தன்மீது படாமல் ஒதுங்கினானாம்!, இதுகண்ட ஸ்ரீ பரமேச்வரரும் அவனை விடாது தன் நிழல் அவன்மீது படருமாறு, தொடர, அவன் ஸ்ரீ பரமேச்வரரை எச்சரித்தானாம்!, கோபம் கொண்ட உருத்திரர், அவனை எரிக்கத் தன் நெற்றிக் கண்ணைத் திறக்க,

அத்திருமங்கை ஆழ்வான் அதற்கு அஞ்சாது நிற்பதைக் கண்ட உருத்திரர், "உனக்கு மோட்சம் தருகிறேன்! என் நிழல் உன் மீது பட அநுமதி!" என்றாராம்!. அவ்வாழ்வானோ, மிகுந்த கோபம் கொண்டு, தன் கால் விரலில் இருந்த கண்ணால் சிவபெருமானை எரிக்கத் தொடங்கினானாம்!! உஷ்ணம் தாங்காத ஸ்ரீ பரமேச்வரரும் ஓடினாராம்!. என்கிற மாதிரியான கருத்தில் அவ்வாழ்வானின் கதையையும் ஜோ(க்க) டித்திருக்கிறார்கள். (கால் நகத்தினால் தீ பரவச்செய்து ததீசி முனிவர் விஷ்ணுவை வெருட்டிய விவரத்திற்கு இவ்வைணவர்கள் இதை பிரதியாக ஜோடித்தனர் போலும்!)

ஸ்ரீ பரமேச்வரரின் மகிமை பேசும் புராணம் அநேகம் இருக்க, அதில் ஒன்றிலும் இல்லாத இவ்வித அருவருப்பான விஷயங்கள் பலவற்றை இவ்வைணவக் கிரந்தகர்த்தாக்கள் சைவத்தின் ஆழம் தெரியாமல் காலையும் கையையும் விட்டு ஆப்பசைத்த ஆழ்வான்களின் சரிதத்தில் இட்டு நிரப்பினால் யார் ஏற்பார்கள்?

மேற்படி ஆழ்வானுக்கு காலில் கண் இருந்ததென்றால் "வாய்" எங்கிருந்ததோ? எப்படி சாப்பிட்டானோ?!! கிழிந்த துணியை துவைத்து (தைத்து?!)க் கொண்டிருந்தபோது ஸ்ரீ பரமேச்வரரைத் தன் கால்விரல் கண்ணால் எரிக்கத் துவங்கியபோது தம் கையில் இருந்த கிழிந்த துணி என்னவாயிற்றோ? மறுநாள் எப்படி வெளியே வந்தானோ? (பாஞ்சாலிக்கு வஸ்திர தானம் செய்த கண்ணன், இந்த "பழந்துணி" ஆழ்வானுக்கு 'புதிய துணி' கொடுத்தானோ?! என்னவோ?!|)

## ராஜ நீதி வரலாறும்,
## கிருஷ்ண பாகவதப் புரட்டும்!

**பாரதம்/சாந்தி பர்வம்/58வது அத்தியாயம்/ராஜதர்மம்** பகுதியில், யுதிஷ்டிரர் பீஷ்மரிடம், அரசன் என்கிற பதம் உண்டானது எப்படி?, எல்லோரையும் போலவே இருக்கும் ஒருவன் பலரையும் ஆளுவது எப்படி?. தன்னைவிடவும் சூரர்களும், வீரர்களும், பெரியோர்களும் உள்ள பூமியை எப்படி ஒருவன் "அரசன்" என்ற பெயரில் எப்படி ஆளுகிறான்?, அவ்வரசனுடைய சுக துக்கங்கள் அனைத்தும் முறையே இவ்வுலகம் யாவும் எப்படி அடைகிறது? எனும் முதலிய கேள்விகளைக் கேட்கிறார்.

ஸ்ரீ பீஷ்மர் மேற்குறித்த தருமரின் "ராஜ தர்மம்" குறித்த கேள்விகளுக்கு பதிலாக, "ஆதியில் கிருத யுகத்தில் மனிதர்கள் அரசனும், தண்டனையும், தண்டிப்பவனும் இல்லாமல் அவர்களுக்குள்ளாகவே தர்மத்துடன் வாழ்ந்து வந்தார்கள். இவ்விதமாய் மனிதர்கள் வாழ்ந்து வரும்போது அதனாலேயே பலவீனப்பட்டார்கள். இதனால் அறிவின்மை (அவிவேகம்) ஏற்பட்டு, நன்மை-தீமை அறியமுடியாமல் பகுத்தறிவு அற்றவர்களாக ஆனார்கள். இவ்விதமான மனிதர்களின் வாழ்க்கை முறையினால் தர்மம் நசிவடைந்து மனிதர்கள் துன்ப நிலைக்கு ஆளாகி நின்றமையினால், உலகம் தலைகீழானது. இதனால் தாமும் வெகுவாக பாதிப்பை அடைந்த தேவர்கள் மனுஷர்களின் துன்ப நிலைக்கும், தாங்கள் அநுபவிக்கும் துன்ப நிலைக்

கும் பிரம்மாவை சரணடைந்து முறையிட, அவர் இதற்கோர் தீர்வாக ஒரு இலட்சம் அத்தியாயம் உள்ள "ராஜ தர்மத்தை" அருளினார். அதில் திரிவர்கம் என்று பிரசித்தி பெற்ற அறம் பொருள் இன்பம் என்பது பற்றியும் அது தவிர மோட்சத்தையும், அதன் காரணமும், பயனும் பற்றியும், சத்வம், ரஜஸ், தாமஸம் முதலியவை பற்றியும், மேலும்; மனம், தேசம் காலம், சாதனங்கள், முயற்சி, அதன் பயன்/பலன், சகாய மனிதர்கள் முதலிய ஆறுவகையும் குறைவின்றி நடக்க சம நிலை, வளர்ச்சி, குறைவு எனும் திரிவர்கங்களையும், இன்னும் மிக முக்கியமானவற்றையும் சொல்லி அரசனுடைய லட்சணம், அவன் ஆளவேண்டிய முறைகள், ராஜ்யபரிபால னத்திற்கு உண்டான விதிகள், நெறிமுறைகள் முதலியவையும், அரசன் பிரஜை களை நல்லவிதமாக பரிபாலிக்க 'தண்ட நீதியையும் விளக்கி தர்மார்த்தகாம மோட்சங்கள் அனைத்தையும் உபதேசிப்பதாகவும், ஸந்திவிக்ரஹ முதலிய ராஜ்யத்தின் 6 குணங்களின் சாரத்தையும் முக்கியமாக கூறுவதுமாக பிரும்மா தமது 'ராஜந்தி சாஸ்திரத்தை' அமைத்தார்," என்று சொல்லி பீஷ்மர் மேலும்;

"பிரும்மா அருளிய அந்த ராஜதர்ம நூலை, ஆதியந்தம் இல்லாதவரும், பலரூபங்கள் உள்ளவரும், ஞான சக்தி முதலிய சக்திகளுடன் கூடினவரும், தாரகவித்தை முதலிய எல்லா வித்தைகளுக்குப் பதியும், நித்தியமான அணிமா முதலிய அஷ்ட ஓச்வர்யம் பொருந்தினவரும், நித்தியமும் உமாபதியும், விசாலாட்ச ரும், சுகத்தை செய்கிறவரும், தேவருமான சிவபெருமான் அந்த நீதி நூலை பிரம்மாவிடமிருந்து முதலில் கிரஹித்து, அதை பதினாயிரம் அத்தியாயம் உள்ள தாக (வைசாலாட்சம்) சுருக்கினார், பின்னர் ஒவ்வொரு யுகங்களிலும் பிராணிகளின் ஆயுளின் குறைவினாலும், கிரஹிக்கும் தன்மை புத்தியில் குறைவு படுவதினாலும் அந்நிதி சாஸ்திரத்தை தேவேந்திரன் 5000 மாகவும், ப்ருஹஸ்பதி பார்ஹஸ்பத்யம் எனும் பெயரில் 3000 அத்தியாயங்களாகவும், சுக்ராச் சாரியார் மேலும் அதை சுருக்கி, 1000 அத்தியாயங்கள் உள்ளதாக செய்தார்" என்று சொல்லி, அந்நீதி சாஸ்திரப்படி மக்களை அரசாள, தேவர்கள் உலகைப் பரிபாலிக்கும் விஷ்ணுவை சரணடைந்து, ஒரு மன்னனை அருள வேண்டினதையும், தேவர்களது வேண்டுதலை அங்கீகரித்து, விஷ்ணுவானவர் தன் மனத்திலிருந்து "விரஜஸ்" என்னும் புத்திரரை உண்டாக்கி யருளியதையும், அவ்விரஜஸ் சதா சர்வ காலமும் சந்யாஸ வாழ்விற்கு ஆசைப்பட்டு அரசாள விரும்பாமல் போனதையும் (தேவர்கள் விஷ்ணுவைக் கேட்டது அரசாள ஓர் அரசனை, அவ்விஷ்ணு அருளியது ஓர் சந்நியாசியை!) அந்த விரஜஸ் புத்திரரும் (கீர்த்திமான்) தகப்பனைப் போலவே சந்நியாசியானதையும், பின் அக்கீர்த்திமானின் புத்திரன் கர்தமரும் அரசாள விரும்பாமல் தவத்தில் நாட்டம் செலுத்தியதையும், அக்கர்தமரின் புதல்வர் அனங்கன் இறுதியாக சந்நியாச வாழ்வு வாழாமல் தண்ட நீதியின்படி அரசாண்டதையும், அவனுக்குப் பிறகு அனங்கனின் மகன், அதிபலன் பெரிய ராஜ்யமடைந்து சிறிது காலம் செங்கோல் செலுத்தினான் என்றும் தருமருக்கு விவரித்து, மேலும்;

அவ்வதிபலன் காமமோகத்தினால் தர்மராஜரின் மாநஸ புத்திரியை (ஸுநிதை) அடைந்து "வேநன்" எனும் புத்திரனைப் பெற்றதையும் அவ்வேனன் அரசாண்டபோது தர்மம் நசிவடைந்து பல ரிஷிகள் மந்திரத்தால் அவனை கொன்ற தையும், மன்னனில்லா தேசமும், மனிதர்களும் துன்புற்றதினால் அந்த ரிஷிகள்

அவ்வேனனின் தொடையை கடைந்ததையும், அப்போது நிஷீத எனும் விகார ரூபத்துடன் ஒரு பிள்ளை உருவாகி ஓடிப்போய் மலைவாசிகளுடன் கலந்து விட்டதையும், அதன்பிறகு அவ்வேனனின் வலது புஜத்தை கடைந்த போது அதிலிரு ந்து இந்திரன் போன்றவனும், கவசம் பூண்டவனும், கத்தி கட்டினவனும், கையில் அம்பும் வில்லும் கொண்டவனாகவும், வேத வேதாந்தங்கள் அறிந்தவனும், தநுர் வேதத்தில் கரைகண்டவனுமாகிய “பிருது” என்பவன் உண்டானதையும், ரிஷிகளின் வேண்டுகோள்படி அவன் சமபாவத்தோடு அரசாண்டதையும், இப்பூமியில் மேடு பள்ளமில்லாமல் ஆண்டதையும், அப்பிருதுவுக்கு ஸ்ரீ சுக்ராச்சாரியார் புரோகிதராக வும், வாலகில்ய முனிவர்கள் மற்றும் கர்க மஹரிஷிகள் ஜோதிடர்களாகவும், ஸூதர், மாகதர் எனும் இருவரும் வந்திகளாகவும் (துதிபாடிகள்!) இருந்து நன்றாக பிரஜைகளைக் காத்தைமையினால் பிரம்மா, விஷ்ணு, மற்றுமுள்ள தேவர்களும், ரிஷிகளும், இப்பிருதுவுக்கு பிரஜைகளைக் காப்பதற்காகன அதிகாரத்தில் அவனுக்கு “அபிஷேகம்” செய்தார் கள்.

அரசனாக தன் ராஜ்யத்தினை நன்றாக ஆண்டதின் பின்னால் அவனுக்கு ‘அபிஷேகம்' செய்த பின்னர் பூமாதேவியும், சமுத்ர ராஜன், ஹிமவான் மூவரும் இரத்தினங்களையும், இந்திரன் குறைவற்ற திரவியத்தையும், மஹாமேரு சுவர்ணத் தையும், யட்ச ராஜனும், நவநிதியங்களுக்கு அதிபதியுமான குபேரன் அறம், பொருள், இன்பத்திற்காக தனத்தையும், அளித்ததையும், பின் அப்பிருதுவினால் இப்பூமியில் இருந்து பதினேழு விதமான பயிர்கள் கறக்கப்பட்டதையும் தெரிவித்து, மஹாத்மாவான அப்பிருது மன்னன் இம்மானிட லோகத்தில் தர்மத்தை மேலாக விளங்கச் செய்து பிரஜைகளை எல்லாம் ரஞ்சனம் செய்த காரணத்தால் “ராஜா” என்றும்; பிராம்மணர்களுக்குள்ள கஷ்டங்களை நீக்கி ரட்சித்த காரணத்தால் ‘சத்திரியன்’ என்றும் அழைக்கப்பட்டதையும், அதனால் இப்பூமி வளம் பெற்றதால் சாதுக்கள் இப்பூமிக்கு “ப்ருத்வி” என்று பெயர் வைத்ததையும் கூறி, இறுதியாக ஸ்ரீ விஷ்ணுவானவர் ‘ராஜா’வான இவனை ஒருவரும் மீறி நடவாமல் இருக்கும்படி அநுக்ரஹித்து உலக மரியாதை நிலைபெறும்படி செய்து, பின் தனது அம்சத்தால் அவனிடம் பிரவேசம் செய்ததையும், அதன் காரணமாகவே இவ்வுலகம் அரசர்களித் தேவர்களுக்கு ஒப்பாக வணங்கி வருவதையும் சொல்லி முடித்தார்.

இவ்விதமாக வியாஸரால் இயற்றப்பட்ட பூர்வ நூலான பாரதத்தில் ராஜ தர்மம் பற்றியும், தண்ட நீதி பற்றியும், அரசர்களின் கடமை பற்றியும், அரசர்களைப் பற்றியும், பிருது மன்னன் பற்றியும் பீஷ்மரால் சொல்லப்படுவதாக உள்ள பகுதி இருக்க, பின்னர் வியாஸரால் இயற்றப் பட்டதாக வைணவர்களாலும், வைணவத் திற்கு துணை போகும் நபர்களாலும் நம்பப்படும் “ஸ்ரீமத் பாகவதத்தில்”, ‘பிருது’ வை உருவாக்கிய போது கூடவே ஒரு பெண்ணும் தோன்றியதாகவும் அவ்விருவரும் முறையே திருமால், லட்சுமியாக அவதரித்தனர் என்றும் அதனாலேயே நல்லாட்சி செய்தனர் என்றும்; வேனனது ஆட்சியில் பூமாதேவி பசுவுருவில் எல்லா செல்வங்களையும் மறைத்து வைத்துக் கொண்டிருந்தாள் என்றும் அதை இப்பிருதுவின் ஆட்சியில் இருந்த முக்கியமானவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொ ன்றைக் கறந்தார்கள் என்றும்; இவ்விதம் பிருது மன்னன் செய்ததினால் நாடு சுபிட்சம் பெற்றது என்றும்; அதைக் கொண்டாட 'அச்வமேத யாகம்’ செய்ய

ஆரம்பித்த போது இந்த யாகம் நடைபெற்றால் இப்பிருது இந்திரனுக்கு ஒப்பான வனாக ஆகிவிட்டால் நாம் என்ன செய்வது? என்று இந்திரன் திகைத்து அந்த யாகம் நடைபெறாத வண்ணம் குதிரைகளை காட்டுமிராண்டி வடிவில் வந்து திருடிச் சென்றான் என்றும்; (ஸ்ரீமத் பாகவதம் எழுதிய வியாஸருக்கு இப்பிருது விஷ்ணு வின் அவதாரம் என்று தெரிந்திருக்கும்போது விஷ்ணுவின் தம்பியான இந்திரனுக்கு தெரியாமல் போனதும், அந்த அண்ணன் "இந்திரப் பதவி" யைத் தரும் 'அச்வமேத யாகம்' செய்ததும் வியப்புத்தான்!) இறுதியில் பிரும்மா பிருதுவிடம், 'நீ இந்த யாகத்தை செய்து இந்திரனாக ஆகவா ஆசைப்படுகிறாய்? இப்போதே நீ இந்திரனை விட மேலான விஷ்ணுவின் அவதாரமாக அல்லவா இருக்கிறாய்? என்று தேற்றி அச்வமேத யாகம் நிறைவேறாமல் இருக்கச் செய்தார் என்றும்; அந்தப் பிருதுவையே விஷ்ணுவின் அவதாரம் என்றும்; அப்பிருதுவின் மனைவி லட்சுமி என்றும் அப்பொய் பாகவதம் தெரிவிக்கிறது. அப்பிருதுவின் மகன், தந்தையின் அச்வமேத யாகத்தில் இந்திரனால் திருடப்பட்ட அச்வத்தை மீட்டு வந்து தந்ததினால் அவனுக்கு 'அஜிதச்வன்' என்கிற பெயர் வந்ததையும் தெரிவிக்கிறது.

பாரதத்தில் வாரிசு இல்லாமல் மிகவும் துயரடைந்த போது பீஷ்மர் வேத வியாசரிடம் பணிந்து அவர் மூலம் விதுரர், திருதராஷ்டிரன், பாண்டு முதலியோரை அவரவர்களது தாயாருடன் வியாசரை சேரச்செய்து புத்திர உற்பத்தி செய்த விவரம் உள்ளது, நல்ல வேளை! பீஷ்மர் சொல்லும் இக்கிருத யுகத்தில் பீஷ்மரும் வியாசரும் இவ்வேனன் இருந்த காலத்தில் அவர்கள் அருகில் இல்லாமல் போய் விட்டார்கள்!. இருந்திருந்தால் வேனன் மனைவியுடன் வியாசரை சேரச்செய்து புத்திரோற்பத்தி செய்யப்பட்டு அந்த வரலாறும் ஒரு பாரதமாக மாறிவிட்டிருக்கும்! .

நாட்டை நிர்வகிக்க நல்ல அரசனை அருளுமாறு உலகை ரட்சிக்கும் திருமாலிடம் தேவர்கள் கேட்க அத்திருமாலோ, அடுத்தடுத்த தலைமுறையாக நான்கு மன்னர்களையும் சந்நியாசியாகத் தந்து, இறுதியாக வேனன் என்னும் கொடு ங்கோலனையும் தந்து, பின் ரிஷிகளால் அவன் கொல்லப்பட்டு வலது தோளை கடைந்து 'பிருது'வை உண்டாக்கினர் என்றும்; அப்பிருது ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரம் என்றும் எப்படித்தான் கூசாமல் அப்பொய் பாகவதம் விளம்புகிறதோ? தவிர மஹாபாரதத்தில் அரசர்களது பற்றின வரலாற்றில் ஆயிரம் வருடம் தவமிருந்தான், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் வனத்தில் இருந்தான் என்றெல் லாம் வருகிறது. அந்த கணக்கின்படி இல்லையாயினும் நம் முன்னோர் காலத்திய கணக்கின்படி ஒரு அரசன் ஆயுள் நூறு வருடம் என்று கொண்டால், சந்நியாஸி யாகப் போன அந்நான்கு அரசர்களது காலம் நானூறு ஆண்டுகள் ஆகிறது. அதில் பிறந்ததில் இருந்து ஆட்சி செய்த கணக்காக இருந்தால்! கிட்டத்தட்ட ஒவ்வொரு அரசனும் 30 ஆண்டுகள் என்று குறைந்தபட்ச கணக்கைக் கொண்டாலே 120 ஆண்டுகள் ஆகிறது!. நல்ல அரசன் உடனே வேண்டும் என்று வரம் கேட்டால், அவ்விஷ்ணு 120 ஆண்டுகள் கழித்து தாமே "ப்ருது"வாக அவதரித்தான் என்றால். ... மக்களை அத்தனை ஆண்டுகள் பரிதவிக்கச்செய்தான் என்றல்லவா பாரதமும் ஒப்புகிறது?! இந்த லட்சணத்தில் "தர்மங்கள் நலிவடையும் போது நான் அவதரிக் கிறேன்!" என்கிற அகம்பாவ பேச்சு வேறு!!

ஜைமினி முனிவரின் பூர்வ மீமாம்ஸை நியாயப்படி பூர்வத்தில் இல்லாத விஷயங்களை உத்திரபாடமாக (அது வியாஸப்ரோக்தமாகவே இருந்தாலும்) அதை ஒதுக்கித் தள்ளு! என்ற விதியின்படி இப்பொய் பாகவதத்தில் காணப்படும் பிருது வரலாற்றை நாமும் எரிவாயில் தள்ளுவோம்!,

## அவதார மஹிமை!!

இவ்வைணவர்களும், வைணவத்தை அநுசரித்து வாழும் பலரும், கிருஷ்ணன் கீதையில் சொன்ன "தர்ம ஸம்ஸ்தாபநார் த்தாய ஸம்பவாமி யுகே யுகே!" எனும் 'இவ்வுலகில் தர்மத்தை நிலைநிறுத்த யுகம்தோரும் அவதரிக்கிறேன்!' என்று சொன்னதை ஏதோ பெரிதாக எண்ணிக் கொண்டு ஒவ்வொருவரும் தாமும் அவ்விதமே தத்தமது தர்மத்தை நிலநாட்ட பிறந்ததை மறந்து கிருஷ்ணன் மாத்திர மே 'அவதரிப்பவன்' என்று எண்ணுகின்றனர்.

இக்கிருஷ்ணன், கீதோபதேசத்தில் அர்ஜுனனுக்கு, "உனக்கும் நிறைய பிறவிகள். எனக்கும் நிறைய பிறவிகள்!" என்றல்லவா சொல்லி உண்மையை ஓப்புக்கொண்டிருக்கிறான்? உன் பிறப்பை நீ அறியமாட்டாய். என் பிறப்பை நான் அறிவேன் என்றும் சொன்னதைக் கொண்டு அக்கிருஷ்ணனுக்கு எப்படி 'பரத்துவம்' சொல்வது? அவனுடைய பிறவிகளை அவன் அறிந்து இதுகாறும் சாதித்தது என்ன? தம் பிறவி எது என்று அறியாத அர்ஜுனன் சாதிக்காமல் விட்டது என்ன? தன்பிறவி என்னதென்று தெரியாதவனுடைய உதவியில்லாமல் பாரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் செய்தது என்ன? எல்லாமே அக்கிருஷ்ணன் மாத்திரம் செய்யலாமே? மற்றவர்கள் எதற்கு?!

ஸ்ரீ இராமன் தசரதபுத்திரனாக அவதரித்தபோது அவனுடன் வானர சேனை களாக வந்த தேவர்களும் லோகத்தைப் பரிபாலித்தவர்களே!. முசுகுந்தச் சக்ரவர்த்தி, பலிச் சக்ரவர்த்தி, தன் மகனை தேர்ச்சக்கரம் ஏற்றித் தண்டனையளித்த மநுநீதி சோழன், குபேரன், யயாதி, புரூருவன், மாந்தாதா, சிபிச் சக்ரவர்த்தி, கண்ணகியின் கணவனுக்கு தவறான தீர்ப்பையளித்தமைக்காக தன்னுயிர் நீத்த பாண்டிய நெடுஞ்செழியன் முதலிய பலராலும் இந்த லோகத்திற்கு அநேக நன்மைகள் உண்டா யிருக்கிறதே? அத்திமுதல் எறும்பீறான உயிர்கள் அத்தனையும் இவ்வுலகின் நன்மை-தீமையை அநுபவிக்க ஜனிப்பவையே! இவ்வுலக உயிர்கள் அனைத்துமே ஏதேனும் ஒருவகையில் அடுத்தவற்றுக்கு *நன்மையும் "தீமையும்' செய்துகொண்டு வாழ்வதற்குத்தானே? 63 நாயன்மார்களும் லோகத்திற்கு நன்மையைச் செய்யாது தீமையையா செய்தார்கள்?

ஒவ்வொரு தாய்-தந்தையரும் தத்தம் குழந்தைகளை ரட்சிக்கவே இருக்கிறார் கள். ஒவ்வொரு புருஷனும் தத்தமது மனைவிகளை காக்கவே வருகின்றனர். இவ்விதமே அரசர்களும் குடிகளைக் காக்கவே வருகின்றனர். உலக இயற்கை விஷயம் இவ்விதம் இருக்க, இந்த ஹரியானவன் மட்டும் லோக ரட்சனைக்காகவே

அவதரிக்கின்றான். மேற்காட்டிய மற்றவர்களும் நாமும் அநாமத்தாய் பிறந்து இறக்க அவதரிக்கிறோமா என்ன?!?

ஹரியானவன் உலக நன்மையைக்கருதியே அவதரிக்கிறான் என்றால், உலகிலுள்ள அதர்ம வழியைத் தான் சாராமல் நேர் வழியில் தர்மசமஸ்தாபனார்த்தமாக வாழ்ந்து காட்டியிருக்கலாமே? அதர் மரூபமாகிய உலகவழியையே தானும் பின்பற்றி, மாதா வயிற்றில் உதிரத்தோடும், அதன் தீட்டோடும், யோனித வாயில் பிறந்து மரண வாதனையுற்று இறந்து, எல்லா உயிர்களைப் போல 'மாண்டு போனான்' என்பது அவன் சம்பந்தப்பட்ட வரலாறு பேசுகிறபோது, அவனது வாழ்க்கை மட்டும் லோக ரட்சனத்தை எப்படிக்காட்டும்?

எல்லா உயிர்களும் ஒன்றுக்கொன்று நன்மை செய்வதேயன்றி தீமையும் செய்து வருகையில், நன்மையை நோக்க உபகாரமும், தீமையை நோக்க அபகாரமும் - செய்யும் தன்மை வெளிப்படுவது போல, ஹரியின் பத்து பிறவிகளிலும் ஹரிக்கு நிகழ்ந்த நன்மை - தீமைகளும் பல உள்ளதே?! இராமாயணத்தில் இராமன் கையில் அகப்பட்டு இராவணனை சுலபமாக கொல்ல வாய்ப்பிருந்தும், இராமனும் தர்மப்படி 'இன்றுபோய் நாளை வா!' என்று சொல்லியதில் இருந்த இராமனுடைய தர்மசமஸ்தாபனார்த்தம், தன் மனைவியை மீட்கும் விஷயத்தில் குரங்கினத்தின் சகாயத்தின் பொருட்டு சுக்ரீவனது நட்பிற்காக அவன் சகோதரனான வாலியை 'வதைத்ததில்" என்ன தர்ம சமஸ்தாபனார் த்தம் இருக்கிறது? இருந்தது?!

தவிர, இராமன் பிறந்தது ராட்சசர்களைக் கொல்வதற்கா? குரங்கைக் கொல்வதற்கா? இவ்விதம் சேதனரில் ஒருவனாக விளங்கும் இராமனிடம் லோகத்தை ரட்சிக்கிற அம்ஸம் எங்கிருக்கிறது? மற்றைய உயிர்கள் புரியும் ஹிதாஹிதம் புரியும் சாமான்யன்தான் இந்த இராமன் என்றல்லவா இதில் விளங்குகிறது?

ஹரியினுடைய பத்து பிறவிகளும் பசுவாகிய மூல விஷ்ணுவுக்குப் பிருகு முனியின் சாபத்தால் வந்தது உண்மை எனவும், அப்பத்து பிறவிகள் தோறும் ஜீவன்களுடைய குணத்திற்கு இசைய ஹிதாஹிதங்கள் புரிந்து; தம் பிறவிக்கேற்ற வாழ்வை அவ்வேறுபாடுகளுடைய குணத்திற்குத் தக்கவாறு நுகரப்பட்டு, சித்திரப் பதுமைகளாக உலக உயிர்களை ஆட்டுவிக்கும் ஸ்ரீ பரமேச்வரருக்கு இவ்வுலக உயிர்கள் அடங்கி நடப்பது போலவே அந்த ஹரியும் இருந்தது அவனது பத்து அவதாரங்களைப் பேசும் சரித்திரம் படித்து அறியலாம்!, இதில் எங்கே இருக்கிறது ஹரிக்கு "பரத்துவம்?" !!!

இம்மாதிரி இதுமாத்திரம் அல்ல; இன்னும் அநேகம் அப்பொய் பாகவதத்திலும், பிற்காலத்தில் பாஞ்சராத்திரிகள் உண்டாக்கிய மற்றைய அவர்களது கைங்கர்யத்திலும் காணப்படுகிறது. சைவ அன்பர்கள் இம்மாதிரியான விமர்சனத்திற்கான ஆராய்ச்சிக்காக அம்மாதிரி பொய் பாகவதம் மாதிரியான வைணவ புரட்டு நூல்களைப் படித்து பாமர ஏழைகள் அறிய அதை வெளிப்படுத்த படிக்கலாமே தவிர்த்து, ஏதோ புனிதமான நூல் என்று படிக்க வேண்டியதில்லை!!, இம்மாதிரியான இவர்

களின் புரட்டுக்கு இவர்கள் "இறுதியாக கையாளும் "ஸ்ரீமத் பாகவதம்" என்பதின் மூல விவரத்தைப் பாருங்கள்!.

## கிருஷ்ண பாகவதத்தின் மூலவிவரம்!

பரீட்சித்து மன்னனுடைய மகனாய் இராஜாங்கம் செய்து கொண்டிருந்த ஜனமேஜயனுக்கு வைசம்பாயனரால் கூறப்பட்டு, பின்பு நைமிசாரண்ய முறிவர்களுக்கு ஸூத முநிவரால் சொல்லப்பட்ட வியாச பாரதத்தில் இப் பரீட்சித்து மன்னனின் மரணம் முதலியவை பூர்வ நூலான பாரதத்தில் மிகவும் தெளிவாக விளக்கப்பட்டவையே!. பாரதத்தில் இல்லாத விஷயங்களை வியாஸர் சொல்ல மறந்ததாகவும், பிறகு சொல்லியதாகவும் நிறைய வைணவ புரட்டுக் கதைகளை உலவ விட்டவர்கள் அதன் ஓவாவுண்மையுணர்ந்து, விஷ்ணுபரமாக 'ஸ்ரீமத் பாகவதம்' செய்யப்பட்டது.

வேத வியாஸர் பாரதம் இயற்றிய போது, அதை எழுத அமர்ந்த ஸ்ரீ விநாயகப் பெருமானிடம் ஏகப்பட்ட விதிமுறைகளைச் சொல்லி, அவ்விதிமுறைப்படி வியாஸர் சொல்வதை முழுதும் யோசித்து உணர்ந்து பிறகு விநாயகரால் சிறிது கால அவகாசம் பெற்று எழுதப்பட்ட அப்பாரதத்தில் நிறைய விஷயங்கள் திரும்பத்திரும்ப வருவதை அதைப் படித்தவர்கள் உணரலாம். உதாரணமாக, அப்பாரதத்தில் தீர்த்த யாத்திரை விவரம், இராமாயணம் (சுருக்கமாக ஆனால் முழுதும்), குமார உற்பத்தி, பீஷ்மர் - சிகண்டி சம்பந்தப்பட்ட சம்பவங்கள் முதலியவை திரும்பத் திரும்ப வரும். பரத வம்ஸ வரலாற்றைச் சொல்ல வந்த பாரதத்தில் இவ்விதம் மீண்டும் மீண்டும் சொல்லியதையே சொல்வதற்கும், விநாயகர் யோசிக்கும் தருணத்தில் வேறு ஒன்றை சொல்லவும் தேவையான அவகாசம் இருந்திருக்கும் போது, அவ்வியாஸரால் கிருஷ்ணனுடைய மஹிமையை பாரதத்தில் சொல்ல முடியவில்லை என்றும், ஆசைதீர வேறு ஒன்றை அப்பாரதத்திற்கு முரணாக வேறு ஒன்றைச் (ஸ்ரீமத் பாகவதம்) செய்தார் என்பதை எப்படி ஒப்புவது?. பாரதம் சொல்லும் போதே சொல்லியிருக்கலாமே? கிருஷ்ணனுடைய மஹிமையை?!

இந்த ஒரு சாதாரண கேள்வியே ஸ்ரீமத் பாகவதத்தின் அடிப்படை விஷயத்தை அதிரவைக்குமளவு இருக்கும் போது, சமஸ்கிருத மொழியில் புலமையும், ஆழ்ந்த அறிவும், ஆராய்ச்சி செய்யும் திறனும் உள்ளவர்கள் “ஸ்ரீமத் பாகவதம்” பற்றி கேட்க ஆரம்பித்தால்?!

இப்பாகவதத்தை பரீட்சித்திற்கு, சுக முநிவர் சொன்னதாக பீடிகை வேறு!, (**பாகவதம்/5ம் அத்தியாயம்/3ம் ஸ்லோகம்**) "ஜிஜ்ஞாஸிதம் ஸுஸம்பந்நமபிதே மஹத்புதம் । க்ருதவாந் பாரதம் யஸ்த்வம் ஸர்வார்த பரிப்ரும்ஹிதம்॥" (மகத்தான அற்புதம் சம்பந்தமுள்ள பரமாத்வை நன்கு விசாரித்து, அர்த்தபுஷ்டியோடு பாரதமானது உம்மால் செய்யப்பட்டது) என்று வியாசரை நோக்கி நாரதர் சொன்னது இது!. இப்பாகவதத்தில், பாரதம் நடந்த காலத்திலேயே மரணித்துவிட்ட பரீட்சித்து மன்னனைப் "பாரதம்" பகருமாறு பாகவதம் கேட்பவனாக ஆக்கிக் கொண்டதும்,

பாரதத்திற்கு முன்னே "பாகவதம்" உண்டென கொண்டதும், என்னதான் இவர்கள் நோக்கம்?

பாகவதம் என்றால் அது தேவிபாகவதம் என்றே பெரியோர் சொல்வர். கிருஷ்ண பாகவதம் என்பது பதினெட்டுப் புராணத்தில் ஒன்று என்பதற்கு யாதொரு பிரமாணமும் இல்லை. தேவிபாகவதம் என்றால் சர்வமங்களா என்று போற்றப் பெறும் ஸ்ரீ பரமேச்வரரின் பத்தினியாகிய “உமை”யைப் பற்றின புராணம் ஆகும், இத்தேவி என்னும் சொல் சரஸ்வதிக்கோ, இலட்சுமிக்கோ கிடையாது!. அவ்விதம் ஏதேனும் பூர்வ புராணாதிகளில் ஏதேனும் ஒன்றில் ஒரேயொரு வார்த்தை காணப் பட்டிருந்தாலும் இப் பொல்லாப் பாஞ்சராத்ரிகள் அப்புராணமும் இலட்சுமிக்குண்டா னதாக கூறித்திரிந்து திரும்பத்திரும்ப பொய்யைப் பேசிப்பேசி “உண்மை” என்று நம்பவைத்திருப்பார்கள்!!.

வடதேசத்தில் ஜோதிபுரம் (ஜோத்பூர்) எனும் பட்டணத்தை ஆண்ட அரசன் தேவியின் மஹிமை பேசும் பதினேன் புராணத்துள் ஒன்றாக எவரேனும் இப்பொய்க் கிருஷ்ண பாகவதத்தை பிரஸ்தாபிப்பரேல் அவர்க்கு கடும் தண்டனை உண்டு என்று நீதியும் ஏற்படுத்தியது வரலாற்று செய்தியாகும்.

“உத்ப பர்ஹாத்மந: கேசா விதி” எனும் பாரத வசனப்படி விஷ்ணுவின் கருப்பு மயிரின் அவதாரமான கிருஷ்ணனை பகவான் எனவும், அவன் சம்பந்தப் பட்டவை களைக் கூறுவது பாகவதம் என்பது பொருந்துமா? இப்பாகவதத்தில் வரும் மங்கள ஸ்லோகத்தில் ஸுகரை நமஸ்கரிக்கிறேன் என்று வியாஸர் கூறியிருப்பதும் பெரும் பழுதாக அல்லவா அதில் காணப்படுகிறது!. பிள்ளையைப் பிதா வணங்குவ தும், நமஸ்கரிப்பதும் கேவலவிருத்தம் அல்லவா? ஸுகரைவிட வியாஸரும் தாழ்ந்தவர் அல்லவே?

இப்பொய்ப் பாகவதத்தில் விதுரர் - மைத்திரேயர் சம்வாதப் பகுதியும் வருகிறது!. மைத்திரேயர் வேதத்தில் சொல்லப்பட்ட ஓர் முனி. இவர் பராசர முனிவ ரால் விஷ்ணுபுராணம் உபதேசிக்கப் பெற்று, அக்காலத்திலேயே முக்தியும் அடைந் தார் என்றும் உள்ள வசனம் இருப்பதற்கு விரோதமாக விதுரன் காலத்தில் இம்மைத் திரேயர் இருந்ததாகக் கூறுவது அபத்தமல்லவா?

ஆலகால விஷத்தை நம் பரமேச்வரர் உயிர்கள் மீது கொண்ட பரிவால் தான் பாணம் செய்து “நீலகண்டன்” எனும் திருநாமம் அடைந்த விவரம் பாரதத்தில் தெளிவாகவே விளக்கியுள்ளதைப் படித்தும் இன்றும் சில வைணவ கதாகாலட்சேப பிரகிருதிகள், ‘கருட மந்திரம்’ ஜெபித்து சிவன் அந்த ஆலகால விஷத்தை குடித்தார் என்று சொல்லித்திரிகிறார்கள்!. இதிகாச விரோதமான புரட்டு இது!, இவர்கள் சொல்லும் இவ்விஷயம் எதில் இருக்கிறது? என்று கேட்பவர்கள் இல்லாத தைரியத் தில் என்ன வேண்டுமானாலும் சொல்லித்திரியலாம் என்கிற போக்கிற்கு என்ன செய்வது?!

இக்கருடன் நந்தியின் பெருமூச்சு தாங்காது தூரப் போய் விழுந்த சரிதமும், இராமாயணத்தில் அநுமாரால் அவமானப் பட்ட விவரமும், இருப்பது போல இக் கருடனால் ஸ்ரீ கிருஷ்ணன் அடைந்த அவமானமும் பாரதத்தில் விவரிக்கப் பட்டிருக் கிறது!. **பாரதம்/ஆதிபர்வம்/253 வது** அத்தியாயத்தில், கருடன் தன் சிறகினாலும், மூக்கினாலும், நகங்களினாலும் கிருஷ்ணனையும், அர்ஜுனனையும் அடிப்பதற்கு ஆகாயத்தில் இருந்து இறங்கிய தகவல் இருப்பதினால், அக்கருடனுக்கு தன் தலை வனை எதிர்க்கும் திறனும், செருக்கும் உள்ளதை தெரிவிப்பதற்கும் என்ன பதிலோ?! ஸ்ரீ கிருஷ்ணனை தாக்க வந்ததைச் சொல்லிய அதே பாரதம், அக்கருடனுடைய ஜனனம் ஈஸ்வரரது அநுக்ரஹத்தினால் உண்டானதையும் சொல்வதையும் கொண்டு பார்த்தால் இந்த கருடனது மந்திரத்தை ஜெபித்து ஆலகால விஷத்தை குடித்தார் என்பதை யார் ஏற்பார்கள்?!.

கருடனும் விஷ்ணுவும் “பாற்கடல் கடைந்த” போது எங்கிருந்தார்கள்? என்கிற கேள்வி மட்டும் புராணம் படிப்போருக்கு ஏற்பட்டு இருக்கிறதே தவிர்த்து, இக்கேள் விக்கான “பதில்” எந்த புராணத்திலும் இல்லை!. இனி ஏற்ப்படுத்துவார்களோ என்ன வோ?!

## பஸ்மாசுரப் புரட்டு!

இறுதியாக மேற்சொன்ன ஸ்ரீமத் பாகவதத்தில், எந்தப் புராணத்திலும் இல்லாத "பஸ்மாசுரன்" எனும் 'விருகாசுரன்” புரட்டும், (இவன்தான் வரம் கொடுத்த சிவனாரின் தலைமீது கை வைக்க துரத்தினானாம்! ஹரி காப்பாற்றினானாம்!)

சைவத்தை தழைத்தோங்கச் செய்த நால்வர் தவிர்த்து, ஏனையோரும் ஹரியும், பிரும்மாவும் ஸ்ரீ மஹாதேவருடைய "அடி முடி காணா வைபவத்தையும், திருநீற்றின் பெருமையையும் பற்றி மிகவும் பெருமையாகவும், பரத்துவம் பகரும் விஷயத்திற்காகவும் மேற்கோள் காண்பித்து எழுதியிருப்பதுபோல், மேற்சொன்ன சிவத்துவேஷ விஷயங்களை ஏன் பன்னிரு ஆழ்வார்கள் தம்முடைய பிரபந்தத்தில் தொட்டுக் கூட பார்க்கவில்லை? (ஒருவேளை அவர்கள் காலத்தில் ஸ்ரீமத் பாகவதம் உருவாகவில்லையோ? என்னவோ? அல்லது, அப்பாகவதத்தில் இவ்விரு ஜோட னைகளும் "இடைச்செருகல்களாக" செருகவில்லையோ என்னவோ? சிவபெருமான் கெவலமானவர் என்றால், ஸ்ரீ நாராயணன் நாராயணனாக இருந்தபோதும், அவதார மாக இருந்தபோதும் அவரை, ஆயிரம் மலர் கொண்டு அர்சித்ததும், பிள்ளைப்பேற்றி ற்காக கடுந்தவம் இருந்ததும், யுத்தத்தில் ஜயமடைய ஸ்ரீ ருத்ரம் ஜபித்ததும், புராண இதிஹாசத்தில் இருப்பவைதான். அப்படியானால் அந்த நாராயணன்?!)

இவ்வைணவர்களுடைய பொய்க் கூற்றின்படியேயும் பார்த்தால் மேற்படி பஸ்மாசுரன் புரட்டில் இருந்து நிறைய கேள்விகள் எழாமலிருக்காது!.

1. சிவனைக்காக்க வேண்டி இரக்கம் வகித்த விஷ்ணு, தன் சுய உருவில் வந்து பஸ்மாசுரனைக் கொல்லாமல் பெண் வடிவத்தில் வந்து அவ்வசுரனை

வஞ்சித்துக் கொன்றது ஏன்? (சுய உருவில் வந்தால் அப்பஸ்மாசுரன் தன் தலையில் கை வைத்தால் என்ன செய்வது? என்றோ?!! பெண்ணுருவில் வந்தால் அவ்வசுரன் "தலை" யில் கை வைக்க மாட்டான்! என்கிற பூர்வ அநுபவப்படியா?!!)

2. சிவனைக்காக்க தம் சுயவுருவாகிய விஷ்ணுவாகவே வந்திருந்தால் அப்பஸ்மாசுரன் தன் தலையில் கைவைத்தால் சிவனாரது வரம் பலியாது என்றால், அந்த வரம் விஷ்ணுவுக்கே பலியாதபோது அவ்வரத்தைக் கொடுத்த சிவனாரை என்ன செய்துவிடும்?! (தீவட்டியில் இருக்கும் தீபம் தீவட்டியை சுடுவதில்லை !!)

3. விஷ்ணு தன் பரத்துவம் விளக்கவும், விளங்கவும் சிவபெருமானை காக்க வந்தது உண்மை என்றால் அவ்விஷ்ணு தனது யதார்த்த வடிவில் வெளிப்பட்டு அவனுடைய கை தன் தலையில் வைக்கப்பெற்று தான் சாகாதவராய் இருந்து பின் அப்பஸ்மாசுரனைக் கொல்ல வேண்டியதுதானே? வீணே பெண் வடிவம் எடுப்பா னேன்?!

4. ததீசி முனிவர் தமது கால் கட்டைவிரலை அசைத்து தம்மை சுற்றி நின்று வெருட்டிய எண்ணற்ற திருமாலை, பலபலவென்று உதிர்த்த உண்மை இருக்க, அத்ததீசி முனிக்கும் பாஸ்யமானராய் விளங்கும் ஸ்ரீ பரமேச்வரர் திருமாலால் பிராணப் பிச்சை பெற்றார் என்பதை எப்படி ஏற்பது?

சிவபெருமானோ பூரணர். அவருடைய அருவம் உலக உயிர்கள் இயங்கு வதன் பொருட்டும், உருவம் உயிர்களுக்கு அநுக்ரஹம் செய்தற் பொருட்டும் என்பது சிவாகமத்தின் கூற்றும், சிவனடியார்களது வாழ்க்கை காட்டும் துணிபும் ஆகும்!. இந்த பரிபூரணரால் வரமளிக்கப்பட்ட பஸ்மாசுரனை விஷ்ணு தடுத்து நிறுத்தி அவன் தலையில் அவனது கையை வைக்குமாறு செய்திராவிட்டால் சிவனார் செத்துப் போயிருப்பார் என்பது பொல்லா வைணவரது துணிபு! இப்படிப்பட்டவர்கள் கறுப்பு மாட்டுக்காரனிடம் என்ன பாடு படப் போகிறார்களோ?!

இல்லாத விஷயத்தை இருப்பதாக கதைகட்டி சரடுவிட்டு இவர்கள் இப்படிச் செய்வதை; சுருதிக்கும் - ஸ்மிருதிக்கும் விரோதம் உண்டானால், ஸ்மிருதியை ஒதுக்கித்தள்ளிச் சுருதியைக் கொள்ள வேண்டும்." என்கிற மீமாம்ஸா சாஸ்திர விதியின்படியும், இவ்வைணவர்களின் சுவடிகளில் உள்ள வழுவாக்கிய நோக்கமும் தெளிவாய் இருப்பதினாலும் இவர்கள் கூற்றுக்களையெல்லாம் எவருமே பொருட் படுத்த வேண்டியதில்லை!

## சர்வமங்களாவும் - திரௌபதையும்!

புராண-இதிகாச கருத்துக்கள் எல்லாவற்றையும் மாற்றித் திரிந்த / திரிகின்ற இப்பாஞ்சராத்திர புண்ணியவான்கள், இராமாவதார கதையில் இராமனது மனைவி இராவணனால் அபகரித்துச் செல்லப்பட்டதற்கும், கிருஷ்ணாவதாரம் செய்த காலத்தில் அர்ஜுனனுடன் வனத்தில் இருந்து தப்பித்த கிருஷ்ணனது மனைவிகள்

திருடர்களால் அபகரித்துச் செல்லப்பட்ட விவரங்கள் அந்தந்த வரலாறு பேசும் புராணங்களில் இருப்பதை மறந்தும், வெட்கப் பட்டுக்கொண்டும், பார்வதி தேவியே திரௌபதையாக அவதரித்து ஐந்து பேருக்கு மனைவியானாள் என்று புளுகித்திரிகி றார்கள்.

திரௌபதியாகப் பிறந்து, ஐவரை மணந்து சுகித்தது இலட்சுமி என்றும், அவள் பரமசிவனது ஆணையால் துருபதனுடைய குலத்தில் பிறந்தாள் என்று சொல்லும் பகுதிகள் முறையே, **பாரதம்/ஆதிபர்வம்/215வது அத்தியாயத்திலும், ஸ்வர்காரோ கண பர்வம்/4வது அத்தியாயத்திலும்** தெளிவாகவே சொல்லப்பட்டிருக்கிறது.

"மழை வளந்தருஉம் பெண்டிராயிற் பிறர் நெஞ்சு புகார்" என்பது பெண்களு டைய கற்பிற்கு மணிமேகலை சொல்லும் இலக்கணம். (**மணிமேகலை/22ம் காதை**) இலட்சுமியின் அவதாரங்களான சீதை, திரௌபதை முதலியவர்களின் சுயம்வரம் எல்லாம் அந்த கற்பின் இலக்கணத்திற்கு மாறுபட்டும் - கீழ்ப்பட்டும் இருப்பதை படித்தறியலாம். இந்த மாதர் நீதி இவ்வுலகத்து சாதாரண பெண்களுக்கன்றி, கிருஷ்ணன் சம்மந்தப்பட்ட பெண்களுக்கும், விஷ்ணுவின் சரிதத்தில் வரும் பெண்களுக்கும் கிடையாது என்கிற புதிய 'நீதி' யை கொண்டுவந்து விடுவார்கள்!!, சர்வமங்களா என்று போற்றப்பெறும் நம் அன்னை உமையைத்தவிர மற்றைய பெண்டிர் எல்லோருமே வரத்திற்காகவும், வரனுக்காகவும் அலைந்த விவரம் ஒவ்வொரு புராணத்திலும், இதிஹாசத்திலும் பிரசித்தம்!!,

ஸ்ரீ என்றும் இலட்சுமி என்றும் அழைக்கப்படும் இலட்சுமி சம்பந்தமாக பாரதம் நிறைய இடத்தில் சொல்லியிருக்கிறது!. **பாரதம்/அநுஸாசன பர்வம்/32வது அத்தி யாயத்தில்**, இலட்சுமி உருக்மினியிடம் தாம் வாஸம் செய்யும் இடங்களையும், வாஸம் செய்யாத இடங்களையும் பட்டியலிடும் பகுதியொன்று உள்ளது, இப்பகுதி யின் இறுதியில், "நாராயணரிடத்தில் மட்டும் முழு அன்புடன் வேறெங்கும் மனத்தைச் செலுத்தாமல் சரீரமெடுத்து வஸிக்கிறேன். ஏனெனில், மிகப்பெரிய தர்மமும், பிராமணர்களிடத்து அன்பும், யாரும் விரும்பும் தகுதியும் அவரிடத்தில் இருக்கின்றன. மற்ற இடத்தில் நான் இவ்வாறு சரீரத்துடன் இருப்பதில்லை!. எவனிடத்தில் என் கருத்தினால் நான் இருக்கிறேனோ அவன் புண்ணியம், புகழ், பொருள், இன்பம் எல்லாவற்றிலும் மேலாகிறான்" என்று வலிந்து நாராயணருடைய தகுதியை உத்தேசித்து நாராயணருடன் தாம் "சரீரத்துடன்" இருப்பதைச் சொன்ன இலட்சுமி, தாம் வலிந்து சென்று வசிப்பதற்கு இன்னொரு இடத்தைக் கேட்ட பகுதியும் பாரதத்தின் இதே **அநுஸாசன பர்வம்/128வது அத்தியாயத்தில்** விவரிக்கப் பட்டிருக்கிறது!. அதையும் பார்ப்போம்;

உல்லாசமாக ஒரு கவலையும் இன்றி வாழும் பசுக் கூட்டங்களைக் கண்ட இலட்சுமி பசுக்களிடம், "இந்திரன், சூர்யன், சந்திரன், விஷ்ணு, ஜலம், அக்நி, ரிஷிகள், தேவர்கள் முதலிய எல்லோரும் என்னால் அநுக்ரஹிக்கப்பட்டுத்தான் விளங்குகின்ற னர். தர்மார்த்த காமங்கள் எனும் புருஷார்த்தங்களும் என்னால் அனுக்ரஹிக்கப்பட் டுத்தான் சுகத்தைத் தருகின்றன. இப்படிப்பட்ட சிறப்புள்ள நான் உங்கள் எல்லாரிடத்

திலும், எக்காலமும் வசிக்க விரும்புகின்றேன். உங்களை நானே வந்து வேண்டுகின் றேன். என்னை அங்கீகரிக்க வேண்டுகின்றேன்!" என்று வேண்ட, அதற்கு பசுக்கள்;

"நீ நிலையற்றவள்; சஞ்சலமுள்ளவள்; அநேகருக்குப் பொதுவாய் இருப்பவள்; உன்னை நாங்கள் விரும்பவில்லை. உனக்கு எங்கே இஷ்டமோ அங்கே சுகமாய் போகலாம்! நாங்களும் நல்ல தேகமுள்ளவர்களாக இருக்கிறோம். எங்களுக்கு உன்னால் ஆக வேண்டியது என்ன? ஒரு பிரயோஜனமும் உன்னால் இல்லை! நீ போகலாம்!." என்று மருத்தன. (பிறகு மீண்டும் மீண்டும் இலட்சுமி பசுக்களை வற்புறுத்தவே, பசுக்கள் மிகுந்த இரக்கம் கொண்டு ஸ்ரீ என்னும் இலட்சுமியை கோமுத்திரத்திலும், கோமயத்திலும் வஸிக்க சம்மதித்தன!)

தம்மிடம் வந்த ஒருத்தியை பசுக்கள் மறுத்து ஒதுக்கி, பின் ஏற்றுக் கொண்டதும், தம்மிடம் சரீரத்தோடு வந்த ஒருத்தியை தமக்கு 'காதலி' யாகவும் இருக்க சம்மதித்த 'நாராயண மஹிமை'யும் பாஷியம் செய்து பிழைப்போரும், விஷ்ணு மஹாத்மியத்தை விதந்து பிரசிங்கிக்கும் 'பௌராணிகர்' களும் வேண்டுமா னால் 'புகழோடு பொருளையும்' 'இலட்சுமியோடு இலட்சுமி கடாட்சத்தையும்' அடைவார்கள்!!,

## இராமாயணத்தின் மஹிமை!

இவர்களுடைய புரட்டும், கதைபுனையும் யோக்யதையும் இத்துடன் நிற்காமல், "சிவபெருமான் காசியில் மரணமடையும் உயிர்களுக்கு "ராம" எனும் தாரக மந்திரத்தை உபதேசித்தே முக்தியின்பம் வழங்கிக்கொண்டிருக்கிறார் " என்கிற அபாண்டமான புரளியை வேறு செய்து, ஏழை ஜனங்களையும் "இருக்கும்" என்று நம்பச்செய்யும் மோசடியும் நடைபெற்றது!

இராமாயணத்தை ஸ்ரீ வால்மீகி எழுதிய பிறகே "நடந்தது" என்றே அந்த வால்மீகி இராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி வால்மீகியால் எழுதப் பட்ட பிறகு இராமாயண நிகழ்ச்சிகள் நடந்தன என்றால், அதிலுள்ள விஷயங்கள் அனைத்தும் "பொய்" என்றும்; "நாடகம்" என்றுமல்லவா அர்த்தம் ஆகிறது? வால்மீகி யால் எழுதப்பட்ட பிறகே இராமாயணத்தில் உள்ளவாறு அதை மெய்ப்பிக்க ஹரி இராமனாகவும், சீதை, அநுமன், இராவணன், விபீஷணன் முதலியோர் அவர்களது கதாபாத்திரமாக இருக்க முடிவு செய்தார்கள் என்றால் ஊரறிந்த விபச்சாரி, புகழ் பெற்ற எழுத்தாளர் எழுதிய நாடகத்தில் பதிவிரதையாக "நடித்தால்" அவளுக்கு "பத்தினி" பட்டத்தை அளித்து கௌரவிப்பது போலத்தானே? இந்த விஷயமும் வைணவர்களுக்கு பேரிடியாக அல்லவா விளங்குகிறது?! இளங்கோவடிகள் எழுதிய சிலப்பதிகாரத்தை நாடகமாக ஆக்கி அதில் கோவலனாக நடிப்பபனை கோவலனாக வும், கண்ணகியாக நடிப்பவளை உண்மையாகவே கற்புக்கரசி கண்ணகியாகவும் யார் ஏற்பார்கள்?

## இராம நாமம் தாரக மந்திரமல்ல!!

இத்தகைய சிவனாரை, மேற்சொன்ன இராமாயண கதாநாயகனான இராமனது பெயரைச் சொல்லித்தான் காசியில் இறக்கும் உயிர்களின் காதில் மந்திரமாக ஓதி கரை சேர்க்கிறாராம்!, இதுவும் ஒரு வைணவப் புரட்டே!!. அர்த்தநாரீச்வர தத்வத்தை விளக்கும் "சிவ" எனும் சொல், பஞ்சாட்சரத்தில் "சி" ஆகிய சிவனும், "வ" ஆகிய சிவசக்தியும் இணைந்து "சிவ" என இணைந்திருப்பது போல, "ஹரா" எனும் சிவநாமத்தின் ஈற்றெழுத்தும், மூன்று பிரணவங்களைக் கொண்ட "உமா" எனும் சிவசக்தி நாமத்தின் ஈற்றெழுத்தும் இணைந்து "ராமா" என்று அருள் நிறைந்த சொல்லாய் நிற்கிறது. இவ்விதமான மஹிமையையுடைய சிவசக்திகளாக உள்ள ராம? தாரகமாயும், மேலே விளக்கியபடி பிரணவமான ஓம்காரவடிவாயும், பஞ்சாட்சர தாரகமாயும் விளங்கி அவ்வப்பக்குவ ஆன்மாக்களுக்கு "ஸ்ரீருத்ரரால்" உபதேசிக்கப்படுகிறது என்பதே உண்மை. இம்மஹிமையின் காரணமாகத்தான் ஸ்ரீ இராமனின் கொள்ளுதாத்தாவும் இரகுராமன் (இராகவன்) எனும் பெயரோடு விளங்கி, பின் இந்த இராமாயண இராமனுக்கும் பெயராக வைக்கப்பட்டது என்பதும் இராமனின் பூர்வ சரிதம் பேசும் மஹாகவி காளிதாசனின் “இரகுவம்ஸம்” படித்து உணரலாம்.

**ஜாபாலோபநிஷத்**, "அத்ரஹிஜந்தோ: ப்ராணேஷூத்க்மமாணேஷு ருத்ரஸ் தாரகம்" (பிராணன் போகும் சமயத்தில் காசியில் சர்வ ஆன்மாக்களுக்கும் தாரகம் எனும் ப்ரணவத்தை உபதேசித்தருளுகிறார்) என்றும், பராசர புராணம், "காசியில் இறக்கும் உயிர்களுக்கு வேதவேதாந்த சாரமானதும், பிரணவம் எனும் பிரம்மமாகிய எம்மையே அர்த்தமாக உடையதும், தாரகமானதும், ஆகாசத்தைக் கடந்ததுமாகிய எமது ரூபத்தைக் கிருபையால் அருளுகிறேன்" என்று சிவபெருமான் சொன்ன வசனம் இருக்கிறது, இது பொய்யா? புரட்டா?

இராமாயணத்தில் வரும் இராமனுக்கு முன்பாகவே பரசுராமன் என்று ஒருவர் இருந்தது வெகு பிரசித்தமானதாயிற்றே? "ராம" நாமம் தசரதன் மகனுக்கே என்றும், "ராம சப்தத்திற்குரிய அந்த தெய்வம் "ராமரே" என்று எதிலுமே இல்லாததால், இவ்வைணவப் புரட்டு ஊழின்வலி மிகுந்தோரிடமும், ஷண்முனிவர்களின் சாபத்தினால் தன் நெற்றியில் யோனிக்குறியைக் கொண்டுள்ளதைப் பெருமையாக கருதும் வைணவர்களுக்கு வேண்டுமானால் எடுபடலாம்.

தவிர, பரசுராமருக்கும், தசரதராமருக்கும் மூலமூர்த்தியான விஷ்ணு, காசியின் தென்திசையில் இருந்துகொண்டு சிவபெருமானை உபாஸித்த விவரம் "பஸ்மஜாபாலோ உபநிஷத்"த்தில் இருக்கிறதே?.

இராமர் தாரகப் பிரம்மம் என்பதும், இராம நாமம் தாரக மந்திரம் என்பதும் உண்மையாக இருக்குமானால் அந்த் விஷயம் வால்மீகி இராமாயணத்தில்தான் இருக்க வேண்டும். அதில் ஒரு இடத்திலாவது இருக்கிறதா என்று பார்த்தால் இல்லையே?!

இந்த இராமனோ அஞ்ஞானம் மிகுந்தவனாகியும், துயருற்ற வாழ்வை வாழ்ந்தவனாகவும், மனைவியை அடுத்தவனிடம் பறிகொடுத்தவனாகவும், அசுரர் உபாதைகளுக்கு உட்பட்டவனாகவும், எல்லா உயிர்களைப் போல சம்ஸாரத்தில் உழன்றவனாக இருந்து, சரயு நதியில் வீழ்ந்து மாண்டவனாகவும் இருந்தவன். இப்படிப்பட்ட இராமனுடைய பெயரைத்தான் சகலருக்கும் ஈச்வரரான ஸ்ரீ பரமேச்வரர் காசியில் மரணிக்கும் உயிர்களின் காதில் தாரக மந்திரமாக ஓதுகிறார் என்றால் யார் ஏற்பார்கள்? மற்றைய ஹரியினது அவதாரங்களில் இல்லாத மஹிமை இராமாவதா ரத்தில் மாத்திரம் இருப்பதாகவும், இந்த இராமனது நாமத்தை தாரக மந்திரமாகவும் இருப்பதாகக் கருதும் வைணவர்கள் ஆமை, பன்றி, மீன் முதலிய அவதார மஹிமை க்கும் சிவபெருமானால் அவ்வதார மூர்த்திகள் நிக்ரஹம் செய்யப்பட்டதற்கும் என்ன சொல்வார்கள்?

இவர்கள் கொண்டாடும் மூலமூர்த்தியினது நாமத்தை சிவபெருமான் ஏன் சொல்லவில்லை? மூலமூர்த்தியின் நாமத்திற்கு இல்லாத மஹிமையும் மஹத்துவ மும் சாதாரணமானவனாக வாழந்து மறைந்த அவதார மூர்த்தியின் நாமத்திற்கு அம்மஹிமையையும், மஹத்துவத்தையும் செருகுவானேன்? அதற்கு சிவபெருமா னை உபயோகப்படுத்திக் கொள்வானேன்? தாரக மந்திரம் என்றால் பிரணவமும், அதன் தொடர்ச்சியாய் அனைத்து தேவர்களும், ரிஷிகளும், மற்றுமுள்ள அனைவரா லும் இதுவரையிலும் மிகுந்த பக்தியுடன் போற்றப் பெறும் நமசிவாய என்பதே அது!!,

**பாரதம்/சபாபர்வம்/8வது அத்தியாயத்தில்**, 'தஸ்யாம் ராஜர்ஷ்ய: புண்யஸ்த் ததா தேவர்ஷ்யா மலா: யமம் வைவஸ்வதம் ததப்ரஹ்ருஷ்டா" பர்யுபாஸநே யயாதிர் நஹுஷ: பூரூர் மாந்தாதா ஸோம கோந்ருக: ராமோதாசரதிச் சைவ லக்ஷ்மணச்ச ப்ரதர் தந:' என்னும் வசனமிருப்பதில் இருந்து, "எமலோகத்தில் புண்ணியஞ்செய்த ராஜ ரிஷிகளும் பரிசுத்தர்களான பிரும்ம ரிஷிகளும் மகிழ்ச்சியு டன் சூர்ய புத்ரனான யமனை சேவிக்கிறார்கள். யயாதி, நகுலன், பூரு, மாந்தாதா, சோமகன், நிருகன், தசரத புத்திர்களான இராம-லட்சுமணர்கள் அந்த சபையில் யமதர் மராஜனை சேவிக்கின்றனர்" என்று பெறப்படும் பொருளில் அந்த இராமனை "பரம்" என்றும், அந்த இராமனின் பெயரை தாரகம் என்றும் எப்படி ஏற்பது?

இதைத்தவிர இவ்வைணவ புரட்டை போக்கடிக்கும் இன்னொரு விஷயமாக அவ்வைணவரது புரட்டு நூலான பாகவதத்தில், இராமனின் 29வது பாட்டனான அரிச்சந்திரன், காசிப் பதியை அடைந்து, ஸ்ரீ விச்வநாதரைப் பூசித்த விவரமும் இருக்கிறது. இவ்விதம் சாதாரண தேவர்களில் ஒருவனாக விளங்கும் ஹரியை சர்வசக்தராயும், அத்தேவர்களுக்கெல்லாம் மஹாதேவராக திகழும் ஸ்ரீ பரமேச்வரரு டன் சமமாகவோ, இணைத்தோ பார்ப்பதும், சொல்லுவதும் ஆழ்நரகில் தள்ளிவிடும் என்றே ஸ்ம்ருதியாதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் இருக்கிற வைணவ புரட்டைப் பாருங்கள்!

ஸ்ரீ பாம்பன் ஸ்வாமிகளின் **"சைவ சமய சரபம்"** எனும் நாலில்;

“வைஷ்ணவ கிரந்தம் எழுதுபவர்கள் சில வடமொழி வசனங்களைக் கற்பித்து, இன்ன சுருதி எனக்குறிக்காமல், சுருதி என்றும், மற்றொரு சுருதி என்றும், பின்னொரு சுருதி என்றும், இன்னொரு சுருதி என்றும் வரைந்து வைக்கும் வழக்க முள்ளவர்கள் என்பதை அவர் களது சுவடிகளிலிருந்தும் அறியலாம். இச்செய்கையை வைணவரும் ஒப்புகின்றனர்.”

**“தென்னாசிரிய பிரபாவக் கண்டணம்”** என்னும் நூலில்; “இப்போது பிராமணர் ஓதிவருகிற வேதங்களில் காணப் படாமற் போனாலும், சில சுருதியென்ப தாவது சாதாரணமாய்ப் பிரசித்தமானக் கிரந்தங்களில் உதாகரிக்கப் பட்டிருக்க வேண்டும்.” என்று இருப்பது அதற்குச் சான்றாக உள்ளதைக் காண்க.

அவ்வைணவர்கள் அப்படிக் கற்பித்து எழுதாவிடில், வைணவம் வைதிகம் என்பதற்கு வாந்திபேதி சம்பவிக்கும்!. அங்ஙனம், எழுதப்பட்டச் சுவடிகளையே இக்கால வைணவருட் சிலர் தாங்கள் கீறுஞ்சுவடிகளில் மேற்கோளாக வரைதல் உண்டு!. அவை எந்தச் சுருதி? அதற்குப் பிரமாணம் என்ன? காட்டக் கூடுமா? என்று அதட்டிக் கேட்டால் அவர்கள் பல்லைக்காட்டிப் பச பசவென விழித்து நிற்பதுதான் விடையாகும்!” என்று சொல்லி, அவ்வைணவரது நூலில் காணப்பெறும் விஷயங்க ளின் மூலத்தை அது இப்படிப்பட்டது என்று வெளிப்படுத்தி இருக்கிறார் .

இவ்விதமான வைணவர்களின் சூழ்ச்சியால் மந்திரங்களை சொல்லி வழிபடு வதில் மாற்றம் வந்தால் அனைவருக்கும் *தெய்வமான' சிவபெருமானை வணங்கும் நாம் அதற்குத் துணை போகலாமா? இன்றைக்கு வழக்கத்தில் உள்ள விஷ்ணு சஹஸ்ரநாம: த்தில் கூடப் பல பகுதிகள் 'பெரியோர்களால்” அனுஷ்டிக்கப்பட்டவை என்று சொல்லி, சேர்க்கப்பட்டு படிக்கப்பட்டு வருபவையே!!, இல்லாததைச் சேர்ப்பது தான் “பெரியவர்கள்” வேலையா? அப்படிச் செய்பவர்கள்தான் “பெரியவர்களா?” என்று எதிர்க் கேள்வி கேட்காமல் விட்டதின் விளைவு இப்படித்தான்!.

## அம்பரீஷன் கதை!!!

அம்பரீஷன் எனும் அரசனது மாளிகையில் தாம் அவமதிக்கப் பட்டதாகக் கருதிய துர்வாச முனிவர், அம்பர்ஷை சபித்ததாகவும், அவருடைய சாபம் பலியாது, அச்சாபத்திலிருந்து அம்பரீஷைக் காக்க விஷ்ணுவானவர் தமது கைச்சக்கரத்தை துர்வாஸர் மீது ஏவ அது அவர் சிவபெருமானை சரணமடந்த காலத்தும் விடாமல் துரத்தித் துன்புறுத்திய கதை ஒன்றும் இப்பாஞ்சராத்திரிகள் உலவ விட்டிருக்கிறார் கள.

தூய செய்தவம் உடையவரும், மிகச்சிறந்த வேத பண்டிதருமான யீ துர்வாஸ மாமுநி விஷ்ணுவைக் காண வைகுண்டம் சென்றபோது, தம்மைத் தடுத்த துவார பாலகரை சபித்ததும், தம்முடைய வைகுண்ட காவலரை துர்வாஸர் சபித்ததை யுணர்ந்த விஷ்ணு, பயந்தோடி வந்து அம்முனிவரை எதிர்கொண்டழைத்து, துவார பாலகர் செய்த பிழை பொறுக்க வேண்டியதும், அவர்தம் சாபவிமோசனம் பெற

யாசித்ததும், முனிசிரேஷ்டர் அதற்கிசைந்து "வரம்" அளித்த விவரமும், இவ்விஷயம் பிரஸ்தாபிக்கும் **பாரதம்/அநுஸாஸன பர்வம்/294வது அத்தியாயத்தில்** கிருஷ்ணர், துர்வாஸ முனிவர் எச்சில் செய்து தந்த பாயசத்தை அவரது அருளாணைப்படி தமது உடல் முழுதும் பூசிக்கொண்டதும், அவ்விதம் தடவிக்கொண்ட பாகங்களில் தாம் விரும்பும் காலம் வரை மரணபயமில்லாமல் இருக்கும் வரம் பெற்றமையும், அவரது எச்சில் பாயசத்தை உள்ளங்காலில் தடவாமல் இருந்ததினால் அவ்விடத்தால் மரணம் அடையப் போவதாக சொல்லிய விவரத்தையும், அவ்விதமே அக்கிருஷ்ணர் உள்ளங்காலில் அம்பு தைத்து மாண்டதும் பாரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லுவதாக உள்ளது.

உண்மை இப்படி இருக்க, வைகுண்ட காவலருக்கு விஷ்ணுவின் பொருட்டு சாபவிமோசனம் அளித்தவரும், அவ்விஷ்ணுவை நடுநடுங்கச் செய்தவரும், தம் எச்சில் பாயசம் தந்து ஸ்ரீ கிருஷ்ணரது உடம்மை வச்சிரம்போல் வலிமையாக்கிய வருமான துர்வாஸரை "சக்கரம்" துரத்தியது என்றும், அது சிவபெருமானை சரணடைந்தும் விடவில்லை என்றால் எவர் ஏற்பது?!

தவிர, அம்பரீஷனது விரதத்தை துர்வாஸ முனிவர் பங்கம் செய்ய முயன்றது எதற்கு?! துர்வாஸ முனிவர் அவ்விரதத்தை பங்கம் செய்யப் புறப்பட்டு வந்ததற்கு இரண்டு காரணங்கள்தான் இருக்கமுடியும்!. ஒன்று; வழக்கம் போல புராணத்தில் காணப்படும் “பரீட்சை” செய்து பார்ப்பது. இன்னொன்று; துன்மார்க்க வழி!. அம்பரீஷனது விரதத்தை . “நிலைநிறுத்த? பரீட்சை செய்ய துர்வாஸர் கிளம்பினார் என்று முதற்காரணத்தைக் கொண்டால், அப்போது விஷ்ணுவினுடைய சுதர்ஸன சக்கரம் அவரைத் துரத்த அவசியமில்லை!!. அம்முனிவரது *துன்மார்கமே' விரதத்தைப் பங்கப்படுத்த ஏவியது என்றால் அவ்வித துன்மார் கரான துர்வாஸரை “அசுர குணம்” கொண்டவராக ஒப்பி, அவரை “முனிச்ரேஷ்டர்' வரிசையில் சேர்க்காது, வேதம் அசுரர்களை விதந்து கூறாமல் ஒதுக்கியது போல இம்முனிவரையும் விதந்து ஓதாது ஒதுக்கிவிடும்!. துர்வாஸரை புராணாதிகளும், இதிஹாசங்களும் அவ்விதம் சொல்லவில்லை. நடுநிலை நிற்போர் சிந்திப்பாராக!.

## பக்தப் பிரஹலாதன் விஷயம்!!

விஷ்ணு பக்தனாகிய பிரஹலாதன் என்னும் ஹிரண்ய குமாரன் அரசாண்டு வருகையில், ஓர் நாள் சிவனடியார் ஒருவர் அவனது சபைக்கு வந்தபோது, அம்முனி சிரேஷ்டரை மதியாது மிகுந்த செருக்குடன் நடந்துகொண்டான். தாம் ஓர் மன்னனால் அவமதிக்கப்பட்டதை நினைத்து (சிவனடியாற்கு செய்யும் பாதகங்கள் சிவனுக்கு செய்தது போலத்தான்!) அம்முனிவர் பிரஹலாதனைப் பார்த்து, "நீ இவ்வளவு மமதையுடன் நடந்துகொள்வது விஷ்ணுவை வழிபட்ட காரணத்தாலன்றி வேறு எதுவுமில்லையாதலால், என்னை மதியாது நடந்து கொண்ட உன்னுடைய இச்செய்கைக்கு நீயும் நீ வணங்கும் விஷ்ணுவும் ஒருவரை ஒருவர் விரோதித்து, தீராப்பகைவர்கள் ஆகக்கடவீர்களாக!" என்று சபித்துப் போனார்.

இவ்விதம் ஒரு சிவனடிமை தம்மை சபித்தைமையினால் மிகுந்த மனக்கலக்கம் அடைந்த அப்பிரஹலாதன் பலவாறு அம்முனி சொன்ன வாசகத்தை நினைத்துப் பார்த்து, ஞானம் பிறந்து, 'நம் தந்தையைக் கொன்ற சத்ருவாகிய விஷ்ணுவை வணங்குவது நான் கொண்ட பேதமையே" என்று இறுதியாக ஆலோசித்து, பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று அவனுடைய ஸ்வதர்மத்தால் இராட்சஸ விருத்தி அதிகரிக்க, தன் சேனையுடன் விஷ்ணு படுத்துக்கிடக்கும் திருப்பாற்கடலை அடைந்து, அங்கு விஷ்ணுவைக் கண்டு, "என் தந்தையைக் கொன்ற உன்னை உயிரோடு விடுவதற்கில்லை!! வா! என்னோடு போர் புரி!!," என்று அழைத்தான்.

பிரஹலாதனுக்காக தூணில் ஆவிர்ப்பவித்து, ஹிரண்யனைக் கொன்று சரபேஸ்வரரால் பங்கப்பட்டு மீண்டும் விஷ்ணுவாய் படுத்திருக்கும் தம்மிடம் பிரஹலாதன் கூறுவதைக் கேட்ட விஷ்ணுவுக்கு இது சிவனடியாருக்கு இவனிழைத்த அபராதமே காரணம்!' என்று யூகித்து, இறுதியாக அப்பிரஹலாதனுடன் பதினாயிரம் ஆண்டுகள் போர்புரிந்து, அவனது செருக்கழியச் செய்து, நன்றாகப் புடைத்து புறங்கொண்டோடச் செய்தார் - என்கிற விவரத்தை கூர்ம புராணமும்; அப்பிரஹலாதன் பின்னர் விஷ்ணுவிடத்தில் உள்ள போலியான பக்தியை ஒழித்து சிவபெருமானை வழிபட்டு உய்யும் உண்மைநெறி உணர்ந்து, புண்ணியமான சிவபக்தி விசேஷத்தை அடைந்து, காசிப்பதிக்குச் சென்று சிவலிங்கப் பிரதிட்டை செய்து உய்வடைந்ததை "காசிக் காண்டமும்" நமக்கு தெரிவிக்கிறது.

இவ்விஷயத்தில் நம்மில் பலருக்கு, அப்பிரஹலாதன் கருவிலேயே விஷ்ணு பக்தி ஏற்பட்டு, அவ்விஷ்ணுவே பரம் என்று ஸ்தாபிக்க தன் தந்தையை நரசிம்மனால் இழந்ததும், அந்நரசிம்மத்தை சரபமாய் வந்த ஸ்ரீ சங்கரர் சுயவுருவுக்கு திருப்பியதும் தெரிந்த அளவு மேற்சொன்ன சரிதம் தெரியாது. இதுதான் வைணவர்கள் கையாளும் தந்திரம் என்பது!.

## சிவ பக்தியும்! ப்ரணவத்தின் பொருளும்!

"ஸர்வே வேதா யத்பதம் ஆமநந்தி" என்பது சுருதி வாக்கியம். இதற்கு பொருள் என்னவென்றால், எல்லா வேதங்களும், யோகிகளும், ரிஷிகளும், மற்றுமுள்ள ஞானிகளும் "ஒன்றையே அடைய விரும்புகிறார்கள். அந்த *ஒன்று' என்னவென்றால் "ஒம்" என்பதுதான்!.

இந்த ப்ரணவத்தைத்தான் நம் திருமூல நாயனாரும் "பேசாத எழுத்து" என்றிருக்கிறார். சிவபக்தியுள்ளோர் அனைவரும் மகிமை மிகுந்த "ப்ரணவத்தின்' பெருமையை அறிந்திருக்க வேண்டும்.

## எது அதிசயம்? எது அற்புதம்!

கிருஷ்ணார்ஜுனர்கள், இராம லட்சுமணர்கள், மற்றும் மூல மூர்த்தியான விஷ்ணு, மற்றுமுள்ள அவதாரங்கள் என்று பலவற்றுள்ளும் அவ்விஷ்ணு, பல

முனிவர்களையும், முனிவர்களது பத்தினிகளையும், மற்றும் சாதாரணமானவர்களையும் (குந்தி, வசுதேவர், பலராமர், பீமன், காந்தாரி, தருமர், திருதராஷ்டிரன், கௌதமர், அகலிகை முதலியோர்) பாதம் தொட்டு நமஸ்கரித்து வணங்கிய விவரங்கள் பாரதம், வால்மீகி இராமாயணம் முதலிய பூர்வ நூல்களில் கூறப்பட்டிருக்க, இப் பாஞ்சராத்திரிகள் சிவபெருமானின் மகிமை பேசும் நூல்களை "மோகன நூல்கள்" என்றும், சிவபெருமானின் உயர்வுகளைத் தாழ்த்தியும், ஸ்ரீ விஷ்ணுவினுடைய தாழ்வுகளை உயர்த்தியும், அதற்கு "மாயலீலை" என்றும் பெயரிட்டு மகிழும் இவர்கள் மிகவும் அதிசயமானவர்களே!

ஸ்ரீ கிருஷ்ணர் சிவபெருமானைத் தொழுத விவரங்களையும், அவர் பட்ட முட்டுப் பாடுகளையும் "லீலை" என்று சொல்லும் பாஞ்சராத்திரிகள், மேற்சொன்ன பலரது பாதம் தொட்டு நமஸ்கரித்ததற்கு அவர் களெல்லோரும் செய்த "மோகன நூல்களின்" பட்டியலை தரட்டுமே?! சிவபெருமானுக்கு மூலமூர்த்தியான நாராயணனும், அவதார மூர்த்திகளும் மற்றோருக்குச் செய்த நமஸ்காரங்களும், துதிகளும் யதார்த்தமா? நாடகமா? (லீலையா?) யதார்த்தமானால் சிவபெருமானுக்கு செய்தது மாத்திரம் லீலையா? மற்றவர்களுக்கு செய்த நமஸ்காரங்கள் லீலை என்றால், இக்கிருஷ்ணர் பிறந்து - இறந்தது வரையிலான அவரது சரித்திரங்கள் அனைத்தையும் ஒன்று விடாமல் எடுத்து எழுதி அவற்றுள் இவையிவை நாடகம், இவையிவை யதார் த்தம் என்றும் பாகுபாடு செய்ய இப்பாஞ்சராத்திரிகள் முன்வருவார்களா?

முன்வரும் பட்சத்தில், இவர்கள் விஷ்ணுவிடம் கண்ட உயர்வுகளை (உத்கர்ஷங்களை) யதார்த்தம் என்றும், தாழ்வுகளை (அபகர்ஷங்களை) லீலை என்றும் சொல்வார்கள்! அவ்விதமானால் இராவணன், கும்பகர்ணன், வாலி, துரியோதனன், கம்சன், சிசுபாலன் முதலியோரிடம் அந்த பாஞ்சராத்திர நியாயத்தை ஏற்றி, நாம் அவர் களையும் கிருஷ்ணரைப் போன்றே “பரம்பொருள்? என்றும், *பகவான்' என்றும் ஏன் சொல்லக்கூடாது?! ஸ்ரீ கிருஷ்ணருக்கு பொருந்தும் உயர்வு தாழ்வுகள் இவர்களுக்கும் பொருந்துமே?!

ஆயிரம்தான் விச்வரூப தரிசனம் தந்தாலும், ஸ்ரீ கிருஷ்ணனானவன் தன் காரியம் நிறைவேறும் பொருட்டு, அர்ஜுனனிடம் “போர் புரி” என்று வற்புறுத்தி அவனை அதில் ஈடுபடச் செய்தாலும், ஸ்ரீ கிருஷ்ணனிடம் அர் ஜுனன் நிறைய கேள்விகள் கேட்டதினால்தான் கீதையின் இறுதி ஸ்லோஹங்களில் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனிடம், “ஏ! பரதவம்சத்தில் உதித்தவனே! தேஹேந் திரியங்களினால் நீ அந்த ஈஸ்வரனையே சரணமாக அடை!. அந்த ஈஸ்வரானுக்ரஹத்தினால் உனக்கு உத்தமமான சகல விஷயங்களில் இருந்து விடுதலையும், சித்த சுத்தியும், நித்தியமான ஸ்தானத்தினையும் அடைவாய்!” என்றும், “இவ்விதமாக இரஹசியங்களுக்கெல்லாம் இரகசியமான அனைத்தினையும் உனக்குச் சொல்லி விட்டேன். இனி நீ இதை ஆராய்ந்து எப்படி இச்சிக்கின்றாயோ அப்படிச் செய்!!" என்றும், இறுதியாக; “இந்தக் கீதார்த்தத் தத்துவத்தினை தபசில்லாதவனுக்கும், ஈஸ்வரரிடமும், குருவினிடமும் பக்தி இல்லாதவனுக்கும், கேட்க விருப்பம் இல்லாதவனுக்கும் சொல்லத்தக்கதல்ல!!” என்றும் “உண்மையை”ச் சொன்னது போல

பாஷ்யம் எனும் பெயரில் தன் கருத்தையும், அடுத்தவர்களது கருத்துக்களையும் இட்டு நிரப்பும் இவர்கள் என்று “உண்மையை” சொல்ல ஆரம்பிப்பார்களோ?!

அர்ஜுனனிடம் "ஈச்வரரைச் சரணம் அடை" என்று தமது கீதோபதேசத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் சொன்னதற்குக் காரணம்; இராமர் விபீஷனுக்கு "சிரஞ்சீவித்வம்" அளித்தது போன்று, ஜமதக்நி முநிஹ் பரசுராமர்க்கு 'சிரஞ்சீவித்வம்' அளித்ததையும், தனக்கு ஸ்ரீ கண்ணனால் காண்பித்தருளிய "விச்வரூபதரிசனம்" போன்று, ஸ்ரீ மஹாகணபதி, ஸ்ரீ ஆஞ்சநேயர், ஸ்ரீ வீரவாகு முதலியோர் மற்றவர்களுக்கு *விச்வ ரூபதரிசனம்” காண்பித்தருளியதையும், பாநுகோபன் குழந்தைப் பருவத்தில் சூரிய னைப் பிடித்ததையும், அவன் தம்பி அக்நிமுகன் சந்திரனைப் பற்றியதையும், ஜலந்தரன் பிரும்மாவின் தாடியைப் பிளந்ததும், அகத்திய முநி சப்த ஸாகரங்க ளையும் தன் உள்ளங்கையில் ஏந்தி "பாணம்" பண்ணியதும், விந்தியகிரியை பூமியில் அமிழ்த்தியதும் விச்வாமித்திரர் சொர்கத்திற்கு பதிலாக வேறொரு சொர்க்கம் உருவாக்கியது., மற்ற விலங்குகளைப் படைத்தது. தன் சகோதரன் பீமன் கொன்ற இடும்பாசுரன், பகாசுரன், மணிமாலன் முதலிய அசுரர்களைப் போரிட்டு கொன்றது போல, ஹரியும் கம்சன், சிசுபாலன், மதுகைடவர்கள் முதலிய அசுரர்களைக் கொன்றதும், இம்மாதிரி அநேக விஷயங்கள் கிருஷ்ணனுடன் கூடவே இருக்கும் அர்ஜுனனுக்குத் தெரியும். இதனால்தான் தன்னால் "செய்யப்பட்டவை" எதுவும் அர்ஜுனனுக்கு வியப்பையும் "பக்தியையும்" தராது என்பது அந்த ஸ்ரீ கிருஷ்ணனுக்கு தெரியும்! இந்த அர்ஜுனன் சிறந்த சிவபக்தன் என்பதினாலோ வேறு என்ன காரணங்களோ ... இவர்கள் இக்கிருஷ்ணனுக்கு *பரத்துவம்' ஸ்தாபிக்க உண்டாக்கிய “ஸ்ரீமத் பாகவதத்தில்” அர்ஜுனன் சம்பந்தப் பட்டவை மற்ற கதாபாத்திரங்கள் போன்று விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்காது!. இந்த அர்ஜுனன் எப்படி கிருஷ்ண னுடைய செயல்களையெல்லாம் அதிசயமாகக் கருதுவான்?!.

(அற்புதமாகவும், அதிசயமாகக் கூட இதைக் கருத கொஞ்சமும் இடமில்லை என்பதை ஸ்ரீ மாணிக்கவாசகர் அருளிய ‘அற்புதப் பத்து’ மற்றும் ‘அதிசயப்பத்து' இரண்டும் படித்து உண்மையாகவே எது அதிசயம்? எது அற்புதம்? என்பதை அப்பரமனின் “அருள்” இருப்பவர்கள் “உண்மையாகவே” உய்த்துணரலாம்!)

இந்தமாதிரி அர்ஜுனனுக்கு தெரிந்த பலவற்றுள் ஓரளவாவது நாமறிந்து கொள்ள ஸ்ரீ பரமேச்வரருடைய “ஸ்ரீ சிவஸஹஸ்ரநாமம்" உதவும், இச்சிவ ஸஹஸ்ர நாமத்தின் மஹிமையைப் பலரும் அறியாமல் இருப்பதற்குப் பல காரணங்கள் இருந்தாலும், முக்கிய காரணமாகக் கிரந்தத்தில் இருந்த புராணங்களையும், இதிகாசத்தினையும் மொழியாக்கம் செய்து பாஷியம் செய்தவர்களையும் சாரும். இன்றுவரையில் ஸ்ரீ வியாசர் எழுதிய பாரதத்தினை பாஷ்யம் என்ற பெயரிலும், மொழியாக்கம் என்ற பெயரிலும், முக்கியமாக தமிழில் தருபவர்கள் அதில் அமைந்துள்ள “ஸ்ரீ சிவ ஸஹஸ்ரநாமம்” அடங்கிய பகுதியை தவிர்த்தே தந்து கொண்டிருப்பதாலும், அப்படியே தந்தாலும் ஆயிரத்தெட்டு சிவநாமாக்களை அம்புப்படுக்கையில் இருந்த பீஷ்மர் உபதேசம் செய்தது போன்ற தோற்றத்தில் மிகச் சுருக்கமாகத் தந்து கொண்டிருப்பதாலும், பலவகையில் இதனிலும் குறைந்ததும், மஹிமையில் மிகவும் தாழ்ந்ததுமான “விஷ்ணு சகஸ்ரநாம” த்தை மிகவும் புனிதமா

னது போலவும், அதுவே சிறந்தது என்பதாகவும் ஒரு பொய்யான தோற்றத்தில் தரப்பட்டுவருவதாலும், ஸ்ரீ சிவசஹஸ்ரநாமத்தின் மஹிமைகளை நாம் சொல்லக் கடமைபட்டிருப்பதால் உள்ளபடியே தந்திருக்கின்றோம்.

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
|சிவாத்பரதரம் நாஸ்தி|



# ஸ்ரீ சிவ ஸஹஸ்ரநாம மாஹான்மியம்

பாரதப் போரில் சிகண்டியால் வீழ்த்தப்பட்ட பீஷ்மர், அர்ஜுனனால் ஏற்படுத்தப் பட்ட அம்புப் படுக்கையில் படுத்துக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணரால் அறிவுறுத்தப்பட்ட "உத்ராயண" புண்ணியக் காலத்தில் பிராணத்யாகம் செய்யக் காத்திருந்த பீஷ்மரிடம் பலரும் தமக்கிருக்கும் சந்தேகங்களைக் கிருஷ்ணனின் அறிவுரைப்படி, பல விஷய ங்களைக் கேட்டுத் தெளிவு பெறுகின்றனர். அப்போது தருமர் பீஷ்மரை அணுகி, "பிதாமஹரே!. உலகம் அனைத்தையும் தன் மாயையால் நடத்துகிறவரும், பிரும்ம தேவருக்கும் ஈஸ்வரரும், உலகமெல்லாம் தனது சரீரமாகக் கொண்டவரும், மூலப்ர கிருதிக்குக் காரணமும், பகவானுமாகிய சங்கரருடைய நாமங்களையும், மகிமைக ளையும் பற்றி எனக்கு உள்ளபடிச் சொல்லும்!" என்று வேண்டினார்.

அட்டவசுக்களில் ஒருவரும், சந்தனு-பாகீரதியின் புதல்வரும், தம் வாழ்நாள் முழுதும் ப்ரம்மச்சர்ய வ்ரதம் பூண்டவரும், தான் விரும்பும்போது மரணம் அடைய வரம் பெற்றவரும், பரசுராமரின் சிஷ்யரும், உலகவிஷயங்கள் அனைத்தும் அறிந்த வருமான பீஷ்மரிடம் தருமர் சங்கரரின் நாமங்களையும், மஹிமைகளையும் சொல் லுமாறு வேண்டினதும்;

"சிறந்த ஞானமுள்ளவரான மஹாதேவருடைய கல்யாணக் குணங்களைச் சொல்ல நான் சக்தனல்லேன். எனக்கு அந்தத் தகுதியும் இல்லை. கர்ப்ப வாஸம், பிறப்பு-இறப்பு, மூப்புள்ள மானிடன் எவன் தேவர்க்கும் தேவரான அந்த ஸர்வஜ்ஞ ருடைய குணங்களைச் சொல்லவும் அறியவும் திறமையுள்ளவன்? எல்லாம் தெரிந்த வரும், திவ்ய ஞானமும் மகிமையும் உடையவருமான இந்த ஸ்ரீ விஷ்ணுவைத்தவிர வேறு எவரால் சொல்லமுடியும்? சராசரங்களுக்குத் தந்தையாகிய சிவபெருமானை இவர் ஆயிரம் வருஷ காலம் நிரம்பும் வரை ஆராதித்துத் தவம் செய்துள்ளார். ஒவ்வொருக் கல்பத்திலும் கிருஷ்ணனால் ஸ்ரீ மஹேஸ்வரர் ஆராதிக்கப் பட்டிருக்

கின்றார். அந்தச் சங்கரருடைய மகிமை எப்படிப்பட்ட தென்று அச்சுதரான இவர் தமக்குப் புத்திர வரம் பெற்றபோது ஸ்ரீ ஸீ மஹாதேவரை நேரிற் கண்டார்."

"கிருஷ்ணா!... எவனுக்கு மேற்பட்டவர் யாரையும் நான் காணவில்லையோ, அந்தத் தேவர்க்கும் தேவரான ஸ்ரீ சங்கரரது நாமங்களையும், குணங்களையும், அவரது சக்தியையும் சொல்வதற்கு நீயே தகுதியானவன். சக்தியுள்ளவன். சிவபெரு மானின் மகிமைகளைக் கேட்கும் இவர்களுக்காக நீர் சொல்லக்கடவீர்!... நீர் சொல்வதை வியாஸர் முதலான ரிஷிகளும் கேட்கட்டும்!!... என்று தன் அருகில் நின்றுகொண்டிருந்த கிருஷ்ணனை கேட்டுக்கொண்டார்.

(இதே பீஷ்மர், பாரதத்தின் அதே அனுஸாஸன பர்வத்தில் இதே தருமர் விஷ்ணுவின் மகிமை பற்றிக் கேட்க, உடனே சொல்ல ஆரம்பித்து விட்டதாக வருகிறது. "விஷ்ணுவின் மகிமையைச் சொல்ல நான் சக்தனல்லேன். கைலையி லிருந்து ஈஸ்வரன் வரட்டும். அவரிடம் கேட்டுக்கொள்வோம்.." என்று சொல்லாமல், இந்தச் "சிவ ஸஹஸ்ரநாம" த்திற்கு எடுத்ததும் பயந்துபோய் *எனக்குச் சக்தியும் இல்லை, தகுதியும் இல்லை!.. ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லட்டும்!!" என்பது மாதிரி பீஷ்மர் எவ்வித மறுப்பும் சொல்லாமல் உடனே விஷ்ணு சஹஸ்ரநாமத்தினைச் சொன்ன தாக இருப்பது அவரவர் தமக்கு ஸ்ரீ சங்கரரால் அருளப்பட்ட அறிவால் விசாரித்துக் கொள்ள வேண்டியது!!!)

தன்னிடம் பிஷ்மர் இவ்விதம் கேட்டுக்கொண்டதும் அங்குக் கூடியிருந்த அனைவருக்கும் ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லவாரம்பித்தார்:

**"ஈஸ்வரரின் செயல்களைச் சரியாக அறிவது முடியாது. சூக்ஷ்ம ஞானி களாகிய பிரும்மா, இந்திரன், முதலிய தேவர்களும் மஹரிஷிகளும், சாதுக்க ளுக்கு ஆதா ரமான எவரது முடிவையும் முதலையும் அறியவில்லையோ அவரை அவரது பெயர்களினால் மட்டும் எப்படி அறிவது கூடும்?"** என்று கேட்டு விட்டு, இமய மலைச்சாரலில் இருந்த உபமன்யு மஹரிஷியை அடைந்து சிவபெருமானை த்யானிக்கும் வகையைக் கேட்டதையும், அதற்குக் கிருஷ்ணனிடம் அவ்வுபமன்யு முனிவர், சிவபெருமானருளால் ஹிரண்யகசிபு, அவன் புத்திரன் தமணன், இந்த தமணனை வெல்ல முடியாமல் விஷ்ணுவின் சக்கரம் சிதறியது, பின் அவ்விஷ்ணு சங்கரரிடமிருந்துப் பிரஹாசமான சக்ராயுதம் பெற்றதும், தமணனை வென்றதும், கிரஹன் என்பவன் பெற்ற வரம், அக்கிரஹனை தேவர்கள் பெற்றவரம், மூவுலகுக்கும் ஈஸ்வரனாக வரம் பெற்ற வித்யுத்பிரபன், பிரம்மா படைத்த சதமுகன் துதித்தது, பிரம்மாவுக்கு ஆயிரம் புத்திரர்கள் பிறக்கச் செய்த யாகம், வேதவ்யாசர்ப் பெற்ற நிகரில்லாக் கீர்த்தி, ஈஸ்வரரின் அருளால் கருடனை உண்டாக்கின வாலகில்யர், 'சப்தகபால' யாகம் மூலம் திரும்பவும் புவியில் நீரைத் தந்தது, அத்ரிபெற்ற தத்தாத்ரேயர், சந்திரன் - துர்வாஸர் விவரம், விகர்ண மஹரிஷி அடைந்த தவசித்தி, சாகல்ய முனிவர் கிரந்தகர்த்தாவானது, நாரதர் பெற்ற வரம், மன்மதன் அடைந்த கர்வபங்கம், என்று மேலும் பல சிவபெருமானின் மஹிமைக ளைக் கிருஷ்ணனிடம் சொல்லி, தான் சிவபெருமானை எவ்விதம் துதித்தார் என்ப தையும் தன்னிடம் கூறியதையும் ஸ்ரீ கிருஷ்ணர், அம்புப்படுக்கையில் படுத்துக்

கிடந்த இடத்தில் சுற்றி நின்றவர்களிடம்; உபமன்யு முனிவர் தன்னிடம் சொன்ன வாறே சொல்லலானார்.

பாலிய வயதில் மிகுந்த சிரம தசையில் இருந்த உபமன்யுவிற்கு அவரது தாயார் அவர் குடிக்கப் பால் தர இயலாமல், (யசோதை போன்று முலைப்பால் குடிக்க அவ்வுபமந்யுவை எந்த அரக்கியிடமும் அவள் அனுப்பவில்லை!) பால் என்று அரிசிமாவை ஜலத்தில் கரைத்துத் தந்ததையும், குருகுலத்தில் பசுவின் பாலருந்திப் பழகிய உபமன்யுவிற்கு அவ்வரிசி மாவு ஜலமானது பிடிக்காமல், தனது குருகுலத் தில் குருவும், குருகுலத்தில் நிறையப் பசுக்கள் இருப்பதையும் அதனால் அங்குள் ளோர் நல்ல நிலையில் இருப்பதையும், அதற்கான அடிப்படைக் காரணத்தைத் தன் தாயிடம் கேட்க; "சிவானுக்ரஹம் என்பது அனைத்து கஷ்டங்களையும் போக்கி விடும்!... அங்குள்ளோர் அனைவரும் சிவானுக்ரஹம் பெற்றவர்கள்!!" என்ற தன் தாயின் பதிலினால் சிவனைப்பற்றி மேலும் அறியும் ஆவல் உபமன்யுவிற்கு ஏற்பட்டு, தன் தாயிடம் மஹாதேவரைப்பற்றி மேலும் சொல்லுமாறு வேண்டினார். தமது புத்திரன் தன்னிடம் 'மஹாதேவரை'ப் பற்றி அறிய ஆவலுற்றதைக் கண்டு சந்தோஷித்த அவரது தாயார்;

**"ஸ்ரீ மஹாதேவரை அறிவதும், ஆராதிப்பதும் கடினம்**!.. அவர் முடிவில்லாத வர். தடுக்கவும் பிடிக்கவும் கூடாதவர் ... மனதில் தூய்மை இல்லாதவர்களால் காணக் கூடாதவர். தேவர்க்கும் தேவரான **ஈஸ்வரர் முன்னே என்னென்ன ரூபங்கள் எடுத்தாரென்று அவருடைய திவ்ய சரிதத்தினை அறிந்தவன் எவனு மில்லை....** எல்லாப் பிராணிகளுடைய ஹ்ருதயத்தில் இருப்பவரும், உலக ஸ்வ ரூபியுமான மஹேஸ்வரர் அனுக்ரஹம் செய்வதற்காகவே அனைவருடனும் விளை யாடுகிறார். பிரும்மா, விஷ்ணு, இந்திரன், ருத்திரர்கள், ஆதித்யர்கள், அஸ்வினி தேவர்கள் முதலான எல்லாத் தேவர்களுடைய ரூபங்களையும் அவர் தரிப்பார்!... எல்லாமுமாக இருப்பவர் அவர். **உனக்கு விருப்பம் இருந்தால் அவரை சரணமடை. அவர் சந்தோஷிப்பார்; கோவிப்பார்; *உம்* என்று ' பயமுறுத்தவும் செய்வார்.! அழுவார்!.. அழவைப்பார்!!.. தன் பக்தனுக்குப் பக்தனாய் இருப்பவர்...** பயங்கர உருக்கொண்டு உயிரைப் பயமுறுத்துபவர். பிறரால் ஜபம் செய்யப் பெறுபவர் ... எல்லாநிறமுமாக இருப்பவர். எல்லா ரூபமுள்ளவரும், ஜனன மரண மில்லாதவருமான பஹவானுடைய ஆதியும் அந்தமும் இல்லா ஸ்வரூப நிச்சய த்தை எவன் சரியாக அறிவான்?... அந்த மஹேஸ்வரர் கர்மகட்டிற்கு அகப்படாதவ ரென்றாலும், அவரைப் பற்றின பக்திக் கட்டிற்குக் கண்டிப்பாக அகப்படுவார் ... அவரையே உபாசனை செய்!.. நீ வேண்டினதைப் பெறுவாய்!! அவரையே சரணமடை!!.." என்றுச் சொன்னதினால் உபமன்யு முனிவருக்கு மஹேஸ்வரரின் மீது அளவு கடந்த ப்ரீதியும், பக்தியும் உண்டாயிற்று!

இவ்விதம் தமது பக்தியைக் கிருஷ்ணனிடம் விவரித்த உபமன்யு முனிவர், தாம் அந்த மஹேஸ்வரர் இந்திரனது உருவில் வந்து தம்மை சோதித்தபோது, இந்திரனாக வந்த ருத்திரரிடம்;

“ஓ! ப்ரஸன்னரே!! மஹாதேவர் ஒருவரைத்தவிர வேறு எந்தத் தேவதையிடமும் வரம் கேட்கவில்லை. மஹேஸ்வரரைத் தவிர மற்றவர்களைப் பற்றிய பிரஸ்தாபமே எனக்கு ருசிக்கவில்லை, பசுபதியில்லாதவர்களுடைய அனுக்ரஹத்தினால் வரும் திரிலோகாதி பத்தியம், ஐஸ்வர்யம் எதுவும் வேண்டாம், சிவனது பாதம் சேவிக்கும் சண்டாளப் பிறப்பை விரும்புவேனேயன்றி இந்திரன் வீட்டில் பிறப்பதை நான் வேண்டேன். எவனுக்குச் சிவபாத தீயானம் விட்டுப் போகிறதோ அவனுக்கு மற்ற தர்மங்களால் ஆவதென்ன? சிவபெருமானுடைய அனுக்ரஹம் இல்லாமல் சிவனிடத்தில் பக்தி உண்டாவதில்லை. சிவனுக்குத் தாசனாக, அடிமையாக இருப்பதைமட்டுமே நான் வேண்டுகின்றேன். ருத்ரரது அருளைப் பெறாமல் இவ்வுலகில் எவனுக்குச் சாந்தி உண்டாகும்? யாருடைய உள்ளத்தில் ஈஸ்வரரில்லையோ அவர்கள் நிந்திக்கத் தக்கவர்கள்!.”” என்றும்;

“பிரம்ம நிஷ்டர்கள் எவரை ஸத் என்றும் அஸத் என்றும், வ்யக்தமென்றும், அவ்யக்தமென்றும், எகம் என்றும், அநேகம் என்றும் யாரை எப்போதும் சொல்லுகின்றனரோ அவரிடம், தர்க்க நியாயங்களுக்கு எட்டாதவரும் ஞானத்திற்கும் யோகத்திற்கும் பலன்களைக் கொடுப்பவரும் எல்லாவற்றுக்கும் மேற்ப்பட்டவரும், இந்திரனுக்கு ஆத்மாவாகவும், தேவர்களுக்கு ஈஸ்வரராகவும், எல்லாப் பிராணிகளுக்கும் தந்தையும், அக்னி, அப்பு, வாயு, பூமி, ஆகாயம், புத்தி, மனஸ், மஹத் இவைகளைப் படைத்தவர் எவரோ, அவரே எனக்கு வரம் தருவதற்கும், நான் அதைப் பெறுவதற்கும் உரியவர்!.. அவரே மஹேஸ்வரர்! மஹேஸ்வரரால் வரம் கிடைத்தாலும் கிடைக்கட்டும்; சாபம் கிடைத்தாலும் கிடைக்கட்டும்!!” என்று இந்திரனாய் வந்த ருத்ரரிடம் தன் ஏக பக்தியை வைராக்கியமாகத் தெரிவித்ததையும், அதற்கு மகிழ்ந்த ருத்ரர் தனது அனைத்து ரூபங்களையும் காண்பித்தருளியதையும், மேலும் தனக்கு ஆயிரம் வரத்துடன், முக்காலம் அறிதலையும், எப்பொதும் சிவசாந்நியத்துடன் இருத்தல், பந்துக்களுடன் எப்போதும் பாலன்ணம் புசித்தலுமான வரங்களைப் பெற்றதையும் கூறி, அவ்வுபமந்யு முனிவர் தனக்குப் ‘பஞ்சாக்ஷரம்’ உபதேசித்ததையும், ஸ்ரீ சங்கரரை உபாஸிக்கும் முறைகளைச் சொல்லியதையும் சொல்லி, அவ்வாறே தான் சங்கரரைத் தியானித்து, பிராம்மணர்களிடத்தில் கோபமின்மை, தந்தையின் அனுக்ரஹம், நூறு குமாரர்கள், சிறந்த இன்பம், குலத்தின்மேல் அன்பு, தாயின் அனுக்ரஹம், புலன்களில் அடக்கம், காரியங்களில் சாமர்த்தியம் எனும் எட்டு வரங்களையும் பெற்றதையும் கூறி, உபமன்யு முனிவர் தண்டி மஹரிஷி மூலம் அடைந்த “சிவசஹஸ்ரநாமத்தினை”த் தமக்கு விளக்கிய விவரத்தினையும் ஸ்ரீ கிருஷ்ணர், ஸ்ரீ உபமன்யு முனிவர் தன்னிடம் சொல்லியவற்றைச் சொல்ல ஆரம்பித்தார்.

“கிருஷ்ணா!.. .. யாதவரில் சிறந்தவனே!!.. .. நாமங்களினால் எல்லா உலகங்களிலும் புகழ் பெற்றவரும், துதிக்கத்தக்கவருமான ஈஸ்வரருடைய நாமங்களை உனக்குச் சொல்லுகிறேன் கேள்!.. ஒருவன் யோகியாய் இருந்து அநேக நூறு வருஷங்கள் சொன்னாலும் ஈஸ்வரருடைய மகிமையை முற்றும் விவரித்துக் கூற முடியாது!!. அவருடைய அனுமதிப் பெற்றுக்கொள்ளாமல் ஈஸ்வரரைத் துதிக்க முடியாது, எனக்கு அவர் அனுமதிக் கொடுத்தபோதுதான் நான் அவரைத் துதித்தேன்!!.”

பிரும்மதேவர் பிரும்மலோகத்தில் இந்த சிவஸஹஸ்ரநாமத்தினை மந்திரங்கள் எல்லாவற்றுக்கும் இராஜாவாக ஏற்படுத்தினார், எனவேதான் இது "ஸ்தோத்திர ராஜா" எனும் நாமமடைந்தது. பதினாயிரம் நாமங்களைக் கொண்ட இதனை, தண்டி மஹரிஷி அதன் சாரத்தினை எடுத்து ஆயிரத்து எட்டாகச் செய்து இப்பூவுலகிற்குக் கொணர்ந்தார். இது எல்லாப் பாவங்களையும் போக்குவதும், நான்கு வேதங்களையும் அடக்கியதாகும், இதை மன ஊக்கத்தோடும், முயற்சியோடும் அறியவும் _ மறவாமல் மேற்கொள்ளவும் தக்கது. மங்களங்களையும் தேஹபுஷ்டி யையும் தருவது; ராக்ஷஸர்களைப் போக்குவது; மிகப் பரிசுத்தமானது; பக்தியும் சிரத்தையும் உள்ளவனுக்கே கொடுக்கத்தக்கது; சிரத்தை இல்லாதவனுக்கும், நாத்திக னுக்கும், மனத்தை அடக்காதவனுக்கும் - காரண ரூபியான ஈஸ்வரரைப் பகைக்கிற வனுக்கும் கொடுக்கத்தகாது, அப்படிக் கொடுப்பவன், தன் முன்னோர்களோடும் பின் சந்ததிகளோடும் நரகத்திற்குப் போவான். இதுதான் தியானம், இதுவே யோகம், இதுவே தியானிக்கத்தக்க உயர்ந்த பொருள்!. ஜபிக்கத்தக்கதும் இது. ஞானமும் இது, உயர்ந்த ரஹஸ்யமும் இது, மரணகாலத்தில் இதை அறிந்தால் உயர்ந்த கதியை அடையலாம், சிறந்த நன்மை இது!, எவர் எல்லாமுமாக இருக்கின்றாரோ..... எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும், அளவற்ற மகிமை உள்ளவராகவும் இருக் கின்ற அந்தப் பரமசிவனுடைய ஆயிரத்தெட்டு நாமங்களைச் சொல்கிறேன். கேள்!!.." என்று உபமன்யு மஹரிஷி தன்னிடம் சொன்ன 'சிவஸஹஸ்ரநாமத்தை'ச் சொல்லிவிட்டு; மேலும் உபமன்யு மஹரிஷி சொன்னவற்றையும் சொல்லலானார்.

"கிருஷ்ணா!.. தினந்தோறும் சுத்தமாக பக்தியுடன் இந்நாமாக்களால் சிவபெருமானைத் துதிப்பவன் தன் ஆத்மாவைப் பரமனிடமே சேர்ப்பிக்கின்றான். பிரபஞ்சத்தில் பல பிறப்புக்களிலும் அநேகமாயிரம் கோடிமுறை பிறந்து பாவந்தொ லைத்த மனிதனுக்குச் சிவபிரானிடத்தில் பக்தி உண்டாகிறது. சங்கரரை எல்லா வகையாலும் நினைக்கின்றவனுக்கு அவரிடத்தில் ஏகபக்தி உண்டாகிறது. உறுதி யான பக்தி தேவர்களுக்கே கிடைப்பதரிது!. மனிதர்களுக்குக் கிடைப்பதேயில்லை!!, சிவபெருமானைத்தவிர மற்றத் தேவர்கள் மனிதர்களுக்குச் சம்ஸாரத்திலிருந்து மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டார்கள். ஏனென்றால் அவர்களுக்கு அந்தச் சக்தியும் தவ வண்மையும் இல்லை!!" என்று உபமன்யு மஹரிஷி சொன்னதை யுதிஷ்டிரரு க்கும், அவரைச் சுற்றியுள்ளவர்க்கும் சொன்னதும் அங்குக் கூடியிருந்தவர்களும் சிவபெருமான் தங்களுக்கு அளித்த வரங்களை விவரித்தனர்.

- **கபிலமஹரிஷி:** சம்ஸாரத்தினை ஒழிக்கும் தத்வஞானம் பெற்றார்.
- வியாஸர்: சுகரைப் பெற்றார்.
- **சாருசீர்ஷர்:** சாகாவரம் பெற்ற நூறு பிள்ளைகளைப் பெற்றார்.
- **வால்மீகி**; வேதவிரோதமான வாதம் செய்ததினால் உண்டான "பிரும்மஹ த்தி" நீங்கியது.
- **பரசுராமர்:** கோடலியையும், சிறந்த படைகளையும் பெற்றார்.
- **விஸ்வாமித்திரர்:** சிறந்த பிராமணத்தன்மையை அடைந்தார்.
- **தேவலர்:** இந்திரன் அளித்தச் சாபம் நீங்கியது.
- **குருத்ஸத்மதர்:** வரிஷ்டரின் சாபத்தால் கொடிய மிருகமாகப் பிறந்தமை நீங்கினது.

- **ஜைகீஷவ்யர்:** காசியில் செய்தத் தவத்தால் எண்குணச் சித்திபெற்றார்.
- **சர்க்கர்:** அறுபத்து நான்கு கலைகளிலும் ஞானம் பெற்றது.
- **பராசரர்:** வேதவியாசரைப் பெற்றார். (இந்த பராசரர் ஸ்ரீ பரமேச்வரரை வேண்டி பாரதம் இயற்றிய வேத வியாஸரை பெற்றெடுத்த விவரம் பாரதத் தில் சொல்லப்பட்டிருக்க, இந்த வியாஸர் எப்படி ஹரிக்கு பரத்துவம் உண்டு என்று சொல்லியிருப்பார்?)
- **மாண்டவ்யர்:** திருடன் என்ற அபகீர்த்தியைப் போக்கிக் கொண்டு, தர்மத்தின் நான்காவது காலுக்கு ஒப்பற்றவனானார்.
- **காலவர்:** தனது தகப்பனை அடைந்தார்.

இவ்விதமாக மேலும் பலரும் தாம் ஸ்ரீ மஹேஸ்வரரைப் பணிந்து பெற்ற வரங் களை அவரவர் கூறி முடித்ததும், கிருஷ்ணர் தான் மஹேஸ்வரரைத் துதித்தத் துதியையும் அதனால் தான் பெற்ற வரங்களின் விவரத்தினையும் அங்குக் கூடியிரு ந்தோரிடம் மேலும் சொல்லலுற்றார்:

“பாப கார்யம் செய்து மதிகலங்கிய ' மனிதர்கள் ஈஸ்வரரை அடைவதில்லை. பரமேஸ்வரரிடத்தில் பக்தியுள்ளவன் எவ்வகையாக நடந்தாலும், அவன் பரிசுத்த மான முனிச் ஸ்ரேஷ்டனுக்குச் சமமே!. ருத்ரர் சந்தோஷித்தால், பிரம்மாவாத லையும், தேவருடன் சேர்ந்த இந்திரன் ஆதலையும், மூன்று லோகங்களுக்கு ஈஸ்வரன் ஆதலையும் கொடுப்பார். நல்லக் குணங்கள் எதுவுமின்றி ஒருவனுக்கு எல்லாப் பாவங்களும் சேர்ந்திருந்தாலும் சிவபெருமானை மனதினால் தியானிப் பவன் அந்தப் பாவங்களை ஓட்டிவிடுவான். அனைத்தும் சிவபெருமானிடத்திலிருந்து உண்டானது என்று அறியுங்கள். மிகச்சிறந்த இந்த “ஸ்ரீ சிவஸஹஸ்ரநாமத்தை” ருத்திரரிடத்தில் மனம் வைத்துச் சொல்பவன் மிக்கப் புகழை அடைவான். அந்தச் ஸ்தோத்திரத்தினால் துதிக்கும் மனிதன் தன். உடலில் எத்தனை மயிர்கால்கள் இருக்கின்றனவோ அத்தனை ஆயிரம் வருஷங்கள் சிவலோகத்தில் இருப்பான்!!” என்றுக் கிருஷ்ணர் சொல்லி முடித்தார்.

இது தவிர, **பாரதம்/அநுஸாசன பர்வம்/49வது அத்தியாயத்தில்**, தருமரிடம் சிவபெருமான் மகிமையை சொல்லும் பகுதியின் இறுதியாக, :தருமரே! ஸூர்யன், சந்திரன், காற்று, அக்நி, ஆகாயம், பூமி, ஜலம், வசுக்கள், விச்வ தேவர்கள், தாதா, ,அர்யமா, சுக்கிரர், ப்ருஹஸ்பதி, ருத்ரர்கள், ஸாத்யர்கள், வருணன், ப்ரம்மா, இந்திரன், வாயு, பிரும்மாண்டம், சத்யலோகம், வேதங்கள், யஜ்ஞங்கள், தட்சிணை கள், வேதங்களை ப்ரவிர்த்திக்கச் செய்தவர்கள், சோமலதை, யாகம் செய்பவன், ஹோமம் செய்யப்படும் நெய் முதலியவை, யஜ்ஞத்தின் ரட்சணம், யாக தீட்சைகள், நியமங்கள், ஸ்வாஹாகாரம் (யாகத்தில் ஹவிசை கொடுக்கும் மந்திரம்), வெளஷட்காரம் (இதுவும் அது), ப்ராம்மணர்கள், பசு, முக்யமான தர்மம், காலசக்ரம், பலம், புகழ், இந்திரியஜபம், புத்தியுள்ளவர்களாய் இருத்தல், நன்மை, தீமை, சப்தரிஷிகள், மனத்துள் எல்லாவற்றையும் அறியும் புத்தி, உயர்ந்த ஸ்பரிசங்களான சந்தனம், புஷ்பம் முதலியவை, செய்கருமங்கள் கூடி வருதல், ஊஷ்மபர், சோமபர் லேகர், ஸுயாமர் , துஷிதர், பிரும்மகாயர், ஆபாஸூதர், கந்தபர், தூமபர், வாசா விருத்தர், மநோவிருத்தர், சுத்தர், நிர்மாணரதர், ஸ்பர்ஸாசநர், தர்சபர், ஆஜ்யபர்,

சிந்த்யத்யோதர் எனும் தேவ கூட்டத்தினர், மற்றுமுள்ள முக்கிய தேவர்கள், கருடர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், அசுரர்கள், யட்சர்கள், சாரணர்கள், நரகர்கள், ஸ்தூல்ம், ஸூட்சுமம், நடுத்தரமானது, மிருது, கடினம், சுகதுக்கங்கள், ஸாங்கியம், யோகம், அவற்றை செய்பவர் அடையும் பரகதி ஆகிய நான் சொல்லிய இவையனைத்தும் சிவபெருமானிடத்திலிருந்து உண்டானவை என்று அறியும்!. பிராணிகளைப் படைப்பவரும், யாவராலும் பிரார்த்திக்கப் படுபவரும், அந்த ஈஸ்வரருடைய ஆதிஸ்ருஷ்டியாகிய இந்தப் பூமியில் பிரவேசித்துக் காப்பாற்றுகிறவருமாகிய தேவர்கள் அனைவரும் அவரிடத்திலிருந் உண்டானார்கள். **எல்லாவற்றிலும் மஹத்தான அந்த ஒரு பொருளை தவத்தினால் த்யாநம் செய்து ஆத்மாவுக்காக நான் நமஸ்கரிக்கிறேன்.** ஸமர்த்தரும், என்றும் அழியாதவருமான அந்த ஈஸ்வரர் என்னால் துதிக்கப் பட்டு வேண்டிய வரங்களை கொடுக்கக் கடவர்!" என்று சொன்னார்.

இவ்விதம் ஒரு மஹோன்னதமான பின்னனியுடன் கூடியதுதான் “ஸ்ரீ சிவஸஹஸ்ரநாமம்" ஆனால் அதே பாரதத்தில் இந்த அளவு சிறப்புடன் கூடியதாக விஷ்ணு சஹஸ்ரநாமம் கூறப்படவில்லை, இப்போது வழக்கத்தில் உள்ள விஷ்ணு சகஸ்ரநாமத்தில் பல பகுதிகள் பாரதத்தின் மூலத்தில் இல்லை. அவை அனைத்தும் பிறகு அனுஷ்டிக்கப்பட்டு வழக்கத்தில் வந்தவையே!!. இவ்விதமான மாற்றம் எதுவும் செய்யப்படாததான ஸ்ரீ சிவசஹஸ்ரநாமத்தை உள்ளபடியே பார்ப்போம்:

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
|சிவாத்பரதரம் நாஸ்தி||



# ஸ்ரீ சிவ ஸஹஸ்ரநாம அகராதியும் பொருளும்

**அக்னிஜ்வாலர்:** அக்னியைப்போல் ஜ்வாலையுள்ளவர்.

**அக்ரவரர்:** யாகத்தில் முதல் பாகம் வாங்குகிறவர்.

**அகமர்:** சலியாதவர். கமர் என்று பிரித்தால் 'எல்லோராலும் அடையப்படுகிறவர்' என்று பொருள்

**அதரர்:** ஒன்றும் செய்யாதவர்.

**அங்கலுப்தர்:** தம் அவயமாகிய லிங்கத்தில் ஸாந்நித்தியமாயிருப்பவர்.

**அச்வத்தர்:** அச்வத்தவ்ருக்ஷரூபியாய் இருப்பவர். சம்ஸார வ்ருக்ஷமாய் இருப்பவர் என்பது பழைய உரை.

**அச்வர்:** வ்யாபிப்பவர். 'உச்சைஸ்ரவ் முதலிய குதிரைகளாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**அசநி:** வஜ்ராயுதத்தைத் தரிப்பவர்.

**அசலோபமர்:** மலைபோன்றவர். தம் ஞானத்தை வெளிப்படுத்தாதவர் என்பது. 'தத்வஞானி' என்பது பழைய உரை.

**அசிந்த்யர்:** தாம் சிந்திக்க வேண்டியது ஒன்றுமில்லாதவர் குறைவில்லாதவர் என்பது.

**அசிந்த்யர்:** உபாசனைக்கும் எட்டாதவர்.

**அத்யாத்மாநுகதர்:** ஆத்மாவை அநுசரித்திருப்பவர்.

**அத்ரி:** சந்திரனுக்குப் பிதாவான ரிஷி, முக்குணங்களும் அற்றவர். "புதன்" என்பது பழைய உரை.

**அத்ரியாநமஸ்கர்த்தா:** அத்ரிபத்நியாகிய அநஸூயைக்குத் துர்வாஸஸ் என்னும் புத்ரனாகப் பிறந்து அவளை நமஸ்கரித்தவர்.

**அதந்த்ரிதர்:** சோம்பலில்லாதவர். (ஓய்வில்லாதவர்)

**அதநர்:** தனமில்லாதவர்.

**அதம்பர்:** தம்மையடக்குகிறவர் இல்லாதவர்.
**அதர்வசீர்ஷர்:** அதர்வ வேதத்தைத் தலையாக உடையவர்.
**அதர்ஷணர்:** அசைக்க முடியாதவர்.
**அதிதி:** தேவமாதா, பூமியென்னவுமாம்.
**அதிதீப்தர்:** மிகப் பிரகாசமாயிருப்பவர்.
**அதிதூம்ரர்:** மிக்க புகையுடையவர்.
**அதிரோஹர்:** மேல் பதத்தில் இருப்பவர்.
**அதிவ்ருத்தர்:** பெரியவற்றிற்கும் பெரியவர்.
**அதீநர்:** உதாரமனமுள்ளவர்.
**அதுல்யர்:** ஒப்பற்றவர்.
**அந்தர்ஹிதாத்மா:** வெளிப்படாத ஸ்பாவமுள்ளவர்.
அந்தராத்மா: அந்தர்யாமியாயிருப்பவர்.
**அநகர்:** தக்ஷயாகத்தை அழித்தும் பாபமண்டாதவர்.
**அநந்தரூபர்:** அளவில்லாத ஸ்வரூபமுடையவர்.
**அநலர்:** திருப்தியில்லாதவர்.
**அநலர்:** அக்னியாயிருப்பவர்.
**அநலர்:** அக்னிபோலப் பாபங்களை எரிப்பவர்.
**அநிந்திதர்:** இகழப்படாதவர்.
**அநிந்திதர்:** குற்றமற்றவர்.
**அநிமிஷர்:** இமைகொட்டாதவர்.
**அநிலர்:** காற்றாயிருப்பவர்.
**அநிலர்:** உயிரைத் தருகிறவர்.
**அநிலாபர்:** காற்றைப்போலிருப்பவர். கண்ணுக்குப் புலப்படாதவரென்பது.
**அநீதி:** பிறரால் நடத்தப்படாதவர்.
**அநுகாரி:** பக்தர் மனதை அநுசரித்துச் செய்கிறவர்.
'பீஷ்மரைக் கொல்ல ஆய்த ப்ரயோகத்தை அபிநயித்தக் க்ருஷ்ணராய் இருப்பவர்' என்பது பழைய உரை.
**அநௌஷதர்:** தடுக்க முடியாதவர். 'அன்னத்தைப் புசியாதவர்' என்பது பழைய உரை.
**அப்ஸரோஹணஸேவிதர்:** அப்ஸரஸ்களின் கூட்டங்களினால் அடுக்கப்பட்டவர்.
**அபரர்:** பிந்தினவர்.
**அபிகம்யர்:** அடையத்தக்கவர்.
**அபிராமர்:** மனதுக்கினியவர்.
**அபிவாத்யர்:** யாவராலும் நமஸ்கரிக்கவும் துதிக்கவும் பெற்றவர்.
**அம்சு:** கிரணமாயிருப்பவர். 'அம்சுவென்னும் தேவதையாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**அம்புஜாலர்:** ஜலச்சேர்க்கையான கடலாயிருப்பவர்.
**அம்ருதர்:** அமுது போன்றவர்.
**அம்ருதர்:** நித்யர், சந்த்ர ரூபியென்னவுமாம்.
**அம்ருதோகோவ்ருஷேச்வரர்:** பூமியிலுள்ள தர்மத்திற்கு அழிவில்லாத ஈஸ்வரர்.
'பயனை விரும்பாமற் செய்யும் அழிவில்லாத தர்மத்திற்கு ஈஸ்வரர்' என்பது பழைய உரை.
**அமரர்:** மரணமில்லாதவர்.

**அமரர்:** அழிவில்லாதவர்.
**அமரேசர்:** தேவர்களுக்கும் ஈஸ்வரர்.
**அமித்ரஜித்:** சத்ருக்களை ஜெயிப்பவர்.
**அமிதர்:** அளவில்லாதவர்.
**அமுக்யர்:** கடைசியாயிருப்பவர். தமக்கு முதன்மையானவரில்லாதவர் என்றுமாம்.
**அமுகர்:** முகமில்லாதவர்.
**அமோகர்:** வீணாகாதவர். அவரை ஆஸ்ரயிப்பது வீண்போகாதென்பது.
**அமோகார்த்தர்:** ப்ரார்த்தனை வீண்போகாதவர்.
**அயஜ்ஞர்:** யஞ்ஞுமுதலிய கர்மங்களற்றவர்.
**அர்த்தகரர்:** வேண்டினதைக் கொடுப்பவர்.
**அர்த்தநர்:** துஷ்டர்களைப் பீடிப்பவர்.
**அர்த்தர்:** ப்ரார்த்திக்கப்படுகிறவர்.
**அர்யமா:** சூரியனாக இருப்பவர்.
**அலோகர்:** உலகத்தை கடந்தவர்.
**அலோலர்:** ஆசைகளற்றவர்.
**அவ்யக்தம்:** புலப்படாதவர். 'நான் அறியேன் என்னும் அநுபவத்தினால் தோற்றும் அஞ்ஞானம்" என்பது பழைய உரை.
**அவ்யயர்:** மாறாதவர்.
**அவ்யயர்:** பல வகைகளால் அடையக்கூடாதவர். 'ஏக பக்தியினால் அடையப் படுகிறவர்' என்பது கருத்து.
**அவசர்:** யாருக்கும் உட்படாதவர்.
**அவரர்:** தமக்கு மேற்பட்டவரில்லாதவர்.
**அஜர்:** ஜனனமில்லாதவர்.
**அஜிதர்:** யாவராலும் ஜெயிக்கப்படாதவர்.
**அஜிதர்:** முக்குணங்களினாலும் வெல்ல முடியாதவர்.
**அஜிதர்:** ஜயிக்கப்படாதவர்.
**அஜைகபாத்:** ஏகாதச ருத்ரர்களில் ஒருவர்.
**அஸ்நேஹநர்:** பற்றற்றவர்.
**அஸத்:** கார்யமாயிருப்பவர். 'காரணமாயிருப்பவர்' என்றும்.
**அஸத்:** கார்யம் 'காரணம்' என்பது பழைய உரை.
**அஸமாம்நாயர்:** சாஸ்திரம் முதலியவையாயிருப்பவர். வேதத்திற்கும் எட்டாதவர் என்றுமாம்.
**அசுரேந்த்ராணாம்பந்தநர்:** அசுரஸ்ரேஷ்டர்களை கட்டினவர் 'வாமன ரூபமாகி பலிச்சக்ரவர்த்தியை கட்டினவர்' என்பது பழைய உரை.
**அஹஸ்:** பகலாயிருப்பவர்.
**அஹஸ்சரர்:** பகலில் சஞ்சரிக்கும் தேவதையாயிருப்பவர்.
**அஹிர்புத்நியர்:** ஒரு தேவதை; 'பிரம்மாண்டத்தின் அடியிலிருக்கும் சேஷனாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**அஹோராத்ரர்:** இரவு பகலாயிருப்பவர்.
**அக்ஷரர்:** அழிவில்லாதவர். இந்த நாமத்திற்கு பிறகு சொல்லப்படும் நாமங்களான 'பரமம்ப்ரம்ம' என்பதை இந்நாமத்துடன் சேர்த்தே சொன்னால், அதற்கு (அக்ஷரம்ப்ரமம்ப்ரம்ம) தமக்கென்று ஓர் உருவம், தொடக்கம், முடிவு,

முதலிய எதுவும் இல்லாத பரப்ரஹ்மம் என்று பொருள்.

**ஆகாசநிர்விரூபர்:** ஆகாசம் போன்ற தம்மிடத்திலிருந்து அநேக ரூபங்களை உண்டாக்குகிறவர். அல்லது ஆகாசம் போல விசேஷ ரூபமில்லாதவர் என்றுமாம்.

**ஆச்ரமஸ்தர்:** நான்கு ஆஸ்ரமங்களிலும் இருப்பவர்.

**ஆத்மநிராலோகர்:** தம் ஸ்வரூபத்தில் பிறர் பார்வை வராதவர். 'ஜீவனிடத்தில் நிச்சயமாக தம்மைப் பார்ப்பவர்.' " என்பது பழைய உரை.

**ஆத்மஸம்பவர்:** தாமே உண்டானவர்.

**ஆத்யநிர்க்கமர்:** உலகத்தின் முதல் முளையாயிருப்பவர். 'அஹம் எனும் முதல் நினைவு' என்பது பழைய உரை.

**ஆத்யர்:** முதல்வர்.

**ஆதி:** முதல்வர்.

**ஆதிகரர்:** முதல்வரான ப்ரம்ம தேவரையும் படைத்தவர்.

**ஆதித்யர்:** பகன் என்னும் தேவதை. சூர்யன் என்றும், ஆதியில் இருப்பவர் என்றுமாம்.

**ஆதித்யவஸு:** அதிதி புத்ரனாகிய வசு என்பவராயிருப்பவர்; ப்ரகாசிக்கும் சூரியனாய் இருப்பவர் என்றுமாம்.

**ஆதேசர்:** உபதேசமாயிருப்பவர்.

**ஆயுதி:** எல்லா ஆயுதங்களையும் தரிப்பவர். நன்றாக யுத்தம் செய்பவர். 'தமக்கே உரிய சூலாகாயுதத்தை தரித்தவர்' என்பது பழைய உரை.

**ஆயுஸ்:** ஆயுளாயிருப்பவர்.

**ஆர்த்ரஸர்மாம்பராவ்ருதர்:** ரத்தத்தினால் நனைந்த யானைத்தோலை ஆடையாக உடையவர்.

**ஆரோஹணர்:** பக்தர்களை ஏறச்செய்கிறவர்.

**ஆவர்த்தமாநேப்யோவபு:** ஸம்ஸாரத்தில் பலமுறை திரும்புவோர்க்கு சரீரத்தை தருகிறவர்.

**ஆவேதநீயர்:** குருவினால் உபதேசிக்கப்படத்தக்கவர்.

**ஆஷாடர்:** எல்லாவற்றையும் பொறுக்கும் சக்தியுள்ளவர்.

**இதிஹாஸர்:** பாரத முதலிய இதிஹாசமாயிருப்பவர். இதற்கடுத்து வரும் நாமமான "கல்பர்" என்பதை இதிஹாஸகல்பர் என்று கொண்டால், 'யஜ்ஞவிதிகளைக் கற்பிக்கும் மீமாம்ஸா நியாயங்களோடு கூடியவர்' என்று பொருள்.

**ஈ:** லக்ஷ்மியாயிருப்பவர்.

**ஈச்வரர்:** வ்யாபிப்பவர்.

**ஈஸாநர்:** எல்லாவற்றையும் நடத்துகிறவர்.

**ஈட்யர்:** துதிக்கத்தக்கவர்.

**உக்ரதேஜஸ்:** உக்ரமான தேஜஸையுடையவர்.

**உக்ரர்:** எல்லாவற்றையும் விழுங்குகிறவர்.

**உத்பித்:** அவித்தையைப்பிளந்து கொண்டு ஆவிர்ப்பவர்.

**உத்ஸங்கர்:** பற்றற்றவர்.

**உதக்ரர்:** உறுதியான ரூபமுள்ளவர்.
**உந்மத்தவேஷப்ரசந்நர்:** பித்தன் வேஷத்தினால் தம்மை மறைத்திருப்பவர்.
**உந்மாதர்:** மோகிக்கச் செய்கிறவர்.
**உபகாரர்:** உபகாரம் செய்பவர்.
**உபசாந்தர்:** தம் சாமர்த்தியத்தை வெளிக்காட்டாதவர்.
**உபதேசகரர்:** உபதேசம்.
**உமாகாந்தர்:** உமாதேவியினால் விரும்பப்படாதவர்.
**உமாதவர்:** உமையின் கணவர்.
**உமாபதி:** பார்வதிக்குக் கணவர்.
**உமாபதி:** பார்வதிக்கு நாதர்; ப்ரம்ம வித்தைக்கு அதிபதி என்றுமாம்.
**உஷ்ணீஷி:** தலைப்பாகையை உடையவர்.
**உஷங்கு:** தஹிக்கும் கிரணங்களை உடையவர்.
**ஊர்த்வகாத்மா:** ப்ரகிருதிமண்டலத்துக்கு மேற்போன ஸ்வரூபத்தை உடையவர்.
**ஊர்த்வஸாயி:** அண்ணாந்து படுத்திருப்பவர்.
**ஊர்த்வரேதஸ்:** மேல்நோக்கிய ரேதசையுடையவர்; ஜிதேந்த்ரியர்.
**ஊர்த்வரேதஸ்:** எல்லோர்க்கும் மேற்பட்ட பிரம்மாதிகளை ஸ்ருஸ்டிப்பவர்.
**ஊர்த்வலிங்கர்:** மேல்நோக்கிய குறியையுடையவர்.
**ஊர்த்வஸம்ஹநநர்:** மிக்க வலிமையுடையவர்; உயரமான தேஹமுள்ளவர்.
**க்ரஹபதி:** எல்லாக் கிரஹங்களுக்கும் தலைவர். 'அங்காரஹன்' என்பது பழைய உரை
**க்ரஹர்:** எல்லவற்றையும் கிரஹிப்பவர்; 'ராகு' என்பது பழைய உரை.
**க்ராமர்:** ஜனச்சேர் க்கையாயிருப்பவர்.
**க்ரியாவஸ்தர்:** யாகமுதலிய க்ரியைகளில் இருப்பவர்.
**க்ருஷ்ணபிங்களர்:** கரிய நிறமும் சிவப்பு நிறமும் உள்ளவர்; 'ஹரி ஹர ரூபி' என்பது பழைய உரை.
**க்ருஷ்ணர்:** சதானந்தமாயிருப்பவர்; 'க்ருஷ்ணனாக அவதரித்தவர்' என்பது பழைய உரை.
**க்ருஷ்ணவர்ணர்:** கருத்த வர்ணமுடையவர், விஷ்னுரூபி என்பது.
**ககர்:** ஹ்ருதயாகாசத்திலிருப்பவர்.
**ககுபர்:** திசைகளாயிருப்பவர்.
**கசரர்:** ஹ்ருதயத்துள்ளிருக்கும் வெளியாகிய தகராகாசத்தில் வசிப்பவர்.
**கட்கி:** கத்தியைத்தரிப்பவர்.
**கண்டலி:** மேடுகளிலிருப்பவர்.
**கணகர்த்தா:** ப்ரமதகணங்களை உண்டுபண்ணுகிறவர்.
**கணகாரர்:** பாணன் முதலிய பக்தர்களைத் தம் கணங்களாகச் செய்கிறவர்.
**கணபதி:** ப்ரமதகணங்களுக்கு ஈஸ்வரர்.
**கணர்:** யாவராலும் எண்ணப்படுகிறவர்; தத்வத்தொகுதியானவர்.
**கணர்:** ப்ரமதகணமாயிருப்பவர்.
**கதாகதர்:** போய்வந்து கொண்டிருப்பவர்; அந்தர் த்யானமும் ப்ரத்யக்ஷமுமாவா ரென்பது; 'ஸம்ஸாரரூபி' என்பது பழைய உரை.

**கதி:** யாவாராலும் அடையப்படுகிறவர்; 'முக்தர்களால் அடையப்படுபவர்' என்பது

பழைய உரை.

**கதி:** யாவர்க்கும் ஸாதகமாயிருப்பவர்.

**கந்ததாரி:** வாசனையைத் தரிப்பவர்.

**கந்தபாலீபகவாந்:** ப்ரளய காலத்தில் கர்மவசனைகளை காப்பாற்றும் ஈஸ்வரர்.

**கந்தர்வர்:** சித்ரரதன் முதலிய கந்தர் வராயிருப்பவர்.

**கநகர்:** பொன்னாயிருப்பவர்.

**கநிஷ்டர்:** மிகச் சிறியவர்; சூஷ்மரூபியென்பது 'அதிதியின் புத்திரர்களில் கநிஷ்டரான வாமனர் என்பது பழைய உரை.

**கபர்த்தி:** சடை முடியுடையவர்.

**கபஸ்தி:** சூரியனுக்குக் கிரணமாயிருப்பவர்.

**கபாலவாந்:** ப்ரம்ம கபாலத்தை ஏந்துபவர்.

**கபிஸர்:** பொன்னிறமாயிருப்பவர்.

**கபிலர்:** கபிலவர்ணமாயிருப்பவர்; செம்மட்டை வர்ணமாயிருப்பவர்.

**கம்பீரகோஷர்:** பெரிய வாத்ய முழக்கங்களுள்ளவர்.

**கம்பீரபலவாஹநர்:** அயலாரால் அசைக்கக் கூடாதவன்மையுள்ள வ்ருஷப வாகன முள்ளவர்.

**கம்பீரர்:** அறிவுக்கெட்டாதவர்.

**கமண்டலுதரர்:** கமண்டலு என்னும் பாத்திரத்தை தரிப்பவர்.

**கர்ணிகாமஹாஸ்ரக்வீ:** சிறந்த கொன்றை மாலையை அணிந்தவர்.

**கர்த்தா:** எல்லாவற்றையும் உண்டாக்கினவர்.

**கர்மகாலவித்:** கர்மங்களின் காலங்களை அறிந்திருப்பவர்.

**கர்மஸர்வபந்தவிமோசநர்:** கர்மங்களாலுண்டான பந்தங்களெல்லாவற்றையும் விடுவிப்பவர்.

**கரஸ்தாலி:** கையையே பாத்திரமாக உடையவர்.

**கல்பர்:** கல்பசூத்ரமாயிருப்பவர்.

**கலி:** நெற்களத்துக்கு பதி.

**கலி:** யுத்த ரூபியாயிருப்பவர் 'மஹாமோஹத்தின் கார்யமான காமக்ரோத முதலியவையாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**கலி:** கலியாய் இருப்பவர். 'மஹாமோஹத்தின் கார்யமான காம, க்ரோத முதலிய வாக இருப்பவர்' என்பது பழைய உரை.

**கலை:** கலையென்னும் காலத்தின் சிறிய பிரிவாயிருப்பவர்.

**கவாம்பதி:** இந்திரியங்களை நடத்துகிறவர்.

**கஜஹா:** யானையாக வந்த அசுரனைக் கொன்றவர்.

**காஞ்சநச்சவி:** பொன்னிறமுள்ளவர்.

**காந்தர்:** ஆனந்தத்தின் எல்லையாயிருப்பவர்.

**காந்தாரர்:** பூமியைத்தரிப்பவர்; 'காந்தாரமென்னும் ஸ்வரமாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**காபாலி:** கபாலமுடையவர்; 'ப்ரும்மாண்டத்திற்கு அதிபதி' என்பது பழைய உரை.

**காமநாசகர்:** மன்மதனை அழித்தவர்.

**காமர்:** எல்லொராலும் விரும்பப்படுகிறவர்; மன்மதனைப்போல அழகுள்ளவர்.

**காமர்:** விரும்பப்படும் சப்தாதி விஷயமாயிருப்பவர்.

**காலகடங்கடர்:** யமனுடைய ஆபரணமாகிய மாயையை மூடுகிறவர்.
**காலபூஜிதர்:** யமனால் பூஜிக்கப் பெற்றவர்.
**காலயோகி:** காலத்தைச் சேர்ப்பிப்பவர்.
**காலர்:** புண்ணிய பாவங்களின் பலனைச் செய்பவர்; பலனைக் கொடுப்பதற்காக எல்லாப் பிராணிகளின் புண்ணிய பாவங்களையும் அறியும் சித்ர குப்தனா யிருப்பவர்? என்பது பழைய உரை.
**காலர்:** கலைஞானங்களுக்கு இருப்பிடமானவர்.
**காலர்:** காலமாயிருப்பவர்; 'பிறப்பு இறப்புகளின் பெருக்காயிருப்பவர்' என்பது பழைய உரை.
**காலர்:** காலமாயிருப்பவர்; யமன் அல்லது எல்லாவற்றையும் நடத்துகிறவர்.
**காஷ்டை:** காஷ்டையென்னும் காலத்தின் ஒரு சிறியபிரிவாயிருப்பவர்.
**காஹலி:** காஹல வாத்யமுள்ளவர்.
**கிரிருஹர்:** கைலாசத்தின் மேலிருப்பவர்.
**கிரிஸாதநர்:** மேருமலையை வில்லெனும் கருவியாக உடையவர்.
**குண்டி:** கமண்டலுள்ளவர்.
**குணபுத்தி:** குணங்களை அறிகிறவர்.
**குணாகரர்:** குணங்களுக்கெள்ளாம் இருப்பிடமானவர்.
**குணாதிகர்:** குணங்கள் மிகுதியாக உள்ளவர்.
**குணௌஷதர்:** குணங்களை விருத்தி செய்கிறவர்.
**குரு:** ஆசாரியர்.
**குருகர்த்தா:** குருக்ஷேத்திரமென்று சொல்லப்பட்ட கர்மஸ்தானத்தையும் உபாஸநஸ்தானத்தையும் செய்தவர்.
**குருபூதர்:** கர்மஸ்தானம், உபாஸநஸ்தானம் ஆகிய இரண்டுமாயிருப்பவர்.
**குருவாஸி:** கர்மஸ்தானம், உபாஸநஸ்தானம் ஆகிய இரண்டிலும் வசிப்பவர்.
**குஹ்யர்:** மறைந்திருப்பவர். 'உபநிஷத்தாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**குஹர்:** சுப்ரமண்யர்.
**குஹர்:** மறைந்திருப்பவர். 'குமாரர்' என்பது பழைய உரை.
**குஹாவாஸி:** யோஹியாய் இருப்பவர், அல்லது ஹ்ருதய குகையில் இருப்பவர்.
**கூபர்:** பூமியை காப்பவர்.
**கூலகர்த்தா:** தர்மவ்யஸ்தையாகிய கரையையுண்டுபண்ணுகிறவர். 'புஷ்கர முதலிய மஹாதடாஹங்களை செய்தவர்' என்பது பழைய உரை.
**கூலஹாரி:** நீர்ப்பெருக்கு வடிவமாயிருந்து கரையை இடிப்பவர்.
**கேசரர்:** ஆகாயத்திலிருப்பவர்; தமக்கு ஓர் ஆதாரமும் வேண்டாதவர் என்பது.
**கேது:** கொடிபோல் எங்கும் விளங்குகிறவர்.
**கேதுமாலி:** கொடியினால் சோபிப்பவர்.
**கைலாசகிரிவாஸி:** கைலாஸ மலையில் இருப்பவர்.
**கோசர்மவஸநர்:** மாட்டுத்தோலை ஆடையாக உடுத்தவர்.
**கோசரர்:** இந்திரியங்களில் இருப்பவர்.
**கோபதி:** கிரணங்களுக்கு அதிபதி.
**கோபாலி:** இந்திரியங்களைக் காப்பவர்.
**கோரதபஸ்:** ஸம்ஹாரகாலத்தில் உக்கிரமான ஆலோசனையுள்ளவர்.

**கோரர்:** உக்ரமாயிருப்பவர்.

**கௌதமர்:** ந்யாய சாஸ்திரம் செய்தவர்.

**ச்மசாநபாக்:** ச்மசாநத்தை அடைந்திருப்பவர்.

**ச்மசாநவாஸி:** ச்மஸாநத்தில் வசிப்பவர். 'காசியில்' என்பது பழைய உரை.

**ச்ருங்கப்ரியர்:** கைலைமலை சிகரத்தில் பிரியமுள்ளவர்.

**ச்ருங்கி:** உயர்வுள்ளவர். 'கொம்புள்ள வ்ருஷப முதலியவையாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**ச்வேதபிங்களர்:** வெளுப்பும் சிவப்புமான நிறங்களுடையவர். 'அர்த்தநாரீஸ்வர ரூபி' என்பது பழைய உரை.

**சக்ரர்:** சக்தியுள்ளவர்.

**சக்ரர்:** இந்திரன்.

சங்கரர்: சுகத்தை கொடுப்பவர்.

**சங்கரர்:** தாருகாவன வாசிகளுக்கு சுகத்தை செய்தவர்.

**சங்கரர்:** சுகத்தை கையில் வைத்திருப்பவர். 'சந்தேகங்களை அறுப்பவர்' என்பது பழைய உரை.

**சசீஹரஸுலோசநர்:** கெட்ட வழி போகிறவர்களை அழிக்கும் அழகான கண்களை உடையவர், சந்திர சூர்யர்களை அழகிய கண்களாக உடைய வர், 'சந்திரனை தம்முடைய குளிர்ந்த கண்களாக உடையவர்' என்பது பழைய உரை.

**சத்ரர்:** குடையாயிருப்பவர், தபத்தை நிவிருத்தி செய்பவரென்பது.

**சத்ருஹா:** சத்ருக்களைக் கொல்லுகிறவர்.

**சதக்நி:** சக்தியாயுதமுடையவர்.

**சதக்நீபாசசக்திமாந்:** பீரங்கி, கயிறு, வேல் முதலிய ஆயுதங்களை உடையவர்.

**சதம்:** எழிலைப்பாலை மரமாயிருப்பவர்.

**சதஜிஹ்வர்:** நூறு நாக்குகளை உடையவர்.

**சதுர்முஹர்:** நான்கு முகங்களை உடையவர்.

**சதுஷ்பதர்:** நான்கு வழிகளை உடையவர். விஸ்வர், தைஜஸர், பிராஜ்ஞர், சிவன் என்னும் நான்கு வழிகளால் உபாசிக்கப்படுகிறவர் . அல்லது சரியை, கிரியை, யோஹம்,ஞானம் என்னும் நான்கு வழிகளையுடையவர்.

**சந்த்ரர்:** சந்தோஷப்படுத்துகிறவர்.

**சந்த்ரவக்த்ரர்:** மதிபோன்ற முகமுடையவர்.

**சந்தனம்:** சந்தனமாயிருப்பவர்.

**சந்தனி:** சந்தனம் பூசிக்கொண்டவர்.

**சந்தோவ்யாகரணோத்தரர்:** வேதங்களுக்கும், வேதாங்கங்களுக்கும் மேற்பட்டவர். சந்தஸ்களாலும், வியாகரணங்களாலும் பெரிதாகவே விளக்கப் பட்டு பூர்வ பட்சங்களை (மற்றவற்றை ஆச்ரயிப்பவர்களது கருத் தை) ஒதுக்கித்தள்ளி நிச்சயிக்கப்பட்ட பொருளாய் இருப்பவர் என்றும் இதற்கு பொருள்.

**சநி:** மெதுவாக இருப்பவர்.

**சமூஸ்தம்பனர்:** அசுரசேனைகளை நிறுத்துகிறவர்.

**சர்மி:** புலித்தோலையும் யானைத் தோலையும் உடுத்தவர்.

**சர்வர்:** ஹிம்சிப்பவர். தாருவாகன முனிவரை மயங்கச் செய்தவர்.

**சரண்யர்:** காப்பவர்.

**சர்:** சிதற அடிப்பவர். 'பாணமாயிருப்பவர்? என்பது பழைய உரை.

**சராசராத்மா:** ஜங்கமும் ஸ்தாவரமுமாயிருப்பவர். இங்கு, 'ரகரத்துக்கும் லகரத்துக்கும் பேதமில்லை" என்று கொண்டு, 'திரும்பி வருவதும் திரும்பி வராததுமாகிய அர்ச்சிராதி மார்கமும் துமாதி மார்கமுமாக இருப்பவர்" என்பது பழைய உரை.

**சலர்:** ஓரிடத்திலும் நில்லாதவர். நிலையாக க்ரஹிக்கக் கூடாதவர் என்பது.

**சாச்வதர்:** நித்யர்.

**சாருலிங்கர்:** அழகான ரூபத்தையுடையவர்.

**சிகண்டி:** ஜடை முடியுடையவர்.

**சிகி:** சிகையுள்ளவர். 'குடிமியுள்ள க்ருஹஸ்தர்' என்பது பழைய உரை. நான்கு வகை ஆச்ரமஸ்தர்களுக்குண்டானதாகும். இந்நாமத்தைத் தவிர முண்டி, ஜடி ஆகிய வற்றையும் காணவும்.

**சிரோஹாரி:** பிரம்மாவின் தலையை அறுத்தவர்.

**சிவர்:** பரிசுத்தர்.

**சீரவாஸஸ்:** மரவுரியைத் தரித்திருப்பவர்.

**சீலதாரி:** நல்லொழுக்கத்தைக் காப்பவர்.

**சுக்லர்:** வெண்ணிறமாயிருப்பவர்.

**சுசி:** பரிசுத்தர்.

**சுசி:** சுத்தர். ப்ரக்ருதியிலிருந்து விலகி இருப்பவர் என்பது.

**சுத்தர்:** குற்றமற்றவர்.

**சுத்தாத்மா:** பரிசுத்த சித்தமுள்ளவர்.

**சுபாக்ஷர்:** அனுக்ரஹத்தினால் சிறந்த கண்ணுள்ளவர்.

**சேகிதாநர்:** செவ்வையாக அறிகிறவர்.

**சோபநர்:** மங்களகரர்.

**சோபநர்:** கல்யாணமாயிருப்பவர்.

**த்ராஸநர்:** பயப்படுத்துகிறவர்.

**த்ரிககுந்மந்த்ரர்:** பீஜம், சக்தி, கீலகம் என்னும் மூன்று முக்கிய அமசங்களுடைய மந்த்ரமாயிருப்பவர்.

**த்ரிகாலத்ருத்:** இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம் ஆகிய முக்காலங்களையும் தரிப்பவர்.

**த்ரிசங்கு:** சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களையும் ஆணிகள் போல் ஆதரமாகவுடையவர்.

**த்ரிசுக்லர்:** மனம், வாக்கு, காயம் மூன்றும் சுத்தமாயிருப்பவர்.

**த்ரிதசர்:** ஜநநம், மரணம், வாழ்க்கை ஆகிய மூன்று தசைகளையும் பிராணிகளுக்குக் கொடுப்பவர்.

**த்ரியக்ஷர்:** முக்கண்ணர்.

**த்ரியுகர்:** (மூவிரண்டு) ஞானம், சக்தி, பலம், ஐஸ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு குணங்களுள்ளவர். 'கலி தவிர மற்ற மூன்று யுகங்களாய் இருப்பவர்' என்பது பழைய உரை.

**த்ரிலோசநர்:** முக்கண்ணர்.

**த்ரிவிக்ரமர்:** மூவுலகங்களையும் வ்யாபித்திருப்பவர். 'த்ரிவிக்ரமமாயிருப்பவர்" என்பது பழைய உரை.

**த்ரிவிஷ்டபம்:** ஸ்வர்க்கரூபி. 'ஸ்வர்க்க ஸாதநமான தர்மம்' என்பது பழைய உரை.

**த்ரிஜடி:** மூன்று ஜடைகளை உடையவர்.

**த்ருதிமாந்:** தைர்யமுள்ளவர்.

**த்ருவர்:** அசைவற்றவர்.

**த்ருவர்:** ஒரு நக்ஷத்ரமாக இருப்பவர்.

**த்ருவர்:** சலியாதவர்.

**த்வஷ்டா:** விச்வகர்மா; எல்லாவற்றையும் குறைப்பவர்; அழிப்பவரென்றுமாம்.

**த்வாதசர்:** பன்னிரண்டு சூர்யர்களாய் இருப்பவர். 'மனிதர்களுக்குக் கர்ப்பவாச முதலுள்ள தசைகளில் பன்னிரண்டாவது தசையாகிய மோக்ஷரூபி' என்பது பழைய உரை.

**தசபாகு:** பத்துக் கைகளை உடையவர்.

**தண்டி:** தடியுள்ளவர்.

**தந்வந்தரி:** வைத்ய சிரேஷ்டர்; பிறவிப்பிணிகளுக்கு சிகிச்சை செய்பவர்.

**தந்வி:** வில்லையுடையவர்.

**தபஸ்வி:** தவமுள்ளவர்.

**தபஸ்ஸக்தர்:** தவத்திலிருப்பவர்.

**தபோநிதி:** ரிஷி.

**தபோமயர்:** தவமேயுருக் கொண்டவர்.

**தம்ப்ர்:** சத்ருக்களை அடக்குகிறவர்.

**தமநர்:** துஷ்டர்களை அடக்குகிறவர்.

**தர்ப்பசாரி:** தர்ப்பங்களில் வைக்கப்பட்ட ஹவிசுகளை பக்ஷிப்பவர்; அல்லது தர்ப்பங்களில் சஞ்சரிப்பவர். அவற்றை பரிசுத்தம் செய்பவர் என்பதுமாம்.

**தர்ப்பணர்:** கண்ணாடி போலிருப்பவர்.

**தர்மசாதாரணவரர்:** புண்ணியத்திற்குத் தக்க பயனாய் இருப்பவர்.

**தர்ஷணாத்மா:** பிறரை பயப்படுத்துகிறவர்.

**தரங்கவித்:** அலைகளையுடையவர், இங்கு சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்கள் அலைகள் என்பன. 'விஷய சுகங்களையடைபவர்' என்பது பழைய உரை.

**தரர்:** ஒரு வசு.

**தரு:** ஆபத்தை தாண்டுவிப்பவர்.

**தரு:** கல்பக முதலிய மரமாயிருப்பவர்.

**தரோத்தமர்:** எல்லவற்றையும் தாங்குகிற ஆதிசேஷன் முதலானவர்களுக்கும் மேலனவர்.

**தலஸ்தாலர்:** கைத்தாளமாயிருப்பவர்.

**தக்ஷயாகாபஹாரி:** தக்ஷருடைய யாகத்தை அழித்தவர்.

**தக்ஷர்:** காரியங்களில் திறமையுள்ளவர்.

**தக்ஷிணர்:** சமர்த்தர்.

**தாதா:** பிரும்மா.

**தாம்ரோஷ்டர்:** சிவந்த உதடுகளுள்ளவர்.

**தார்க்ஷயர்:** கருடர்.
**தாரணர்:** சம்சாரத்தைத் தாண்டுவிப்பவர்.
**தாலர்:** சம்சாரக் கடலின் தலம் என்று சொல்லப்பட்ட ஆழத்தை அறிந்தவர். சுத்த ப்ரம்மத்தை அறிந்தவர்? என்பது பழைய உரை.
**தாளி:** தாளமுள்ளவர்.
**திக்மதேஜாஸ்வயம்புவர்:** பிரும்மாவுக்குந் தாங்கமுடியாத பராக்ரமமுள்ளவர்.
**திக்மமந்யு:** உக்ரமான கோபமுள்ளவராயிருப்பவர்.
**திக்வாசஸ்:** திசைகளை ஆடையாய் உடுப்பவர்.
**திவிசுபர் வணோதேவர்:** தேவலோகத்திலிருக்கும் இந்த்ரனுக்கும் பூஜ்யர்.
**தீநஸாதகர்:** ஏழைகளுக்கு உபகாரம் செய்பவர்.
**தீர்க்கர்:** நெடியவர்.
**தீர்த்ததேவர்:** பரிசுத்த தேவதை.
**தீக்ஷணதாபர்:** உக்ரமான தாபத்தை செய்யும் அக்னியாயிருப்பவர்.
**தும்பவீணர்:** சுரைக்காய் கட்டின வீணையை உடையவர். இதனாலேதான் அதனை ருத்ரவீணை என்பது.
**துர்வாஸர்:** ஆடையில்லாதவர்.
**துர்வாஸர்:** துர்வாசமுனிவராக அவதரித்தவர்.
**தூமகேதநர்:** புகைக்கொடியுள்ள அக்னியாயிருப்பவர்.
**தூமகேது:** வால் நக்ஷத்ரமாயிருப்பவர்.
**தேவதாத்மா:** தேவர்களுக்கு அந்தர்யாமி.
**தேவதேவர்:** தேவர்க்குந்தேவர்.
**தேவர்:** ஜயிப்பவர்; விளங்குகிறவர் என்றும்.
**தேவர்:** ஜயிக்க எண்ணமுள்ளவர்; காந்தியுள்ளவர் என்றும்.
**தேவரிஷி:** தேவதையாகவும் ரிஷியாகவும் இருப்பவர்; 'நாரதர் முதலியோராய் இருப்பவர் என்பது பழைய உரை.
**தேவஸிம்மர்:** தேவஸிரேஷ்டர்.
**தேவாதிதேவர்:** இந்திரியங்களுக்கு எட்டாமல் விளங்குகிறவர்.
**தேவாதிபதி:** தேவர்களுக்கு அதிபதி.
**தேவாசுரகணாக்ரணி:** தேவாசுரக் கூட்டங்களை முன்னுக்குக் கொண்டு போகிறவர்; கார்த்திகேயர்; கேசி முதலியவராயிருப்பவர்? என்பது பழைய உரை.
**தேவாசுரகணாச்ரயர்:** தேவசுரக் கூட்டங்களினால் அடையப்படுகிறவர்.
**தேவாசுரகணாத்யக்ஷர்:** இந்திரன் விரோசனன் முதலிய தேவசுர கூட்டங்களுக்கும் தலைவர்.
**தேவாஸுரகுரு:** தேவாசுரரால் பூஜிக்கப்பெற்றவர்; 'குரு சுக்ரர்களாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**தேவாஸசுரநமஸ்க்ருதர்:** தேவசுரர்களால் நமஸ்கரிக்கப்பட்டவர்.
**தேவாஸுரபதி:** தேவருக்கும் அசுரருக்கும் தலைவர்.
**தேவாஸாரபராயணர்:** தேவசுரர்க்கு முக்கிய ஆதரவாயிருப்பவர்.
**தேவாஸுரமஹாமாத்ரர்:** தேவசுரர்களுக்கு முக்கிய மந்திரியாயிருப்பவர்.
**தேவாஸுரமஹேச்வரர்:** தேவாசுரர்களை நியமிப்பவர்களையும் நியமிப்பவர்.
**தேவாஸுரவரப்ரதர்:** பிரம்மா ருத்ரர் முதலியோராயிருந்து தேவாசுரருக்கு வரமளிப்பவர்.

**தேவாஸுரவிநிர்மாதா:** தேவாசுரரைப் படைப்பவர்.
**தேவாஸுரேச்வரர்:** தேவாசுரர்களை நியமிப்பவர்.
**தேவேந்த்ரர்:** தேவர்களுக்கும் ஈஸ்வரர்.
**தேஜஸ்:** ஒளியாயிருப்பவர்.
**தேஜஸ்கரர்:** சூர்யன் முதலியவற்றிற்கும் ஒளியையுண்டுபண்ணுகிறவர். 'தேஜோஸ் கரநிதி' என்று ஒரு நாமமாகக் கொண்டு, 'பக்தர்களுக்கு ஒளியைக் கொடுக்கும் நிதி போன்றவர்' என்றும் பொருள் உண்டு. (பழைய உரை)
**தேஜோபஹாரி:** பிறர் சக்திகளை அபஹரிப்பவர்.
**தேஹர்:** வ்ருத்தியாகிறவர்.
**தைத்யஹா:** அசுரர்களைக் கொன்றவர்.
**தோரணர்:** முக்திக்கு வாயிலாக இருப்பவர்.
**ந்யக்ரோதர்:** ஆலமரத்தின் கீழ் தக்ஷிணாமூர்த்தியாய் இருப்பவர்.
**ந்யக்ரோதரூபர்:** கீழே வளர்வதாகிய சம்சார விருஷமாயிருப்பவர்.
**ந்யாயநிர்வணர்:** நியாய சாஸ்திரத்தை உலகத்திற்கு கொடுத்தவர். 'தர்மப்ரகாரம் தானம் செய்பவர்" என்பது பழைய உரை.
**ந்ருத்யப்ரியர்:** நர்த்தனத்தில் விருப்பம் உள்ளவர்.
**நக்தஞ்சரர்:** இரவில் சஞ்சரிக்கும் ராக்ஷசர் முதலியவராயிருப்பவர்.
**நக்தர்:** இரவாயிருப்பவர்; 'மாஹாமோஹமாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**நந்தநர்:** சந்தோஷப்படுத்துகிறவர்.
**நந்தி:** தாமே நந்தியாகவும் இருப்பவர்.
**நந்தி:** சம்பத்தாயிருப்பவர்.
**நந்திகரர்:** சம்பத்தை செய்கிறவர்.
**நந்திகரர்:** பூர்த்தி செய்கிறவர்.
**நந்திவர்த்தனர்:** பகைவனின் சந்தோஷத்தை அழிப்பவர்.
**நந்தீச்வரர்:** நந்தியென்னும் வாகனத்துக்கு ஈஸ்வரர்.
**நபர்:** ஆகாயம்போலப் பற்றற்றிருப்பவர். அல்லது புலன்களுக்கு விளங்காதவர்.
**நபஸ்தலர்:** ஆகாயத்தையே இடமாக உடையவர்.
**நர்த்தகர்:** எல்லாவற்றையும் ஆட்டிவைப்பவர்.
**நரர்:** எல்லாவற்றையும் நடத்துகிறவர்; ஜீவரூபி என்றுமாம்; 'பிரும்மாண்டத்தை நடத்தும் விராட்புருஷர்' என்பது பழைய உரை.
**நரர்:** ஒன்றையும் அடையாதவர்; பற்றற்றவர் என்பது.
**நரர்ஷபர்:** மனிதஸ்ரேஷ்டர்.
**நவசக்ராங்கர்:** புதிய சக்ரங்களாகிய சூரிய சந்திரர்களை திரிபுரசம்ஹாரத்தில் தேருக்கு அங்கங்களாக உடையவர். சக்ர வடிவங்களான ஒன்பது க்ரஹங்களையும் அங்கத்தில் உடையவர் என்பதுமாம், 'புது ஹம்சமாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**நக்ஷத்ரவிக்ரஹமதி:** நக்ஷத்ரம் போல் ப்ரஹாசிக்கும் தேகமும் புத்தியும் உடையவர்.
**நக்ஷத்ரஸாதகர்:** நக்ஷத்ரங்களை படைத்தவர்.
**நாபி:** உலகத்திற்கு ஆதரமாயிருப்பவர்.
**நிக்ரஹர்:** தண்டிப்பவர்.

**நிசாகரர்:** சாந்த்ரவ்யாகரணம் செய்த சந்திராசாரியராய் இருப்பவர்.
**நிசாசரர்:** இரவாகிய அவித்தையைக் கொண்டு ப்ரவ்ருதிப்பவர்.
**நிசாசரர்:** இரவில் சஞ்சரிப்பவர்.
**நிசாசாரி:** ப்ரளயமென்னும் ராத்திரியில் சஞ்சரிப்பவர்.
நிசாலயர்: ராத்ரி என்று சொல்லப்பட்ட அவித்தையை லயிக்கச்செய்கிறவர்.
**நித்யநர்த்தர்:** எப்போதும் நர்த்தனம் செய்பவர்.
**நித்யம் ஆச்ரமபூஜிதர்:** எப்போதும் எல்லா ஆச்ரமங்களாலும் பூஜிக்கப்படுகிறவர்.
**நித்யம்வர்ச்சஸ்வீ:** எப்போதும் ஒளியுள்ளவர்.
**நித்யர்:** அழிவில்லாதவர்.
**நித்யாத்மஸகாயர்:** ஆத்மாக்களுக்கு எப்போதும் துணையானவர்.
**நிதி:** அடைந்தவர்களுக்கு புதையல் போன்றவர்.
**நிதி:** எல்லா ஒளிக்கும் இருப்பிடமானவர்.
**நிபாதி:** தேஹத்திற்குள் ப்ரவேசிப்பவர்.
**நிமித்தர்:** காரணமாயிருப்பவர்.
**நிமித்தஸ்தர்:** காரணங்களிலிருப்பவர்.
**நியதர்:** இந்திரியங்களை ஜயித்தவர்.
**நியமர்:** எல்லாவற்றையும் நியமிப்பவர்; 'நியமத்தால் அடையக்கூடியவர்' என்பது பழைய உரை.
**நியமாச்ரிதர்:** எல்லாத் தவங்களினாலும் அடையப்பட்டவர்.
**நியமேந்த்ரியவர்த்தனர்:** தவத்தினால் ஐம்புலன்களையும் அறுப்பவர்.
**நிர்வாணம்:** மோக்ஷரூபி.
**நிர்ஜீவர்:** ஜடப்பொருளாயிருப்பவர்.
**நிரவக்ரஹர்:** தடையில்லாதவர்.
**நிராமயர்:** குற்றமற்றவர்.
**நிலயர்:** எல்லாப்பிராணிகளுக்கும் இருப்பிடமானவர்.
**நிவ்ருத்தி:** ஒழிவாயிருப்பவர்.
**நிவேதநர்:** எல்லவற்றையும் அறிவிப்பவர்.
**நிஜஸர்க்கர்:** தமது சிருஷ்டியாய் இருப்பவர்; ஸ்வயம்பு என்பது.
**நிஹந்தா:** கொல்லுகிறவர்.
**நீதி:** ராஜ நீதியாய் இருப்பவர்.
**நீரஜர்:** ரஜோகுணத்தை நிவ்ருத்திக்கச் செய்கிறவர்; ப்ரளய ஜலத்திலிருந்து உண்டானவரென்றுமாம்.
**நீலகண்டர்:** கறுத்த கண்டமுடையவர்.
**நீலமௌலி:** தலையில் இந்த்ரநீலக்கல் கிரீடம் தரித்தவர்.
**நீலர்:** கறுத்த நிறமுள்ளவர். 'மரகத வர்ணமாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**நைகஸாநுசரர்:** அநேக மலைச்சிகரங்களில் சஞ்சரிப்பவர்.
**நைகாத்மா:** அநேக தேஹங்களையெடுப்பவர்.
**பரக்ருஷ்டாரி:** காமக்ரோதமுதலிய சத்ருக்களை மிக ஒடுக்குபவர்.
**ப்ரகாசர்:** வெளிப்படையாயிருப்பவர்; 'கர்மசரண்டமாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**ப்ரசாந்தாத்மா:** அலை ஓய்ந்த கடல்போல அடங்கியிருப்பவர்.

**ப்ரத்யயர்:** ஞானமாயிருப்பவர்.
**ப்ரதாநத்ருத்:** ப்ரக்ருதியைத் தரிப்பவர்.
**ப்ரபாவர்:** ஒரு வசு.
**ப்ரபாவாத்மா:** சக்தியை உருவமாகக் கொண்டவர்.
**ப்ரபு:** அந்தர்யாமி.
**ப்ரபு:** எல்லாவற்றையும் அநுபவிப்பவர்.
**ப்ரம்மக்ருத்:** வேதங்களை உண்டுபண்ணினவர்.
**ப்ரம்மகர்ப்ர்:** பிரம்மாவைத் தம் கர்பத்தில் உடையவர்; 'வேதத்தைக் கர்ப்பத்தில் உடையவர்' என்பது பழைய உரை.
**ப்ரம்மசாரி:** ப்ரம்மத்தினிடத்தில் இருப்பவர்.
**ப்ரம்மதண்டவிநிர்மாதா:** ப்ரம்ம தண்டமென்னும் ஆயுதத்தைச் செய்பவர். பிரம்மாவுக்குத் தண்டனை செய்பவர் என்பது.
**ப்ரம்மலோகர்:** பரப்ரம்மமாகப் பார்க்கப்படுகிறவர்; 'சத்தியலோகம்' என்பது பழைய உரை.
**ப்ரம்மஹ்ச்சஸர்:** பிராமனருக்குப் பிரம்ம தேஜசாயிருப்பவர்.
**ப்ரம்மவித்:** வேதமறிந்தவர்.
**பிரும்மா:** மிகப்பெரியவர்.
**ப்ரம்மி:** வேதமோதினவர்.
**ப்ரமாணர்:** மெய்யறிவிற்கு காரணமாயிருப்பவர்.
**ப்ரயதாத்மா:** பரிசுத்த மனமுள்ளவர்.
**ப்ரவ்ருத்தி:** உலகநடையாயிருப்பவர்.
**ப்ரவரர்:** சிரேஷ்டர்.
**ப்ரவேசிநாம்குஹாபாலர்:** தம்மைத் த்யானிப்பவர்களின் மனத்தைக் காப்பவர்; 'சரீரத்தைக் காப்பவர்' என்பது பழைய உரை.
**ப்ரஜாத்வரம்:** சந்ததிகளுக்குக் காரணமான ஆசை.
**ப்ரஜாபதி:** ஜனங்களுக்கு ஈஸ்வரர்.
**ப்ரஜாபீஜம்:** பிரஜைகளுக்கு வித்தாயிருப்பவர்; மாயையுடன் சேர்ந்த சித்தாயிருப்பவர் என்பது.
**ப்ரஸ்கந்தநர்:** எல்லாவற்றையும் நழுவச் செய்கிறவர்.
**ப்ரஸந்நர்:** அநுக்ரஹமுடையவர்.
**ப்ரஸாதர்:** அனுக்ரஹமாயிருப்பவர்.
**ப்ரஸாதர்:** அனுக்ரஹிப்பவர்.
**ப்ரஸாதர்:** ஆனந்தமயமானவர்.
**ப்ராக்:** முந்தினவர்.
**ப்ராணதாரணர்:** உயிரை நிறுத்துகிறவர்.
**ப்ராம்மணர்:** ப்ராமணப்ரியர்.
**ப்ராஸாநாம்ப்ரபவர்:** பிராஸங்கள் என்னும் ஆயுதங்கள் உண்டாகும் இடமாக இருப்பவர்.
**ப்ரியர்:** இனியவர்.
**ப்ரேதஸாரி:** ப்ரேதங்களுடன் சஞ்சரிப்பவர்.
**பக்தாநாம்பரமாகதி:** பக்தியுள்ளவர்களுக்கு சிறந்த ஆதரவு.

**பகவான்:** ஞானம், சக்தி, பலம், ஐசுவர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு குணங்களை உடையவர்.

**பகஹாரி:** ஐசுவர்யத்தை கவர்பவர்; கொடுப்பவரென்றுமாம்.

**பசுபதி:** ஆத்மாக்களுக்குப் பதி.

**பசுபதி:** ஜீவன்களுக்கு ஸ்வாமி.

**பட்டிசி:** பட்டிசம் என்னும் ஆயுதம் உள்ளவர்.

**படபாமுகர்:** வடவாமுகமென்னும் அக்னிஸ்வரூபி.

**பண்டிதர்:** எல்லாந்தெரிந்தவர்.

**பணவி:** பணவ வாத்யமுள்ளவர்.

**பத்மகர்ப்பர்:** பிரம்ம தேவராயிருப்பவர்.

**பத்மநாபர்:** உலகத்திற்குக் காரணமான பத்மத்தை நாபியிலுடையவர்.

**பத்மநாளாக்ரர்:** தாமரையின் காம்பைத் தமக்கு முன்னதாக உடையவர். 'ப்ரம்ம தேவர் தாமிருக்கும் தாமரை மலரின் காம்பு முடிவைக் காணுவ தற்கு அதிலிருந்தும் அதைக்காணாமற் போனார். அந்தக் காம்புக்கு முன்னிருப்பவராதலால் ப்ரம்மதேவராலுங் காணக்கூடாதவர்' என்பது; 'தாமரைக் காம்பின் முனையிலிருந்து பூக்கச் செய்கிறவர்' என்னவுமாம்.

**பதி:** எல்லாவற்றிற்கும் ஸ்வாமி.

**பந்தகர்த்தா:** சம்சார பந்தத்தை உண்டுபண்ணுகிறவர்.

**பந்தநர்:** சம்சார பந்தமாயிருப்பவர்.

**பப்ரு:** கபில நிறமுள்ளவர். 'சனியாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**பயோநிதி:** கடலாயிருப்பவர்.

**பர்யயோநரர்:** நாற்புறமும் வியாபித்திருக்கும் ஸமஷ்டி ஜீவனாயிருப்பவர்.

**பரகதி:** அடையப்படுவனவற்றுள் மேன்மையானவர்.

**பரச்வதாயுதர்:** கோடாலியை ஆயுதமாக உடையவர்.

**பரம்ப்ரம்ம:** பரப்ரம்மமாயிருப்பவர்.

**பரமம்தபர்:** சிறந்த தவமாயிருப்பவர்.

**பரமம்ப்ரம்ம:** பரப்ரம்மம்.

**பரமாத்மா:** அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விஜ்ஞாமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்துக்கு மேல் ஆறாவதான சுத்தானந்தமாயிருப்பவர்.

**பரமோமந்த்ரர்:** சிறந்த ஆலோசனையாயிருப்பவர்.

**பரர்:** முந்தினவர்.

**பரிதீபதி:** சேனைகளின் ஓரத்தைக் காப்பவர்.

**பலசாரி:** ப்ரமதகணமாகிய சேனையுடன் சஞ்சரிப்பவர்; 'காட்டில் சஞ்சரிக்கும் வேடரூபமாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**பலர்:** பலத்தையுடையவர்.

**பலர்:** சமர்த்தர்.

**பலரூபத்ருத்:** பலராமரூபத்தைத் தரித்தவர், பலத்தையும் அழகையும் தரித்தவர் என்னவுமாம்.

**பலவத்:** பலமுள்ள பொருள்.

**பலவாந்:** சாமர்த்தியமுள்ளவர்.

**பலவீரர்:** தம் சக்தியினால் சத்ருக்களை ஜயிக்கும் சூரர்.
**பலஹா:** இந்த்ரரூபியாகிப் பலாசுரனைக் கொன்றவர்; அசுர சேனையைக் கொன்றவர் என்னவுமாம்.
**பலி:** பலமுள்ளவர்.
**பவர்:** உற்பத்திலயங்களுக்கு காரணமானவர்.
**பவர்:** எல்லாப் பிராணிகளுக்கும் உற்பத்தி காரணமானவர்.
**பவித்ரர்:** பரிசுத்தஞ் செய்கிறவர்; 'சம்சாரமென்னும் இடியிலிருந்து காப்பவர்' என்பது பழைய உரை.
**பவித்ரர்:** ஆத்மாக்களை சுத்தப்படுத்துகிறவர்.
**பவித்ரர்:** இடிபோன்ற துக்கங்களிலிருந்து காப்பவர்.
**பஸ்மகோப்தா:** திருநீற்றினால் உலகத்தைக் காப்பவர்.
**பஸ்மசயர்:** திருநீற்றில் படுத்திருப்பவர்.
**பஸ்மபூதர்:** தாமே திருநீறாகவுமிருப்பவர்.
**பஹுகர்க்கசர்:** சம்ஹாரத்தில் மிகக் கடினமானவர்.
**பஹுதரர்:** அநேகங்களைத் தரிப்பவர்.
**பஹுதாநிந்திதர்:** தாருகாவனவாஸ ரிஷிகளால் மிகவும் நிந்திக்கப்பட்டவர்.
**பஹுப்ரதர்:** மிகுதியாகக் கொடுப்பவர்.
**பஹுப்ரஸாதர்:** மிக்க அநுக்ரஹமுள்ளவர்.
**பஹுபூதர்:** தாமே அநேக உருவங்களானவர்.
**பஹுமாலர்:** அநேக லீலைகளையுடையவர்.
**பஹுரச்மி:** அநேக கிரணங்களையுடையவர்.
**பஹுரூபர்:** அநேக ரூபங்களை தரிப்பவர்.
**பஹுவித்யர்:** அநேக வித்தைகளை உடையவர்.
**பக்ஷம்:** பக்ஷமென்னும் காலத்தின் பிரிவாயிருப்பவர்.
**பக்ஷரூபர்:** சகாயமாயிருப்பவர்.
**பக்ஷி:** கருடரூபி.
**பாககரர்:** மற்றத் தேவர்களுக்கு யஜ்ஞபாகத்தைப் பிரித்துக் கொடுப்பவர்.
**பாகி:** யஜ்ஞபாகமுள்ளவர்.
**பாசர்:** எல்லவற்றையும் மாயையினால் கட்டுகிறவர்.
**பாணஹஸ்தர்:** கையில் அம்பு வைத்திருப்பவர்.
**பாதர்:** எல்லோரும் அடையும் இடமானவர்.
**பாநு:** ப்ரகாசிப்பவர், 'சம்ஹாரம் செய்பவர்' என்பது பழைய உரை.
**பாவர்:** செய்கையாயிருப்பவர்.
**பிதா:** தந்தை.
**பிதாமஹர்:** கூடஸ்தர்; 'விஷ்ணுவுக்கும் பிதா' என்பது பழைய உரை.
**பிதாமஹர்:** தந்தைக்கும் தந்தை.
**பிந்து:** அநுஸ்வரமானவர்; அழிப்பவர் என்றுமாம்.
**பிநாகத்ருத்:** பிநாகமெனும் வில்லைத் தரிப்பவர்.
**பிநாகவாந்:** பிநாகமெனும் தநுசை உடையவர்.
**பிக்ஷு:** பிரம்மச்சாரியாய் இருப்பவர்; 'தண்ட முதலிய அடையாளங்களுள்ள ஹம்ஸந்யாஸியாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**பிக்ஷுரூபர்:** பிக்ஷையெடுப்பவனைப் போலிருப்பவர்; 'பரமஹம்சராய் இருப்பவர்' என்பது பழைய உரை.

**பீதாத்மா:** பொன்னிறமுள்ளவர்.

**பீஜகர்த்தா:** காரணமான ப்ரவ்ருதியை ப்ரவ்ருத்திக்கச் செய்கிறவர்.

**பீஜவாஹநர்:** காரணங்களை வஹிப்பவர்.

**பீஜாத்யக்ஷர்:** தர்மாத்மாக்களுக்கும் ஈச்வரர். காரணமாகிய ப்ரக்ருதிக்கும் ஈச்வரர்.

**புண்யசஞ்சு:** புண்ணியத்தினால் அறியப்படுகிறவர்.

**புராணர்:** முதன்மையானவர்.

**புஷ்கரஸ்தபதி:** பிரம்மாண்டத்தை செய்த சிற்பி.

**பூதசாரி:** பூதங்களுடன் சஞ்சரிப்பவர்.

**பூதநிஷேவிதர்:** ஸத்துக்களாலே ஸேவிக்கப்பட்டவர்.

**பூதபதி:** பூதங்களுக்கு ஈச்வரர்.

**பூதபாவநர்:** பஞ்சபூதங்களையும் உற்பத்தி செய்பவர்.

**பூதபாவநர்:** ப்ராணிகளையெல்லம் காப்பவர்; 'எல்லா ப்ராணிகளுமாக மயங்குவ தற்கு இடமானவர்' என்பது பழைய உரை.

**பூதவாஹநஸாரதி:** பூதங்களென்னும் வாகநங்களுக்குச் சாரதியாயிருப்பவர். 'ப்ராணிகளை நடத்துகிறவராகிய பிரம்ம தேவரைச் சாரதியாக உடையவர்' என்பது பழைய உரை.

**பூதாலயர்:** பஞ்சபூதங்களில் இருப்பவர்.

**போஜநர்:** எல்லாருக்கும் உணவளிப்பவர்.

**ம்ருகபாணார்ப்பணர்:** மான் வடிவமான யாகத்தின் மேல் பாணப்ரயோஹம் செய்தவர்.

**ம்ருகாலயர்:** மானை வைத்திருப்பவர்.

**ம்ருது:** கருணையுள்ளவர்.

**மகரர்:** முதலைரூபமான சிம்சுமார சக்ரம் என்னும் கால சக்ரமாயிருப்பவர்.

**மணிவித்தர்:** காதில் ரத்னாபரணமணிந்தவர்.

**மத்யமர்:** நடுநிலைமையுடையவர், பக்ஷபாதமில்லாதவரென்பது.

**மதநர்:** சந்தோஷிக்கச் செய்கிறவர், மன்மதரூபி என்பது பழைய உரை

**மதிமாந்:** புத்தியுள்ளவர்.

**மது:** வஸந்தரூபியானவர்.

**மதுலோஸனர்:** தேன்போன்ற சிவப்பு வர்ணமான கண்களையுடையவர்.

**மந்த்ரகாரர்:** மந்திரங்களை உண்டுபண்ணினவர்.

**மந்த்ரர்:** தம்மை தியானிப்பவரைக் காப்பவர்.

**மந்த்ரர்:** ப்ரணவ முதலிய மந்திரமாய் இருப்பவர். 'இறந்தவரைப் பிழைப்பிக்கும் மந்திரமாய் இருப்பவர்' என்பது பழைய உரை.

**மந்த்ரவித்:** மந்திரங்களை அறிந்தவர்.

**மந்தாநோபஹுலோவாயு:** ப்ரளய காலத்தில் உலகங்களைக் களைந்தெடுக்குக்கும் பெருங்காற்று. தேகத்தில் வ்யாபித்து நரம்புகளைச் சீர்படுத்தும் ப்ராணவாயு என்றுமாம்.

**மநோவேஹர்:** மநோ வேகமுள்ளவர்.

**மநோஜவர்:** மநோ வேகமுள்ளவர்.

**மஹரிஷி:** பெரிய ஞானமுள்ளவர். 'வசிஷ்டர் முதலியவராயிருப்பவர்' என்பது பழைய உரை.

மஹாக்ரீவர்: பெருங்கழுத்தை உடையவர்.

**மஹாக்ரோதர்:** சம்ஹாரகாலத்தில் உக்ரமான கோபமுள்ளவர் ,

**மஹாகம்பு:** சங்கவாத்தியத்தை உடையவர். 'சங்கு போன்ற கழுத்தை உடையவர் ' என்பது பழைய உரை.

**மஹாகர்ணர்:** பெரிய காதுகளை உடையவர்.

**மஹாகர்த்தா:** கர்த்தாவையும் படைத்தவர்.

**மஹாகர்ப்பபராயணர்:** சிறந்த கர்ப்பத்திற்குக் காரணமானவர். பிரும்மாண்டத்திற்குள் எல்லாவற்றையும் உண்டாக்கினவர் என்பது.

**மஹாகர்ப்பர்:** ப்ரளய காலத்தில் உலகம் அடங்கியிருப்பதினால் பெருங்கர்ப்பமுடையவர். 'பிரம்மா முதலானவர்களை வயிற்றில் வைத்திருப்பவர்' என்பது பழைய உரை.

**மஹாகர்ப்பர்:** விசாலமான உள்பாகத்தையுடையவர்; எல்லாவற்றிற்கும் மேல் வயாபித்திருப்பவர் என்பது.

**மஹாகர்மா:** ஸ்ருஷ்டி முதலிய பெருங்கார் யங்களை செய்கிறவர்.

**மஹாகல்பர்:** சிறந்த ஆபரணங்களையுடையவர்.

**மஹாகாயர்:** விராட் என்னும் பெரிய சரீரமுள்ளவர்.

**மஹாகாயர்:** பெரிய சரீரமுள்ளவர்.

**மஹாகாயர்:** பெரிய தேஹமுள்ளவர்.

**மஹாகீதர்:** சிறந்த பாட்டை உடையவர்.

**மஹாகேசர்:** பெரிய தலைமயிரினை உடையவர். மஹாகோசர் என்றும் கொள்ளலாம். அவ்விதம் கொண்டால் அதற்கு பெரிய வயிற்றையுடைவர் என்று பொருள். (அனைத்தையும் உற்பவிப்பவர் )

**மஹாகேது:** சிறந்த வ்ருஷபக்கொடியை உடையவர்.

**மஹாகோரர்:** மிக உக்ரமானவர்.

**மஹாங்கர்:** பெரிய லிங்கத்தை உடையவர்.

**மஹாத்மா:** பெரிய மனமுள்ளவர்.

**மஹாத்மா:** நிரம்பின ரூபமுள்ளவர்.

**மஹாதந்தர்:** பெரிய பற்களையுடையவர்.

**மஹாதநு:** சிறந்த வில்லை உடையவர்.

**மஹாதபஸ்:** உலகைப் படைக்கத்தக்க சிறந்த ஆலோசனையை உடையவர்.

**மஹாதபஸ்:** சிறந்த தவமுள்ளவர்.

**மஹாதம்ஷ்ட்ரர்:** நீண்ட கோரப்பற்களை உடையவர்.

**மஹாதம்ஷ்ட்ரர்:** பெரும் கோரப்பற்களை உடையவர்.

**மஹாதாது:** சிறந்த தாதுக்களோடு கூடிய மேருமலையை உடையவர்.

**மஹாதேவர்:** தேவர்களுக்கும் தேவர்.

**மஹாதேஜஸ்:** பேரொளி உள்ளவர்.

**மஹாந்:** பூஜ்யர்.

**மஹாந்:** மஹத் என்னும் தத்துவமாயிருப்பவர்.

**மஹாந்:** சிறந்தவர்.

**மஹாந்தகர்:** யமனுக்கும் யமன்.
**மஹாந்ருத்யர்:** சிறந்த நர்த்தனத்தை உடையவர்.
**மஹாநகர்:** பெரிய நகங்களை உடையவர்; 'நரசிம்மமாயிருப்பவர்' என்பது பழைய வுரை.
**மஹாநநர்:** பெரிய வாயுள்ளவர்.
**மஹாநாகஹநர்:** பெரிய யானையைக் கொன்றவர்.
**மஹாநாதர்:** பெரிய சப்தமாயிருப்பவர்; 'ஆகாச வ்யாபியான அநாகதநாதமாயிருப் பவர்' என்பது பழைய உரை.
**மஹாநாஸர்:** பெரிய மூக்குடையவர்.
**மஹாநேத்ரர்:** பெருங்கண்களையுடையவர்.
**மஹாப்ரசாதர்:** பெரிய அநுக்ரஹமுள்ளவர்.
**மஹாபதர்:** பெரிய மார்க்கமாயிருப்பவர்; எளிதில் முக்தியடையும் வழி.
**மஹாபலர்:** சிறந்த பராக்ரமமுள்ளவர்.
**மஹாபலர்:** சிறந்த பலமுள்ளவர்.
**மஹாபாதர்:** பெரிய கால்களை உடையவர்.
**மஹாபீஜர்:** காரணத்திற்குங் காரணமானவர்.
**மஹாமாத்ரர்:** பெரிய அளவுடையவர்.
**மஹாமாயர்:** பெரிய மாயையையுடையவர்.
**மஹாமாலர்:** சிறந்த பூமாலையையை அணிந்தவர்.
**மஹாமுகர்:** பெரிய வாயை உடையவர்.
**மஹாமுநி:** பெரிய ரிஷி.
**மஹாமூர்த்தா:** பெருந்தலையை உடையவர்.
**மஹாமேஹநிவாஸி:** ப்ரளய கால மேஹங்களில் வஸிப்பவர்.
**மஹாயசஸ்:** பெருங்கீர்த்தியுள்ளவர்.
**மஹாயசஸ்:** பெரும் புகழுள்ளவர்.
**மஹாயுதர்:** சிறந்த ஆயுதமுடையவர்.
**மஹார்ணவறிபாநவித்:** சம்ஹாரகாலத்தில் பெருங்கடலையும் குடிப்பவர். அதாவது வற்றச் செய்பவர் என்பது.
**மஹாரதர்:** பெருந்தேருடையவர், திரிபுரசம்ஹாரத்தில் பூமியே தேராக இருந்தது.
**மஹாரூபர்:** அளவற்ற ரூபமுள்ளவர்.
**மஹாரூபர்:** பெரிய ரூபமுள்ளவர்.
**மஹாரேதஸ்:** பொன்மலை, வெள்ளிமலைகளை உண்டாக்கும் சிறந்த ரேதசை உடையவர். தமது ப்ரதிபிம்பமாகிய ஆத்மாவை ப்ரக்ருதியில் ப்ரவே சிக்கச் செய்பவர் என்றுமாம்.
**மஹாரோமர்:** பெரிய ரோமங்களை உடையவர், 'வராகமாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**மஹாலிங்கர்:** பூஜிக்கத்தக்க லிங்கத்தை உடையவர்.
**மஹாவக்ஷஸ்:** பெரிய மார்பையுடையவர்.
**மஹாவேஹர்:** மிக்க வேகமுள்ளவர்.
**மஹாஜ்வாலர்:** பெரிய ஜ்வாலையுள்ளவர்.
**மஹாஜடர்:** பெரிய ஜடையை உடையவர்.

**மஹாஜத்ரு:** பெரிய கழுத்தெலும்பும், முண்டுகளுமுடையவர்.
**மஹாஜிஹ்வர்:** பெரிய நாவையுடையவர்.
**மஹாசேநர்:** பெரும் படையையுடையவர். 'சேநாபதியான கார்த்திகேயராக இருப்பவர் என்பது பழைய உரை.
**மஹாஹநு:** பெரிய கன்னங்களுடையவர்.
**மஹாஹநு:** உலகத்தை பக்ஷிக்க போதுமான பெரிய கபோலங்களை உடையவர்.
**மஹாஹர்ஷர்:** பேரானந்தமுடையவர்.
**மஹாஹஸ்தர்:** பெரிய கைகளையுடையவர்.
**மஹாக்ஷர்:** எங்கும் வ்யாபித்த பெரும்புலன்களையுடையவர்.
**மஹீசாரி:** பூமியெல்லம் சஞ்சரிப்பவர்.
**மஹேச்வரர்:** எல்லொருக்கும் மேலான ஈஸ்வரர்.
**மஹோரஸ்கர்:** பெரிய மார்பை உடையவர்.
**மஹோஷ்டர்:** பெரிய உதடுகளுள்ளவர்.
**மஹௌஷதர்:** சிறந்த தான்யங்களாய் இருப்பவர்.
**மாத்ரை:** மாத்ரை என்னும் காலத்தின் சிறிய பிரிவாயிருப்பவர்.
**மாதா:** தாய்.
**மாந்தாதா:** ஓர் அரசன். 'நான் என்று சொல்லப்பட்ட ஜீவனைப் போஷிப்பவர்' என்பது பழைய உரை.
**மாந்யர்:** பூஜிக்கத்தக்கவர்.
**மாயாவி:** மாயை உள்ளவர்.
**மாலி:** மாலையைத் தரித்திருப்பவர்.
**மாஸம்:** மாசமென்னும் காலத்தின் பிரிவாயிருப்பவர்.
**மித்ரர்:** பன்னிரண்டு சூரியரைச் சேர்ந்தவர். அல்லது எல்லாவற்றையும் அளப்பவர். எல்லாம் அவர்க்கு அடங்கினவை என்பது.
**முக்ததேஜஸ்:** ஆச்ரித ரக்ஷணத்திற்காக தமது சக்தியை விடுகிறவர். 'லிங்கசரீரத்தை விட்டவர்' என்பது பழைய உரை.
**முக்யர்:** முதன்மையானவர்.
**முண்டர்:** தலையிற் கேசமில்லாதவர்.
**முண்டர்:** ஸந்நியாசி.
**முண்டி:** தலை மொட்டையாயிருப்பவர். சிரோமுண்டனம் இருவகை எனக் கொண்டு, 'ஸந்யாசியும் நைஷ்டிக ப்ரம்மசாரியுமாய் இருப்பவர்' என்பது பழைய உரை.
**முதிதர்:** எப்போதும் ஆனந்தமாயிருப்பவர்.
**முநி:** மௌனமாயிருப்பவர்.
**முகூர்த்தம்:** முகூர்த்தம் என்னும் காலத்தின் ப்ரிவாயிருப்பவர்.
**மூர்த்தகர்:** தலையில் இருப்பவர். சுஷும்நாநாடியில் ப்ரகாசிப்பவரென்பது கருத்து.
**மூர்த்திஜர்:** சரீரத்திலுண்டாகிறவர். மனித சரீரத்தில் ப்ரத்யக்ஷமாகிறவர்.
**மூலர்:** உலகிற்கு வேராயிருப்பவர்.
**மெட்ரஜர்:** லிங்கத்தில் ஆவிர்ப்பவர்.
**மேருதாமர்:** மேருவிலிருப்பவர்.
**மோக்ஷத்வாரம்:** மோக்ஷத்திற்குக் காரணமான வைராக்யமாயிருப்பவர்.

**யசஸ்:** கீர்த்தியாயிருப்பவர்.
**யஜ்ஞபாகவித்:** யாகத்திலுள்ள ஹவிர்பாகங்களை அடைகிறவர்.
**யஜ்ஞர்:** யாகரூபி.
**யஜ்ஞர்:** பூஜிக்கப்படுகிறவர்.
**யஜ்ஞர்:** யாகமாயிருப்பவர். 'ஜீவனையும் ஈஸ்வரனையும் சேர்க்கும் யோகமாயிருப் பவர்' என்பது பழைய உரை.
**யஜ்ஞசமாஹிதர்:** யாகத்திலிருப்பவர். 'ஜீவனையும் ஈச்வரனையும் சேர்க்கும் யோகமாய் இருப்பவர்? என்பது பழைய உரை.
**யஜ்ஞஹா:** தக்ஷ யாகத்தை கெடுத்தவர். 'பலியின் யஜ்ஞத்தைக் கெடுத்தவர்' என்பது பழைய உரை.
**யஜுப்பாதபுஜர்:** யஜீர் வேதமே கால்களும், கைகளுமாக உடையவர்.
**யுக்தபாஹீ:** முயற்சியுள்ள கைகளை உடையவர்.
**யுக்தர்:** யுகங்களை உண்டு பண்ணுகிறவர்.
**யுககரர்:** யுகங்களை உண்டு பண்ணுகிறவர்.
**யுகரூபர்:** யுகமென்னும் காலத்தின் பிரிவாயிருப்பவர்.
**யுகாதிபர்:** சுகதுக்கம், லாபாலாபம், ஜயாபஜயம், சீதோஷ்ண முதலிய இரண்டுகளு க்கு அதிபதி, நான்கு யுகங்களையும் காப்பவர் என்னவுமாம்.
**யுஹாவஹர்:** யுஹங்களை உண்டுபண்ணுகிறவர்.
**யுதிசத்ருவிநாசநர்:** யுத்தத்தில் சத்ருக்களை அழிப்பவர்.
**யோஹர்:** யோகமாயிருப்பவர்.
**யோஹாத்யக்ஷர்:** யோகத்தினால் ஸாக்ஷித்கரிக்கப்படுபவர்.
**யோகி:** யோகத்திலிருப்பவர்.
**யோஜ்யர்:** யோகத்தினால் அடையத்தக்கவர்.
**ரத்நப்ரபூதர்:** மிகுதியான ரத்நங்களையுடையவர்.
**ரத்னாங்கர்:** ரத்நம் போல சிறந்த அங்க முடையவர்.
**ரதயோகிஅக்ஷர்:** தேரிற் சேர்ந்த அச்சாயிருப்பவர். உலகத்திற்காதாரமானவர் என்பது.
**ரதி:** சுகரூபி.
**ரவி:** சூரியனாக இருப்பவர்.
**ராஜராஜர்:** அரசர்க்கும் அரசர். சந்த்ரனாக விளங்குபவர் என்னவுமாம். 'குபேரனாக இருப்பவர்' என்பது பழைய உரை.
**ரிக்ஸஹஸ்ராமிதேக்ஷணர்:** அநேக ரிக்குகளை அநேகம் கண்களாக உடையவர்.
**ருத்ரர்:** சம்ஹாரகாலத்தில் எல்லாப்ராணிகளையும் அழச் செய்பவர்; 'எல்லோருக்கும் ப்ராணரூபர்; ஸூத்ராத்மா' என்பது பழைய உரை.
**ருது:** ருது என்னும் காலத்தின் பிரிவாக இருப்பவர்.
**ரௌத்ரரூபர்:** மஹாபைரவரூபமுள்ளவர்.
**லகு:** சீக்கிரமாக அனுக்ரஹிப்பவர்.
**லம்பநர்:** அநேகம் பிரம்மாண்டங்கள் தம்மிடத்தில் தொங்கும்படி இருப்பவர்.
**லம்பிதோஷ்டர்:** ப்ரளய காலத்தில் உலகங்களை பக்ஷிக்கிறதற்கு தொங்குகிற உதட்டை உடையவர்.
**லயர்:** எல்லவற்றையும் லயிக்கச் செய்கிறவர்.

**லலாடாக்ஷர்:** நெற்றிக்கண்ணுள்ளவர்.
**லவணர்:** ஸம்ஹரிப்பவர்.
**லவம்:** லவமென்னும் காலத்தின் பிரிவாயிருப்பவர்.
**லிங்கம்:** மஹத் என்னும் தத்வமாயிருப்பவர்.
**லிங்காத்யக்ஷர்:** ப்ரமாணங்களினால் அறியப்படுகிறவர்.
**லோககர்த்தா:** லோகங்களை படைத்தவர்.
**லோகசாரி:** லோகங்களிற் சஞ்சரிப்பவர்.
**லோகதாதா:** லோஹங்களுக்கெல்லாம் ஈஸ்வரர்.
**லோகபாலர்:** உலகத்தை காப்பவர்.
**லோகபாலர்:** திக்கு பாலகராய் இருப்பவர்.
**லோஹஹிதர்:** உலகங்களுக்கு அநுகூலர்.
**லோஹிதாக்ஷர்:** சிவந்த கண்களை உடையவர்.
**வ்யக்தம்:** புலப்படுகிறவர்.
**வ்யக்தாவ்யக்தர்:** பக்திக்குப் புலப்பட்டும் இந்திரியங்களுக்கு புலப்படாமலும் இருப்பவர். 'காரிய காரணர்' என்பது பழைய உரை.
**வ்யவஸாயர்:** உற்சாகமாயிருப்பவர்.
**வ்யாக்ரர்:** வ்யாக்ரேஸ்வரரென்னும் லிங்கமாய் இருப்பவர்.
**வ்யாலரூபர்:** ஸர்ப்ப ரூபமாய் இருப்பவர், 'ஆதிசேஷ ரூபி' என்பது பழைய உரை.
**வ்யாசர்:** வ்யாசரூபி.
**வ்ரதாதிபர்:** நோன்புகளைக் காப்பவர்.
**வ்ருத்தர்:** விருத்தியடையந்தவர். த்ரிவிக்ரமாயிருந்தவர் என்பது.
**வ்ருத்தாவ்ருத்தகரர்:** யுத்தத்தில் மண்டலமாகச் சுற்றுவதையும், ஜயித்துத் திரும்புவதையும் செய்பவர்.
**வ்ருஷணர்:** கர்ம பலன்களை வர்ஷிப்பவர்.
**வ்ருஷரூபர்:** தர்மமே உருவமாகக் கொண்டவர்.
**வ்ருகஷகர்ணஸ்திதி:** விருக்ஷத்தினுடைய காது போன்ற இலையின் மேலிருப்பவர். ஆலிலைமேல் படுத்திருக்கும் விஷ்ணு ரூபி என்பது கருத்து.
**வ்ருக்ஷகேது:** ஸம்சாரவ்ருஷத்திற்குக் கொடிபோலிருப்பவர்.
**வ்ருக்ஷர்:** மரமாயிருப்பவர்.
**வ்ருக்ஷகாரர்:** சம்சாரவ்ருக்ஷத்தின் வடிவமாய் இருப்பவர்.
**வகுளம்:** மகிழ மரமாயிருப்பவர்.
**வச்யர்:** பக்தருக்கு வசப்படுகிறவர்.
**வசகரர்:** எல்லாவற்றையும் வசப்படுத்துகிறவர்.
**வசீகரர்:** எல்லாவற்றையும் தம் ஆதீனத்தில் வைத்திருப்பவர். இந்நாமத்தை வசீ, கரர் என இரண்டாகக் கொண்டால், வசீ - எல்லாவற்றையும் தம் வசமுடையவர் என்றும்; கரர்- ஸம்ஹாரம் செய்பவர் என்றும் பொருள்.
**வணிஜர்:** வர்த்தகரயிருப்பவர்.
**வதர்:** ம்ருத்யுவாயிருப்பவர்.
**வம்சகரர்:** சந்ததி விருத்தி செய்கிறவர்.
**வம்சநாதர்:** புல்லாங்குழலின் ஸ்வரமாய் இருப்பவர்.
**வம்சர்:** புல்லாங்குழலாய் இருப்பவர்.

**வர்ணவிபாவி:** நிறங்களை பலவகைகளாக காட்டுபவர். நான்கு வர்ணங்களை உண்டு பண்ணினவர் என்றும்.

**வர்த்தகி:** தச்சனாயிருப்பவர்.

**வர்த்தநர்:** ஆத்மாவையும் தேகத்தையும் வ்ருத்தி செய்பவர்.

**வரதர்:** வரங்களைக் கொடுப்பவர்.

**வரதர்:** வரங்களைக் கொடுப்பவர். 'சிறந்த உருவங்களெடுத்து தயை செய்கிறவர்' என்பது பழைய உரை.

**வரர்:** எல்லாவற்றையும் மறைத்து வியாபித்திருப்பவர்.

**வரர்:** க்ரஹங்களினால் ப்ரார்த்திக்கப்பட்டவர். 'பிருகஸ்பதி, சுக்கிரன்" என்பது பழைய உரை.

**வரர்:** விரும்பப்படுகிறவர்.

**வரேண்யர்:** வரம் கேட்கத்தக்கவர்.

**வரோவராஹர்:** ஆதிவராஹ ரூபி.

**வஜ்ரஹஸ்தர்:** வஜ்ராயுதத்தை கையிற்பிடிப்பவர். 'பர்வதங்களைப் பிளக்கும் இந்திரனாய் இருப்பவர்' என்பது பழைய உரை.

**வஜ்ரி:** இந்த்ரனாயிருப்பவர்.

**வஜ்ரி:** வஜ்ராயுதம் தரித்தவர்.

**வஸுவேஹர்:** வாயு வேஹமுள்ளவர்.

**வஸுச்ரேஷ்டர்:** த்ரவியத்திலும் சிறந்தவர்.

**வாசஸ்பத்யர்:** பிருஹஸ்பதியை அனுசரித்தவர். புரோஹிதராய் இருப்பவரென்பது.

**வாதர்:** யாவராலும் அடையப்பட்டவர்.

**வாதரம்ஹஸ்:** காற்று வேகமுள்ளவர்.

**வாமதேவர்:** ப்ரார்திக்கப்படும் தேவர். 'கர்ம பலன்களுக்கு ஈஸ்வரர்'.

**வாமநர்:** குறளாயிருப்பவர். 'வாமண அவதாரஞ்செய்த விஷ்ணுரூபி' என்பது பழைய உரை.

**வாமர்:** அழகானவர். 'ஆனந்தஸ்வரூபர்' என்பது பழைய உரை.

**வாயுவாஹநர்:** காற்றை வாஹநமாக உடையவர்.

**வாஜஸநர்:** வாஜஸநேயம் என்னும் சாகையை ப்ரவ்ருத்திக்கச் செய்தவர்.

**வாஸவர்:** இந்திரனாயிருப்பவர்.

**விக்யாதோலோஹர்:** வெளிப்படையான ப்ரஹாசமானவர்.

**விக்ருதர்:** ஸ்வபாவம் மாறுகிறவர்.

**விகுர்ணர்:** கெட்டவரை கோபிப்பவர். 'கர்மத்தினால் அடையப்படாதவர்' என்பது பழைய உரை.

**விச்வகர்மமதி:** விச்வகர்மா என்னும் தேவ சிற்பியின் பக்தியாயிருப்பவர். உலகத்திலுள்ள செய்கைகளை அறிபவர் என்னவுமாம்.

**விச்வதேவர்:** உலகத்தால் விளையாடுகிறவர்.

**விச்வதேவர்:** எல்லோருக்கும் தேவர். விச்வம் எனப்பட்ட விஷ்ணுவுக்கும் தேவர்.

**விச்வபாகு:** உலகங்களில் வ்யாபிக்கும் கைகளையுடையவர்.

**விச்வர்:** எல்லாவற்றையும் தம்முள் வைத்திருப்பவர்.

**விச்வரூபர்:** எங்கும் காணப்படுகிறவர்.

**விச்வரூபர்:** எல்லா உருவங்களையும் படைத்தவர்.

**விச்வக்ஷேத்திரம்:** உலகங்களுக்கு ஆதாரமானவர்.

**விசாகர்:** குமாரக்கடவுளாக இருப்பவர். 'இந்த்ரன் வஜ்ராயுதத்தினால் அடித்த போது கார்த்திகேயரிடமிருந்து உண்டாகி அவருக்குச் சகாயமாயிருந்தவர்' என்பது பழைய உரை.

**விசாம்பதி:** மனிதர்களுக்கு நாதர்.

**விசாரதர்:** எல்லாம் தெரிந்தவர்.

**விசாரவித்:** ஆத்மவிசாரம் அறிந்தவர்.

**விசாலசாகர்:** பெரிய கைகளையுடையவர்.

**விசாலர்:** வ்யாபித்திருப்பவர்.

**விசாலாக்ஷர்:** அகன்ற கண்களையுடையவர்.

**வித்வாந்:** எல்லாம் தெரிந்தவர்.

**விதாதா:** கட்டளை இடுகிறவர். 'பலவகைகளால் போஷிப்பவர்' என்பது பழைய உரை.

**விநதர்:** வணக்கமுள்ளவர்.

**விபணர்:** விலையில்லாதவர், 'வ்யவஹாரம் இல்லாதவர். தண்ட முதலிய இல்லாதவர்' என்பது பழைய உரை.

**விபாகர்:** உலகத்திலிருந்து தனித்திருப்பவர். அவயமில்லாதவரென்றுமாம்.

**விபாகஜ்ஞர்:** அவரவர் கர்மங்களுக்கு தக்கபடி பலன்களைப் பகுக்கத் தெரிந்தவர்.

**விபு:** அநேகம் ரூபங்களாயிருப்பவர்.

**விபு:** எல்லா ப்ராணிகளுக்கும் ஈஸ்வரர்.

**விபு:** பல ரூபங்களாக ஆகிறவர்.

**விபு:** வ்யாபித்திருப்பவர்.

**விபுதர்:** விசேஷமாக அறிந்தவர்.

**விமர்சர்:** ஞானரூபி.

**விமுக்தர்:** முழுதும் விடுபட்டவர்.

**விமோசநர்:** ஸம்சாரத்தை விடுவிப்பவர்.

**விரஜர்:** ரஜோ குணமற்றவர்.

**விராமர்:** பகைவரை ஒழிப்பவர். விஷயங்களிலிருந்து ஒழிந்திருப்பவர் என்றுமாம்.

**விரூபர்:** உருவம் மாறியிருப்பவர். பல ரூபங்களாக தோன்றுகிறவர் என்றுமாம்.

**விவஸ்வாந்:** கிரணங்களையுடையவர்.

**விஜயகாலவித்:** ஜயிக்கும் தருணம் அறிந்தவர்.

**விஜயர்:** ஜயமாயிருப்பவர்.

**விஜயாக்ஷர்:** எல்லாவற்றையும் ஜயிக்கும் தேரையுடையவர்.

**விஷ்கம்பி:** விஸ்தாரமுள்ளவர்.

**விஷ்ணு:** பன்னிரண்டுச் சூரியரை சேர்ந்தவர். அல்லது வ்யாபிப்பவர்.

**விஷ்ணுப்ராசாதிதர்:** விஷ்ணுவினால் ஆராதிக்கப்பட்டவர். 'சக்ரத்தைப் பெறுவதற்காக விஷ்ணுவினால் ஆராதிக்கப்பட்டவர்' என்பது பழைய உரை.

**விஷ்வக்சேநர்:** எங்கும் பரவும் சேனையையுடையவர்.

**விஷண்ணாங்கர்:** விசனத்தினால் ஓய்ந்த அங்கமுடையவர். 'பூமி முதலிய அங்கங்கள் அவரிடம் முழுதும் லயிக்கின்றன. அதனால், அடங்கிய அங்கங்களுள்ள சுத்தர், வ்யாபகர்' என்பது பழைய உரை.

**விஸ்தாரர்:** எல்லாவற்றையும் மறைப்பவர்.
**விஸர்க்கர்:** விஸர்க்கமானவர். படைப்பவர்.
**வேணவி:** வேணு வாத்யமுள்ளவர்.
**வேதகாரர்:** வேதங்களையுண்டுபண்ணினவர்.
**வைச்ரவணர்:** குபேரர்.
**வைத்யர்:** வித்திகள் நிரம்பினவர்.
**வைதம்பர்:** கபடமில்லாதவருக்கு வேண்டினவர்.
**ஜ்யோதிஷாம்அயநர்:** நக்ஷத்ரம் முதலியவற்றிற்கு மார்கமாயிருப்பவர்.
**ஜவாலி:** ஜ்வாலைகளை உடையவர்.
**ஜகத்:** உலகத்திலுள்ள பொருள்களாகவும் இருப்பவர், 'எப்பொழுதும் மாறிக்கொண்டே இருப்பதினால் அவ்யாக்ருதம் முதல் கடம்வரையிலுள்ள அழியும் ஸ்வபாவ முள்ள வஸ்துவாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**ஜகத்காலஸ்தாலர்:** உலகத்தை விழுங்கும் யமனையே போஜன பாத்ரமாக உடைய வர். யமன் வழியாக எல்லாவற்றையும் தாமே அழிப்பவர் என்பது.
**ஜங்கமர்:** சஞ்சரிப்பவர்.
**ஜடாதரர்:** ஜடையைத் தரிப்பவர்.
**ஜடி:** ஜடையை உடையவர்.
**ஜடி:** ஜடையுள்ளவர். 'வானப்ரஸ்தர்' என்பது பழைய உரை.
**ஜந்யர்:** யுத்தத்தில் சமர்த்தர்.
**ஜலேசயர்:** ஜலத்தில் படுத்திருப்பவர், 'ஜலத்தில் சேஷன் மீது படுத்திருக்கும் விஷ்ணுவாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**ஜலோத்பவர்:** ப்ரளய ஜலத்தில் உண்டானவர்.
**ஜாஹ்நவித்ருக்:** கங்காதரர்.
**ஜிதகாமர்:** காமனை அடக்கினவர்.
**ஜிதேந்த்ரியர்:** ஐம்புலன்களையும் அடக்கினவர்.
**ஜீவநர்:** ஜடப் பொருளுக்கு ஜீவனை உண்டுபண்ணுகிறவர்.
**ஸுயாவாஸி:** ஸ்ரீஎன்று சொல்லப்பட்ட வித்தையுடன் வசிப்பவர்.
**ஸ்ரீமாந்:** ஐசுவரியமுள்ளவர்.
**ஸ்ரீவர்த்தநர்:** அடுத்தவருக்கு ஐசுவரியத்தை வ்ருத்தி பண்ணுகிறவர்.
**ஷஷ்டிபாகர்:** அறுபது பாகங்களை உடையவர்; அவை: ஜாக்ரதாவத்தை 1, வெளி யில் ப்ரவ்ருத்திக்கும் ஞானம் 1, சப்த ஸ்பர்ச ரூப கந்தங்கள் 5, நினை க்கத்தக்கது அறியத்தக்கது, ஞாநேந்த்ரியங்கள் 5, கர்மேந்த்ரியங்கள் 5, பிராண, அபாந, உதாந, ஸமாநங்களென்னும் வாயுக்கள் 5, மனம் புத்தி அகங்காரம் சித்தம், உலகத்திலுள்ள ஸ்தூலமான பொருள் 1, இவை 9 மற்றும், ஸ்வப்னாவஸ்தை 1, உள்ளே ப்ரவ்ருத்திக்கும் ஞானம் 1, அதில் தோற்றும் சூக்ஷ்மமாயுள்ள மேற்சொன்ன சப்த முதலியவை 7, மேலும் சுஷூப்தி 1, அதிலுள்ள கேவல சுகம் 1 ஆக 60.
**ஸ்கந்தர்:** சுப்ரமண்யரூபி.
**ஸ்தாணு:** ஸ்தம்பம் போல உலகங்களுக்கு ஆதாரமானவர்.
**ஸ்தாவராணாம்பதி:** மலைகளுக்கு அரசான இமயமலையாயிருப்பவர்.

**ஸ்திரர்:** அழியாதவர்.
**ஸ்திரர்:** ஸ்தாவரமாயிருப்பவர்.
**ஸ்நேஹநர்:** ஆச்ரிதரிடத்தில் அன்புள்ளவர்.
**ஸ்ருகாலரூபர்:** நரி உருவமெடுத்த இந்திரனாயிருப்பவர்.
**ஸ்ருதர்:** எங்கும் வ்யாபிப்பவர்.
**ஸ்ருவஹஸ்தர்:** ஸ்ருவமென்னும் யாக பாத்திரத்தை கையில் வைத்திருப்பவர்.
**ஸ்வயம்ஸ்ரேஷ்டர்** : தம்மாலேயே மேன்மையடைந்தவர்.
**ஸ்வயம்பூதர்:** தாமே உண்டானவர்.
**ஸ்வர்க்கத்வாரம்:** ஸ்வர்க்கத்திற்கு காரணமான தலம்.
**ஸ்வர்ணரேதஸ்:** பொன்மயமான அண்டமாக பரிணமிக்கும் ரேதசையுடையவர்.
**ஸ்ஹ்ப்பாநு:** ராகுவாய் இருப்பவர். அல்லது, ஸ்வர் என்று சொல்லப்பட்ட நித்யானந்தத்தினால் ப்ரஹாசிப்பவர்.
**ஸ்வஸ்திதர்:** மங்களத்தை கொடுப்பவர்.
**ஸஸ்திபாவர்:** சிறந்த இருப்பை உடையவர்.
**ஸகணர்:** ப்ரதம கணங்களுடன் கூடினவர்.
**ஸகலர்:** நிறைந்திருப்பவர்.
**ஸகாமாரி:** காம சத்ருக்களான யோகிகளோடு இருப்பவர்.
**ஸங்க்யாஸமாபநர்:** ருது, ஸ்ம்வத்ஸரம், மாசம், பக்ஷம், இவற்றின் ஸங்க்யை களை முடிக்கும் கடைசி தினமாக இருப்பவர்.
**ஸங்க்ரஹர்:** எல்லோரையும் அங்கீகரிப்பவர்; 'பாணன் முதலிய அடியார்களைச் சேர்த்துக்கொள்பவர்' என்பது பழைய உரை.
**ஸத்:** காரணமாயிருப்பவர், 'காரியமாயிருப்பவர்' என்பது பழைய உரை.
**ஸத்:** காரணம், 'கார்யம்' என்பது பழைய உரை.
**ஸத்க்ருதர்:** யாவராலும் பூஜிக்கப்பெற்றவர்.
**ஸத்யவ்ரதர்:** சத்தியத்தையே விரதமாக உடையவர்.
**ஸபலோதயர்:** தாம் ப்ரத்யக்ஷமாவது பயன்படும்படியே இருப்பவர்.
**ஸபாவநர்:** ஸபைகளை உடையவர்.
**ஸம்பக்நர்:** எல்லோராலும் செம்மையாக் ஆச்ரயிக்கப்பட்டவர்.
**ஸம்பந்நர்:** எல்லாம் நிரம்பினவர்.
**ஸம்யதர்:** ஆச்ரிதர்களுக்கு கட்டுபட்டவர்.
**ஸம்யுகாபீடாவஹநர்:** யுத்தத்தில் த்வஜமாயிருக்கும் வ்ருஷபவாஹனமுடையவர்.
**ஸம்யோகர்:** ஆத்மாவையும் தேஹத்தையும் சேர்ப்பவர்.
**ஸம்வத்ஸரகரர்:** வருஷ முதலான கால சக்கரத்தை நடத்துகிறவர்.
**ஸம்வத்ஸரம்:** ஸம்வத்சரம் என்னும் காலத்தின் பிரிவாய் இருப்பவர்.
**ஸ்ம்க்ஷேபோவிஸ்தரஸ்ஸர்க்கர்:** முறையே சுருக்கமும் விரிவுமாகிய சூத்திரம் பாஷ்யமுதலிய கிரந்தங்களாயிருப்பவர்.
**ஸமரமர்த்தநர்:** யுத்தத்தில் பகைவரை மாய்ப்பவர்.
**ஸமாம்நாயர்:** வேதமாயிருப்பவர்.
**ஸமுத்ரர்:** சமுத்ரரூபி.
**ஸயஜ்ஞாரி:** யஜ்ஞ சத்ருக்களான அசுரர்களோடும் இருப்பவர்.
**ஸர்ப்பசீரநிவாஸநர்:** பாம்பு சட்டையை ஆடையாக உடையவர். 'பாம்பையே வஸ்திரத்தின் நடுக்கட்டாக உடையவர்' என்பது பழைய உரை.

**ஸர்வகந்தஸ்ஸுகாவஹர்**: எல்லா வாசனைகளின் சுகங்களையும் உண்டு பண்ணு கிறவர்.

**ஸர்வகர்**: எங்குமிருப்பவர்.

**ஸர்வகர்மணாம்உத்தாநர்**: நல்வினை தீவினை எல்லாவற்றயும் ஸ்ருஷ்டி காலத்தில் தலையெடுக்கச் செய்கிறவர்.

**ஸர்வகர்மா**: எல்லாச் செய்கைகளையும் கொடுப்பவர்.

**ஸர்வகரர்**: எல்லாவற்றிற்கும் கர்த்தா.

**ஸர்வகாமகுணாவஹர்**: யாவரும் விரும்பத்தக்ககுணங்களை உண்டுபண்ணுகிறவர்

**ஸர்வகாமதர்**: எல்லா இஷ்டங்களையும் கொடுப்பவர்.

**ஸர்வகாமர்**: எல்லா இஷ்டங்களையும் அடைந்தவர்.

**ஸர்வகாமவரர்**: விரும்பப்படுவற்றுளெல்லாம் சிறந்தவர்.

**ஸர்வகாலப்ராசாதர்**: எல்லாக் காலங்களிலும் அனுக்ரஹஞ்செய்பவர்.

**ஸர்வகோவாயு**: எங்குமிருக்கும் வாயு.

**ஸர்வசாரி**: எங்கும் சஞ்சரிப்பவர்.

**ஸர்வசாரி**: எங்குமிருப்பவர்.

**சர்வசுபங்கரர்**: எல்லா மங்களங்களையும் செய்பவர்.

**ஸர்வதர்**: எல்லாவற்றையும் கொடுப்பவர்.

**ஸர்வதாரி**: எல்லாவற்றையும் தாங்குகிறவர்.

**ஸர்வதூர்யநிநாதி**: எல்லாவாத்ய சப்தங்களுமுள்ளவர்.

**ஸர்வதேவமயர்**: எல்லாத் தேவர் களாகவுமிருப்பவர்.

**ஸர்வதேவமயர்**: எல்லாத் தேவர்களையும் தம் அங்கங்களாக உடையவர்.

**ஸர்வதேவர்**: எல்லாத் தேவர்களின் சக்திகளும் ஒன்று சேர்ந்தவர்.

**ஸர்வதேஹிநாம்இந்த்ரியர்**: எல்லா ப்ராணிகளின் புலன்களாகவுமிருப்பவர்.

**ஸர்வதோமுகர்**: எங்கும் முகமுள்ளவர்.

**ஸர்வபார் ச்வமுகர்**: எல்லாப் பக்கங்களிலும் முகமுள்ளவர்.

**ஸர்வாவகரர்**: எல்லாப் பதார்த்தங்களையும் உற்பத்தி பண்ணுகிறவர்.

**ஸர்வாவநர்**: எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறவர்.

**ஸர்வாவநர்**: எல்லாவற்றையும் பரிசுத்தமாக்குகிறவர்.

**ஸர்வபூதஹரர்**: எல்லா ப்ராணிகளையும் சம்ஹரிப்பவர்.

**ஸர்வபூதாத்மா**: எல்லா ப்ராணிகளையும் தமக்கு தேகமாகக்கொண்டவர்.

**ஸர்வபூதநாம்வாஹிதா**: எல்லா ப்ராணிகளையும் நடத்துகிறவர்.

**ஸர்வபூஜிதர்**: யாவராலும் பூஜிக்கப் பெற்றவர்.

**ஸர்வயோகி**: எல்லாவற்றிலும் சேர்ந்திருப்பவர்.

**ஸர்வர்**: அபிமுகமாகவருகிறவர்.

**ஸர்வர்**: தாம் வ்யாபித்திருப்பதனால் எல்லாமாக இருப்பவர்.

**ஸர்வரத்நவித்**: எல்லாச் சிறந்த பொருளையும் அடைந்திருப்பவர்.

**ஸர்வலக்ஷணலக்ஷிதர்**: எல்லா நல்ல லக்ஷணங்களும் பொருந்தினவர்.

**ஸர்வலாலஸர்**: எல்லாரிடத்திலும் அன்புள்ளவர்.

**ஸர்வலோகக்ருத்**: எல்லா உலகங்களையும் படைப்பவர்.

**ஸர்வலோகப்ரஜாபதி**: எல்லாலோகங்களிலுமுள்ள ப்ரஜைகளுக்கும் தலைவர்.

**ஸர்வலோசநர்**: எல்லாரிடத்திலும் அன்புள்ளவர்.

**ஸர்வவாஸர்:** எங்கும் இருப்பவர்.
**ஸர்வவாஸீ:** எல்லா இடங்களிலும் இருப்பவர்.
**ஸர்வவிக்யாதர்:** எல்லா இடங்களிலும் எல்லா காலங்களிலும் எல்லாப் பிராணிகளுக்கும் ப்ரஸித்தமாக தெரிந்திருப்பவர்.
**ஸர்வவிக்ரஹர்:** எல்லாவற்றையும் தமக்கு சரீரமாக உடையவர்.
**ஸர்வஜ்ஞர்:** எல்லாவற்றையும் அறிந்தவர்.
**ஸர்வஸாதநர்:** எல்லாப் பயன்களையும் கொடுப்பவர்.
**ஸர்வஸாதுநிஷேவிதர்:** எல்லா சாதுக்களாலும் அடையப் பெற்றவர்.
**ஸர்வாங்கர்:** உலகங்களை எல்லாம் தமக்கு அங்கங்களாக உடைய விராட் புருஷர்.
**ஸர்வாங்கர்:** எல்லாவற்றையும் அடைந்திருப்பவர். 'உலகமெல்லாம் தமக்கு அங்கமாக உடையவர்' என்றும்.
**ஸர்வாங்கரூபர்:** எல்லாஅங்கங்களிலும் அழகுள்ளவர்.
**ஸர்வாச்ரயக்ரமர்:** எல்லாவற்றிலுமுள்ள ஒழுங்காயிருப்பவர்.
**ஸர்வாசயர்:** எல்லாவற்றிற்கும் இருப்பிடமானவர்.
**ஸர்வாத்மா:** எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பவர்.
**ஸர்வாதோத்யப்ரிக்ரஹர்:** எல்லா வாத்யங்களையும் க்ரஹிப்பவர். 'எல்லா ஜீவன் களையும் குடும்பமாக உடையவர்.
**ஸர்வாயுதர்:** எல்லா ஆயுதங்களையும் தரிப்பவர்.
**ஸர்வேஷாம்ப்ராணிநாம்பதி:** எல்லா ப்ராணிகளுக்கும் ஸ்வாமி.
**ஸவிதா:** சூரியனாக இருப்பவர்.
**ஸவிதா:** படைப்பவர்.
**ஸஹர்:** சக்தர்.
**ஸஹஸ்ரதர்:** மிகுதியாக கொடுப்பவர்.
**ஸஹஸ்ரபாத்:** ஆயிரம் கால்களை உடையவர்.
**ஸஹஸ்ரபாஹு:** ஆயிரம் கைகளை உடையவர்.
**ஸஹஸ்ரமூர்த்தா:** ஆயிரம் தலைகளை உடையவர்.
**ஸஹஸ்ரஹஸ்தர்:** ஆயிரம் கைகளை உடையவர்.
**ஸஹஸ்ராக்ஷர்:** ஆயிரம் கண்களை உடையவர். எங்கும் பார்ப்பவர் என்பது கருத்து.
**ஸஹாயர்:** யாருக்குந்துணையாயிருப்பவர்.
**ஸாங்க்யப்ரஸாதர்:** ஆத்மஸ்வரூபத்தைத் தெளிவித்தவர். 'கபிலரூபி' என்பதும், 'தத்தாத்ரேய ரூபி' என்பதும் பழைய உரை.
**ஸாத்யரிஷி:** ஸாத்யர்கள் என்னும் தேவர்களுக்கு ஞானத்தை அளிப்பவர்.
**ஸாமாஸ்யர்:** ஸாம வேதத்தை வாயாக உடையவர்.
**ஸாரக்ரீவர்:** உறுதியான கழுத்தை உடையவர். விஷந்தாங்கினதினால்.
**ஸாரங்கர்:** சிறந்த அங்கமுள்ளவர்; அல்லது சிறந்த பொருள்களை அடிபவர். 'சாதகபகஷி' என்பது பழைய உரை.
**ஸித்தபூதார்த்தர்:** தவஸித்தி பெற்றவர்கள் அடைந்த பயனாயிருப்பவர்.
**ஸித்தயோகி:** சித்தி பெற்ற யோகி. 'ஸநத்குமார் முதலியோராயிருப்பவர்* என்பது பழைய உரை.
**ஸித்தஸாதகர்:** தவசித்தி பெற்றவர்களுக்கு அபீஷ்டத்தை ஸாதிப்பவர். ஞானம் வந்தபின் ஸந்யாஸத்தை விரும்பிய யாக்ஞவல்கியர் முதலிய வித்வான்களான ஸந்யாஸிகளாயிருப்பவர்' என்பது பழைய உரை.

**ஸித்தார்த்தகாரி:** சித்தர்களுக்கு ப்ரயோஜனத்தை செய்பவர்.
**ஸித்தார்த்தர்:** விரும்பினதையெல்லாம் அமைந்திருப்பவர்.
**ஸித்தார்த்தர்** : பிரயோஜனங்க ளெல்லாம் சித்தித்திருப் பவர். 'ரிஷபர் தத்தாத்ரேயர் முதலியோராயிருப்பவர்' என்பது பழைய உரை.
**ஸித்தார்த்தர்:** கையிலுள்ள பொளாயிருப்பவர்.
**ஸித்தார்த்தர்:** எல்லாப்பயன்களும் கைகூடின பரிபூரணர்.
**ஸித்தி:** காரியசித்தியாயிருப்பவர்.
**ஸிம்மகர்:** சிம்மம் போல நடப்பவர்.
**ஸிம்மசார்த்தூலரூபர்:** சிங்கம் புலி உருவமாய் இருப்பவர்.
**ஸிம்மத்ம்ஷ்ட்ரர்:** சிம்மம் போல் கோரப்பற்கள் உடையவர்.
**ஸிம்மநாதர்:** சிம்மம் போல கர்ஜிப்பவர்.
**ஸிம்மவாஹநர்:** சிம்மத்தை வாஹனமாக உடையவர்.
**ஸுகந்தாரர்:** நல்லமனத்தை உடையவர். 'நல்ல காந்தார தேசத்திற்பிறந்தவர்' என்பது பழைய உரை.
**ஸுகாஜாதர்:** சுகத்திற்காகப் பிறந்தவர். அல்லது சுகரூபியாகப் பிறந்தவர்.
**ஸுகாஸக்தர்:** இன்பங்களிற் பற்றில்லாதவர்.
**ஸுச்சத்ரர்:** அழகான குடையுள்ளவர். தமக்குத் தாபமில்லாதவர் என்பது.
**ஸசாரதர்:** இனிய வாக்குள்ளவர்.
**ஸதர்சநர்:** மங்களகரமான பார்வையுடையவர்.
**ஸதீர்த்தர்:** நல்ல ஆசாரியர்.
**ஸுதீக்ஷணதசநர்:** மிக்க கூர்மையான பற்களை உடையவர்.
**ஸநீச்சலர்:** மிகவும் அசையாதவர். மலை முதலியவையாயிருப்பவர்? என்பது பழைய உரை.
**ஸுபந்தநவிமோசநர்:** சம்சாரபந்தத்தை விடுவிப்பவர்.
**ஸபலர்:** லோகோபகாரமான சாமர்த்தியமுள்ளவர்.
**ஸுபாந்தவர்:** நல்ல உறவினர்.
**ஸுபீஜர்:** வித்தாயிருக்கும் மூலப்ரகிருதியை தம் சம்பந்தத்தினால் பயன்படச் செய்தவர்.
**ஸுமஹாஸ்வநர்:** மிகச்சிறந்த தொனியுள்ளவர்; 'ஹயக்ரீவரூபமுள்ளவர்' என்பது பழைய உரை.
**ஸுமுகர்:** நல்ல முகமுள்ளவர்.
**ஸயுக்தர்:** மிக்க ஜாக்ரதையுள்ளவர்.
**ஸுரகர்ணர்:** தேவர்களால் நினைக்கப்படுகிறவர்.
**ஸுரயுப்தரணர்:** குணமுள்ளவர்களைக் கரையேற்றுகிறவர். 'சிவனுடைய சிரசைப் பார்த்ததாக ப்ரம்ம தேவர் பொய்சொன்னதற்குக் காமதேனுவை சாக்ஷியாகக் கூறியதினால் அதைச் சபித்து கீழ்படுத்தினவர்' என்பது பழைய உரை.
**ஸுராத்யக்ஷர்:** தேவர்களுக்கு அதிபதி.
**ஸுராரிஹா:** அசுரரைக் கொன்றவர்.
**ஸுரூபர்:** அழகான நிறமுள்ளவர்.
**ஸுவக்தரர்:** அழகான முகமுள்ளவர்.

**ஸ்வர்ச்சஸர்:** அழகான மகிமையுள்ளவர்.
**ஸுவர்ச்சஸி:** அழகான ஒளியுள்ளவர்.
**ஸுவர்ணர்:** அழகான நிறமுள்ளவர்.
**ஸுவாஸர்:** சிறந்த வாசஸ்தலமுள்ளவர், சிறந்த வாசனையுள்ளவர் என்றும்.
**ஸுவிஜ்ஜேயர்:** எளிதாக அறியக்கூடியவர்.
**ஸுஷாடர்:** எல்லாவற்றையும் மெலிதாகத் தாங்குகிறவர்.
**ஸுஸ்வப்நர்:** சிறந்த யோக நித்திரை உள்ளவர். 'ஸ்வப்னாவஸ்தைக்கு அபிமான தேவதயான தைஜஸர் என்பது பழைய உரை.
**ஸுஸரணர்:** எளிதாக அடையக்கூடியவர்.
**ஸுஸஹர்:** மிகப்பொறுப்பவர்.
**ஸுஹ்ருதர்:** நல்ல ஹ்ருதயம் உள்ளவர்.
**ஸௌர்யர்:** எல்லாவற்றையும் நடத்துகிறவர்.
**ஸௌக்ஷமர்:** சூக்ஷ்ம ஞானமுள்ளவர்.
**ஸௌக்ஷ்மாத்மா:** அறிவுக்கெட்டாத ஸ்வரூபமுள்ளவர்.
**ஸேனாகல்பர்:** சேனைகளை உண்டு பண்ணுகிறவர். சேனைகளுக்கு அலங்காரமான பராக்ரமமாய் இருப்பவர்? என்பது பழைய உரை.
**ஸேனாபதி:** சேனைகளுக்குத்தலைவர்.
**ஸோமர்:** ஸோமலதா ரூபி.
**ஹ்லாதநர்:** ஆனந்தமுண்டுபண்ணுகிறவர்.
**ஹயகர்த்தபி:** குதிரைகளும், கோவேறு கழுதைகளும் கட்டின தேரேறுகிறவர்.
**ஹர்யச்வர்:** பச்சை நிறமான குதிரைகளை உடையவர். சூர்ய ரூபி என்பது கருத்து.
**ஹர்யக்ஷர்:** சிம்ம ஸ்வரூபி.
**ஹரர்:** எல்லாப் பதார்த்தங்களையும் அழிப்பவர்.
**ஹரர்:** தம் குணங்களினால் மனத்தை இழுப்பவர். பக்தியினால் வசப்படுத்துகிறவர் என்னவுமாம். "எல்லோரையும் கொல்வதான சூலாயுதத்தை க்ரஹிப்பவர்" என்பது பழைய உரை.
**ஹரர்:** துயரங்களை ஹரிப்பவர்.
**ஹரி:** ஹரியாயும் இருப்பவர் (விஷ்ணு ரூபி). 'ஹரியினது அவதாரங்களுக்கு ஸகாயர்' என்பது பழைய உரை.
**ஹரி:** துக்கத்தை ஹரிப்பவர்.
**ஹரி:** விஷ்ணு ரூபி.
**ஹரி:** விஷ்ணு ரூபியானவர்.
**ஹரிகேசர்:** செம்மட்டை மயிர்களை உடையவர். ஹரிக்கும் ஈச்வரர். 'இந்திரியங்களையே கிரணங்களாக உடையவர்' என்பதும், 'பிரும்மா விஷ்ணு மஹேஸ்வரரென்னும் மும்மூர்த்திகளுமானவர்' என்பதும் பழைய உரை.
**ஹரிணர்:** பொன்னிறமானவர், தக்ஷயாகத்தில் மானாக வடிவமெடுத்தவர். வெளுப்பாயிருப்பவர், 'சுத்தர்' என்பது பழைய உரை.
**ஹரிணர்:** பொன்னிறமானவர். 'மான் வடிவானவர்' என்பது பழைய உரை.
**ஹரிணாக்ஷர்:** சிவந்த கண்களை உடையவர். 'ம்ருகேந்த்ரர்' என்பது பழைய உரை.
**ஹவி:** ஹோமத் திரவியமாய் இருப்பவர்.

**ஹவிஸ்:** அன்ன ரூபியாய் இருப்பவர்.
**ஹஸ்தீச்வரர்:** காளஹஸ்திசுவரரென்னும் வாயுலிங்க ரூபி.
**ஹிமவத்கிரிஸம்ச்ரயர்:** இமயமலையிலிருப்பவர்.
**ஹிரண்யகவசோத்பவர்:** பொன்மயமான கவசத்தினால் ப்ரஹாசிப்பவர், 'மாயையே கவசம் என்பது கருத்து'
**ஹிரண்யபாகு:** அழகான கைகளை உடையவர்.
**ஹுதர்:** எல்லாராலும் ஹோமத்தினால் திருப்தி செய்விக்கப்படுபவர்.
**ஹுதாசநர்:** அக்னியாயிருப்பவர்.
**ஹுதாசநசஹாயர்:** வாயுஸ்வரூபி.
**ஹேமகரர்:** பொன்னையுண்டாக்குகிறவர்.
**ஹைமர்:** பொன்னிறமாயிருப்பவர். 'இமயமலை ரூபமாய் இருப்பவர்' என்பது பழைய உரை.
**க்ஷணம்:** க்ஷணம் என்னும் காலத்தின் சிறிய பிரிவாயிருப்பவர்.
**க்ஷபா:** இரவாயிருப்பவர்.

மேற்கண்ட 'ஸ்ரீ சிவஸஹஸ்ரநாம'த்திலிருந்து சங்கடங்களைத் தீர்த்து மங்களத்தினை நமக்குத் தருவதாலேயே "சங்கரர்" என்று தனது திருநாமத்தைக் கொண்ட ஸ்ரீமஹாதேவருடைய மஹிமைகளை அவரவர் தமது கர்மவினையின் பயனாகவும், எல்லா உயிர்களின் ஹ்ருதயாகாசத்தில் இருந்து கொண்டு இயக்கும் ஈசனின் அருளினாலும், அவரைப் பற்றி ஓரளவேனும் அறிய முயற்சிக்கலாம்.

இவ்விதம் பல சிறப்புக்களைக் கொண்ட இச் "சிவஸஹஸ்ரநாமம்" அடங்கிய இதே பகுதியின் தொடர்ச்சியாக "உமாமஹேஸ்வர ஸம்வாதம்" என்னும் பகுதியை ஸ்ரீ கிருஷ்ணர் கேட்டதற்கிணங்க, நாரதர் தான் நேரில் கேட்டறிந்தவற்றைச் சொன்ன வற்றை, இதே ஸ்ரீ கிருஷ்ணர் சொல்வதாகப் பாரதத்தில் **அநுசாஸனப் பர்வம்/ 204வது அத்தியாயம் / தானதர்ம பர்வத்தில்** வருகின்றது. இதில், உமை தன் பதி யான பரமேச்வரரின் கண்களைப் பொத்தியது, மூன்றாவது கண் உண்டானது, இமய மலை எரிக்கப்பட்டதும், அதன் காரணமும், ஈஸ்வரரின் நான்கு முகம், அவரதுக் கரியகண்டம், பிநாகமென்னும் வில் மற்றும் விருஷபத்தினை வாகனமாகக் கொண் டது, ரிஷிகள் ஈஸ்வரரைத் துதித்தது, ஈஸ்வரர் மயானத்தில் வசிப்பது, உக்கிரமான உருவத்தில் இருப்பது, ஜடாமகுடத்தில் சந்திரனைச் சூடியது, நான்கு வர்ணத்தாரின் தர்மங்கள், ரிஷி தர்மங்கள், வனப்ரஸ்தம் முதலியன, கிருஹஸ்த தர்மம், மோக்ஷ தர்மம், அரசனை ஏற்படுத்தியது, அரச தர்மம், தண்டனை, கொல்லாமையின் சிறப்பு, விதியின் வன்மை, அறம் - பொருள் - இன்பம், முதலியன, முன்வினைப்பயன், அது மறுஜன்மத்தில் வருவது, (இப்பகுதிச் சற்றுவிரிவாகவே உள்ளது) நால்வகைப் பிராணிகள் பற்றியும், அவற்றின் கல்வியறிவும், இயற்கையறிவும், இறந்தவர் பிழைப்பது, கனவு, தெய்வம், முயற்சி, ஆத்மா கர்ப்பத்தில் ப்ரவேசிப்பது, பிராணிகள் எமலோகம் செல்வது, ஐவகை நரகங்கள், மனோவாக்கு காயங்களினால் உண்டாகும் பாவம், மூன்றுவகை புண்ணியங்கள், ஆசார சுத்தங்கள், புலால் உண்பது பாவம் என்பது, குருபூஜை, தீர்த்த ஸ்நாண பலன், (பொன், பசு, பூமி, கன்னிகை, வித்தை) தானமுறை, தானத்தின் சிறப்பு, லௌகிக-வைதிகம்., சிரார்த்தமும் சிரார்த்த விதியும், பலபுண்ணிய உலகங்கள், நரகத்திற்குறியவர்கள், ஸ்வர்க்கத்திற்குறியவர்கள், பல

வகை மரணங்கள், வைராக்கியம் பற்றியது, ஸாங்க்கியம் - யோகம், பாசுபத யோக முறை முதலியவற்றை உமைக்கு விளக்கியதையும், உமையிடம் பரமேஸ்வரர் கேட்டறிந்த “ஸ்திரீ தர்மங்கள்” ஆகியவற்றையும் சொன்னார்.

இதில் ஸ்ரீ பரமேஸ்வரர் உமைக்குச் சொன்னதில் இறுதியாகவுள்ள பாசுபத யோகமுறையில் சிவபெருமான், தன்பக்தர்கள் பற்றியும் அவர்களது ஆசாரம் பற்றியும், தாம் திருப்தியடையும் விஷயங்களையும் சொல்வதிலிருந்து நாம் உணர வேண்டியது நிறைய இருக்கின்றது. ஸ்ரீ பர்மேச்வரர் தன் பக்தர்களைப் பற்றி உமையிடம்;

“என் ஸாயுஜ்யம் ஆச்சர்யமானது. என்னைத் தியானம் செய்யும் சிறந்த யோகிகள் என் குணத்தை பெறுவதினால் அவர்கள் மீண்டும் சம்சாரத்திற்கு திரும்பு வதில்லை, நான் புலப்படாதவன். மோக்ஷத்தை விரும்பின முன்னோர்களும் என்னைச் சிந்திக்க முடிவதில்லை, சாங்கியமும், யோகமும், சராசரம் அனைத்தும் என்னால் படைக்கப்பட்டன. நானே பூஜிக்கத்தக்கவன். நான் ஆதியும் அந்தமும் இல்லாதவன். நான் ஈஸ்வரன். என் பக்தனை அநுக்ரஹித்து அவனையும் தேவனாக் குகிறேன், தேவக் கூட்டங்களும், தவத்தையே தனமாக உடைய முனிவர்களும் என்னை அறிவதில்லை.! என்னிடம் பக்தியுள்ளவர்களும், பாவமற்றவர்களும், பரிசுத்தமானவர்களுமான நான்கு ஆசிரமத்தாராகிய நான்கு பிரம்மமிஷிகளை அழைத்து அவர்களுக்குப் பாசுபதம் என்னும் சிறந்த யோகத்தை உரைத்தேன். அவற்றையெல்லாம் அவர்கள் என்னுடைய தென்முகத்திலிருந்து கிரஹித்துக் கொண்டார்கள். தாம் கிரஹித்துக் கொண்டதை அவர்கள் மூவுலகங்களிலும் நிலைநிறுத்தினர்."

"நான் பசுபதியென்னும் பெயருள்ளவன். என்னிடம் பக்திவைத்து உடம்பெல் லாம் நீரணிந்திருக்கும் மனிதர்கள் அனைவரும் என் பக்தர்கள் என்று அறி. ரக்ஷைக் காகவும், மங்களத்திற்காகவும், சுத்ததிற்காகவும், அடையாளத்திற்காகவும் ஆதிகால த்தில் பஸ்மத்தை என் பக்தனுக்குக் கொடுத்தேன். அந்தப் பஸ்மத்தை அங்கமெல் லாம் அணிந்து கொண்டு ஜடையுள்ளவர்களாகவும், விகார ரூபிகளாகவும், சிவந்த நிறமுள்ளவர்களாகவும் திகம்பரர்களாகவும், பல ரூபங்களில் பிக்ஷை எடுத்துக் கொண்டு ஒன்றையும் விரும்பாமலும், பொருள் சேர்க்காமலும், மண் பாத்திரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு என்னிடத்தில் பக்தியுடன் புத்தியைச் செலுத்தி உலகம் எல்லாம் திரிந்து கொண்டு என் சந்தோஷத்தை மிக விருத்திச் செய்கின்றனர்.”

“அவர்கள் சிறந்ததும், அறியதும், சூக்ஷ்மமுமாகிய பாசுபதம் என்னும் என் யோக சாஸ்திரத்தை ஆராய்ந்துகொண்டு உலகமனைத்தும் சஞ்சரிக்கின்றனர். இப்படி என்னை சதா தியானம் செய்து கொண்டும், தவம் செய்து கொண்டும் இருக்கிற என் பக்தர்கள் என்னைச் சீக்கிரம் அடையும் உபாயத்தை நானே தேடுகிறேன். மூன்று உலகங்களிலும் சிவலிங்கத்தை நான் ஸ்தாபித்து இருக்கி றேன். அதை நமஸ்காரம் செய்வதினாலேயே பாபங்கள் விட்டுப்போகும்.”

“தேவதா பூஜையும், தானமும், அத்யயனமும் - நிரம்பின தகஷணைகளோடு கூடின யாகங்களும் சிவலிங்க நமஸ்காரத்தின் பதினாறில் ஒரு பங்குக் கூட ஈடாகாது. சிவலிங்கத்தைப் பூஜிப்பதால் நான் சந்தோஷமடைகிறேன் பசும்பாலினா லும், வெண்ணையினாலும் என் லிங்கத்தை அர்ச்சிப்பவனுக்கு அசுவமேத யாகம் செய்த பலன் உண்டாகும். நெய்யினால் என் லிங்கத்தைப் பூஜிக்கும் மனிதன் அக்னிஹோத்திரம் செய்த பிராமணன் அடையும் பலனை அடைகிறான். என் லிங்கத்திற்கு சுத்தமான நீரினால் அபிஷேகம் செய்யும் பக்தன் என் அநுக்ரஹ த்தையும், புண்ணியத்தையும் பெறுவான். பல வகை புஷ்பங்களினால் என் லிங்கத் தை அர்ச்சிப்பவனுக்கு ஆயிரம் கோதானம் செய்த புண்ணியத்தை அடைவான்.”

“தேசாந்திரம் சென்று சிவலிங்கத்தைப் பூஜிப்பனைவிட மேலான பக்தன் என் பிரியத்திற்கு உரியவன் வேறு யார்?. பலாச இலைகளும், வில்வ தளங்களும், கொன்றைப்பூ மாலையும், எருக்கம் பூவும் பரிசுத்தமானது, எனக்கு மிகப் பிரியமா னது. பக்தர்கள் அன்பு வைத்துத் தரும் கனி, காய், மலர், ஜலம், அனைத்தும் எனக்கு மகிழ்ச்சியைத் தரும், நான் சந்தோஷமடைந்தால் உலகில் கிடைக்காதது ஒன்றும் இல்லை. என் பக்தன் கெட மாட்டான், என் பக்தன் பாவமற்றவன். என் பக்தன் எல்லா லோகங்களிலும் பூஜைக்குரியவன். **என்னைப் பகைக்கிறவனும், என் பக்தனைப் பகைக்கிறவனும் நூற்றுக்கணக்கான யாகங்களைச் செய்தாலும் கொடிய நரகத்திற்குப் போவான்**.”

“இந்த பாசுபதம் எனும் சிறந்த யோகத்தை உனக்குச் சொன்னேன். இந்த என்னுடைய தர்ம சித்தாந்தத்தைக் கேட்பவனும் படிப்பவனுமாகிய உத்தம மனிதன் ஸ்வர்கத்தையும், கீர்த்தியையும் தன தான்யங்களையும் அடைவான்.”

**சிவபெருமான் என்பவர் யார்? என்னும் பகுதி முற்றிற்று.**

உ
ஸ்ரீ மஹாதேவ ஜெயம்
|சிவாத்பரதரம் நாஸ்தி|

# முடிவுரை

## நம பார்வதீ பதயே!
## ஹர ஹர மஹாதேவ!

நமது தேசத்தில் காஷ்மீரில் இருந்து கன்னியாகுமரி வரை "சைவம்" அன்று இருந்த நிலை இன்று இல்லாமல் கண்டவையும் தெய்வமாகவும், மதமாகவும் விளங்குவதற்கு, நம் தேசத்தில் நிகழ்ந்த எண்ணற்ற வரலாறு, மற்றும் அரசியலாக் கப்பட்ட சமூக நிகழ்ச்சிகள்தான் காரணம் என்பதை யாவரும் அறிவார்கள். அதற்கு நாமும் காரணமாக இருந்ததும் வெளிப்படையான உண்மைதான்!, நாம் நம்முடைய வாழ்க்கைத் தரத்தை (பொருள் சார்ந்த வாழ்க்கை) உயர்த்திக் கொள்ள போராடிய போராட்டத்தில் இலட்சத்தில்/கோடியில் ஒரு பங்கை சிவபக்திக்கு செலுத்தியிருந்தா லும் நாம் நிறைய இழந்திருக்க மாட்டோம்!. எவ்வளவு பெரிய இழப்பு அது என்பதை இழந்தவர்களுக்குத் தெரியும்.

பணமும், நாகரீக உடையும், நம் கலாச்சாரத்தை அவமதிப்பதும், நமக்கென்று உள்ள புறச்சின்னத்தை தவிர்ப்பதும் முக்கியமாக கருதப்பட்டு நாகரீகம் என்றால் என்னவென்று தெரியாத, தமக்கென்று ஒரு பாரம்பர்ய கலாச்சாரமில்லாதவர்களைப் பார்த்து நாமும் அதுபோல் ஆக வேண்டும் என்கிற ஆசையில் நாம் இதுவரை அடை ந்த துன்பம் போதாதா?

"எளிமை" என்பதற்கு அர்த்தம் இல்லாமல் செய்துவிட்டிருக்கிறோம் இதற்கு தண்டனையை இப்போது நாமும், நாளை நம் வாரிசுகளும் அநுபவிக்கப் போகின்றன. எல்லாவற்றுக்கும் சொகுசு, ஆடம்பரம் தேவை என்றாகிவிட்டது.

கடவுள் மறுப்புக் கொள்கையும், மொழி மீதான பற்றும் நம்முடன் வாழும் சக மனிதர்களிடத்தில் அன்பை வளரச் செய்யாது தடுப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது. இல்லாததை இல்லை என்று சொல்வதற்கு "பகுத்தறிவு" தேவையா? என்ன?! இதுபோன்றே மொழிப்பற்று என்பதும் மிக முற்றிய வெறியாகி மற்ற மொழியையும், அதைப் பேசுபவர்களையும் வெறுக்குமளவு செய்யப்பட்டன. மொழி என்பது என்ன? நம்மையும், பிறரையும் இணைக்கும் கருவி!, அவ்வளவே!!

எழுத்துரு இல்லாத (நரிக்குறவர்கள் பேசும்) மொழியும் இருக்கிறது. அம்மொழியைப் பேசி வாழ்வோரும் இருக்கிறார்கள். அம்மொழியும் அவர்களும் கேவலமானவர்களா? தமிழ் ஒன்றுதான் செம்மையான மொழியென்றால் மற்ற மொழிகள் எதற்கு?, தமிழ் மொழிம்து தமக்கு தீராத பற்று இருப்பதாக பறை சாற்றி வாழ்ந்தவர்கள் அம்மொழிக்கு இதுவரை செய்தது என்ன? தமிழ் தமிழ் என்று தமிழ் நாட்டில் இம்மாதிரியானவர்கள் வாழ்ந்த காலத்தைவிட இவர்களைப்போல் எள்ளள

வும் அதற்கு சொந்தம் கொண்டாடாத நம் முன்னோர்கள் சென்ற நூற்றாண்டிற்கு முன்பு எத்தனை மொழியாக்கமும், தமது சொந்த பங்களிப்பையும் தமிழுக்குச் செய்திருக்கிறார்கள்?!

சமுதாயத்தில் அரசியல் சார்ந்த பல துறைகள் இருக்க, இம்மொழி வெறியர் கள் ஆன்மீகத்தையும் விட்டு வைக்கவில்லை!!. சிவபெருமான் சேக்கிழாருக்கு தமிழில்தான் அடியெடுத்துக் கொடுத்தான் என்று ஆரம்பித்து, வேதம், புராணம் எல்லாம் ஆரியர்களின் கட்டுக்கதை என்றும், அதை பெரிதாக மதித்து வாழும் பெரியோர்களை அவமதித்தும்; இறுதியாக சமஸ்கிருதம் செத்த பாஷை! என்றும், அம்மொழியில் உள்ள அரிய நூல்களை நாம் அறியாத வண்ணம் நம் புத்தியையும் சாக அடிக்கும் வேலையும் நடந்தேறியது! இப்படி மொழிமீதான பற்றும், அதனால் இனங்காணும் முறையும் ஏற்ப்பட்டு நம் தேசத்தில் ஏற்பட்ட இழப்பு கொஞ்ச நஞ்சமல்ல!!

சிவ பெருமான் சேக்கிழாருக்கு தமிழில் அடியெடுத்துக் கொடுத்தார் என்றால் எல்லாம் தெரிந்த சர்வக்ஞரான சிவபெருமானுக்கு தமிழ் மாத்திரம்தான் தெரியும் என்பதால் அல்ல!! பெரிய புராணம் எழுதிய சேக்கிழாருக்கு தமிழ் மாத்திரம் தெரியும் என்பதினாலும்; அவர் மூலம் பெரியபுராணத்தை தமிழ் மாத்திரம் அறிந்தவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதினாலும்தான் || (தமிழ் தெரிந்த எத்தனை பேருக்கு அப்புராணம் தவறில்லாமல் வாசிக்கவும், அதன் மகத்துவம் நிறைந்த அர்த்தங்களும் புரியும்?!) தமிழ் தெரியாது, அதன்மீது பற்றுள்ளவர்கள் போல் காட்டிக்கொள்ளும் சிலர், “சிவபெருமானுக்குத் தமிழ் தெரியாதா? சமஸ்கிருதம் மட்டும்தான் தெரியுமா?!” என்று பொதுவாய் கேட்பதுண்டு!, இவர்கள் இவ்விதமான கேள்வியை யாரிடம் கேட்கிறார்கள்? சிவபெருமானுக்கு இன்னின்ன தெரியும்; இன்னின்ன தெரியாது - என்பது எவனுக்குத் தெரியும்? அது பற்றி எனக்குத் தெரியும்! என்று எவன் சொல்லுவான்?!, ‘சிவபெருமானுக்கு இன்னின்ன தெரியும்; இன்னின்ன தெரியாது என்பது எனக்குத் தெரியும்!” என்று ஒருவன் சொல்வானாயின், அவன் சொல்வதை அக் கேள்வி கேட்பவர்கள் எப்படி அதை “நம்புவார்கள் ”?!!

தெலுங்கு, கன்னடம், மளையாளம், இந்தி முதலிய மொழிகளிலும்தான் சிவபெருமான் புகழ்பாடும் புராணங்கள் இருக்கிறது. அம்மாதிரியான தமிழ் தவிர்த்த மற்ற சிவனார் புகழ்பாடும் ஏடுகளை என்ன செய்யவேண்டும் என்று விரும்புகிறார் கள் இவர்கள்? சிவபெருமான் “பெரியபுராணத்தை” அருளுவதற்கு முன்பாகவே அருளிய நான்கு வேதங்களும், அதன் அங்கங்கள் ஆறினுக்கும் இத்தமிழ் புண்ணியவான்கள் என்ன கதியேற்படுத்த இருக்கிறார்களோ?

சிவபெருமான் தமிழில் அடியெடுத்துக் கொடுத்து நூல் அரங்கேற்றம் செய்த தும், பித்தா என்று தமிழில் அடியெடுத்துக் கொடுத்து பாடச்சொன்னதற்கும் தமிழ்ப் பற்று இவர்களது தலைக்கேற்றியது என்றால்; பிள்ளைக்கறி சாப்பிட்ட புராணமும், தன் பக்தன் மனைவியை ஊர் எல்லைவரை அழைத்துச் சென்றதும் கொண்டு இந்த தமிழடியவர்கள் எந்தமாதிரி பக்தியை தம் தலைமீதேற்றிக் கொள்வர்?

வேதத்தையும், அவ்வேதம் அமைந்த சம்ஸ்கிருத மொழியையும் வெறுப்ப வன் ஸ்ரீ பரமேச்வரரை வெறுப்பவன் ஆகிறான்!. சிவபெருமானையே முழுமுதற் பொருளாகக் கொண்டு வாழ்ந்து, அரிய பல சாதனைகள் புரிந்து “சிவகதி” யடைந்த பேறு பெற்ற சிவனடியார்கள் எவருமே வேதத்தையோ, அது அமைந்த சமஸ்கிருத மொழியையோ வெறுத்தாரில்லை!.

‘யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்’- என்றான் பாரதி. அவருக்கு கிட்டத்தட்ட 13 மொழிகள் தெரியும், அந்த ஒரு தகுதி யைக் கொண்டு அவர் பலவற்றையும் ஒப்பிட்டுப் பார்த்து, தமிழின் பெருமையை பேசலாம். ஆனால் பண்டைய தமிழ் புலவர் களுடைய தமிழ் பாடல்களுக்கு, தமிழ் தெரிந்த வேறு ஒருவர் பொழிப்புரையும், விளக்கவுரையும் தந்தும், அதன் பொருள் சிறிதும் புரிந்து கொள்ள இயலாத இன்றைய தமிழன், தமிழ் தமிழ் என்று கதறுவதும், அதை உயர்த்தி மற்ற மொழியை தாழ்த்துவதும்தான் தகுதியான காரியமா? (தாய்மொழி தமிழ் தெரியாமல், தன் மொழியை உயர்த்திப் பேசுவதிலும், மற்றைய மொழியைப் பற்றி சிறிதும் தெரியாமல் அதை தாழ்த்திப் பேசுவதிலும் என்ன இருக்கிறது? நியாயமே இல்லையே?!)

சைவ சமயத்தைப் பரப்புவதாகக் கூறிக்கொண்டு, மொழிமீதான வெறியை வளர்க்கும் பல அமைப்புக்கள் இன்றும் இருப்பது மிகவும் வேதனையளிக்கிறது. இவர்கள் சாத்திய கதவை தமிழ்தான் திறந்தது; திறந்த கதவை மூடியதும் தமிழ் தான்; ஓடும் நீரில் தமிழே எதிர்த்து வந்தது; நெருப்பு எரிக்காதது தமிழ்; எலும்பை பெண்ணுருவாக்கியது தமிழ்; இறந்தவரை எழுப்பியது தமிழ் என்பது மாதிரியெ ல்லாம் பேசுவார்கள்!.

இம்மாதிரி அற்புதங்கள் ஒரேமுறை நிகழ்ந்தவைதான். இன்றும் கூட நிறைய சிவாலயங்கள் பூட்டியபடியே இருக்கின்றன. முன்பு திறப்பதற்கு பாடிய பதிகம் இன்றும் இருக்கிறது; நீங்கள் அந்த பதிகத்தைப் பாடினால் அவ்வாலயத்தின் கதவுகள் திறக்குமா? ஸ்ரீ உமாபதிசிவம் சிதம்பரத்தில் கொடி ஏற்றியதற்கு பாடியதும் ஒருமுறை நிகழ்ந்ததுதான். அதற்கு முன்பும் கொடி ஏறியது; அவர் உயிரோடு இருந்த பிற்பாடும் அங்கு கொடி ஏறியது!, அப்பர் எத்தனை பேரை நாகத்தின் விஷத்திலிருந்து தமிழில் பாடி உயிரை மீட்டிருக்கிறார்? அதுவும் ஒருமுறைதானே? கல்லைத் தெப்பமாகக் கொண்டதும் ஒருமுறைதானே!!

இம்மாதிரி அவ்வருளாலர்கள் நிகழ்த்திய அற்புதங்களுக்கான காரணத்தை "தமிழ்" எனும் மொழிம்து ஏற்றுவது தவறு. தமிழால்தான் மேற்சொன்ன அற்புதங்கள் நிகழ்ந்தன என்றால், நாங்கள் பேசுவதும் தமிழ், நீங்கள் பேசுவதும் தமிழ். நம்மிருவரது *தமிழும்' அந்தமாதிரி அற்புதத்தை ஏன் நிகழ்த்தவில்லை?

நூலுக்குரிய ஆற்றலும், அதை ஆக்கியவர்களின் ஆற்றலும் இணையும்போது ஸ்ரீ பரமேச்வரர் அருளால் நடக்கும் அதிசயம் அது, தமிழ்மொழியின் பெருமைக்கு சிவனடியார்களது சைவ நூல்கள் காரணமேயன்றி, அந்நூல்களின் ஆற்றலுக்கு தமிழ் மொழி காரணம் அன்று.

சைவ சமயக் குரவர்களாய் விளங்கின அனைவரும் "தமிழால்" புறச் சமய தொல்லைகளை தொலைத்ததுபோல், ஸ்ரீ ஹரதத்தர், சிவாக்ர யோகிகள், ஸ்ரீ அப்பைய தீட்சிதர், உமாபதி சிவாச்சாரியார் முதலியோரால‌ும் "சமஸ்கிருத" மொழியாலும் அது செய்யப்பட்டது வரலாறு, தவிர, பரசமய நிராகரணமும், மாயா வாத நிராகரணமும், சைவ சமய ஸ்தாபனமும் செய்தவை தமிழும்-சமஸ்கிருதமும் கிடையாது!. அவ்விரு மொழிகளிலும் உள்ள சைவ சமயக் கொள்கைகளே ஆகும்.

தமிழ் புலவன் கீரன் தமிழைக் கற்றான்; அதனால் சிவபெருமானின் அருளை அவனால் பெறமுடிந்ததா? அவன் சம்பந்தப்பட்ட சரிதம் அவன் சிவனருள் பெற்றதற்கு அவன் கற்ற தமிழைக் காரணமாகச் சொல்லவில்லையே?! அவன் கற்ற தமிழ்த் திமிராலும், அவன் கொண்ட அகந்தையாலும் சிவபெருமானை எதிர்த்தான்! (தான் வணங்கும் சிவனாரின் பத்தினியான பார்வதியினுடைய கூந்தலுக்கும் "மணம்" கிடையாது! என்று சிவபெருமானிடமே அவன் சொன்னான் என்றால், அந்த ரஹசியம், அந்த உண்மை அவளருகில் வீற்றிருப்பவரும், அத்தேவியை தன்னுட லில் "பாதி" அளித்து அர்த்தநாரியாய் விளங்கும் சிவனுக்குத் தெரியுமா? விக்கிரஹ வழிபாட்டினாலும், மனதில் நினைந்துருகும் வழிபாடும் செய்யும் இந்த கீரனுக்கு எப்படி பார்வதி கேசத்தில் "மணம்" இல்லை என்பது தெரியும்?) அதனால் சிவபெருமா னுடைய தீவிழியால் எரிக்கப்பட்டான்!. தீவிழிப்பட்டு கருகிய அவனை "தமிழ்" காக்கவில்லை! சூடு தாங்காமல் பொற்றாமரைக் குளத்தில் வீழ்ந்தான். அதில் வீழ்ந்த பின்னர் அவனது அகந்தை அடங்கிற்று!, கரத்தை சிரம்மேல் குவித்து, "தவறு பெரிதுடைத்தே தவறு பெரிதுடைத்தே" என்று அலறி சிவனார் பாதத்தில் வீழ்ந்தான். அவனகந்தை அழிந்த பின்பே சிவனருள் பெற்றவன் ஆனான்!. சிவபெருமானின் அருள் பெற்ற பிறகே நாமெல்லாம் வணங்கும் அத்தமிழ்ச் சைவ பெருமகனார் "நக்கீரதேவ நாயனார்" ஆனார்!!

வேறொன்றை வெறுக்க, இன்னொன்றின் சரித்திரத்தை மாற்றி தமக்கு ஆதரவு தேடும் விஷயங்களும் அன்றைய "தமிழர்கள்" செய்து வந்தனர். தம்முடைய சந்ததியினர் அதை "உண்மை" என்று நம்பி வீண் போவார்களே என்கிற கவலையும், பொறுப்பும் இன்றி தம் மனம் போன போக்கில் புதுப்புது கதைகளை சரடுவிடப் பட்டன. அவற்றுள் ஒன்று "இலங்கையை ஆண்ட இராவணன் தமிழன்!" எனும் பட்டமளிப்பு வைபவம்!, அதற்கோர் உதாரணம்!!.

இன்னொரு உதாரணம், நந்தனார் ஒரு அந்தணரால் கொடுமைப் படுத்தப் பட்டார் என்பது!!. (இக்கருத்து பரவலாய் இருப்பதற்கு நந்தனார் சரித்திர கீர்த்தனை எழுதியும், நந்தனார் சரித்திரத்தை கற்பனையோடு புனைந்து அக்காலத்தில் பிரசங்கம் செய்த சிவத்திரு. கோபாலகிருஷ்ண பாரதியாரையே சாரும்!. நந்தனா ரைப் பற்றி நாமெல்லோருமே அறிந்து கொள்வதற்கு முதநூல் சிவத்திரு சேக்கிழார் பெருமான் அருளிய திருத்தொண்டர் புராணமே ஆகும், அதில் நந்தனாரை ஓர் அந்தணர் கொடுமைப் படுத்தியதாகவோ, மற்றெந்த வகையிலோ துன்புருத்திய தாகவோ செய்திகள் கிஞ்சித்தும் இல்லை!)

இதுபோன்ற பலவகையான கற்பனை செய்திகளுக்கு மதிப்பும் அந்தஸ்தும் அளிக்கப்பட்டு, அக்காலத்தே ஆரியர் - திராவிடர் பாகுபாடு சைவத்தில் நுழைக்கப் பட்டது. அது பற்றின அடிப்படை வரலாறு தெரியாமலே!

ஸ்ரீ பரமேச்வரரது அருளால் இலங்கையை அரசு புரிந்த இராவணனை தமிழன் என்றும், அவன் தமிழ் மன்னன் என்றும் எந்த ஆதாரமும் இன்றியே அது பரப்பப் பட்டது. வடமொழி ஆதரவில்லாது இயற்றப்படாத சங்ககால தமிழ் நூல் எதேனும் அந்த இராவணனுடைய சரித்திரம் பேசியிருக்கிறதா?. வடமொழி நூல்களில் மட்டுமே இராவணனது சரித்திரம் வேண்டியமட்டும் இருக்கிறது!. இராவணனது தகப்பன், அவனது முன்னோர் எவரும் அரசு புரிந்தவர்கள் அல்ல! அவர்கள் அனைவரும் பிரம்மனது வழித்தோன்றல்கள் என்றே புராணங்களில் பிரசித்தமாய் இருக்க, அந்த இராவணன் எப்படி “தமிழன்” ஆவான்?. அவன் ஆரியன்தானே?!, நம் சைவத்திற்கு ஆரியன், திராவிடன் என்று எந்த பாகுபாடும் கிடையாது!. சிவபெருமா னை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வாழ்வோர் அனைவரும் “சைவன்” தான்!.

“எழுத்தறியத் தீருமிழிதகைமை தீர்ந்தான்
மொழித் திறத்தின் முட்டறுப்பானாகு மொழிதிறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்"

எனும் வெண்பா, “இலக்கணத்திற்கு மாறாக இலக்கியத்திற்குப் பொருள் கொள்வது குற்றம் என்பதும், வீடுபேறும் இல்லை!” என்று சொல்லுகிறது!. கற்றறிந்த பண்டிதர் கள் கருத்தை அப்படியே ஏற்பதில் என்ன குறை நமக்கு வந்துவிடப் போகிறது?!, அவர்கள் சுயலாபத்திற்காகவா நல்ல தமிழ் நூல்களை நமக்களித்திருக்கிறார்கள்? தமக்கு எதுவுமே தெரியாது என்பது அடுத்தவருக்கு தெரிந்துவிடப் போகிறதே என்கிற வெட்கம் இல்லாமல் தமிழில் அமைந்துள்ள வேத-சிவாகம மற்றும் சைவ நெறி பரப்பும் நூல்களை இழித்தும், பழித்தும் பேசியும், ஒட்டாத கருத்தை இழித்துரை செய்து எழுதுவதும் எப்படி மேலோரின் செய்கையாக ஏழை பாமரன் ஏற்பான்? தவிர, ஒரு நூலிற்கு “பொருள்” கொள்ள வேண்டும் என்றால் அண்மை, தகுதி, அவாய்நிலை முதலியவற்றைக் கொண்டே அந்நூலை ஆராயவேண்டும் என்பதும் இலக்கண விதியாகும்.

தமிழ் மொழி வடதிசையில் இருந்து வந்த ஸ்ரீ அகத்திய முனிவரால் வளர்க்கப்பட்டது. ஆதியில் கண்ணுதற் பெருங்கடவுளால் அது அவருக்கு உபதேசி க்கப்பட்டது. ஆதியில் அம்முனியால் தமிழ் இலக்கண நூலும் செய்யப்பட்டது. ஸ்ரீ அகத்திய முனிவருக்குப் பிறகே தொல்காப்பியரும் தமிழ் மொழியும், வடமொழியும் முறையாகக் கற்றே இலக்கண நூல் செய்தார். பண்டைக்காலத்தில் சங்கத் தமிழ் வளர்த்த, தமிழாராய்ந்த புலவர்கள் பலரும் தமிழ் - சமஸ்கிருதம் எனும் இருமொழி களிலும் தேர்ச்சி பெற்றே விளங்கினர். இச்சங்கம் தவிர்த்த பின்னிருந்த புலவருள் பலர் அவ்வாறே தேர்ச்சி உடையவராகவே இருந்தனர். இவர்களுடைய அக்காலத் தில்தான் வடமொழியில் இருந்த பல நூல்கள் தமிழில் மொழிபெயர் க்கப்பட்டன.

ஸ்ரீமத் மாதவ சிவஞான யோகிகள் தமது பாடல்களில் தமிழையும் - வடமொழி என்று பிரித்து இனம் காணப்படுகிற சமஸ்கிருதத்தையும் அங்கீகரித் ததை நாமும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அன்றைய காலக் கட்டத்தில், ஒருவர் ஒரு மொழியைக் கற்பினும் அம்மொழிக் கீடான இன்னொரு மொழியையுங் கற்றால் அவர்களது புலமைத்திறம் மிக நிரம்பியதாக இருக்கப் பெற்றார். ஆதலால்தான் தமிழைக் கற்போர் தம் புலமைத்திரம் நிரம்பும் பொருட்டு, தாம் கற்கும் தமிழுடன் அப்பெரியோர் கள் கற்றது சமஸ்கிருதமே!. இதைப் போன்றே சமஸ்கிருதத்தில் தேர் ச்சியுடையவர் கள் தமிழைக் கற்று மேலும் திறம் படைத்தோர் ஆனார்கள். இம்மாதிரியான பெரியோர்களால் அன்று நிறைய தமிழ் நூல்கள் ஆங்கிலத்திலும், சமஸ்கிருதத்திலும், மொழிபெயர்க்கப் பெற்றன. சைவ சமய நூல்கள் சமஸ்கிருதத்தில் இருந்து தமிழாக்கம் செய்யப் பட்டன.

வடமொழியைப் பாணிணிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் சொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன் பெருமை யாவரே கணித்தறிவார்

- என்றும்;

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயனா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்று மிதற்கைய முளதேயோ

- என்றும் ஸ்ரீமத் மாதவசிவஞான யோகிகளும், சைவ சமயத்திற்கு தொண்டுகள் பல செய்த மெய்கண்ட தேவர் முதலிய புராண நூலசிரியர் களும் மேற்சொன்ன இருமொழிகளையும் அங்கீகரித்த பின்னர், தமிழை ஓரளவே பேசத்தெரிந்த தகுதியை மாத்திரம் கொண்டும், A for APPLE, B for Bat, C for Cat, என்றும்; அ-அம்மா, அடுப்பு, ஆ-ஆடு, ஆயிரம் என்று முதல் நாள் ஆரம்பப் பள்ளியில் கல்வி கற்க ஆரம்பித்து, மறுநாள் நடுநிலைப் பள்ளியில் திருக்குறளும், அதற்கடுத்த மறுநாள் உயர்நிலைப் பள்ளியில் கம்பராமாயணமும் கற்கும் இன்றைய கலியுகத் தமிழன், தம்மைத் "தமிழன்" என்று பெருமைப் பட்டுக் கொள்வதும், வடமொழி நம்முடைய தன்று; அதைக் கைக்கொண்டு வாழும் அந்தணரும் நம்மவரல்லர்; நம் தமிழந்தணர் வேறு, என்று பிரமாணமில்லாத வெற்று வார்த்தை ஜாலமிட்டு, பிரமாணமில்லாத செய்யுள்களை எடுத்துக் காட்டி, அதனுட்பொருளையும் திரித்துக் கூறி; தமிழ்ப் பாடல்களுக்கு தமிழிலே பொழிப்புரை தேடும் தமிழனிடம் இவர்கள் இன்னும் என்னென்ன செய்ய இருக்கிறார்களோ?!!

வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத்தகுமற மெல்லாமுள தர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே! - என்பது திருமூலருடைய வாக்கு!.

சேனாவரையமும், நன்னூல் விருத்தியும் முதல் தமிழ் இலக்கண் நூல்கள். மிகமிகப் பழமையானதும் கூட. "வடமொழி (சமஸ்கிருதம்) எல்லா தேசத்திற்கும் பொது" என்றது சேனாவரையம். நமது பாரதம் என்பது ஒரு தேசமல்ல!, அது ஒரு கண்டம்!!, இக்கண்டத்திற்கு பொதுவான மொழி சமஸ்கிருதம்.

நான்கு வேதங்களும் மற்றும் இருபத்தியெட்டு ஆகமங்களும் முதலில் சமஸ்கிருத மொழியில்தான் தோன்றியது. இந்த நூல்களே சைவத்திற்கு பிரமாண நூல்கள். இந்நூல்கள் ஆதியில் நம் சிவ பெருமனால் உலக உயிர்களின் நன்மையின் பொருட்டு இவ்வுலக சிருஷ்டியாரம்பத்தில் திருவாய் மலர்ந்தருளப்பட்டதால்தான் அவற்றை சைவப் பெரியோர் "முதல்நூல்" என்ற பெருமையைத் தந்து மதிப்பளித் தனர்.

"மன்னன் எவ்வழி குடிகள் அவ்வழி" என்பது மூதுரை. தம் கீழுள்ள மக்களை ஒரு அரசன் எப்படி ஆள வேண்டும் என்பதற்கும் நம் ஈசன் வகுத்த "தண்ட நீதி சாத்திரம்" இருக்கிறது. இதிஹாச புராணங்களையே பொய் என்று சொல்லும் மன்னன் அமைந்தால் குடிகளின் நிலையை என்னென்று சொல்வது? ஆனால் இன்றைய மன்னர்களோ; வெள்ளையனின் சரித்திர ஆராய்ச்சியைக் கொண்டோ, அல்லது அவர்களது பாணியைப் பின்பற்றும் "நவீன சரித்திர ஆராய்ச்சியாளர் களின்" ஆராய்ச்சியின் முடிவைக்கொண்டோ நம் பழம்பெரும் இதிஹாசங்களை கேலி பேசுவதோடு அல்லாமல், அதைத் தாம் சார்ந்தொழுகிய ஓர் அமைப்பின் பின்னனி கொண்டோ, அல்லது தாம் சார்ந்துள்ள அரசியல் அமைப்பைச் சார்ந்தோ, அல்லது எங்கே தம்மை "பழம் பெருச்சாளி" என்று இந்த சமூகம் ஒதுக்கி விடுமோ என்று பயந்தோ ஒருதலைப் பட்சமாகவே தமது கருத்தை வெளியிட்டு வருகிறார்கள். இவர் களுக்கெல்லாம் நமது பரந்துபட்ட பாரதத்தின் பெருமையும், அதன் ஆணிவேராய் இருந்த, இருக்கின்ற சைவ சமயத்தின் மகிமையையும் தெரியாமலே (தெரிந்து கொள்ள முயற்சிக்காமலே) இருக்கிறார்கள் .

சரித்திர ஆராய்ச்சியைக் கொண்டு சமய ஆராய்ச்சியை செய்தல் கூடாது. நமது சைவ சமயமோ; மறையினால், அயனால், மாலால், மனத்தினால், வாக்கால், அளவைகளால் அறியப்படாதது. அதை தமது சிற்றறிவைக் கொண்டு ஆராயப் புகுந்தால் விபரீத அர்த்தங்களே விளையும்!!

"தத்தமது சமயத்தினை ஒழுகாதவர்களை சிவபெருமான் சொல்லிய ஆகம நெறியில் நின்று எவ்விதமான தண்டனையையும் அவ்வரசன் தனது இம்மையின் நன்மை பொருட்டு செய்யலாம்! அது அம்மன்னனது கடமை!!" என்கிற பொருள் தரும் திருமூலர் அருளிய திருமந்திரத்தில் உள்ளது.

"தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி
எத்தண் டழுஞ்செயு மம்மையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே"

**- திருமந்திரம்.**

தேவநகரியில் அமைந்த 'வேதம்' பற்றி சிறந்த சிவனடியார்கள் என்னென்ன சொல்லியிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டாலே போதும். இம்மாதிரியான வர்கள் சிந்தித்து ஓர் நல்ல முடிவு எடுப்பதற்கு!.

"இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஓர்பால்" - **திருவாசகம்**.
"சாந்தோக சாமம் ஓதும் வாயானை" - **தேவாரம்**
"அங்கம் ஓராறும் அருமறை நான்கும் அருள் செய்த" - **தேவாரம்**
"வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு வெள்ளை எருதேறீ" - **தேவாரம்**
"பாடினார் மறைகள் நான்கும்" - **தேவாரம்**
"மிக்க வேத மெய்ந்நூல் சொன்னவனே' - **திருவாசகம்**.

"வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தில்
ஓதத்தகும் அறம் எல்லாமுள தருக்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுள்ள
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே" - **திருமந்திரம்**

"வேதத்தின் பொருளானாய்" - **அப்பர்**
"மறையின் பொருளானவனே" - **சுந்தரர்**

"வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாக
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கும் வேலரே" - **தேவாரம்**

"மறையாயின சொல்லி ஓண்மலர் சாந்தவை கொண்டு
முறையான் மிகுமுனிவர் தொழு முதுகுன்றடைவோரே"' - **தேவாரம்**

"வேதங்கள் தெரிமுழுதோத்தும் விளங்குதில்லைக் கண்டேனே" - **திருவாசகம்**

"வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது
நாதன் நாம நமசிவாயவே" - **தேவாரம்**

திருநீல நக்கரை குறிப்பிடும் சேக்கிழார்,

'வேத உள்ளுறையாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் அவரடியாரையும் நயந்து
பாத அர்ச்சனை புரிவதும் பணிவதும் என்றே
காதலாலவை யிரண்டும் செய்கருத்துடையார்'

என்று சொல்லியிருப்பதும் கருத்தில் கொள்வது நலம்,

'ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க' - **திருவாசகம்**
'அண்டர் தமக்கு ஆகமநூல் மொழியும் எம்மதியை' - **தேவாரம்**

'மன்னுமா மலைமகேந்திரம் அதனில், சொன்ன வாகமம் தோற்று வித்தருளியும்'
**- திருவாசகம்.**

'உங்கள் நாயகனார் முன்னம் உரைத்த ஆகமநூல்' - **பெரியபுராணம்**

'இனை இலா இடைமருதூரில் எழு,
பணையிலாகமம் சொல்லும் தன் பங்கிக்கே' - **தேவாரம்**

'அம்மானே ஆகமசீலர்க்கருள் நல்கும் பெம்மானே!' **தேவாரம்.**

இவ்விதம் பலவாறாக சிவபெருமானை ஆகமங்களுடன் இணைத்து பதிகம் பாடி மகிழ்ந்திருப்பதற்கு இத் தமிழ் குடிமகன்கள் யாது சொல்வரோ?

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான "பசுபதி" நாயனார் கழுத்தளவு நீரில் நின்று நான்கு வேதத்தில் ஒன்றான யஜூர் வேதத்தில் அமைந்த "ஸ்ரீ ருத்திரம்' பகுதியை தினமும் ஜபித்து 'உருத்திர பசுபதி நாயனார்' என்று பெயர் பெற்று பேறு பெற்றதற்கு யாது சொல்வார்களோ?

சிவபெருமான் அருளிய 'காமிகாகமம்' என்பதும் தேவநஹரியில் அமைந்த நூல் என்பதினால் அதை ஏற்காமல் போனால், அந்நூலிற் கண்டவாறு அமைக்கப் பட்ட சிவாலயதரினம் எப்படி பெறுவார்களோ?

சிவாலயத்துள் சம்பந்தர் காலத்தில் தமிழில் பாடல் பாடி இறைவனைத் தொழுத விவரம் அவரது பதிகப் பாடலில் இருந்து அறிந்து கொள்ளலாம். ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், இரத்தல் எனும் அறுவகைத் தொழில் களைக் குலதர்மமாகக் கொண்ட அந்தணர் குலத்தில் பிறந்த சம்பந்தர் சொல்வதை ஏற்காமலிருப்பது தமிழுக்கு செய்யும் தொண்டாகக் கருதுவார்களோ என்னவோ?! ஸ்ரீ சம்பந்தப் பெருமானது அப்பதிக பாடல்:

"அந்தணர் வேள்வியும் அருமறைத் துழனியும்
செந்தமிழ்க் கீதமும் சீரினால் வளர்தரப்
பந்தனை மெல்விரலாளோடும் பயில்விடம்
மந்தம் வந்துலவு சீர் மழபாடியே"'

இம்மாதிரி உங்களுக்கு விளக்க இன்னமும் நிறைய இருக்கிறது. ஆனால் இது போதும். நம்முடைய சமுதாயத்தில் பெரியோர் எல்லோருமே "நான்கு பேர் மெச்சும் படி வாழவேண்டும்" என்பார்கள். அதனால்தான் இங்கு அப்பெரியோர் சொன்ன அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், திருஞான சம்பந்தர் எனும் நால்வரது பதிகங்க ளில் இருந்து இம்மொழி குறித்த விளக்கத்திற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆன்மீ கத்திற்கு இந்நால்வரது வாக்கும், அதைப் பின்பற்றி வாழும் இச்சமூக வாழ்விற்கு மாதா, பிதா, குரு, தெய்வம் என்கிற நால்வரது வாக்குகளையும் பின்பற்றி வாழ்ந் தால் அதுவே "சைவ நெறி" யாகும்.

ஒரு சமூகம் நன்றாக இருப்பதற்கு அரசாங்கமும், அதை நிர்வகிக்கின்ற அரசனும் (ஆட்சியாளனும்) பல சட்ட திட்டங்களை வகுப்பதும், பின் அதை நீக்குவதும் நாமெல்லாம் கண்டு அநுபவித்து வருபவைதான்!. ஒரு அரசு இவ்விதம் தான் ஏற்படுத்திய சட்ட திட்டங்களை "உலக சுகம்" "மக்கள் நலன்" என்றெல்லாம் காரணம் காட்டி, புது சட்டம் கொண்டு வருவது குற்றமாகாது என்று புதுப்புது நீதியை வகுப்பது போல, மக்கள் விருப்பம், மக்கள் நலன் என்று காரணம் கூறி "சைவ நீதியை யார் மாற்றுவது?! யாருக்கு அந்த அருகதை இருக்கிறது?! இருக்கும்? அது அடாத செயலல்லவா?!

"சைவ நீதி" என்பது பரமனான ஸ்ரீ பரமேச்வரர் அருளிய நான்கு வேதத்தின்படி இருப்பது. அது ஸ்ரீ பரமேச்வரர் அருளியது. அவர் அருளியதை யார் மாற்றுவது? சமூக நீதி மாறுவது என்பது அது மாநுடரால் நடத்தப் பெறுவதால், அதற்கு நோக்கம் என்பதும், கொள்கை என்பதும் நிலையானதாக இருப்பதில்லை. ஆகவே அது ஒவ்வொரு காலகட்டத்திலும் பொது ஜன அபிப்ராயத்தையொட்டி அது மாறும். ஆனால் சைவ நீதி அப்படிப்பட்டதல்ல, அதற்கு நோக்கமும், கொள்கையும் "வீடுபேறு" மாத்திரமே!

ஆனால் தாம் ஒரு சைவர் என்பதை மறந்த நிறைய "தமிழர்கள்" கண்டதையும் தெய்வம் என்றும், தன் மொழிப் பற்றை சிவன்மீது ஏற்றி சமஸ்கிருதத்தை வெறுப்பதும், சைவ மதம், சைவ பண்பாடு, சைவ நீதி, சிவ மந்திரம், சிவ அர்ச்சனை முதலியவற்றுக்கு விரோதமாக தமிழ் மதம், தமிழ் மந்திரம், தமிழ் அர்ச்சனை, தமிழ் நீதி, என்று சகலத்திற்கும் "தமிழை" சம்பந்தப் படுத்தி வீணாகி வருகிறார்கள்.

மொழிக்காக மந்திரங்களா? அல்லது நம் பரமேச்வரருக்காக மந்திரமா? என்கிற வியவஸ்தை இல்லாமல் இவர்கள் "தமிழ் மந்திரம்" என்று எதைச் சொல்லுகிறார்கள்?! இவர்களது அடாவடி இப்படியே தொடர்ந்தால் தமிழ் மந்திரம், தெலுங்கு மந்திரம், துளு மந்திரம், கன்னட மந்திரம், ஆரிய மந்திரம், திராவிட மந்திரம், ஹிந்தி மந்திரம், மராட்டிய மந்திரம் என்பதெல்லாம் முளைத்து மொழிபற்றிய மந்திரமாக மட்டுமல்லாது இனம் பற்றிய மந்திரமாகவும் மாறும்! நீக்ரோ மந்திரம், அமெரிக்க மந்திரம், மலைவாழ் பழங்குடி மந்திரம், மங்கோலிய மந்திரம் என்று தோன்றி தேசமும், உலகமும் பிளவு பட்டு "சைவம் என்றால் என்ன? என்று கேட்கும் நிலை தோன்றக் கூடும்!,

ஏற்கனவே சமஸ்கிருதத்தில் உள்ள மந்திரத்தை தமிழில் மொழி பெயர்த்து சொல்ல ஆரம்பித்தால் அது தமிழ் மந்திரம் ஆகிவிடுமா? அல்லது தேவார திருவாசகங்களை சொல்லவேண்டுமா? எது தமிழ் மந்திரம்? மந்திரம் என்னும் வார்த்தை தமிழா?!

தமிழுக்கே பதவுரையும், பொழிப்புரையும் தேடும் இன்றைய தமிழன், வடமொழி மந்திர மொழிபெயர்ப்புக்கு என்ன கதியாவான்?! இவர்களது கூற்றுப்படி இன்று இலண்டனிலும் அமெரிக்காவிலும் உள்ள சிவாலயங்களில் எந்த மொழியில் மந்திரம் சொல்லவேண்டும்? என்கிறார்கள்!?

ஒரு மொழியை வெறுப்பதும், அம்மொழியைப் பேசும் சக மனிதர்களை வெறுப்பதும்தான் “சைவம்” என்பதல்ல; என்பதற்காகவே இவ்வுதாரணங்களை இங்கு உங்களுக்கு காட்டினோம். இறைவன் ஈசன் அருளியதாக நம்பப்படும் மொழிகள் இரண்டு. ஒன்று தமிழ். இன்னொன்று சமஸ்கிருதம். ஆகவே இவை இரண்டும்தான் சிறந்தது மற்றவை குப்பை என்பது மாதிரி நாம் நடந்து கொள்ளக் கூடாது, மற்ற மொழிகளுக்கு இல்லாத ஒரு பெரும் பேறு இவ்விரண்டு மொழிக்கு உண்டு என்பதை யும், சிவபக்தியை வளர்க்கும் நிறைய நூல்கள் இவ்விரு மொழிகளிலும் அநேகம் - என்கிற சிறப்பை நாம் இவ்வுலகிற்கு எடுத்துரைப்போம்.

தமிழ் நாட்டில் இருப்பவர் அனைவரும் தமிழர் என்று எவரும் சொல்ல முடியாது. நம் தமிழ் நாட்டில் தெலுங்கர், கன்னடர், முகம்மதியர், ஆங்கிலோ இந்தியன் முதலிய பலரும் வசித்தலால் அவர்களுக்கும் இந்த “தமிழர்” பட்டம் செல்லுமா?! ஒருவர் பேசும் மொழியைக் கொண்டே அவரை அந்தந்த “மொழிக்காரர் “களாக அறிகிறோம். ஒரு மொழி - தம்மைக் கற்றுப் பயின்று, அதையே கைக் கொண்டு வாழ்ந்தால் அவர்க்கு தம் பெயரை அம்மொழி தந்து விடும்!. சுருக்கமாக மொழியை வைத்து அவர் தமிழர், தெலுங்கர் என்று இனங்கானப் படுவது இப்படித்தான் இருக்கிறது!.

பெரியவர்கள் வாக்குகளை மூன்று விதமாக பிரித்து இனம் கண்டு இருக்கி றார்கள்.

01. **ஞான வாக்கு** - வேதங்கள் (ஈசன் அருளியதால்)
02. **அநுபவ வாக்கு** - பதிகங்கள் (சம்பந்தராதியர் இயற்றியது)
03. **பிராகிருத வாக்கு** - கட்டுரைகள், பாடல்கள் (மறைஞான சம்பந்தர், காசீவாசி செந்தில் நாதய்யர், ஆறுமுக நாவலர், கதிரைவேற்பிள்ளை, ஈஸ்வரமூர்த்தி பிள்ளை, சபாபதி நாவலர், சிவாக்ரயோகிகள், அப்பைய தீட்சிதர் முதலியோர் இயற்றியது)

இவ்விதம் அதனதன் பெருமை உணர்ந்து வாழ்ந்த அருளாலர்கள் ஞான வாக்கை மீறாது வாழ்ந்து முக்தியின்பம் பெற்றதை அவ்வருளாலர்களுடைய சரிதம் நமக்கு உணர்த்தும், “நான்மறை வல்ல ஞான சம்பந்தன்” என்று தம்மைத்தாமே சொல்லிக் கொள்ளும் திருஞான சம்பந்தர் தமது பாடல்களை “வேதம்” என்றோ, “மந்திரம்” என்றோ சொல்லவில்லை. மற்றோரும் அவ்விதமே தமது பாடல்களை சொல்லாமல் இருக்கும்போது அதை தமிழ் மந்திரமாக மாற்றி அழகு பார்ப்பது அவ்வருளாலர்களை இழிவுபடுத்துவது போலத்தான்!

சைவ அருளாலர்கள் அருளிய தேவாரமும், திருவாசகமும் மற்றயவை எதுவுமே வேதத்திற்கு இணையானவையல்ல, அவை மந்திரங்களும் அல்ல!.

சைவத்தையும், சிவனடியாரையும் நிந்தித்த இராமலிங்க அடிகளாருடைய பாடல்களை “அருட்பா” என்று ஏற்கும் அளவு இவர்களது மொழிவெறியும், சிவபக்தியும், சைவப் பற்றும் கொண்டு சென்றதென்றால் இன்னும் அது என்னென்ன வெல்லாம் செய்யாது?! இதெல்லாம் தமிழன் என்கிறவன் மாத்திரமல்ல, மற்றைய

அகம்பாவம் பிடித்துத் திரியும் மற்றோராலும் “இதிலென்ன தவறு?!” என்று கேட்கப் படுகிறது!. பெரும் பாறையைப் போன்ற இவர்களது செருக்கை அழிக்க நம் மூதாதையரின் சம்மட்டியை (பக்தி நூல்கள்) விட சிவ பெருமானின் சிற்றுளி (வேதாகமங்கள்) உருக்குலைத்துவிடும்!

முறையாக ஒருவன் கசடற கற்ற கல்வியானது அவனுக்கு அறம், பொருள், இன்பம், வீட்டை நல்குவதாக பழந்தமிழ் நூல் பாடல் ஒன்று உறுதியளித்திருக்கிறது.

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்- உறுங்கவலொன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை!

என்பதே அப்பாடல்! (படிப்பதும், படிப்பதை உணர்வதும், அதன்படி ஒழுகுவதும் என்பதே அப்பாடலில் முக்கிய கரு. இந்த மொழியைப் படி, வேறெதையும் படிக்காதே என்று அது சொல்லவில்லை!, அப்பாடல் தமிழில் இருப்பதால் தமிழ் நூல்களைப் படி. என்பதாகவும் அர்த்தம் கொள்வர் பலர். அப்படியே இருந்தாலும் இதுவரை தேவார திருவாசம் முதலிய படித்துணர்ந்த பண்டித தமிழன் சாதித்ததெ ன்ன?

தமிழ் மந்திரத்திற்கு ஆதரவு திரட்ட இத்தமிழ் வெறியர்கள் “அகத்தியர் தேவாரத் திரட்டை” கையில் எடுத்துக் கொள்கிறார்கள். அதில் குறிப்பிடப்பட்ட குருவருள், பறையின் வரலாறு, சிவனுருவம், திருவடிகள், அர்ச்சனை, அடிமை என எட்டு தலைப்புகளில் உள்ளவற்றை அர்ச்சனை என்பதை “தமிழர்ச்சனை” என்று மாற்றி தமக்காதரவு சேர்த்தவராகி, மற்றவற்றை தமிழ் குருவருள், தமிழ் சிவனுரு வம், தமிழ் திருவடிகள், தமிழடிமை, தமிழ் பறையின் வரலாறு என்று சொல்லாமல் விட்டனர்!.

**சிவபூஜை என்பது இரண்டு வகைப்படும், அவை; ஆத்மார்த்தம், பரார்த்தம் என்பது. இவ்விரண்டின்படியும், மேற்சொன்ன தமிழ் மாற்றமானது அர்ச்சனை க்கு மாத்திரம் கொண்டதும் இத்தமிழ் வெறியர்கள் கூறும் அர்ச்சனை வேறு; அவ்வகத்தியர் திரட்டில் உள்ள அர்ச்சனை வேறு என்பது தெளிவாகும்!**

“அர்ச்சனை பாட்டே ஆகும்” என்பது சிவத்திரு சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய 7ம் திருமுறையில் வரும் பதிக வரியாகும். இவ்வாசகம் கொண்டும் சிவார்ச்சனை க்கு திருமுறைகளை ஓதினால் என்ன? என்போரும் உண்டு!. சிவாலயத்திற்கு வரும் பக்தர்களும், அவ்வாலய ஓதுவார்களும் மனமுருக இறைவனை துதிப்பதற்கு ஆகம நூலகள் தடை செய்யவில்லை!, அதை வேத மந்திரங்களுக்கு பதிலாக ஆலய சிவாச்சாரியார் செய்யவேண்டும் என்கிற கண்டிப்பும், தமிழ் வெறியும்தான் தவறாகும். மேற்சொன்ன பதிக பாடலை பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஓர் சிவாச்சாரிய குடும்பத்தில் பிறந்தவர் என்பதும், அவர் தான் சென்ற சிவாலயங்களில் மந்திரங்களுக்கு பதிலாக பதிகங்கள் பாடி “அர்ச்சனை” செய்தாரா என்று ஆராய்ந்தால்

இல்லையே?! தவிர அவரது சரித்திரத்தில் இருந்து தன் தகப்பனாருடைய வேத காரியங்களுக்கு தடை ஏற்படாவண்ணம் திருவாவடுதுறை நாதனிடம் பொற்காசு பெற்றளித்த விவரம் உள்ளதே?!

தவிர நம் பரமனும் அச்சிவாச்சாரியர் குலத்துதித்த அந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளை மாத்திரம் "நீ எம்மை அர்ச்சனை செய்ய வேண்டாம்! எம்மைப் பாடிக்கொண்டே இரு! உன் பாடல்களே எமக்கு அர்ச்சனையாகக் கொள்கிறோம்!" என்று அநுமதித்தான். இதனால் அர்ச்சனைக்குப் பாட்டு என்றில்லை; பாட்டே அர்ச்சனையானது எனும் வேறுபாட்டை உணர்ந்தால் போதும்!

தவிர, **தமிழில் மந்திரம் சொன்னால்தான் எனக்குப் புரியும்! மற்ற மொழி மந்திரங்கள் எனக்கு புரியவில்லை! என்று ஒரு சைவன் சிவாலயம் செல்வானா யின், சிவாச்சாரியார் சொல்லும் மந்திரம் அவனுக்கா? நம் சிவனுக்கா?** ஒரு நோயாளிக்கு மருத்துவன் தரும் மருந்து, அதன் பெயர், அதன் குணாதிசயம், அம்மருந்தில் அடங்கிய மற்ற மருந்துகளின் கலவை முதலிய பல விஷயங்கள் எதுவுமே தெரியாமல்தான் அதை சாப்பிட்டு தன் "நோயை" ஒரு நோயாளி தீர்த்துக்கொள்கிறான். (அவன் மெத்தப் படித்தவன் ஆனாலும், படிக்காத பாமரன் என்றாலும்!!) இவ்விரு நோயாளிகளில் யாருமே மருத்துவனிடம், "நீ தரும் மருந்தைப் பற்றி முழுதும் விளக்கி, என் மொழியில் எழுதிக் கொடு!" என்றால்?!!

இது விஷயத்தில் இதுவரை நடந்துவருவது என்ன? **நோயாளி மருத்துவனை நம்பிச் செல்கிறான், மருத்துவன் நோயாளியைப் பரிசோதித்து அவனுக்குத் தேவையான மருந்தை எழுதிக் கொடுக்கிறார், அதை அந்நோயாளி வாங்கிச் சாப்பிட்டு குணமடைகிறான்! இதுதானே?! மருந்தைப் பற்றின ஆராய்ச்சி "நோயாளி க்கு" தேவையற்றது. அவனுக்குத் தேவை "பலன் மட்டுமே!**

"சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தின் உள்ளார் பல்லோரும் ஏத்தப் பணிந்து!" என்பது நம் மணிவாசக சுவாமிகளுடைய வாக்கு! இதற்கு இத்தமிழர் கள் என்ன பொருள் கொள்ளுகிறார் கள்? கொள்ளுவார் கள்?!

நா. கதிர்வேற்பிள்ளையவர்கள் வடலூர் இராமலிங்க அடிகளுடைய திருவருட்பா "மருட்பா" என்று மறுத்த "மருட்பா மறுப்பில்" 27 விஷயங்கள் பொய்யாக புனையப்பட்டது- என்று இராமலிங்க அடிகளுடைய தமயனார் தனயராய வடிவேற்பிள்ளை அவர்கள் 1904ம் ஆண்டு ஜுன் மாதம் சென்னை டவுண் போலீஸ் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்ததும், (வழக்கு எண்: 24533-1904) அதற்கு நம் கதிர் வேற்பிள்ளை அஞ்சாது, திரு வி. விஸ்வனாத சாஸ்திரி, ஸ்ரீ சாமாராவ் அவர்கள் வழக்குறைஞர் களாகக் கொண்டு நீதிபதி முன்னிலையில் வாதிட்டு மேற்சொன்ன மருட்பா மறுப்பில் உள்ள 27 விஷயங்களில் 20 விஷயங்கள் இராமலிங்கத்தின் பாடல்களில் வெள்ளிடைமலை போல் விளங்குவதையும், **போலி அருட்பா மறுப்பு, குதர்க்க ஆரணிய நாச மஹாபரசு கண்டனம், இராமலிங்கம் படிற்றொழுக்கம், முக்குண வயத்தான் முறை மறந்து அறைதல், தத்துவ போதினி, தத்துவ**

**விவேசினி, தத்துவ விசாரனி, தினவர்த்த மானி, கதிர்தவசனி, ஞானபாநு, நேட்டிவ் பப்ளிக் ஒபினியன், அற்புத பத்திரிகை, வத்தமான விமர்சினி, திராவிடப் பிரகாசிகை, பாவலர் சரித்திர தீபம்** முதலிய ஆதார புத்தகங்களையும் கொண்டு, இராமலிங்கரது செய்கைகளை நேரில் கண்ட சீரியகளைக் கொண்டும் நிரூபித்து (ஆறுமாத காலம் நடைபெற்ற வழக்கில்- 1904 நவம்பர் மாதம் 21ம் தேதியன்று- நீதிபதி திரு, அஜீஜுடின் சாயபு பஹதூர் அவர் களது தீர்ப்பால்) வெற்றி பெற்றார்.

இவ்வெற்றியால் அவர் "மாயாவாத தும்ஸ கோளரி", "போலி அருட்பா பிரபந்தன நிர்கந்த கிஞ்சுக கண்டன பிரசண்டமாருதம்", "சைவ சித்தாந்த மஹாசரபம்" முதலிய பட்டங்களால் அறியப்பட்டவரானார் . (இவர் யாழ்ப்பாணத்தில் இருந்த சமயம் மேற்சொன்ன வழக்கை அப்பீல் செய்து (21.11.1905ல்) அதிலும் எதிரிகள் தோற்றனர் . இப்படி இன்று தமிழகம் போற்றும் இராமலிங்கரது பாடல்களை எதிர்த்து வாதிட்டு சைவத்தையும், சைவ நூல்களே அருட்பா என்றும் வாதிட்டது ஒரு தமிழரே!. இப் பெருந்தகையாரின் துணிச்சலும், சைவத்தை நிலைநாட்டும் திறமும் இன்று எந்த தமிழனிடம் இருக்கிறது? இருக்கும்?!

ஆனால் நிறைய பேர் இவ்வழக்கை திரு. ஆறுமுக நாவலருடன் சம்பந்தப் படுத்துவதும் உண்டு. ஆறுமுக நாவலர் தில்லையில் வாழ்ந்த காலத்தில் அவர் தில்லைப் பேரம்பலத்தில் பணிசெய்த தீட்சிதர்களுடைய போக்கையும், தம்மை எதிர்ப்பதாக கருதிய தில்லை தீட்சிதர்கள் வடலூர் இராமலிங்கம் பிள்ளையை துணைக் கொண்டதையும், அவ்விராமலிங்கருடைய போக்கும், அவரது மடத்தில் நடப்பவற்றை அங்கிருப்பவர்களும், ஊராரும் சொல்லி வருந்தியதையும் கொண்டு இராமலிங்கம் பிள்ளையையும் தகுந்த பிரமாணங்கொண்டு கண்டித்தார். தில்லையில் மாத்திரமின்றி, சைவத்தில் பிடிப்புள்ள மற்றவர்களுடைய ஆதரவு நாவலருக்கு பெருகுவது கண்டு, தில்லையில் தீட்சிதர்களும், இராமலிங்கம் பிள்ளையும் தில்லைப் பேரம்பலத்தில் கூட்டிய கூட்டட்தில் நடந்த தகாத செயலே நாவலர் இராமலிங்கம் பிள்ளையை நீதிமன்றம் வரை அழைக்க நேர்ந்தது.

1869 ஜுன் மாதம் 7ம் தேதி தில்லை வந்த நாவலரைக் கண்டித்து தில்லைப் பேரம்பலத்தில் தலைமை தீட்சிதர் திரு சபாநடேசர் மற்றும் வடலூர் இராமலிங்கம் பிள்ளை இருவரது தலைமையில் கூட்டம் போடப்பட்டது. அக்கூட்டத்தில் இருந்த நாவலரைப் பார்த்து இராமலிங்கம் பிள்ளை அவரது பெயரை நா + அலர் என்று பிரித்து அதற்குப் பொருளாக பொய்யன், வித்தை இல்லாதவன், நாவிற் பழிசொல்லை உடையவன் முதலிய பத்துவிதமாக பொருளுரைத்து நாவலரை மிகவும் பழித்துப் பேசினார். இதற்கு ஒருபடி மேலே போன சபாநடேச தீட்சிதர், தமது இருக்கையை விட்டு ஆவேசத்துடன் எழுந்து, தாம் நாவலரை நையப் புடைக்க விரும்புவதாகவும், அதற்கு மற்றோர் உதவுமாறும் வேண்டிப் பேசியதால் விஷயம் மஞ்சக்குப்பம் நீதிமன்றம் வரை போனது!

ஆம்!. திரு. ஆறுமுக நாவலர் "மான நஷ்ட வழக்கை" வடலூர் இராமலிங்கம், சபாநடேச தீட்சிதர் முதலியோரை முதன்மைக் குற்றவாளியாகவும், மற்றும் நான்கு பேரை அதற்கு உடந்தையாக இருந்த குற்றத்திற்காகவும் சேர்த்து வழக்கு தொடர்ந்

தார். இவ்வழக்கில் சபாநடேசருக்கு 90 ரூபாய் அபராதமும், சிறைத்தண்டனையும், வடலூர் இராமலிங்கம் நீதிமன்றத்தில் குறுக்கு விசாரணையின் போது, தான் அவ்வாறு கூட்டத்தில் பேசவில்லை என்றும்; தாம் கூட்டத்தில் இருந்த சுற்றத் தாரில் ஒருவனாக இருந்ததாயும் "பொய் சாட்சி" சொல்லி "சத்தியமும்" செய்ததி னால் அவருடைய இலட்சணம் எல்லோரும் அறியும்படி வெளியானபடியால் திரு, நாவலர் அவரை "வழக்கிலிருந்து விடுத்தார் என்பது freeman எனும் நாளேடு அவ்வழக்கு சம்பந்தமாக அவ்வப்போது வெளியிட்ட செய்தியின் சுருக்கமாகும். (ப்ரீமேன் - தேதி; 16,12,1869, 20.01.1870 மற்றும் 03.02.1870 )

நாவலர் சைவத்தின் மீதும், சிவபெருமான் மீதும் கொண்ட பக்தியினால் அவ்விரண்டிற்கும் பங்கம் விளைவிப்போரை தகுந்த சான்றுகள் கொண்டு கண்டித்ததினால்தான் அவர் தில்லை தீட்சிதர்களையும், அவர்கள் கூட்டுறவு செய்து கொண்டாடிய வடலூர் இராமலிங்கம் பிள்ளையையும் பகையாகக் கொண்டார். (இம்மான நஷ்ட ஈடு வழக்கு நடந்த காலகட்டத்தில்தான் நாவலர் இராமலிங்கத் துடைய பாடல்களை அருட்பா கிடையாது என்றும், அருட்பா என்றால் "பஞ்சபுராண ங்கள்" என்று சைவர்கள் கொண்டாடும் திருவாசகம், தேவாரம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருத்தொண்டர் புராணம் என்பவையே அவை என்றும், தனிமனிதனுடைய மருள் பாடல்கள் மருட்பா என்றும் நிறுவி வந்தார்.)

நாவலர் அவர்கள் இராமலிங்கரை எதிர்த்துப் போராட மூல காரணமாக இருந்தது அவருடைய சைவப் பற்று என்றாலும், இராமலிங்கரது மடத்தில் அவரது மாணாக்கராக இருந்த திரு. தியாகேச முதலியாரும் ஒரு வகையில் காரணமாக இருந்தார். இத் தியாகேச முதலியாருடைய மருமகள் ஒருத்தி இளம் வயதில் கணவனை இழக்க நேரிட்ட போது, தம் கணவருடைய பிரேதத்தை இராமலிங்கம் பிள்ளையின் மடத்திற்கு எடுத்துக் கொண்டு போய் "என் கணவரை இவர் உயிர்த் தெழச் செய்வார்!" என்று இராமலிங்கரை நம்பி பிணத்தைப் போட்டு வைக்கவே, மிகுந்த அவமானம் கொண்ட தியாகேச முதலியார் அவளையும், பிணத்தையும் வண்டியில் ஏற்றி அனுப்பி வைத்து, இந்நிகழ்ச் சியையும், இதுபோன்று மடத்தில் நடந்த மற்ற நிகழ்ச்சிகளையும் அவ்வப்போது திரு. நாவலரிடம் சொல்லி வந்ததி னால் இராமலிங்கம் பிள்ளையைக் கண்டிப்பதில் முனைந்து, நாவலர் அவர்கள் "போலி அருட்பா மறுப்பு" எனும் நூலையும் செய்தார். இதற்கு மறுப்பாக வடலூர் இராமலிங்கம் பிள்ளையின் கட்டளைப்படி தொழுவூர் வேலாயுதம் பிள்ளை 'குதர்க ஆரண்ய நாச மஹாபரசு' எனும் நூலைச் செய்தார். இம்மாதிரியான விவாதங்கள் துண்டு பிரசுரங்கள், கண்டன நூல்கள் மூலம் நடத்தினாரேயன்றி, நீதிமன்றம் செல்லவில்லை!!.

1879 டிசம்பர் மாதம் 5ம் தேதி யாழ்ப்பாணத்தில் நாவலர் மறைந்த பிற்பாடு, இங்கு தமிழகத்தில் அருட்பா-மருட்பா விவகாரம் ஓய்ந்தமாதிரி இருந்தாலும், அப்போதைய சூழலில் தமிழகத்தை ஆட்டிப் படைத்த "தனித்தமிழ் இயக்கம்" இராமலிங்கம் பிள்ளையை ஆதரித்தது. பின்பு திரு ஆறுமுக நாவலரின் சீடருக்கு சீடராய் இருந்த திரு. ந. கதிரைவேற் பிள்ளையின் தமிழக வரவு அருட்பா-மருட்பா விவகாரத்தை நீதிமன்றம் வரை இட்டுச் சென்று முற்றுப் புள்ளி வைத்தது.

சென்னையில் நடந்த இவ்வழக்கிற்கு "பொய் சாட்சி" சொல்ல சிதம்பரத்தில் சிலரை திரு ந. கதிரைவேற்பிள்ளை ஏற்பாடு செய்தார் என்றும் சொல்வார்கள். அப்படி ஜோடிக்கப்பட்ட வழக்காக இருக்கும் பட்சத்தில், திரு கதிரைவேற்பிள்ளையின் அருட்பா-மருட்பா விவகாரத்திற்கு நீதிமன்றத்தில் சாட்சி சொல்ல மஹாமஹோ பாத்யாய, ஸ்ரீ உ.வே. சாமிநாத அய்யரும் வந்தார் என்பதில் இருந்து இவர்கள் என்ன சொல்வார்கள்?

மஹாமஹோபாத்யாய. ஸ்ரீ. உ.வே. சாமிநாத அய்யர் அவர்கள் திரு, ந. கதிரை வேற்பிள்ளை சார்பாக 'சாட்சி' சொல்ல வந்தார் என்பதிலிருந்து எவர் பக்கம் "உண்மை" இருந்திருக்கும் என்பதை இந்த தமிழ்கூறும் நல்லுலகம் உணரும் என்று நம்புகிறோம். (மஹாமஹோபாத்யாய, ஸ்ரீ உ.வே. சாமிநாத அய்யர் அவர்கள் 'பொய் சாட்சி' சொல்லி ஜீவனம் செய்தவர் அல்ல!!)

வடலூரில் இராமலிங்கர் இருந்த போது அவர் "கடைவிரித்தேன் பொருள் கொள்வார் இல்லை!" என்று எழுதியதற்கும், அவர் வசித்த குடிலில் 'எடைக்கற்கள்' மற்றும் 'தராசு' முதலிய இருந்ததற்கும் "சம்பந்தம்" இல்லை!!,

இத்தமிழகத்தில் இன்னொரு வகையான நாத்திகர்களும் இருக்கிறார்கள்!. ஆம்!. அவர்கள் வடலூர் இராமலிங்கம் பிள்ளையைப் போலவே, சமரசம் பேசும் புண்ணியவான்கள்!!. இவர்கள் தமது சமரச தர்மத்திற்கு கையில் எடுத்துள்ளது, "ஹரியும் சிவனும் ஒன்று!" என்பதே!. இதை ஆமோதிக்கிற மடாலயங்களும் தமிழக த்தில் அநேகம் உண்டு!. இவர்கள் இவ்விதம் சொல்லிக் கொண்டு இரண்டு சமயத்தை யும் ஒன்றாக்க துடிக்கிறார்கள்!. அப்படியானால் இவர்கள் நடத்தும் மடத்தை, தம் கருத்தோடு ஒத்துப் போகும் இன்னொரு மடத்துடன் இணைத்துவிட வேண்டியது தானே? வீணே தனித்தனியே போராடுவானேன்?!, இந்த கேள்வி மடாலயங்களுக்கு மாத்திரம் அல்ல, சைவ சமயத்திற்குள் தம் மூக்கை நுழைக்கும் அரசியல் கட்சிகளுக்கும் பொருந்தும். செய்வார்களா? இணைப்பை! ஒருபோதும் செய்ய மாட்டார்கள்!!. இதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம் இவர்களது சமரசப் பிரசங்கத்தின் நோக்கத்தையும், யோக்யதாம்ஸத்தையும்!!,

**சைவ சமயமோ சமய வரம்பிற்குட்பட்டது கிடையாது!, அது சாத்திர வரம்புள் நின்றது!. அதை அந்த வரம்பிற்குள் நின்றே அநுசரிக்க வேண்டும். பரமசிவனே சைவத்திற்கு நிறுவனர் ஆனபடியால், அது கால வரம்பிற்கும் உட்பட்டதல்ல.**

தமிழ் என்பது ஒரு மொழி, அதன் பெயரும் தமிழ் என்பதே!, அம்மொழியும், அம்மொழியின் பெயரும் ஒரு சேரத் தோன்றின, அது போன்றே சமஸ்கிருதமும்!. தமிழும், சைவமும், சமஸ்கிருதமும் - சிவபெருமானை விட்டுப் பிரிக்க இயலா தவை. நீங்கள் சமஸ்கிருதம் கற்றுக்கொள்ள வேண்டியதில்லை, "ஓத்தொவ் வாதன செய்துழல் வாரொரு பித்தர்" சிவபெருமானாகையால் அவர் தம் அடியார் சொல்வதையும், செய்வதையும் ஏற்பார்! ஏற்காமலும் இருப்பார்! இதை நாம் உணர்ந்தாலே போதும், சிவாகமப் பயிற்சியும், அது பற்றின அறிவும் இல்லாது,

ஒருதலைப் பட்சமாக தமிழ் தமிழ் என்று கூச்சல் இட்டு அதை சைவத்தின் மீது ஏற்றுவதும், சிவபெருமான் மீது சார்த்துவதும் குறையும்!!,

உண்மையாகவே சைவத்தைப் பற்றி கவலைப் படுகிறவர்கள், ஆலயப் பணிகளுக்கு ஆட்கள் அமையப் பெறாமல், முன்பு ஆலயத்துள் மனிதர்கள் விருப்பத் தோடு செய்த பல பணிகள் இன்று எந்திரமயமாக மாறிவிட்டதை அறிவார்களா? அதனால் ஆலயத்தின் ஒழுங்கு கெட்டு சீரழிந்த நிலையை பிரதிபலிப்பதையும் அறிவார்களா?

ஓதுவார்களுக்கு பதிலாக சிடி ப்ளேயரும், மங்கள வாத்தியம் வாசித்தவர்களு க்கு பதிலாக மேளம் அடிக்க எந்திரம், ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்ய புனித நீரை ஆண்டவன் அருகிலேயே வரவழைக்க நீரேற்றும் மோட்டார், ஸ்வாமியை தரிசனம் பெறுவதற்கு ஆன்லைன் டிக்கட், முதலியவை வந்துவிட்டது, நாகரீகத்தைக் காரணம் காட்டி இவ்வவமானங்களை ஏற்றுக் கொண்டாகிவிட்டது. இனி, மந்திரம் சொல்ல ஒரு ப்ளேயரும், பூக்கள் தூவ ஒரு எந்திரமும், ப்ரஸாதத்தை ஊரில் உள்ள ஒரு நல்ல உணவு விடுதியிலும் (கேட்டரிங் சர்வீஸ் - அவர்களே எடுத்து வந்து பக்தர்களது இல்லத்திற்கே சென்று ப்ரஸாதிப்பார்கள்!) ஏற்பாடு செய்து விட்டால் ஆலயத்துள் அந்தணர் ஆக்கிரமிப்பு ஒழியும்!, தமிழர்கள் (எல்லா வகுப்பினரும் ஆலயத்துள் எல்லா இடத்திலும் உலவலாம்!) தாம் நினைத்ததை சிவாலயத்தில் செய்து மகிழலாம்!!

ஆலயத்துள் நீங்கள் விரும்பும் தமிழ்க் கும்பலை சேர்த்துக் கொண்டு தமிழ் சைவ நூல்கள் வாழ்க! சமஸ்கிருத சைவ நூல்கள் ஒழிக!! தேவார-திருவாசகங்கள் வாழ்க! ரிக் யஜுர் சாம வேதங்கள் ஒழிக!! சம்பந்தர் வாழ்க! ஹரதத்தர் ஒழிக!! மாணிக்கவாசகர் வாழ்க! அப்பைய தீட்சிதர் ஒழிக!! என்றெல்லாம் கோஷமிட்டு சைவத்தையும், சிவாலயத்தின் புனிதத்தையும் வேகமாக வளரச்செய்யலாம்!! அனைத்து தமிழருக்கும் சிவனருள் விரைவில் கிட்டும்!!. செய்வார்களா?! 'நடைக்குச் சோம்பி சிற்றப்பன் வீட்டில் பெண் கேட்டான்!' என்கிற முதுமொழியை பலிக்கச் செய்யாமல் விடலாமா!

ஒரு மொழி சிதைவுற்று வளராமல் போவதற்குக் காரணம் என்ன? சிவாலயத் தில் தமிழில் மந்திரம் ஓதாமல் இருப்பதினாலா? அல்ல, அம்மொழியைத் திறம்படக் கல்லாமையும், ஆந்ம லாபம் பெறத் தடையாய் இருக்கும் புத்தகங்கள் தோன்றுவ துமே காரணம்!. பண்டைய இலக்கிய - இலக்கண தமிழ் நூல்களைத் தெரியாமலும், வாசிக்காமலும், தன் தாய் மொழியில் பாண்டித்தியம் இல்லாததாலும், பக்தி இலக்கி யங்களுக்கு 'பொருள்' கொள்ளத் தெரியாமலும், மொழி பெயர்ப்பு நூல்களின் மூலம் நூல் பற்றின ஆராய்ச்சி சிந்தனை இல்லாததுமான பல காரணங்கள் நம் தமிழ் மொழி செம்மையான வளத்தைப் பெறாமல் தரம் தாழ்ந்துகொண்டு வருகிறது. இதில் மற்ற மொழியை குறை சொல்லித்திரிவதிலும், அதை சிவாலய வழிபாட்டு முறைகளோடு சம்பந்தப்படுத்துவதிலும், ஈடுபடுவதும், அதற்கு உடன்படுவதும் முறையல்ல!. அது அடாத செயல்!. ஒரு நூலிற்கு "பொருள்" கொள்ள வேண்டும் என்றால் அண்மை, தகுதி, அவாய்நிலை முதலியன பற்றியே பொருள் கொள்ள

வேண்டும். நம் சைவ நூல்களுக்கு உரை என்ற பெயரில் தம் கருத்தை நுழைக்கும் தமிழ் படித்த பெரியவர்கள் இவ்விதமான இலக்கண விதியையாவது பின்பற்றி உண்மைப் பொருளை மற்றோர் அறிய உதவியிருக்கலாம்.

சிவபெருமானை முழுமுதற் பொருளாகவும், கருப்பொருளாகக் கொண்டதினாலும்தான் சமஸ்கிருதமும், தமிழும் வளம் பெற்று, நிறைய பக்தி காவியங்கள் நமக்கு கிடைத்தன. சிவபெருமானை போற்றியதால் உயர் வடைந்த தேவார - திருவாசக நூல்கள் அதற்குச் சாட்சியாக இருப்பவைகள்தான்!. சைவம் பற்றின வாத விஷயங்கள் 'சாஸ்திரம்' சம்பந்தப்பட்டது. அதை அந்த சாஸ்திர வரம்பிற்குள் நின்று பேசித்தான் "உண்மை" அறிய வேண்டும்!.

சிவத்திரு. சூளை சோமசுந்தர நாயக்கர், சிவத்திரு. அம்பலவாண நாவலர், சிவத்திரு. சபாபதி நாவலர், சிவத்திரு. பாம்பன் சுவாமிகள், சிவத்திரு. ஆறுமுக நாவலர், சிவத்திரு. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, சிவத்திரு, காசிவாசீ செந்தில் நாத அய்யர், சிவத்திரு. வெங்கடரமண தாஸர், சிவத்திரு, மாயாவாத தும்ஸகோளரி நா. கதிரைவேற் பிள்ளை, சிவத்திரு. சாமினாத பண்டிதர், வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளை, சிவத்திரு. சாம்பசிவம் பிள்ளை, சிவத்திரு அ. ஈஸ்வரமூர்த்தி பிள்ளை முதலிய பல பெரியோர்கள் இன்று நாமெல்லாம் சைவத்தைப் பற்றி அறிந்து கொள்ள. அவர்கள் அநுபவித்த இன்னல்கள், ஊர் ஊராகச் சென்று சைவ பிரசுரங்கள் விநியோகித்ததும் போல இன்று இச் சைவத்திற்கு நேர்ந்த இத் தமிழ் மொழி வெறியர்களால் உண்டான தடைகளை தகர்ப்பாரைக் காணவில்லை!, மேற்சொன்னவர்களில் பலர் அக்காலத்தில் கொலைமிரட்டல், அவர்களது சைவ பிரசுரங்களை தீயிட்டழித்தல், நீதிமன்றத்தில் அவதூறாக வழக்குத் தொடுத்தல் முதலிய பல இன்னல்களை எதிர் கொண்டே சைவ சித்தாந்த கருத்தை பரப்பினர், தமிழ் தமிழ் என்று வாய்கிழிய பேசுபவர்கள் இப்பெரியோர் விட்டுச் சென்ற பணியை தொடரவும், தொடர்வோருக்கு உதவவும் நாதியில்லை! அவர்களது பல நூல்கள் இன்று இருக்குமிடமும் தெரியவில்லை. வைத்திருப்போரும் அது என்னவோ பொக்கிஷம் என்று யாருக்கும் தருவதும் இல்லை!!. அச்சுத் தொழில் முன்னேறிய இக்காலத்தில் ஒவ்வொருவரும் தம்மிடம் இருக்கும் சைவ சித்தாந்த நூல்களை எவ்விதத்திலேனும் வெளியிட ஆவண செய்யலாம்.

சிலர் அதுமாதிரி செய்கிறார்களே? என்று சமாதானம் தேடிக்கொள்ள வேண்டாம்!, வெளிநாட்டுத் தொடர்புடைய சில நிறுவனங்கள், இந்திய அரசுடன் பெயருக்கு ஒப்பந்தம் செய்து கொண்டு, நம் முன்னோர்களது பல படைப்புகளை (ஓலைச்சுவடி, செப்பேடுகள் முதலிய) ஏதோ இறைசேவை செய்வதாக காண்பித்துக் கொண்டு, அதற்கேற்ற பல மொழிகள் தெரிந்தவர்களை பணிக்கு அமர்த்திக் கொண்டு, அவர்களை ஊர் ஊராக சுற்றிவரச் செய்து மேற்சொன்ன படைப்புகளைப் பெற்று அதை நவீனமாக மொழிபெயர்த்து அந்நிய மொழியில் அச்சிட்டு அதிக விலைக்கு விற்று பணம் பண்ணுகிறார்கள். அவர்களிடம் நமது பழைய நூல்கள் பல இருந்தாலும் ஒரு சில நிறுவனங்கள் பார்வையிட அநுமதிப்பதோடு சரி. உள் நாட்டில் நம் சைவ பொக்கிஷங்களுடைய கதி இதுவென்றால், நம் தமிழ்நாட்டுடையதுதான் என்று நிச்சயமாகத் தெரிந்த பல சிவாலய சிலைகளும், வரலாற்று

ஆவணங்களும் அந்நிய தேசத்தில் காட்சிப் பொருளாகவும், ஒரு சில சீமான்கள் வீட்டில் (பல ஆயிரம் டாலர்களுக்கு ஏலம் எடுத்த) வரவேற்பறையில் சிலை யாகவும் இருப்பதை இந்த தமிழர்கள் அறிவார்களா? தமிழ் நாட்டிலிருந்து ஒரு சிலை அயல் நாட்டிற்கு போயிருக்கிறது என்றால் தமிழனுடைய ஒத்துழைப்பில்லா மல் அவை கப்பல் ஏறியிருக்குமா? மாலிக்கபூர் நம் கோவில்களை இடித்ததை விடவும், கஜினி கொள்ளையடித்ததைவிடவும் நம் சிவாலய பொக்கிஷத்தை கப்பலேற உதவியது எவ்வகையில் உசத்தி?!

இந்த இலட்சணத்தில், "தமிழனுடைய சொத்தில் கட்டப்பட்ட கோவில்கள் தேவையில்லை; மடாலயங்களும் தேவையில்லை; ஆலயத்தின் சொத்தும், மடாலயத்தின் சொத்தும் ஏழைகளுக்கு வேண்டும்! கோவிலை தமிழனுக்காக்கு! மடாலயத்தை இடி! ஏழைகளுக்கு அன்னமிடு!!" என்றும் தமிழரது நலனுக்கு போராடுவதாக ஒரு சில அரசியல் அமைப்புகளும், சங்கங்களும் இத் தமிழ் சைவர்களது துணையோடு கூக்குரல் இட்டதும், இடுவதும் தொடர்கிறது!. (ஏழைத் தமிழனுக்கு வயிறு முட்டினால் போதும்! என்கிற இவர்களது நையாண்டிக்கு எந்த தமிழனும் எதிர்ப்பு தெரிவிக்காதது ஆச்சர்யமே!!)

கர்மத்தின் பலனாய் ஏற்பட்ட பிறப்பில், வறியவன் செல்வந்தனாவதும், செல்வந்தன் வறியவனாவதும் நம் வாழ்நாளில் நாமே அநுபவத்தில் பார்க்கிறபோது, இப்படி மடத்தை இடி, கோவில் சொத்தை ஏழைகளுக்கு கொடு என்று கூச்சலிடுவது நியாயமா? இப்படி கூச்சலிட்டு தம்மை "தமிழர்" என்று காட்டிக் கொள்ளும் பல பேருடையதுகூட வேண்டாம்!, ஒரு சிலரது சொத்துக்களை விற்றாலே அது நடக்குமே? அவர்கள் நடத்தும் கல்லூரி, மருத்துவமனை, பத்திரிக்கை, கட்சி, அமைப்பு முதலியவற்றால் தமிழருடைய வறுமையை ஒழிக்கலாமே? ஒருவனு டைய வறுமைக்குக் காரணம் சைவ மடாலயங்களும், சிவாலய சொத்துக்களும்தான் என்பதுதான் பகுத்தறிவா?!!

'முன்னை செய்வினை இம்மையில் வந்துமூடும்'

'முந்தி செய்வினை யிம்மைக்கண் நலிய'

'ஊழ்வினை வந்து உறுத்து ஊட்டும்'

என்பதில் முதலிரண்டு வரிகளும் திருமுறை வாக்கு!, மக்களது விருப்பத்திற் காகவோ, அல்லது இம்மாதிரியான பகுத்தறிவு பேசும் தமிழ் வெறியர்களுக்காகவோ சிவாலயங்கள் கிடையாது!. அவை அதற்காக கட்டப்பட்டதும் கிடையாது!, மருந்து என்பது நோயாளியின் நோய்க்குத்தானே தவிர, வைத்தியனுக்கு கிடையாது!. நோயா ளியின் விருப்பத்திற்காக ஒரு வைத்தியன் 'மருந்தை' கொடுத்தால் என்னாவது? அந்நோய் நீங்குமா? உலகத்தைவிட்டு அந்நோயாளி நீங்குவானா?!.

வைத்தியனுக்கு வைத்திய சாஸ்திரம் போல, சிவாலயங்களுக்கு பரமன் அளித்த ஆகம சாஸ்திரம் உள்ளது. அதை மாற்ற யாருக்கும் உரிமையோ,

அருகதையோ கிடையாது. மக்கள் விருப்பம், பக்தன் விருப்பம் என்பதெல்லாம் சிவாலய சம்பந்தத்தில் கிடையாது. சிவாலய பூஜைகள் சமஸ்கிருதத்தில்தான் நடக்க வேண்டும்!. அதில் தவறு கிடையாது!, மக்களுக்காக சிவாலயம் என்பது வெற்றுக் கூச்சல்!. அதில் நியாயமில்லை!!!

சைவ அன்பர்களே! தாய் மொழியில் பாண்டித்தியம் பெறாதவன் மற்ற மொழியை அறியவே முடியாது என்பதினால் நாம் தமிழைக் கசடற கற்போம். சைவத்தை அறிய முயற்சிப்போம். சமஸ்கிருத மொழியில் உள்ளதை தெரிந்து கொள்ள முயல்வோம். இதில் எது செய்யாவிட்டாலும் நமக்கு ஈசன் அருள் உண்டு!, (ஆனால் நாம் எதுவும் செய்யாமல் இருப்பதற்காகப் படைக்கப் படவில்லை என்பதையும் கருத்தில் கொள்ளவும்!)

பிறரால் மதிக்கப் படவேண்டும் என்று விரும்புபவன் எப்போதும் பெரியோரது பெருமைகளை எல்லோரும் அறியக் கூறி, அவர்தம் தீயவொழுக்கத்தை வெளியிடாமல் இருப்பதேயாகும். அந்த வகையில் நாங்கள் நம் முன்னோர் களது பெருமையை எங்களால் இயன்ற அளவு இந்நூலில் அவர் கள் அருளியதையே சொல்லியிருக்கிறோம்.

இறுதியாக, உங்களுக்கு ஒரு சம்பவத்தை நினைவு படுத்த விரும்புகிறோம். ஒருமுறை விவேகானந்தரிடம் திருப்பத்தூரில் இருந்து சென்ற ஒரு சைவ அமைப்பு அவரிடம், “பிரம்மம்தான் மாயை காரணமாக உலகமாகத் தோன்றுகிறது என்கிறீர் களே? ஏன், எப்போது, எதற்காக, எப்படி தன்னிலேயே லயித்திருந்த பிரம்மம் இப்படி உலகத் தோற்றத்தை ஏற்படுத்தியது?” என்று கேட்டதற்கு, சுவாமி விவேகாநந்தர் , “ஏன்? எப்போது? எதற்கு? என்பதெல்லாம் தோற்றமாகிய இந்த பிரபஞ்சம் உண்டான பிறகுதான் எழுந்தன!. இந்த உலகுக்கு மட்டுமே தொடர்புள்ள விஷயங்கள் அதன் தோற்றத்திற்கு முன்னுள்ள நிலையில், காரண-காரியமும், மாறுபாடும் அறியாத பிரம்ம நிலையில் அக்கேள்வி எழும்பவே எழும்பாது!. உங்கள் கேள்விக்கு அர்த்தமே கிடையாது!.... இந்த விசாரணையெல்லாம் எதற்கு? இவற்றால் என்ன புண்ணியம்? ஆண்டவனைத் தேடுங்கள்! அவனுக்கு சேவை செய்யுங்கள்! ஆண்டவன் என்றாலும், அதற்கு சேவை செய்வது என்றாலும் ஏழைகளுக்கு சேவை செய்து அவர் துயர் துடைப்பதுதான்!” என்றாராம்!.

மாயாவாத வார்த்தைகளில் பதில் சொல்லும் இவரைப் போன்றோரிடம் கேள்வி கேட்டு நல்லபதில் எதிர்பார்த்தால் எப்படி? “தோற்றமாகிய உலகு” என்று சொல்லியதிலிருந்து அத்தோற்றமாகிய உலகில் உள்ள அனைத்தும் (ஏழை, உதவி செய்தல் முதலியவை) தோற்றம்தானே? “உண்மை” இல்லையே? எல்லாமே பொய் என்றானபின் ஆண்டவனை எங்கு போய் தேடுவது?, யார் தேடுவது? தேடுவதும் பொய்யாய் முடிந்துவிடுகிறதே?

மானிட சேவையே இறை சேவை என்று அறிவுரை கூறிய இவ்விவேகா நந்தர், க்ஷீரபவானியில் உள்ள அம்பாள் ஆலயம் அந்நியர் படையெடுப்பில் உடைத்து நொறுக்கிய செய்தியை கேட்டதும் மிக வருத்தம் எய்தி, “இந்தியர்கள்

எல்லாம் அம்பிகையின் நடமாடும் கோவில்கள்; அவர்களுக்காக உழைக்க வேண்டும் என்று நான் எண்ணினேனே? அதுவும் தவறுதான்! என்னுடைய உழைப்பு இவளுக்கு ஒரு தேவையே இல்லையே! நான் இல்லாவிட்டால் வேறு ஒருவர் மூலம் அவள் அந்த காரியத்தை செய்துகொள்வாள்!. அப்படி என் மூலமே அவள் செய்துகொள்ள விரும்பினாலும் அது அவளது சங்கல்பம் ஒன்றினாலேயே நிகழ வேண்டுமேயன்றி என்னுடைய முயற்சியினால் அல்ல! இனி அசடன் போல் அதற்கு முயலமாட்டேன்!" (கல்கி/பக்கம் 60/14,06.1964) என்றாராம்!

திருப்பத்தூர் சைவ அன்பர்களுக்கு அவர் சொன்ன பதிலுக்கும், அம்பாள் கோவில் இடிபட்டதற்கு அவர் சொல்லி வருந்தியதற்கும் உள்ள முரண்பாடு ஒரு நல்ல "சைவனுக்கு"" ஏற்படாது! பூமிதானம், அன்னதானம், அனாதை விடுதி, முதியோர் இல்லம் என்றெல்லாம் கூறி மக்கள் சேவையே மகேசன் சேவை" என்று முழக்கமிட்டு வாழ்பவர்களுடைய கதி விவேகாநந்தருக்கு ஏற்படுத்திய ஞானோதய த்தை ஏற்படுத்திவிடும். சகமனிதர்களுக்கு உதவி செய்து வாழ்வது என்பது அக்கால த்தில் நமது நாட்டில் இருந்த ஓர் உன்னதமான சர்வ சாதாரணமாக நிலவிய வாழ்க்கை முறையாக, எல்லோரிடத்தும் காணப்பட்டவை. அடுத்தவருக்கு உதவி செய்வதற்கு சங்கம், அறக்கட்டளை, கட்சி முதலியவை அந்நியர்களது வரவால் வந்த வினை. அதன் விளைவை நாமெல்லோரும் இப்போது அநுபவிக்கத் தொடங்கி யிருக்கிறோம். அன்பே சிவம் என்றது சைவம், தயவு செய்து சிந்திப்பீர்.

ஆகவே சைவத்திற்காக வாழ்ந்து, சைவத்திற்கு பெரும் தொண்டாற்றிய பல அருளாளர் களுடைய அமுத மொழிகளை ஏற்போம். சைவம் தவிர மற்றைய நூல் களையோ, மற்றவர்களது கருத்துக்களையோ ஏற்காமலிருப்போம்! அதுவும் சிவத் தொண்டே!.

**சிவார்ப்பணம்!!!!**